கழக வெளியீடு : ௫௬0

# நீதி நூல்

[உரையுடன்]

ஆக்கியோர் :

**முனிசீப், வேதநாயகம் பிள்ளை அவர்கள்**

உரையாசிரியர் :

*கழகப்புலவர், சித்தாந்த பண்டிதர்*

**ப. இராமநாத பிள்ளை அவர்கள்**



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

First Edition: Oct., 1950.
Reprint: June, 1956.

# NEETHI NOOL



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
I/140, BROADWAY, MADRAS - I.

*Head Office:*

98, EAST CAR STREET, THIRUNELVELI.

Appar Achakam, 2/140, Broadway, Madras-1. C. 1020

# பதிப்புரை

"நீதிநூல்" என்னும் இந்நூல் ஆசிரியர் திருப்பெயருடன் சார்ந்து 'வேதநாயகம் பிள்ளை நீதிநூல்' எனவும் வழங்கும். ஆசிரியரவர்கள் மாயூரம் முதலிய இடங்களில் மாவட்ட முறைமன்றத்தலைவராகப் பன்னாள் நடுநிலையுடன் பணியாற்றி வந்துள்ளார்கள். அவர்கள், இயற்றமிழ் இசைத்தமிழ் வல்லார்கள்; உரைநடை, செய்யுள், புதுவதுபுனைவது, மாலை, கீர்த்தனம் முதலிய பலவகையாலும் தமிழுக்கும் தமிழ்நாட்டுக்கும் பெரும்பணி புரிந்துள்ளார்கள். அவர்கள் வரலாறும், இந்நூலின் முன்னுரையும் இதன்கண் சேர்க்கப்பெற்றுள்ளன.

இந்நூல் பல ஆண்டுகளுக்குமுன் உரையுடன் வெளிவந்துள்ளது. பின் இந்நூல் கிடைப்பதும் அரிதாகிவிட்டது. இப்பொழுது அவர்களின் மற்றைய நூல்களைக் கழகவாயிலாகச் செப்பனிட்டுச் செவ்வியமுறையில் வெளிப்படுத்தியதுபோல, இந்நூலையும், கழகப் புலவர், திரு. ப. இராமநாத பிள்ளையவர்களைக்கொண்டு ஒவ்வொரு பாட்டுக்கும் அதன் கருத்தடங்கிய தலைப்பும், பாட்டுக்குச் செவ்விய முறையில் விளக்கமமைந்த பொழிப்புரையும், உரையின்கீழ் அருஞ்சொற் பொருளும் செய்வித்துப் பாட்டு முதற்குறிப்புடன் வெளிவருகின்றது.

இந்நூல் அச்சாகிக்கொண்டிருக்கும்போது வந்த வேறு படிகளிலுள்ள பாடல்களையும் இணைப்பாகச் சேர்த்திருக்கிறோம். அதிற்காணும் பாட்டு எண், தனியாகச் சேர்க்கப்பட்டுள்ளது.

இந்நூலின் இன்றியமையாமையும், ஆசிரியரவர்களின் திறமையும், அவர்காலத்துப் பெரும்புலவர்கள் பாராட்டி வழங்கியுள்ள இதன்கண் காணப்பெறும் சாற்றுக்கவிகளால் நன்கு விளங்கும்.

இந்நூல், யாவர்களும் அறமுறை வழுவாதொழுகித் திறமுடன் வாழச் சிறந்த கைக்கருவூலமாகும். இதனைச் செந்தமிழ்ச் செல்வர்கள் யாவரும் வாங்கிக் கற்றுக் குடும்பமெல்லாம் அதன்படி ஒழுகி, நாடும் மொழியும் தமிழர்க்கே சிறந்த நனிநாகரிகமும் பண்டுபோல் நிலைபெற்றுத் திகழச் செய்யவேண்டுவதே தமிழன்னைக்குச் செய்யும் திருத்தொண்டாகும்.

ஆசிரியரவர்கட்குக் கழகத்தார் நன்றி உரியதாகுக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

"நீதிநூல்" என்னும் இந்நூல் மாயூரம் மாவட்ட முறைமன்றத் தலைவர் (முனிசிப்) திரு வேதநாயகம் பிள்ளையவர்களால் யாக்கப்பெற்ற அறநூலாகும். இவர்கள் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த பன்மொழிப்புலவராவர். செந்தமிழ்ப் புலமையும் சீரிய ஆசியல் முதன்மையும் சேர்ந்த தனிப்பெருந் தன்மையராவர். கடவுட்பற்றும், பொற்புடைக் கற்பொழுக்கமும், கலைநலமாண்பும், கலைபயில் பண்புடையாளர் தொடர்பும், ஊனூண் துறத்தலும், அந்தண்மையும், அறிவும், அறமும், உலையாமுயற்சியும் நிலையாகக் கொண்டவர்.

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியம், திருக்குறள், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க் கணக்கு, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய சங்கச்சான்றோர்கள் அருளிய செந்தமிழ்த் தனிப்பெரும் நூல்களின்கண்ணும், பின்னுள்ள திருக்கோவையார் சிந்தாமணி முதலிய பன்னூல்களின்கண்ணும் சிறந்துவிளங்கும் அறமுறை யொழுக்கமெலாம் உளங்கொளப் பலகால் படித்துச் சுவைத்துச் சுவைத் தின்புற்று உலகுக்கு உணர்த்த வேண்டுமென்னும் பெருவேட்கையுடன், துருவித் துருவி ஆராய்ந்து தாம் அரிதிற் கற்றுணர்ந்த ஆங்கிலநூன் முறையுள் பொருந்துவன உடன்கூட்டி எளிய இனிய நடையில் எல்லாரும் தெளியக்கற்றுக் கற்றவா றொழுகிச் சிறப்பும் செல்வமும் பெற்று இன்பநலமுடன் வாழ இதனை ஆக்கித்தந்துள்ளார்கள்.

பெண்கள் கற்றறிவுள்ளவர்களாயிருப்பது ஆண்களுக்குப் பெரும் பொருளாகுமென்று அதிகாரம் 9—'மாதரைப் படிப்பித்தல்' என்னும் தலைப்பில் கூறியுள்ளார்கள். இருவரும் கற்புநிறை வழுவாத்திண்மை ஆண்மையராய் வாழவேண்டுமென்னும் சீரிய குறிக்கோளை ஓர் ஓவியப்பாட்டால் ஒண்மையுறப் பாடியுள்ள வண்மை சுவைத்துச் சுவைத்து இன்புறற்குரியது. அது, அதிகாரம் 11—'கணவமனைவியரியல்பு' என்னும் தலைப்பில் 27-ஆவது பாட்டாகவரும் "ஓவியர்நீள் சுவரெழுது......வற்புளதால்" என்பதாகும். இதன்கருத்து, காதலிருவர், ஒருவர் ஒருவரையே தத்தங் கருத்தமைத்து அகத்தும் புறத்தும் அறிவுரு பொருளுருவாய் இடைவிடாது கண்டுகளித் தின்புறுதல் கற்புவாழ்க்கையாகும். எதிர்பாராவகையில், உருவையோ ஓவியத்தையோ காணநேரின் பான்மாறாது ஆடவர் ஆடவரையும், மகளிர் மகளிரையும் பார்ப்பது மாண்புடை யொழுக்கமாமென்னும் பண்டையோர் மரபு விளங்கத் 'தேவியையா மறைத்திட' என்னும் சொற்பெய்துயாத்துள்ளார். அது, திருச்சிற்றம்பலக் கோவையாரில் திகழும் "புணர்ந்துடன் வருவோரைப் பொருந்தி வினவல்" என்னும் துறைக்கண் அமைந்த,

*

"மீண்டா ரெனஉவந் தேன்கண்டு நும்மையிம் மேதகவே
பூண்டா ரிருவர்முன் போயின ரேபுலி யூரெனைநின்
றூண்டான் அருவரை ஆளியன் ஞானக்கண் டேனயலே
தூண்டா விளக்கனை யாயென்னை யோஅன்னை சொல்லியதே."
—திருக்கோவையார், உசச.

என்னும் தீந்தமிழ்த் திருப்பாட்டாகும்.

ஊனுண்ணாமையின் உயர்வையும், ஊனுண்போரை ஒப்பிலா முழுமுதல் எப்படியும் ஒறுக்கும் என்னும் முறைமையையும் 'விலங்கினத்துக்கிடர் செய்யாமை' என்னும் அதிகாரம் 44—5-ஆவது செய்யுள் 'காயிலை' என்னும் பாட்டின்கண் திறம்படக் கூறியுள்ளார்.

'மக்களை வளர்த்தலும் படிப்பித்தலும்' அதிகாரம் 8—தலைப் பின்கீழ் (இணைப்பில் காண்க) 1-ஆவது பாட்டில் பிள்ளைகளை வளர்க்க வேண்டிய முறையைச் செவ்வையாகக் கூறியுள்ளார். அச்செய்யுள் பொதுவாக எந்நாட்டுக்கும் எம்மொழிக்கும் இன்றியமையாத எற்புடைத்து எனினும், இந்நாட்டு இக்கால நிகழ்ச்சிக்குச் சிறப்பாக மிகவும் இன்றியமையாததாகும்.

பொருந்தா ஒழுக்கமுடையாரைக் கண்டிக்குமுறையில் ஆசிரியர் கூறும் செய்யுள், மிகவுருக்கமும் உணர்ச்சியும் தருவதாகும். அஃது. அதிகாரம் 12—'பரத்தைமை' 1-ஆவது செய்யுளாகும். கணிகையரியல்புகூறும் 43-ஆம் அதிகாரம் 24-ஆவது செய்யுள் வழியாகத் திருவள்ளுவர் தீந்தமிழ் மறையை உளங்கொளப் போற்றுகின்றார். அது, "வள்ளுவர் கூறிய குறளாம் இனிய நூலில்" என்பதாகும். இதுவுமல்லாமல், உவமை உருவகம் முதலிய அணிச்சிறப்புகளும், மடக்கு சொல்லணி முதலியனவும் ஆங்காங்கே பரக்கக் காணலாம்.

ஒழுக்கநிலை, அரசியல், பொருள்நிலை, அன்பு, அருள், நட்பு' கல்வி, உதவி, ஒற்றுமை, தெய்வந்தொழுதல், பெரியோர் சிறியோர் பெட்பும் கடமையும், உலகியல், கோள்நிலை, நிலையாமை, தவம், மெய்த்துறவு, மெய்யுணர்வு, குடும்பவாழ்வு, கல்வி, பிறவிப் பயன் முதலிய அனைத்தும் நாற்பத்தைந்து அதிகாரங்களாக வகுத்து அறுநூற்றுக்குமேலுள்ள நறுந்தமிழ்ச் செய்யுட்களான் அமைத்துள்ளார்கள். சுருங்கச்சொல்லின், இவ்வொருநூலே மக்கட்கு எல்லா அறமுறைகளையும் புலங்கொளப் போதித்துப் புகழொடு வாழ்ந்து புண்ணியமும் பேரின்பமும் பெற்று வாழத் துணைபுரியும் பெரும்புணையாகும்.

—உரையாசிரியர்.



முனிசீப்

ச. வேதநாயகம் பிள்ளை அவர்கள்

1826 — 1889

[பக்கம் கக

# வேதநாயகம் பிள்ளை வரலாறு

## பிறப்பு

செந்தமிழ் நாடும், பைந்தமிழ் மொழியும், நந்தம் நனி நாகரிகமும் சீரும் சிறப்பும் பெற்று மூந்துநிலை எய்த அருளால் வந்து தோன்றிய மாபெரும் புலவர்கள் பலர். அவர்களுள் இப் பெரியாரும் ஒருவர்.

இவர் பிறந்த திருவூர், திருச்சிராப்பள்ளிக்கு அண்மையிலுள்ள குளத்தூர். அங்கு வேளாண் வாழ்க்கையும், தாளாண்மையும், நற்குடிப் பிறப்பும், பழியஞ்சிப் பாத்துண்டலும், வடுவஞ்சி வாய்மொழிதலும், நடுநிலை கோடாமையும், அன்பும் அறனும், இன்புமீகையும் ஒருங்கமைந்த சவரிமுத்துப் பிள்ளை யென்னும் தக்கார் ஒருவர்க்கும், அவர்தம் கற்பிற் சிறந்த வளத்தக்க வாழ்க்கைத் துணையும், மனைமாண்பும், சோர்வின்மையும், தெய்வநாட்டமும் வாய்ந்த ஆரோக்கியமரியம்மாள் என்பவருக்கும் தவப்பேற்றால் உலகுய்ய அருளால் ஓர் ஆண்மகவு தோன்றிற்று. அம்மகவுதான் நம் அருமை வேதநாயகம் பிள்ளை யென்னும் செம்புலச் செல்வர். அவர் தோன்றிய நன்னாள், ஆயிரத்து எண்ணூற்றிருபத்தாறும் ஆண்டு, அக்டோபர் பதினொன்காம் நாள்.

## கல்வி

இவர்கள் முன்னோர் கிறித்தவ நெறியைப் பின்பற்றுபவர்கள். ஆயினும், நம் பிள்ளையவர்கள் நெறிப் பிணக்கின்றி, 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்னும் திருமுறைக் கிணங்கப் பொதுநோக்கு மிக்குடையவர். பழம்பிறப்பின் தொடர்ச்சியால் தம் பதினொன்றும் அகவைக்குள் தமிழ்நூற்கள் பெரும்பான்மையும் கற்று வல்லாராயினர். இஃது,

> "ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
> எழுமையும் ஏமாப் புடைத்து"

என்னும் பொதுமறை அருண்மொழியை விளங்கச்செய்கின்றது. பின் ஆங்கிலங் கற்க அளவிறந்த அவாக்கொண்டனர்.

அஞ்ஞான்று ஆங்கிலம் எல்லா ஊர்களிலும் பள்ளிகளமைத்து மிக்குப் பயிற்றுவிக்கவில்லை. ஆங்கிலம் கற்றோர் தொகையும் மிகக் குறைவு. அப்படியிருந்தும், வழக்குமன்ற மொழிபெயர்ப்பாளர் திரு. தியாகப்பிள்ளை என்பவர்களிடம் ஆங்கிலம் முறையாகக் கற்றுத்தேர்ந்தார். திரு. தியாகப்பிள்ளையவர்கள் தமிழிலும் வல்லவராக இருந்தமையால், மற்றும் பல தமிழ்நூல்களும் கற்றுத் தேர்ந்தார்.

### அலுவல்

பிள்ளையவர்களின் நற்டண்பும், நுண்மாண் நுழைபுலமும், விடாமுயற்சியும், முறையறிந்து ஒழுகும் திறமையும், 'நகையீகை இன்சொல் இகழாமை' முதலிய சீலமும், பணிவும் இன்சொல்லும், வாய்மையும், தூய்மையும், உலகினருள்ளத்தைக் கொள்ளை கொண்டன. அவ்வாறே அரசினர் மனத்தையும் கவர்ந்தன. அதனால், அரசினர் திருச்சிராப்பள்ளி வழக்குமன்றம் ஒன்றில் ௧௮௪௮-ஆம் ஆண்டில் பதிவுப் பொறுப்பாளர் (Record Keeper) என்னும் அலுவலில் அமர்த்தினர். அவ்வேலையைத் திறம்பட இரண்டாண்டுகள் செய்துவந்தனர். பின் மொழிபெயர்ப்பாளராம் விழுமியநிலை எய்தினர். ௧௮௫௭-ஆம் ஆண்டில் தரங்கம்பாடியில் முறைமன்றத் தலைவர் (முனிசீப்) என்னும் நிறைபெறுநிலை எய்தினர். அவ்வேலையை நடுநிலை பிறழா நயத்துடன் உரை முடிவு கண்டு ஊரும் உலகமும் ஒப்ப, வழக்காளர் உளமும் நிறைய முறைசெய்து வருவாராயினர். அங்குநின்றும் சீகாழிக்கு மாற்றப்பெற்றனர்.

### நல்லார் நட்பு

அப்பொழுது இயற்றமிழ் வல்லராய்ச், செந்நாப்புலவராய், நூலாசிரியராய், உளங்கொள நுவலும் ஆசிரியராய்ப், பாவன்மையும், நாவன்மையும் ஒருங்கமைந்தவராய்க், காட்சிக்கெளிமையும் கடுஞ்சொல்லின்மையும், கைம்மாறுகருதாச் செம்மையும், தோலா நாவின் மேலாம் டண்பும் வாய்ந்தவராய்ச், செம்பொருட்டுணிவும், சிவநெறி மாண்பும் தம்பெரும் தவமாக் கொண்டொழுகும் சீலராய், மாணுக்கர்களுக்கு உண்டி உறையுள் உடையும் நல்கிக் கற்பிக்கு நடையினராய்த் திகழ்ந்த மாபெரும்புலவர் திருசிரபுரம் மகாவித்துவான், திரு. மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சீகாழிக்கு எழுந்தருளினர். இருவரும் பொருவரிய நண்பராயினர்.

### நீதிநூல் வெளியிடல்

வேதநாயகம்பிள்ளையவர்கள் மீனுட்சிசுந்தரம்பிள்ளையவர்களுடன் 'உணர்ச்சியொத்த' நண்பினராயினமையின், பிள்ளையவர்களைக் கொண்டு சீகாழிக்கு ஒரு கோவை பாடுவித்தனர். அக்கோவை நூல் மிக்கார் கூடிய அவைக்கண் ௧௮௫௮-ஆம் ஆண்டில் அரங்கேற்றமும் செய்யப்பட்டது.

வேதநாயகம் பிள்ளையவர்கள் தாம் பாடிய எளிமையும் தெளிவும், இனிமையும், செறிவும், அறிவும், திட்ப நுட்பமும் ஒருங்கு திகழும் 'நீதிநூலைப்' பிள்ளையவர்களைக்கொண்டு பார்வையிடச் செய்து, அவர்கள் சாற்றுக் கவியுடன் அரங்கேற்றுவித்தனர்.

### சோறு வழங்கல்

பின்பு, திருமயிலாடுதுறையென்னும் மாயூரத்துக்கு மாற்றப் பட்டனர். அங்கு அமர்ந்திருக்கும் நாளில் கொடிய வற்கடம் வந்தது. வற்கடமாகிய பஞ்சத்தால் மக்கள் உணவின்றி மாண்டனர். அருளுடையார் உள்ளம் மக்கள் உணவின்றி மாள்வதைக் கண்டு வாளாவிராது, மக்களுக்கு எந்த வகையிலும் உணவளித்து மாளாது வாழவைக்கவேண்டுமென்றே துணியும். அம்முறையில் வேதநாயகம் பிள்ளையவர்களும் பெருமுயற்சி செய்து, 'சொல்லாற் சாற்றிச் சோறு' வழங்கி மக்களை உய்வித்தனர். இச் செயல் திருவீழிமிழலையில் அரசும் பிள்ளையாரும் ஆண்டவன் அருளிய படிக்காசால் பஞ்சகாலத்து உணவூட்டி மக்களை உய்வித்த திருவருட் செயலை நினைவூட்டும்.

### பெண்மதிமாலை வெளியிடல்

அகத்து வாழ் பெண்கள் அறிவு நிரம்பியவர்களாக இருந்தாலன்றிப் புறத்துச் செல்லும் ஆடவர்கள் புலமையும் ஆண்மையும் பொருளீட்டலும் அருள்கூட்டலும் நாடும் மொழியும் பீடுறவோங்கப் பாடுபடலும் பிறவும் வாய்ந்து திகழ்தல் முடியாதென்பது ஒருதலை. பட்டறை வாய்த்தாலன்றிப் பணி வாயாதல்லவா? துணைவாய்த்தாலன்றிச் சிறப்பு அணையாதல்லவா?

அதனால், பெண்கள் கற்று அகக்கண்கள் உடையராய்த் திகழவேண்டுமென்னும் சீரிய நன்னோக்கம் கொண்டு 'பெண்மதிமாலை' யென்னும் நூலொன்று "உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுளாக" இயற்றி, ௧௮௬௯-ஆம் ஆண்டில் வெளியிட்டனர். அதன் பின்னரே பெண்ணுலகம் விழித்தெழுந்து நண்ணுங் கல்வி கற்று நலமுற்றது.

### பிரதாப முதலியார் சரித்திரம்

௧௮௭௯-ஆம் ஆண்டில் கற்பனை நுட்பங்கள் பொற்புற அமைய, உலகியல் முறைகள் உள்ளங்கை நெல்லியென நிலவ, அறிவு ஆண்மை முறைமை உதவிசெய்தல் நன்றியறிதல் வறுமையிற் செம்மை கற்பு முதலிய பலவும் திகழ, கிளைக்கதைகள் பல செறிய, இன்சுவை நடைத்தாய்ப் பிரதாப முதலியார் என்னும் பெயர் பொறித்துக் கதைநூல் ஒன்று வெளிப்படுத்தினர். அந்நூல் அனைவர்களாலும் எந்நாளும் போற்றப்பட்டு வருகின்றது. இதன் சிறப்புணர்ந்த பலர் வேண்டுகோளின்படி இதனை ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்துள்ளார்.

### நூற்சாத்துக்கவிகள் பெறுதல்

மாபெரும் புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, திருவாவடுதுறை ஆதீனத் தலைவர் சுப்பிரமணிய தேசிகர், சி. வை. தாமோதரம்

பிள்ளை, கோபாலகிருட்டின பாரதியார், சென்னைச் சுப்பராயச் செட்டியார், புதுவை வித்துவான் சவரிராயலு நாயகர் முதலிய தவலருந் தொல்கேள்வித் தன்மையுடைய தக்காரினத்தராய்த் தாம் ஒழுகினர். இக்காலத்தே மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் வேதநாயகம் பிள்ளை யவர்கள்மீது குளத்தூர்க் கோவை என்னும் ஒருநூல் பாடி நல்கினர்.

மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இவ்வுலக வாழ்வை நீத்த பின்னர், அவர்கள் குடும்பத்தார் வறுமையுற்று வாடி நலிந்தமை கண்டு மனம்பொறாராய்த் திருவாவடுதுறை ஆதீனத் தலைவர் அவர்கள் அருட்கொடையால் அவ் வறுமையைப் போக்கி நல மூற்று வாழ வழிசெய்தனர்.

## வேலை விடுதியும் பொதுநலப் பணியும்

கஅஎஉ-ஆம் ஆண்டில் வேலைவிடுதி பெற்றுப் பொதுநலப் பணியில் ஈடுபாடுற்றுத் தம்மிழப்பாய்த் தொண்டு பல புரிந்தனர். மாயூரம் நகராண்மைக் கழகத் தலைவராய் அமர்ந்து செயற்கருஞ் செயல் பல புரிந்தனர்.

## பேராவியற்கை பெறுதல்

கஅஅகூ-ஆம் ஆண்டு, சூலைத்திங்கள் உக-ஆம் நாள் இரவு இறுதிக்காலத்து எய்தும் அலமரல் ஏதுமின்றி, இறைநினைவுடன் இவ்வுலக வாழ்வை நீத்துச் செம்பொருளின் திருவடியிணையைச் சேர்ந்தின்புற்றார்.

மாணவர் நண்பர் புலவர் உலகோர் அனைவரும் சொல்லொணுக் கையறுநிலை எய்திப் பாவாலும் நாவாலும் பாடியுரைத்து வருந்தினர். பின்பு, பிள்ளையவர்களின் ஆருயிர் இன்புற எண்ணி இறைவனை வழுத்தி அமைந்தனர்.

## இயற்றிய நூல்கள்

இவர் இயற்றிய நூல்கள், க நீதிநூல், உ. பெண் மதிமாலை, ௩. பிரதாப முதலியார் சரித்திரம், ௪. சுகுண சுந்தரி சரித்திரம், ரு. தேவமாதா அந்தாதி, சு. திருவருள் அந்தாதி, எ. திருவருள் மாலை, அ. சத்தியவேதக் கீர்த்தனை, கூ. சருவசமய சமரசக் கீர்த்தனை, க0. வேத தோத்திரமாலை, கக, சித்தாந்த சங்கிரகம், கஉ- பெரிய நாயகி அம்மன் பதிகம், க௩. பொம்மைக் கலியாணம் எனப்பதின்மூன்றென்ப.

இவையன்றியும், காலத்துக்கும் இடத்துக்கும் ஏற்றவாறு அவ்வப்பொழுது ஆக்கிய அளவில்லாத சுவை மிக்க தனிப்பாடல்களும் சிறு சிறு நூல்களும் பலவாம்.

---




# உள்ளுறை


| | | பக்கம் |
|---|---|---|
| | சாற்றுக் கவிகள் | க |
| | காப்பு | கக |
| | அவையடக்கம் | கஉ |
| க. | தெய்வமுண்டெனல் | கரு |
| உ. | தெய்வத்தன்மையும் வாழ்த்தும் | கஅ |
| ௩. | அரசியல்பு | உசா |
| ச. | குடிகளியல்பு | ௩க |
| ரு. | ஞானசிரியன் பெருமை | ௩ச |
| சா. | பொய்க்குருவின் தன்மை | ௩அ |
| எ. | தாய் தந்தையாரை வணங்கல் | சஉ |
| அ. | மக்களை வளர்த்தலும் படிப்பித்தலும் | சகூ |
| கூ. | மாதரைப் படிப்பித்தல் | ரு0 |
| க0. | உடன் பிறந்தாரியல்பு | ருச |
| கக. | கணவ மனைவியரியல்பு | ருசா |
| கஉ. | பரத்தைமை | எகூ |
| க௩. | உயர்ந்தோர் தாழ்ந்தோரைத் தாங்கல் | அசா |
| கச. | தாழ்ந்தோர் உயர்ந்தோர்க்கு அடங்கல் | கூ௩ |
| கரு. | பொய் | கூசா |
| கசா. | களவு | க0உ |
| கஎ. | கொலை | க0ரு |
| கஅ. | மது | கக0 |
| ககூ. | சூது | ககரு |
| உ0. | கைக்கூலி | ககஅ |
| உக. | புறங்கூறல் | கஉச |
| உஉ. | பெரியோரைத் தூறல் | கஉஎ |

பக்கம்


| | | |
|---|---|---|
| உ௩. | கடும்பற்று | க௨௯ |
| உ௪. | சோம்பல் | க௩௫ |
| உ௫. | சினம் | க௩௮ |
| உ௬. | பொறுமை | க௪௩ |
| உ௭. | கல்விச் செருக்கு | க௪௬ |
| உ௮. | அழகாற் செருக்கல் | க௫க |
| உ௯. | செல்வச் செருக்கு | க௫௨ |
| ௩0. | தீயரைச் சேராமை | க௫௬ |
| ௩க. | பிழை பொறுத்தல் | க௫௯ |
| ௩௨. | இனிய சொற்கூறல் | க௬௩ |
| ௩௩. | பிறர்க்குத் தீங்கு செய்யாமை | க௬௭ |
| ௩௪. | நெடுந்துயில் | க௬௯ |
| ௩௫. | பேருண்டி | க௭க |
| ௩௬. | தற்புகழ் | க௭௪ |
| ௩௭. | புகழும் இகழும் மதியாமை | க௭௭ |
| ௩௮. | கைம்மாறு கருதா உதவி | க௮க |
| ௩௯. | பொருளாசை யொழித்தல் | க௯க |
| ௪0. | யாக்கை நிலையாமை | க௯௯ |
| ௪க. | துன்பம் | உ0௮ |
| ௪௨. | அறஞ்செயல் | உக௪ |
| ௪௩. | கணிகையரியல்பு | உ௨௯ |
| ௪௪. | விலங்கினத்துக் கிடர் செய்யாமை | உ௫௩ |
| ௪௫. | பன்னெறி | உ௫௭ |
| | இணைப்பு | உ௬௫ |
| | பாட்டு முதற்குறிப்பு அகரவரிசை | ௩0௯ |

உ

கடவுள் துணை

# சாற்றுக்கவிகள்



திரிசிரபுரம் - மாவித்துவான்

*மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களியற்றிய,*

## ஆசிரியப்பா



மலர்தலை யுலகின் அலர்பல வுயிரும்
அறமுத லொருநால் திறமுமெளி தடையத்
தெய்வமுண் டென்று தெளிதரன் முன்வைத்
தஃதுணர்ந் தார்க்கே அத்தே வியல்பும்
வாழ்த்து முணர்ந் தியற்ற மனமுறு மாதலின்
அதுபின் னுறவமைத் தரசர்தம் நீதி
தெய்வ நீதியே சிவணு மாதலின்
பின்னது நிறுவிப் பெரும்பூம் பாலர்
இயல்பொடு பிரியா தியலுந் தன்மையிற்
குடிகள தியல்பு குறித்ததன் பின்னமைத்து
இயல்புறத் தழீஇய இருங்குடிக் கல்லது
ஞான சாரியன் நண்ணா னாதலின்
அனையவன் பெருமை அனையதன் பின்னமைத்து
இயலா சிரியன் இயலுணர்ந் தார்க்கே
பொய்யா சிரியன் புன்மை தோன்றும்

ஆதலி னவனிய லதன்பின் னுறநிறீஇ
ஆரியன் இயல்போர்ந்து அடுப்பார்க் கன்றித்
தந்தைதாய் வணக்கந் தகாமையின் அஃததன்
பின்னுற நிறுவிப் பெற்றியின் வணங்கும்
மைந்தருக் கனையார் மகிழ்ந்தாற் றுதலிவை
என்றுநூல் கற்பித் திடுதல் வளர்த்தல்
மற்றதன் பின்வைத் துற்றுழி யுதவல்
கல்வியே ஆதலிற் காமரு மாதரும்
உணருமா றதன்பின் னுறவஃ துறுத்திக்
கற்றோர்க் கன்றி மற்றோர்க் கியலாது
என்பது தோன்ற உடன்பிறந் தாரியல்
பண்புற அதன்பின் அமைதர நாட்டி
உடன்பிறந் தாரொழுக் குறுமில் லறத்திற்கு
இன்றி யமையா தென்பது தோன்றக்
கிழவன் கிழத்தி யியலதன் பின்வைத்து
இயலுறு கிழத்தி இயலுணர்ந் தார்க்கே
அவண்மறு தலையாம் அணங்கின் நடையுணர
வருமத னுலது மற்றதன் பின்வைத்து
இவ்வா றொழுகும் இயல்புடை உயர்ந்தோர்
தாழ்ந்தோர்த் தாங்கலுந் தாழ்ந்தோ ருயர்ந்தோர்க்கு
அடங்கி யொழுகலும் அறனென அதன்பின்
ஒன்றன் பின்னர் ஒன்றுற நிறுவி
அடங்கி யொழுகுநர்க் ககலும் பொய்ம்மை
பொய்நின் றகலப் போமே களவும்
களவு நீங்கக் கைவிடும் கொலையுங்
கொலையது தொலையக் குலைதரு மதுவும்
மதுக்குடி யகல மாறுஞ் சூதுஞ்
சூது நீங்கப் பரிதானந் தொலையும்
பரிதான மகலப் படும்புறங் கூறலும்

புறங்கூற லொழியப் போம்பெரி யோரைத்
தூற்றலு மஃதறத் தொலையு முலோபமும்
உலோப நீங்க வொழியுஞ் சோம்பலுஞ்
சோம்பல் நீங்கத் தொலைதருஞ் சினமுஞ்
சினமது தீரச் சிதையும் பொருமையும்
என்பது தோன்ற விவையெலா மதன்பி
னொன்றன் பின்ன ரொன்றுற வமைத்துப்
பொருமை யொழிந்த புண்ணியர்க் கல்லது
கல்விச் செருக்குங் காரிகைச் செருக்குஞ்
செல்வச் செருக்குஞ் சேரா வென்பதற்
கதன்பி னொவ்வொன்று வடைவுற நிறுவிச்
செருக்கொழிந் தவரே தீயரைச் சேரார்
என்பது தோன்ற வதன்பி னிணைத்துத்
தீச்சார் பிலார்க்கே செறிபிழை பொறுத்தல்
இனியசொற் கழற லியலும் பிறர்க்குத்
தீங்குசெய் யாரைச் செறியுமென் றதன்பின்
முறையா ஒவ்வொன்று முயங்குற வைத்து
நினையுமிந் நெறியோர் நெடுந்துயில் துறப்பர்
உரைக்கு மதற்பே ருண்டியு மொழியும்
புகலஃ தறத்தற் புகழ்தலு மொழியும்
இஃதரு தேனிற்புக ழிகழ்மதி யாமை
யுண்டா மென்றற் கொன்றன் பின்ன
ரொன்றுற வதன்பி னுறமுறை நாட்டிப்
புகழிகழ் மதிக்கும் புண்ணியர் தமக்கே
பரோப காரம் பலிக்குமென் றுணர
வதன்பி னிறுவி யத்தகை யோரே
பொருளவா வொழிவரப் புண்ணியர் தமக்கே
மெய்ந்நிலை யாமையும் வெளிப்படு மவர்க்கே
துன்பப் பகுதியுந் தோன்றிடு மவர்க்கே

யறஞ்செயுந் திறமுண் டாமவர் தாமே
கணிகைய ரியல்பு கழிப்பரென் றுணர
விளைமுறை யதன்பி னியைதர நாட்டிக்
கரைதரு மினையர் கமுகந் தோட்டம்
என்றுற் போல வியல்விலங் கினத்துக்
கிடர்செயா ரெனப்பி னிவைதர வமைத்து
நன்னெறி பலவு நவில்வில தடங்கப்
பன்னெறி யென்பது கடையுறப் பதித்து
நீதிநூ லென்றோர் நிலவுபெய ரிட்டுத்
திருமா றந்த தெள்ளமு தொப்ப
யாவரு முவப்ப வினிதி னியற்றித்
தந்தன னொருநூல் தவலருங் கேண்மைமற்
றன்னவன் யாரெனி னறைகுதுங் கேண்மோ
புலிக்கொடி கயற்கொடி பொருவிற் கொடியுடை
வேந்தர் நாட்டுறை வேளாண் மாக்கள்
சோழிய ரென்றும் பாண்டிய ரென்றுங்
கொங்க ரென்றும் பெயர் பெற்றன ரவருள்
வளரேறும் பீசர் மலைக்கு மேற்குக்
கடும்புனல் பாய்மதிற் கரைக்குக் கிழக்கு
நலந்தரு காவிரி நதிக்குத் தெற்கு
வளம்பொலி நம்பிரான் மலைக்கு வடக்கு
நவிலுமிவ் வெல்லை நான்க னுட்பட்ட
விடங்குடி கொண்ட வியல்வே ளாளர்
முன்ன முரைத்த முத்தமிழ் வேந்தரு
மெங்கண் மூவருக்கு மியன்முடி சூட்டுதற்
குங்களை யமைத்தன முவந்துகொள் வீரெனக்
கொண்டுமெகிழ்ந் தனையார் கோத்தன் மையரே
யாயின ரதனு லவர்வாழ் நாடு
கோனா டென்றோர் குலவுபெயர் பெற்றது

உரைக்கருங் குன்றம் ஒருபதி னெட்டும்
நத்த மெழுநூற் றறுபத் தாறும்
உன்னும் படிநன் குளகுளக் காடும்
முன்னு மாயிரத்து முந்நூற்று முப்பது
தேவா லயங்கள் சிறக்குநூற் றெட்டும்
இரும்பிர மாலய மிருபத் தெட்டுங்
குறையறக் கொண்டவக் கோனாடு பின்னர்
அறைதருபுனல்வெள் ளாற்றின் தென்பால்
உறைதென் கோனா டொலியூர்க் கூற்றந்
திரைகரை எறியுமத் திருநதி வடபால்
ஒளிர்வட கோனா டுறையூர்க் கூற்றம்
எனப்பெயர் பெற்றுநன் றியங்குங் காலம்
வண்மையவ் வேளாண் மக்கள்மிகப் பெருகி
வடகோ னாட்டில் வண்குளத் தூரில்
பெரிதிருத் தலின்மிகப் பெரியகோ னாடென்
றொருபெயர் பெற்றவவ் வொண்குளத் தூரில்
கோங்கு ராயர் கோத்திர மதனில்
வந்தவ தரித்த செந்தமிழ்க் குரிசில்
இரும்புவி யேத்தும் இளையான் குடியில்
அருமுளை வாரி யன்னம் படைத்த
குருமணி மாறனங் குலமெனுங் கொண்டல்
அவிர்விரை யாச்சிலை யாண்டார் திருமலை
உடையான் கருவரா வுகளரி யாற்றான்
குளிர்புனல் வயறேறுங் குலவுகோ னாட்டின்
அமரரும் புகழ்வே ளாண்குளத் தூரான்
உச்சைச் சிரவம் உறழும் பரியான்
அயிரா வதநிக ராயதிண் களிற்றான்
குளிர்மதுப் பொழியங் குவளைமா லிகையான்
உலக மூன்றும் உணர்கோடை முரசான்

வெற்றிக் கொடியெனு மேழிக் கொடியான்
அடங்கலர் நடுங்க அடக்கும் ஆணையான்
அளவில்பன் னூலும் அரில்தப வுணர்ந்தோன்
பண்பெலாம் ஒருருப் படைத்தெனப் பொலிவோன்
"ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிரு"வெனப் பெரியோர்
உரைத்தவாக் கியத்திற் கொருசான் றாகப்
பயன்படு செல்வம் படைத்துமகிழ் பூமான்
அடைந்தோர் வெங்கலி யடர்க்குந் திறலோன்
பிறர்மனை நோக்காப் பேரறி வாளன்
கற்றோர் நட்புக் கழலாக் கனவான்
நானிலம் உவப்ப நடத்து நீதியான்
அரும்பொருள் செறியும் ஐந்திணைக் கோவை
நம்பாற் கேட்ட நகுபுகழ்ப் பெரியோன்
வலந்தரு நதிக்குல வள்ளல்
நலந்தரு வேத நாயக மாலே.

## விருத்தம்

தெரியவிரு வேறுலகத் தியற்கைதிரு வேறு
தெள்ளியரா தலும்வேறென் றுள்ளபடி யுரைத்த
அரியபுகழ் வள்ளுவர்தம் வார்த்தையினை மறுத்தான்
அரசர்கா ரியநடவும் அதிகாரத் தொடுநூல்
அறியவென வுணர்ந்துபெருஞ் செல்வமுங்கல் வியுமிக்
கொருங்கடைந்து பொருட்கொடையில் ஒப்பிலா னாகி
விரியவனி மகிழவொரு நீதிநூ லியற்றி
விளக்கியசீர் வேதநா யகக்குரிசில் தானே.

## வேறு

வள்ளுவரா தியரேநல் நீதிநூல் உரைப்பதற்கு
வல்லா ரென்று
துள்ளுவர்யா வரும்அனைய துண்மையா யினுங்குளத்தூர்ச்
சுகுண வள்ளல்
உள்ளுவர்பா லருள்நிறவும் வேதநா யகமகிபன்
உரைத்த நீதி
தள்ளுவர்யா ராதலில்தேற் றேகாரந் தவிர்த்திசைத்தல்
தகுதி யாமே.

ஓதிநூ லுணர்ந்தகுளத் தூர்வேத நாயகமா
லுவப்பிற் செய்த
நீதிநூல் தேவியலா சிரியனிய லுணர்த்துதலான்
நிகரில் ஞானச்
சோதிநூ லெனச்சொல்வாம் இந்நூன்மு னேந்நூலுஞ்
சொல்லிற் கால்நூல்
பாதிநூன் முக்கால்நூல் உவட்டுநூல் சிலம்பிநூல்
பருத்தி நூலே.

வில்லாம திற்குளத்தூர் வேதநா யகமகிபன்
விரும் பிச்செய்த
நல்லாருண் மகிழ்நீதி நூலிலுள்ள கற்பனையும்
நயமும் ஓரின்
எல்லாருங் கற்றவரே யெல்லாரும் பாடுநரே
யெல்லா ருந்தாஞ்
சொல்லாரும் அறிவினரே யறிவினர்தங் துதியவருஞ்
சூடு வாரே.

முன்னோர்க ளுரைத்தபெரு நீதிநூற் பொருள்தெரிய
முயலின் அம்மா
பின்னோர்க ளுரைத்தவுரை பலவவையோ ரினுமையம்
பிறந்தோன் றற்கோன்று
அன்னோர்சொல் மாறுபடும் பொருள்விளங்க உருபுமுத
லவிழ்த்துப் பாடும்
இன்னோர்நம் வேதநா யகமுகில்நூல் போலுளதோ
மதிக்குங் காலே.

பொருளுடையோன் நீயேயோ வடதிசைக்கோமகனுமுளன்
புவனங் காக்கும்
அருளுடையோன் நீயேயோ நெடுமாலு முளன்நீதி
மைனூல் சொல்லுந்
தெருளுடையோன் நீயேயோ வள்ளுவனு முளன்குளத்
செல்வா நாளும் [தூர்ச்
இருளுடைய வெழுகதிர்நேர் வேதநா யகமகிபா
இயம்பு வாயே.

தாவில்நூற் பொருட்கேள்வி யுறலதிக மதற்கதிகந்
தானே கற்றல்
மேவியதை வெளிப்படுத்த லதற்கதிக மதற்கதிகம்
வியன்பாச் செய்தல்
பாவினுங்கற் பனைய்மைத்த லதற்கதிக நீதிநூல்
பாடல் நாளும்
பூவினிடை யதிகமெனில் வேதநா யகமகிபன்
புகழேற் றமே.

செல்பாயும் புனற்குளத்தூர் வேதநா
யகமகிபன் செய்தநீதி
நூல்பாயு மறிஞரே நுண்ணியராய்ச் சிறந்துவரு
நோன்மை யாலே

வேல்பாயுங் களிற்றரசர் மேன்மேலும் விருப்பமுற
விளங்கி யின்பச்
சால்பாயுங் கடவுளடிக் கீழுறைவ ரெந்நாளுந்
தவிரார் தாமே.

நூலியற்றி யீதலொன்றே யுள்ளதெனக் கொள்ளலைபன்
னூலு மோர்நம்
மாலியற்றிக் கொடுத்திடுமைந் திணைக்கோவை யேற்றனையா
லளவி லாத
சேலியற்று புனற்குளத்தூர் வேதநா யகமகிபா
சிறப்பச் செய்யுள்
பாவியற்ற லேற்றலிவை யிரண்டினுநீ யெப்போதும்
பயிலு வாயே.

வேறு

ஆயபுவி யாளுமாங் கிலேய மன்ன ராண்டோ ராயிரத்தெண்
ணூற்றி யைம்பத் தோன்பதனுக் கோத்த
தூயபுகழ் காளயுத்தி யாண்டுறுதைத் திங்க டோகுதஞ்சைச்
சுபாசீகா ழித்தாலூ காவின்
மேயமுன்சீ பதிகாரஞ் செலுத்திடுநன் ஞளின்
விளங்குகுளத் தூர்ச்சவரி முத்துமகி பாலன்
நேயவரோ தயன்வேத நாயகப்பேர்க் குரிசி
நீதிநூ லியற்றியரங் கேற்றினன்நன் குறவே.

உ

கடவுள் துணை

# நீதி நூல்

## காப்பு

*படைத்துக் காக்கும் பண்பினன் பரமன்*

ஆதிநூ லொன்றும் அரும்பயன்யா ருந்தெளிவான்
நீதிநூ லொன்று நிகழ்த்தவே—மாதிரமோ
இத்தரைய னைத்தையுமி யற்றியினி தில்திதிசெய்
கத்தன்மலர் ஒத்தகழல் காப்பு.

*வினையின் நீங்கிவிளங்கிய அறிவின் மெய்க்கடவுளை யுணர்த்தும் தொன்னூல்களைத் தெளிதற்குக் கருவியாக யான் இந் நீதி நூலை இயற்றுகின்றேன். இதற்கு, உலகெலாம் படைத்துக் காக்கும் தெய்வத் திருவடி காப்பு.*

*மாதிரம் - திசை. திதி - காவல்.*

## வேறு

*ஆதிக் கடவுள் அடியிணை போற்றி*

மாதி ரந்தனில் வாழ்பவர் யாவரும்
தீதி கந்தறச் செய்கை முயலுவான்
நீதி நூலை நிகழ்த்த நிகரிலா
ஆதி தேவ னடியிணை யேத்துவாம்.

*நிலவுலகத்துள்ளார் அனைவர்களும் தீமையினின்று விலகி நன்மையே செய்தற்பொருட்டு நீதி நூலை இயற்ற ஆதிக்கடவுள் அடியிணை போற்றுவாம்.*

*மாதிரம் - நிலம்.*

## அவையடக்கம்

*வெயிலுக்கு இடும்விளக்குப் போலும்யான் நீதிநூல் கூறல்*

வெயிலினைச் சோதிசெய்வான் விளக்கிடல் போலுங்காகங்
குயிலினுக் கிசையு ணர்த்துங் கொள்கையே போலு நட்டம்
மயிலினுக் குணர்த்துங் கான வாரண மெனவும் யாவும்
பயிலுல கிற்கு நீதி பகரயான் துணிவுற் றேனால்.

*இயல்பாகவே விளக்கம், இசை, ஆடல் மூன்றும் முறையே அமைந்த ஞாயிறு குயில் மயில் மூன்றினுக்கும் விளக்கு, காக்கை, காட்டுக்கோழி மூன்றும் அவற்றைத் தனித்தனி உணர்த்தப் புகுந்ததை ஒக்கும், அறமுறை அகலாதொழுகும் உலகினுக்கு யான் நீதிநூல் சொல்லுவது.* க

*ஆன்றோர் அறிவித்தவற்றையே அவர் முன் கூறுவேன்*

பானுவின் கதிரை யுண்ட பளிங்கொளி செய்தல் போலும்
வானுலாங்கொண்டல்பெய்யுமழையினைத்தழையில்தாங்கித்
தானும்பெய் தருவைப் போலுந் தமிழொருமூன்றுமாராய்ந்து
ஆனுவார் கவிசோல் வோர்முன் அறிவிலேன் பாடலுற்றேன்.

*முத்தமிழாராய்ந்து செய்யுள் செய்யும் சீரியோர் முன் யான் பாடுவது சூரியகாந்தக்கல் சூரியன் முன் தீயினையும், மழை காலத்து மரங்கள் துளியினையும் தருவதை யொக்கும்.*

*பானு - சூரியன். தரு - மரம். ஆனுதல் - நிறைதல்.* உ

*ஊமையர் பாடலை ஒக்கும் என் பாட்டும்*

மூடவரே யாட அந்தர் முன்னின்று பார்த்து வக்கத்
திடமோடு மூகர் பாடச் செவிடர் கேட் டதிச யிக்கக்
கடலுல கினிற்கண் டென்னக் கனவினுங் கலையைத்தேரா
மடமையே னுலகநீதி வகுத்திடத் துணிந்தேன் மன்னே.

*மூடவர் ஆட்டத்தைக் குருடர் பார்த்து மகிழவும், ஊமையர் பாட்டைச் செவிடர் கேட்டு வியக்கவும் இருப்பதை யொக்கும் ஒன்றுங்கல்லாத யான் நீதிநூல் கூறத்துணிவது.*

*அந்தர் - குருடர். மூகர் - ஊமையர்.* ௩

பசுவை நோக்காது பாலைக் கொள்வதுபோல் பாட்டை நோக்காது பயனைக் கொள்க

பயன்கோள்வோ ரதனைநல்கும் பசுவுரு
   விலதென் றோரார்
வியன்சினை வளைவு நோக்கார் விளைந்ததீங்
   கனிய றிப்போர்
கயங்கொள்சே றகற்றித் தெண்ணீர் கைக் கோள்வா
   ரென்ன நூலின்
நயன்கோள்வ தன்றிப் பாவி னவையைநோக்
   கார்மே லோரே.

பாலும் பழமும் தண்ணீரும் விரும்புவோர் பசுவுருவும் மரவளைவும் சேற்றுக் கலப்பும் கருதாது கொள்வதுபோல் முறை யுணர்வோர் பாட்டின்குற்றம் கருதாது பயன்கொள்வார்.

கயம் - குளம். நயன் - முறை. நவை - குற்றம். ச

கடலுக்கு நீர்தரும் மழைபோல் கற்பித்தாரிடத்தே ஒப்புவித்தேன்

வேலைவா யுண்ட நீரை மேகஞ்சிந் தினுமே சிந்துங்
காலிடைக் கோண்ட நீரைக் கழனியக் காற்கு நல்கும்
பாலர்கற் றவையா சான்பாற் பகர்வர்யான் நூலு ணர்ந்த
சீலர்பாற் கற்றதன்னோர் சேவியுற நவின்றே னம்ம.

மேகம் வயல் மாணாக்கர் மூவரும் முறையே கடலிற் கொண்ட நீரைக் கடலுக்கும், வாய்க்கால் வழிக் கொண்ட நீரை வாய்க்கா லுக்கும், ஆசான்பாற் கற்றவற்றை ஆசானுக்கும் ஏற்பிப்பது போல் யானும் பெரியவர்பால் கற்றவற்றை அவர்களிடமே கூறு கின்றேன்.

வேலை - கடல். சிந்து - கடல். கழனி - வயல். கால் - வாய்க்கால். சீலர் - நல்லொழுக்கப் பெரியோர். ரு

முறையைப் பழிப்பதாம் என் பாட்டைப் பழிப்பது

கோவிலைப் பழிக்கி னேரென் குணனையும்
   பழித்த தோப்பாம்
காவினைப் பழிக்கின் ஆண்டார் கடிமலர்ப்
   பழித்த தோப்பாம்

வாவியைப் பழிக்கிற் கொண்ட வண்புனல்
பழித்த தாமென்
பாவினைப் பழிக்கி னீதிப் பயனையும்
பழித்த தாமே.

*கோவிலைப்பழிப்பது கடவுளைப் பழிப்பதாகும்; சோலையைப் பழிப்பது பூவைப் பழிப்பதாகும்; குளத்தைப் பழிப்பது தண்ணீரைப் பழிப்பதாகும். (இவைபோன்றே) என் பாட்டினைப் பழிப்பது நீதி முறையையே பழிப்பதாகும்.*

*எண்குணன் - கடவுள். கா - சோலை. பா - பாட்டு.* சு

*எண்குணம்: தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை.*

# அதிகாரம் க—தெய்வமுண்டெனல்

## ஏதுக்களால் தெய்வம் உண்டென இசைத்தல்

மண்டப மாதி கண்டோர் மயனுளன்
என்னல் போலுங்
குண்டல முதல்கண் டோர்பொற் கொல்லனுண்
டென்னல் போலும்
ஒண்டுகில் கண்டோர் நெய்தோன் ஒருவனுண்
டென்னல் போலும்
அண்டமற் றகண்டஞ் செய்தோன் உளனென
அறிவாய் நெஞ்சே.

*மண்டபம் குண்டலம் ஆடை முதலிய செயப்படுபொருளைக் கண்டதும் முறையே கொற்றன், தட்டான், நெய்வோன் ஒருவன் உளன் என்று உய்த்துணர்வதுபோல், உலகமும் பிறவும் கண்டதும் இவற்றைப் படைத்தருளிய முழுமுதல் ஒன்று உண்டு என்று நெஞ்சே உணர்.*

*அண்டம் - நிலம். அகண்டம் - நிறைவு.* க

தீட்டுவோன் இன்றி யாமோ சித்திரந் திகழ்பொற் பாவை
யாட்டுவோன் இன்றித் தானே யாடுமோ திவவி யாழின்
மீட்டுவோன் இன்றிக் கீதம் விளையுமோ சராச ரங்கள்
நாட்டுவோன்ஒருவனின்றி நன்கமைந்தொழுகுங்கொல்லோ.

*சித்திரம் பாவை யாழ் முதலியன முறையே வரைவோரையும் ஆட்டுவோரையும் மீட்டுவோரையும் இல்லாமல் வெளிப்படாமைபோல, இயங்குதிணை நிலைத்திணையாகிய உயிரினங்கள் கடவுளை இன்றி உடல் கொண்டு உலகத்துத் தோன்றா.* உ

மரமுத லசைத லாற்கா லுளதென மதிப்பா ரெங்கும்
பரவிய புகையாற் செந்தீ யுளதெனப் பகர்வார் சுற்றும்
விரவிய மணத்தாற் பாங்கர் வீயுள தென்று தேர்வார்
பரனுள னெனுமுண்மைக்குப் பாரெலாஞ்சான்றுமன்றே.

மரமுதலிய அசைவால் காற்றும், புகையால் தீயும், மணத்தால் பூவும் உண்டு என மதிப்பர்; அதுபோல் உலகத்தால் கடவுள் உண்மை பெறப்படும்.

வீ - பூ. பரன் - கடவுள். ௩

நாதனில் லாத வீடு நாளுமே நடவா தென்னில்
வேதநா யகனி லானேல் விரிகதிர் மீனு தித்தல்
சீதநீர் பெயல்தருக்கள் சீவரா சிகள்க தித்தல்
பூதபௌ தீக மெல்லாம் புரையற ஒழுகற் பாற்றே.

தலைவன் இல்லாத வீடு நடவாமைபோலக், கடவுளில்லாத உலகமும், உலகத்து ஞாயிறு திங்கள் விண்மீன் முதலியன தோன்றலும், மழைபெய்தலும், உயிர்கள் வாழ்தலும் நிகழ மாட்டா.

பூதபௌதிகம் - உலகமும் அதனாலாம் செயற்கையும். ௪

பூதம்யா வுக்கும் எணாய்ப் பொருந்திய விசும்பைக் காற்றை
வேதநூ லதனை மண்ணோர் மெய்யுரை யுயிரை நெஞ்சை
எதமி லறத்தைக் கண்ணாற் பார்த்திலோ மெனினுமுண்டென்று
ஓதல்போல் தெய்வந்தானொன் றுளதெனல் தேற்ற மம்மா.

நிலம், நீர், தீ முதலிய பூதங்களுக்கு ஆதாரமாய் உள்ள காற்றை வானத்தை, அறிவை, உயிரை, அறத்தைக் கண்ணால் பார்ப்பதில்லை. ஆனால் உண்டென்று ஒப்புக்கொள்கின்றோம். அதுபோன்று தெய்வம் உண்டென்பதும் தெளிவு.

வேதநூல் - அறிவு. எண் - ஆதாரம். ௫

வாசமூக் கறியுமன்றி வாய்செவி விழிமெய் தேரா
பேசவாய் அறியு மன்றிப் பின்னையோர் புலன்றே ராது
நேசமார் தொண்டர் ஞான நேத்திரங் கொண்டு காணும்
ஈசனை முகத்தில் கண்ணால் இகத்தில்யார் காண வல்லார்.

மணத்தை மூக்கறியுமே அல்லாமல் காது முதலிய ஏனைப் புலன்கள் அறியா. பேச வாய் அறியும்; மற்றது அறியாது. அதுபோலக் கடவுளை மெய்யன்பர்கள் ஞானக்கண்கொண்டு காண்பர். அப்படியிருக்க உலகத்தில் யாவர் முகக்கண்ணால் காண்பர்?

வாசம் - மணம். இகம் - உலகம். ௬

வானின்றி மழையுமில்லை வயலின்றி விளைவு மில்லை
ஆனின்றிக் கன்றுமில்லை அரியின்றி யொளியு மில்லை
கோனின்றிக் காவ லில்லை குமரர்தா யின்றியில்லை
மேனின்ற கடவு ளின்றி மேதினி யில்லை மாதோ.

*மேகம் இல்லாமல் மழை யில்லை; வயல் இல்லாமல் விளைவு இல்லை; பசு இல்லாமல் கன்றில்லை; ஞாயிறு இல்லாமல் வெளிச்ச மில்லை; அரசனில்லாமல் காவலில்லை; தாயில்லாமல் மக்களில்லை. இவைபோலக் கடவுளில்லாமல் உலகமில்லை.*

*அரி - ஞாயிறு. ஒளி - வெளிச்சம்.* எ

கதிரவற் கொளியின் றென்னக் கண்ணிலார்
 கழறல் போலும்
வதிரர்பே ராழி யோசை மாறிய
 தென்னல் போலும்
எதிருறு பொருளைக் காணு திடருறு
 பித்தர் போலும்
மதியிலார் தேவின் றென்ன மருளோடும்
 இயம்பு வாரே.

*குருடர் ஞாயிற்றுக்கு ஒளியில்லை என்பதையும், செவிடர் கடலுக்கு ஓசையில்லை என்பதையும், பித்தர் எதிரிலுள்ள பொருளறியாது துன்புறுவதையும் ஒக்கும், அறிவிலார் கடவுளில்லை யென்று மயங்கிக் கூறுதல்.*

*வதிரர் - செவிடர். ஆழி - கடல். தேவு - கடவுள்.* அ

அத்தன்தாய் முன்னோர் தம்மை யறிகிலா னிலரென்பானோ
சத்தமின் சுவைகந் தத்தைத் தரிசியா னிலனென் பானோ
நித்தனைக் கண்ணிற் காணு நீர்மையா லிலனென் றேதும்
பித்தரிற் பித்தர் பாரில் பேசிட வுளரோ அம்மா.

*தந்தைதாய் முன்னோரை அறியாதவன் அவர்களை இல்லை யென்று சொல்லமுடியுமோ? ஓசை, சுவை, மணம் இவற்றைக் கண்ணிற் காணுமையால் இல்லை யென்று சொல்லமுடியுமா? இவை போன்றே கடவுளை நேரிற் காணுமையால் இல்லை யென்று சொல்ல முடியாது. அப்படிச் சொல்வோர் பெரும்பித்தர் ஆவர்.*

*அத்தன் - தந்தை. நித்தன் - கடவுள்.* கூ

தேவனே யிலனேல் மோக்கந் தீநர கில்லை வேதம்
பாவபுண் ணியங்க ளில்லை பரனிலை யென்போ னில்லின்
மேவலர் தீயிட் டன்னுன் விபவமெல் லாஞ்சி தைத்துச்
சீவனை வதைசெய் தாலென் செய்குவன் சிதடன் றுனே.

*கடவுளில்லாவிடின் வீடில்லை; நரகமில்லை; கடவுள் நூல் இல்லை. பாவபுண்ணியங்க ளில்லை, என்று சொல்லித்திரிவோன் வீட்டில் தீவைத்தும் அவன் செல்வத்தைக் கொள்ளையிட்டும் அவனைக் கொன்றும் கொடுமை செய்தால் அவ்வறிவில்லாதவன் என்ன செய்வான்.*

*இல் - வீடு. விபவம் - செல்வம். சிதடன் - அறிவில்லாதவன்.*

---

## அதி. உ—தெய்வத்தன்மையும் வாழ்த்தும்

**பிறப்பு இறப்பு இல்லாப் பெரியோனை வாழ்த்து**

ஆதியீ றில்லான் றன்னை யமைத்தகா
ரணமொன் றில்லான்
கோதிலான் கணத்து ளண்டங் கோடிசெய்
தழிக்க வல்லான்
ஓதிடு மொப்பொன் றில்லான் உருவிலான்
உருவிண் டெங்குஞ்
சோதிதன் னிழலாக் கொண்ட சோதியைத்
துதியாய் நெஞ்சே.

*முதலும் முடிவும் இல்லாதவன்; தன்னை உண்டாக்கிய ஒரு காரணப்பொரு ளில்லாதவன்; குற்றமில்லாதவன்; நொடிப் பொழுதினுள் திருவுள்ளத்தால் அளவிலாத அண்டங்களைப் படைத்து ஒடுக்கும்வலிமையுள்ளவன்; ஒப்பில்லாதவன்; உருவில் லாதவன்; எங்கும் ஒளி நிழலானவன். அவனை நெஞ்சே வணங்கு.*

*கோது - குற்றம். கணம்—நொடி. விண்டு - நீங்கி.* க

### காணரும் வடிவினன் கடவுள்

ஆணலன் பெண்ணு மல்லன் அஃறிணை யலன்பா ரல்லன்
சேணலன் புனல்தா னல்லன் தீயலன் ஐம்பு லத்தால்
காணரும் வடிவ னித்தன் கத்தனம் மத்தன் சுத்தன்
மாணற முருக்கொண்டன்ன மாட்சியான் கடவுணெஞ்சே.

*சிறந்த அறமே உருக்கொண்டனைய மாண்பினவன் கடவுள், அவனே தூய தலைவனும் தந்தையும் ஆவன். ஆனால் ஆண், பெண். உயிர், மண், விண் முதலிய பூதம், அவன் அல்லன்.* உ

### எப்பொருளினும் நீக்கமின்றி நிற்போன் இறைவன்

தரையெலா முளன்து ரும்பு தன்னினு
முளனண் டாண்ட
நிரையெலா முளன்மெய் யாவி நெஞ்சுளு
முளனி யம்பும்
உரையெலா முளன்தான் மேவி யுறைபொருள்
கெடக் கெடாதான்
புரைதபு தன்னைத் தானே பொருவுவோ
னொருவ னன்றே.

*தனக்குத்தானே ஒப்பாகிய கடவுள், தரை, துரும்பு, பல உலகங்கள், உயிர், நெஞ்சம், சொல் முதலிய எல்லாவற்றோடும் கலந்து நிற்கின்றான். அப்படி நிற்பினும் அப்பொருள் கெடுங் காலத்துத் தனக்குக் கேடின்றித் தனித்து நிற்பன்.* ங

### உலகியல் விதித்தோன் கடவுள்

உடுக்கணம் யாவும் வெவ்வே றுதயனு மோவ்வொன்றிற்கும்
நடுக்கட்பூ வலயஞ் சோம நபமோடும் வரம்பில் கோடி
அடுக்கடுக் காச்செய் தெல்லா மந்தரத் தமைந்து நிற்க
இடுக்கணொன் றின்றிக்காக்கும் எம்பிரான் பெரியனன்றே.

*விண்மீன்கள் ஒவ்வொன்றும் தனித்தனிச் சூரியனும். ஒவ்வொன்றுக்கும் உலகம், திங்கள், வானம் முதலியனவாகப் பலகோடி உலகங்க ளுண்டு. அவற்றை வெளியில் அமைத்துக் கேடில்லாமல் காப்பவன் கடவுள்.*

*நபம் - வானம்.*

*முட்டியுல கழியாது முடிப்பவன் கடவுள்*

பண்ணிய புவன மெல்லாம் படர்கையிற்
பரிக்கும் ஏகன்
நண்ணிய கரஞ்சற் றேயின் நழீஇயோன்
றேடோன் றும்மே
திண்ணிய வகில கோடி சிதைந்துகு
மேனவ றிந்தும்
புண்ணிய மனுவால் தேவைப் போற்றிடா
வாறென் னெஞ்சே.

*உலகங்கள் எல்லாவற்றையும் கையில் வைத்துக் காக்கும் தனிமுதற் கடவுள் திருக்கை சற்று ஓய்ந்தால், உலகங்கள் நழுவி அழிந்துபோம். இவ்வுண்மையை உணர்ந்து ஒப்பில்லாத கடவுளைத் தூயதமிழ் மந்திரத்தால் நெஞ்சமே தொழு.*

*நழீஇ - நழுவி.* ரு

*அடிமுடி எவர்க்கும் அறியொணுன் கடவுள்*

இதயந்தன் வேகத் தோடு மெண்ணிலவ்
வியத்த காலங்
கதமோடு மீச்சென் றேலுங் கடவுண்
மெய்ந் நடுவையன்றி
யிதரவங் கத்தைக் காணு தெனின்முடி
யெவண்போன் ஞேக்கும்
பதமேவ ணகண்டா காரப் பராபரற்
குரையீர் பாரீர்.

*மனம் தன் முழு விசையோடும் அளவிடப்படாத பேரெண் உள்ளகாலமெல்லாம் ஓடினுலும் தெய்வத் திருவுருவின் நடுவினையே காணமுடியும். ஆதலால், எல்லாம் ஆய இறைவனுக்கு முடியும் அடியும் எவ்விடத்தன என்று காணமுடியாது.*

*அவ்வியம்-பேரெண். அகண்டாகாரம் - அளவிலா வடிவம்.* சு

### ஆராலும் வாழ்த்தற் கரியவன் கடவுள்

விலகரும் அருளின் மீக்கூர் விமலனை வாழ்த்த வேண்டின்
அலகில்கற் பங்க ளேநம் ஆயுளாய் மும்மைத் தாய
உலகமோ ருடம்பா யந்த வுடம்பெலாம் வாயாய் நித்தம்
பலகவி மாலை சூட்டிப் பரவினும் முடியுங் கொல்லோ.

*ஊழிக்காலம் வாழ்நாளாய் மூவுலகும் உடம்பாய், உடம்பெல்லாம் வாயாய், ஒவ்வொருநாளும் பலவகைப்பாமாலை சூட்டி வாழ்த்தினும் பேரருளும் பெரும்புகழும் உடைய ஆண்டவனை வாழ்த்தி முடியாது.*

*கற்பம் - ஊழி.* எ

### உடலூண் உணர்வெலாம் உதவுவோன் கடவுள்

உருவில்சூ னியமா யாது முணர்விலா திருந்த நம்மைத்
திருவுட லோடு ஞானச் சீவனு கப்ப டைத்துச்
சருவநன் மையுமே தந்து தன்னையுந் தந்த நாதன்
மருமல ரடிக்கு நம்மை வழங்குதல் பெரிதோ நெஞ்சே.

*உருவின்றி உணர்வு விளங்காதிருந்த நமக்கு உடலும் உணர்வுவிளக்கமும் எல்லா நன்மையும் தந்தருளினவன் கடவுள். அவன் திருவடிக்கு நம்மை ஒப்புவித்தல் பெருஞ் செயலோ!* அ

### எல்லாம் அருளும் இறைக்கொப் பின்று

பூமிநம் மில்லா மற்றைப் பூதங்கள் பணிசெய் வோராஞ்
சோமன்மீன் கதிர்வி ளக்காஞ் சூழ்மரம் பயிரா காரச்
சேமவைப் பாந மக்கித் திரவிய மியாவு நல்குஞ்
சாமியை உவமித் தேத்தச் சாமியம் யாது நெஞ்சே.

*நமக்கெல்லாம் பொதுவீடு உலகம்; திங்கள் விண்மீன் ஞாயிறு விளக்குகள்; நீர் முதல் பூதம் வேலையாள்; சூழ்ந்துள்ள பயன் மரங்கள் உணவுதரும் நற்பயிர்கள்; பெருங்கடல் வைப்பு. இப்படியெல்லாம் அருளிய இறைவனுக்கு எப்படிஒப்புக் காண்பது?*

*சோமன் - திங்கள். சாமியம் - உவமை.* கூ

தெய்வப் புணையிலார் சேரிட மில்லார்

தோன்றக லிடம தென்னுந் துன்பசா கரத்தி லத்தன்
தான்தரு மலர்த்தாள் தெப்பஞ் சேர்கிலா தகன்று நிற்போர்
வான்றனைப் பிரிந்த புள்ளும் வாழுநீர் நீத்த மீனுங்
கான்றனை யகல்வி லங்குங் காவல்தீர் நகரு மொப்பார்.

*விரிந்த உலகமாகிய துன்பக்கடலுள் எல்லார்க்கும் தந்தையாகிய கடவுளின் திருவடிப்புணையைச் சேராது விலகிநிற்போர், வானத்தைப் பிரிந்த பறவையும், நீரைப் பிரிந்த மீனும், காட்டை விட்ட விலங்கும், காவல் இல்லா நகரும் பயன் எய்தாமைபோல் நாற்பெரும்பயனும் எய்தார்.* கo

இறையருள் உண்டேல் அச்சம் இன்று

பாரெலாம் பகைசெய்தாலும் பராபரன் கருணை யுண்டேல்
சாருமோர் துயரு முண்டோ தாயினு மினிய வையன்
சீரரு ளின்றேல் எண்ணில் தேர்கரி பரிப தாதி
பேரணியுடைய மேனும் பிழைக்குமா றெவன்கொனெஞ்சே.

*கடவுள் திருவருள் நமக்கு இருக்குமானல் உலகமெல்லாம் பகைத்தாலும் துன்பம் ஒன்றும் உண்டாகாது. அவன் அருள் இல்லாவிட்டால் நால்வகைப்படையோடிருப்பினும் நாம் தப்புதல் முடியாது.*

*கரி - யானை. பரி - குதிரை. பதாதி - காலாள்.* கக

கடவுளை அறியாது காலங் கழித்தனை

இருநிதி பெற்ற தீனர் எண்ணிடா திகழ்ந்த தொப்ப
அருவமா யுருவ மாய்நம் மாருயிர்க் குயிரா யண்டம்
பெருநில மெங்கு மின்பம் பெருக்கெடுத் தோங்கி நிற்குங்
கருணையங் கடலா டாது கழித்தனை வாழ்நா ணெஞ்சே.

*நெஞ்சே நீ அருவமாய் உருவமாய் உயிர்க்கு உயிராய் பேரின்பப் பெருக்காய் எங்கு நிறைந்த திருவருட்கடல் ஆடாது வாழ்நாள் போக்கல், பெரும்பொருள் பெற்ற வறியவர் அப்பொருளைக் கருதாது இகழ்வதை யொக்கும்.*

*தீனர் - வறியவர்.* கஉ

நினைக்க நினைக்க நேரும்பே ரின்பம்

முன்னவன் றனையு ளத்து முன்னமுன் னத்தே விட்டாக்
கன்னலோ வமுதோ பாகோ கற்கண்டோ வெனத்தித்திக்கும்
இன்னன்மே வாத வன்ரு னெங்கணு நிறைந்தி ருந்தும்
அன்னையை நீத்த சேய்போ லையனை நீத்தாய் நெஞ்சே.

ஆண்டவனை நினைக்க நினைக்கக் கரும்பு, அமுது, வெல்லப் பாகு, கற்கண்டு முதலியன போன்று இனிக்கும். துன்பம் அணுகாது; எங்கும் நிறைந்த அவனைத் தாயை நீத்த சேய்போல் நெஞ்சமே நீத்தனையே.

முன்ன - நினைக்க. தெவிட்டா - வெறுப்புத்தட்டா.
கன்னல் - கரும்பு. இன்னல் - துன்பம். சேய் - பிள்ளை. கங

தொழாது காலம் கழித்தல் நன்றன்று

ஆயுளுள் சிலவெங் காம மனந்தர்நோய் சோம்பு கொண்ட
காயமே வளர்க்க வென்னில் கருமங்கள் செயலிவ் வாறே
தேயுநாள் கழிய நிற்குஞ் சேடநா ளற்ப மாகுந்
தூயநா தனைத்தொ ழாமல் தொலைக்கின்ரு யழியு நெஞ்சே.

வாழ்நாள் மிகவும் சுருக்கம்; காமம், தூக்கம், நோய், மடி முதலியன நிறைந்த உடம்பு. இதை வளர்க்க வினைசெய்தல் வேண்டும். இப்படியே வாழ்நாள்கள் கழிந்து தேய்கின்றன. எஞ்சிய நாள் குறைவு; அந்த நாளையும் கடவுளைத் தொழாது தொலைக்கின்ருய் நெஞ்சமே.

ஆயுள் - வாழ்நாள். அனந்தல்-தூக்கம். சேடம்-மிச்சம். கச

கடவுளை அகத்தில் காண்பதே காட்சி

பொங்கலை ஆழி தாண்டிப் பொருப்புகள் கடந்தோ யாமல்
அங்குமிங் குந்தி ரிந்தே யழிந்துபோ முடலைக் காப்பாய்
எங்கணு முள்ளோன் ருளுன் னிருக்கையி னிருந்து போற்றிப்
பங்கமில் சுகம்பெற் றுய்யப் பாரமேன் பகராய் நெஞ்சே.

நெஞ்சே அழிந்துபோம் உடலைக் கடல்தாண்டியும், மலை கடந்தும் எங்கும் திரிந்து காப்பாய். இருந்த இடமிருந்து ஆண்டவனைத்தொழுது பேரின்பமடைய வருத்தமென்னே? கரு

### கடவுளைத் தொழுவோர் காண்பர்பே ரின்பே

**மாசறு கடவுள் பாத மலரினைத் தினமும் போற்றிப்
பாசமில் சுகம்பெ றாமற் பவஞ்சத்து டுழலல் பைம்பொன்
ஆசனந் தன்னிலேறி யரசுசெய் தகைமை நீத்துக்
காசனக் கழுவி லேறுங் கயமையே கடுக்கு மாதோ.**

*ஆண்டவன் திருவடியை நாளும் தொழுது துன்பமில்லாத இன்பத்தை எய்தாமல் உலகில் அலைதல், உரிய அரசிருக்கையில் இராமல் கொலைக்கழுவில் ஏறுவதை யொக்கும்.*

*காசனம் - கொலை. கடுக்கும்-ஒக்கும். பவஞ்சம்-உலகு.* கசு

### கடவுளைத் தொழா உறுப்புக் கல்மண் தீ யாமே

**போதநா யகனை யுன்னாப் புந்தியே வெந்தீ யோப்பாந்
தாதல ரடிவ ணங்காத் தலைகுலை சிலையாஞ் சீர்சான்
மாதலத் தவனை வாழ்த்தா வாயது தூய தன்று
காதலன் போடுநீர் தூவாக் கண்களே புண்க ளாமால்.**

*அறிவு உருவான ஆண்டவனை எண்ணாதநெஞ்சம் தீ, அடிவணங்காத் தலை உடைகல்; வாழ்த்தாவாய் மாசுடையது. இன்ப நீர் பெருக்காத கண் புண் ஆகும்.*

*போதம் - அறிவு.* கஎ

### எல்லாம் இன்பெய்தக் கடவுளை ஏத்தும்

**கதிரவன் கிரணக் கையால் கடவுளைத் தோழுவான் புட்கள்
சுதியோடும் ஆடிப் பாடித் துதிசெயுந் தருக்க ளேல்லாம்
போதியலர் தூவிப் போற்றும் பூதந்தந் தோழில்செய் தேத்தும்
அதிர்கட லோலியால் வாழ்த்தும் அகமே நீ வாழ்த்தா தேன்னே.**

*கடவுளைக் கதிரவன் தன் கதிர்க்கையால் தொழுகின்றான். பறவைகள் குரலெடுத்து ஆடிப் பாடிப்போற்றும். மரங்கள் மலர் தூவிப் போற்றின. பூதங்கள் தொழில் செய்து எத்தும். கடல் ஒலியால் வாழ்த்தும். நெஞ்சமே நீ வாழ்த்தாத காரணம் என்ன?* கஅ

### எல்லாம் காக்கும் இறையே மேலாம்

அறிவிலா ரரச ரேன்றற் கமைச்சரே சான்றும் அன்னோர்
சேறிபெருந் தானை யான்மேய்த் திறலிலா ரேனவ றிந்தோம்
வறியரேன் றிறையி ரக்கும் வாய்மையா லறிந்தோ மேன்று
நேறிவழா துலகந் தாங்கு நிருபனைத் துதியாய் நேஞ்சே.

*நெஞ்சே அரசருக்கு அறிவும் வலிமையும் செல்வமும் இல்லை என்பது, முறையே அமைச்சர் படை வரிவாங்கல் முதலிய துணைகளால் அறிகின்றோம், உலகெலாம் காப்பவன் ஆண்டவன் ஒருவனே அதனால், அவனைப் போற்றுவாயாக.*

*தானை - படை, திறல் - வலிமை. இறை - வரி.* கக

### எங்குந் தங்கி இயற்றுவோன் கடவுள்

இரவினும் மற்றோர் பாரா இடையினும் பாவஞ் செய்வாய்
கரதலா மலகம் போல்முக் காலமும் உணர்வோன் எங்குந்
தரமோடு வீற்றிருக்குந் தன்மையேள் ளளவும் ஓராய்
பரனிலா இடமோன் றுண்டேல் பவமவண் செய்நீ நேஞ்சே.

*நெஞ்சமே இரவிலும் பிறர்காணு இடத்திலும் பாவஞ் செய்கின்றாய். ஆண்டவன் எங்குமிருக்கின்றான். அங்கை நெல்லி போல் முக்காலமும் உணர்கின்றான் இவற்றை அறிந்தால் ஆண்டவன் இல்லாத இடமிருந்தால், அவ்விடத்து நீ பாவஞ் செய்.*

*கரதலாமலகம் - அங்கை நெல்லி.* உ0

---

# அதி. ௩—அரசியல்பு

*துன்பம் நீக்கி இன்பம் ஆக்குவோன் மன்னன்*

எந்தவே ளாயினும் நொந்தவர் துயர்கேட்
டிடரிழைப் பவன்றனை தேக
மைந்தனே யெனினும் வதைத்திட ஒல்கான்
மாக்களின் சுகநல மன்றிச்
சிந்தனை மற்றோர் பொருளினில் செலுத்தான்
தீமொழி கனவிலும் புகலான்
தந்தைபோல் தாய்போல் எவரையும் ஓம்புந்
தன்மைய னேயிறை யன்றோ.

*குடிகளுக்குத் துன்பஞ் செய்வோன் தன் ஒருமகனை விரும்பினும் தண்டிப்பவனும், குடிகள் நலமே எண்ணுபவனும், கடுமொழியில்லாதவனும், தந்தைதாய்போல் பேணுபவனும் மன்னனாவான்.*

*ஓம்பல் - பேணல்.* ௧

*மன்னுயிர் எல்லாம் தன்னுயிரா மதிப்போன் மன்னன்*

மன்னுயி ரனைத்துந் தன்னுயி ரென்ன
மகிழ்வொடு தாங்கியா ரேனும்
இன்னலுற் றயர்ந்தோ மெனக்கலுழ்ந் திடில்தன்
இருவிழி நீரினை உகுப்பான்
அன்ன வெந்துயரை நீக்குமுன் தானொன்று
அயின்றிடான் துயின்றிடான் எவரும்
நன்னக ரெங்கும் உளனெனப் பகர
நாடோறும் இயங்குவோன் கோனே.

*எல்லா உயிரும் தன் உயிர்போல் காத்துப், பிறர் துன்பங் கண்டால் கண்ணீர்விட்டு, அத்துன்பம் நீக்கும் வரை ஊண் உறக்கமின்றி நகரெங்கும் காணும்படி வருவோன் மன்னன்.*

*இன்னல் - துன்பம். அயின்றிடல் - உண்டல்.* ௨

### நல்லாரால் அரசு நடத்துவோன் மன்னன்

தாயறி யாத சேயிருந் தாலுந்
    தானறி யாதவ ரில்லே,
ஆயதன் மையினல் அறவழி நிற்கும்
    அறிஞரை யறிந்தவர்க் குரிய
தேயவா திக்கந் தந்துநன் னீதி
    செலுத்தியெங் கணுமருந் தினுக்குந்
தீயவ ரிலரேன் றிசையுற மடக்குந்
    திறலுளோன் பூதல வேந்தே.

எல்லாக் குடிகளையும் தானறிந்து, நல் அறிவாளரைக் கொண்டு அரசு நடத்தித், தீயவர் பெயருமில்லாமல் நீக்கிப் புகழுடன் ஆள்வோன் மன்னன்.

இசை - புகழ். திறல் - வலிமை. ௩

### தானும் குடிகளும் சமனென்போன் வேந்தன்

தன்புகழ் கருதி மருவல ரோடுஞ்
    சமர்புரிந் துயிர்களை மாய்த்துத்
துன்பமே செய்ய வியைந்திடான் முற்போர்
    தொடுத்திடான் றன்னுயி ரனைய
மன்பதைக் கிடுக்கண் யாவரே செயினும்
    வாளம ரியற்றிநீக் கிடுவான்
இன்பதுன் பங்கள் தனக்குமற் றவர்க்கும்
    ஏகமேன் றெண்ணுவோன் வேந்தே.

வலியப்போர் செய்து உயிர்கள் மாள மனம் இணங்காமை, உயிர்களைத் துன்புறுத்தும் மன்னனை வலிந்து போர்செய்து மடக்குதல். இன்பதுன்பம் குடிகளுக்கும் தனக்கும் சமமாகக் காண்டல் ஆகியதன்மையன் வேந்தன்.

வேந்தன் - முடியுடைமன்னன். ௪

*நெறிமுறை நடந்து நடத்துவோன் நீள்மன்னன்*

தானினி தியற்றுமனுநெறிப் படிமுன்
றூனடந் தறவழிகாட்டி
ஞானநற் குணத்தின் மேன்மையா லெவர்க்கு
நாயகந் தானெனத் தெரித்துத்
தானமுந் தயையு மெய்ம்மையுந் தவமுந்
தற்பரன் வணக்கமும் பொறையு
மானமு மிகுத்து நரரெலாஞ் செழிக்க
மகிழர சளிப்பவன் மன்னே.

*முறைதவிராமல் தான் நடந்து குடிகளையும் நடத்துவோன், நல் அறிவாலும் நற்பண்பாலும் எல்லாருக்குந் தலைவனுவோன், தானம், கண்ணோட்டம், மெய்ம்மை தவம், தெய்வ வணக்கம், பொறுமை, மானம் முதலியன இயல்பாய் அமைந்து, மக்கள் எல்லாம் செழிப்புடன் மகிழ்வுற ஆள்வோன் வேந்தன்.*

*தயை - கண்ணோட்டம்.* ௫

*வாய்ப்பெல்லாம் இயற்றி ஆள்வோன் மன்னன்*

சத்திரஞ்சோலை சாலைகள் குளங்க டண்ணதி
மதகோடா லயங்கள்
வித்தியாசாலை மாடகூ டங்கள் வேறுவே
றமைத்துவே ளாண்மை
சத்திய மகலா வாணிக மாதி சகலநற்
றேழிலவ ரவர்கள்
நித்திய முயல வித்திசை புரக்கு நிருபனே
நிருபனு மன்றே.

*ஊட்டுப்புரையும், பூங்காவும், சாலை, குளம், யாறு, மடை, கோவில், கல்லூரிகளும், மாடகூடங்களும் வெவ்வேறமைத்து வேளாண்மை வாணிபம், கைத்தொழில் நாளும் பெருக வேண்டு வனசெய்து காப்போன் வேந்தன்.*

*சத்திரம் - ஊட்டுப்புரை (தங்குமிடம்). புரத்தல் - காத்தல். நிருபன்-வேந்தன்.* ௬

பன்முறை கேட்டு முறைசெயல் பண்பு

காதிறைவனுக்குக் கண்ணென லான்மெய் காண்குறு
னெனுமொழி மாற்றி
வாதிகள் சாட்சி சாதகமெல்லாம் வகைவகை
யினிதுகேட் டமைந்த
மேதினிக்கிழமை நீங்கிடுந் தன்மை விளையினு
நடுவினீங் காது
பாதியா வணுவும் பகுந்துதீர்ப் பதுவே பார்த்திபன்
கடமையா மன்றோ.

ஒற்றர்மொழியன்றிப் பிறர்மொழியைக் கேட்டு உண்மை காணான் மன்னன் என்று உலகோர் சொல்லும் உரையை மாற்றி, வழக்காளியும் எதிர்வழக்காளியும் சான்று சொல்லுவோரும் கூறுவனவும், மற்றை ஆவணமாகிய எழுத்து முதலியவும் செவ்வையாகக் கேட்டும் ஆய்ந்தும் முறைசெய்தல்வேண்டும். அரசே தன்னைவிட்டு நீங்குமாயினும் தான் நடுவுநிலைமையில் நீங்காது அணுவையும் பாதியாகப் பிளந்து நடுவுநிலை செய்யும் மன்னனே வேந்தன். எ

செங்கோல் ஒன்றே சேர்க்கும் வலியினை

மன்னவன் வலிசெங் கோலினா லன்றி
வாளினாற் சேனையா லில்லை
நன்னெறி வழுவா மன்னவன் தனக்கு
நாடெலாம் பேரர ணுலகின்
மன்னுயி ரெல்லா மவன்படை யன்னோர்
மனமெலா மவனுறை பீடம்
இன்னதன் மையனா யரசளிப் பவனை
இகல்செயுந் தெறுநரு முளரோ.

வாளும் காலாளும் மன்னனுக்கு வலியும் வெற்றியும் தருவன அல்ல. அவன் செங்கோலே அவனுக்கு வலியாகும்; வெற்றி யாகும். முறைதவிரா மன்னனுக்கு நாடெல்லாம் கோட்டை; குடிகளெல்லாம் படை; குடிகள் மனமெல்லாம் இருக்கை; இத் தகைய மன்னனுக்குப் பகைவரும் உண்டாவரோ? (உண்டாகார்.)

பீடம் - இருக்கை, தெறுநர் - பகைவர். அ

தன்னைத் தொண்டனாத் தருவோன் மன்னன்

கைப்புரை யேற்றுப் பொய்ப்புக ழேலாக்
காதின னருள்பொழி கண்ணன்
தப்புரை வழங்கா நாவினன் புவியோர்
தாசன்ற னெனவுணர் மனத்தன்
செப்பயன் மடவார் காணரு முரத்தன்
றிருந்தலர் காணரும் புறத்தன்
எப்பொழு தினுஞ்சென் றியாருங்காண் முகத்தன்
ஈசனன் புடையவ னிறையே

சான்றோர் கூறும் நல்வழிப்படுத்தும் கசப்புரையை உவந்து கேட்கும் காதினன். பொய்ப்புகழ் அக்காதில் ஏறாது செய்பவன். அருள் நிறைந்த கண்ணையுடையவன். பொய்சொல்லா நாவினன். உலகோர்க்கு உவந்து செய்யும் அடிமை எனத் தன்னை நினைக்கும் மனத்தினன். அயன் மாதர் எண்ணம் அணுவுமில்லா நெஞ்சினன். பகைவர்க்குப் புறமுதுகு இடாதவன், எல்லார்க்கும் எப்பொழுதும் காட்சிக்கு இனியவன். கடவுள்மாட்டு நீங்காப் பேரன்புடையவன்,

புறம் - முதுகு. ௯

கொடுங்கோ லரசன் அடுந்தன் உயிரும்

கொடியமன் னவர்க்குக் குடிகளே யொன்னார்
கோட்டையே யமர்க்களம் அவர்தம்
அடிகள்தோய் நிலமெங் கணும்படு குழியாம்
அயின்றிடும் அன்னமும் விடமாம்
நெடியவா சனமே காசன மேடை
நிமிருழை யோர்நமன் றூதர்
கடிமனை மயானக் காடெனில் கொடுங்கோற்
காரண ருய்யுமாறு உளதோ.

முறைதவறிய மன்னர்களுக்குக் குடிகளே பகைவர்; போர் முனையே கோட்டை; அவர்கள் நடக்கும் இடங்களெல்லாம் படுகுழி; உண்ணும் உணவு நஞ்சு; இருக்கை கொலை மேடை; பணியாளர் கூற்றுவன் தூதுவர்; அரண்மனை சுடுகாடு. இந்நிலையிலுள்ள மன்னர்கள் ஒருகாலும் ஈடேறார்கள்.

காசனம் - கொலை ௧௦

# அதி. ௪—குடிகளியல்பு

*அரசின்றேல் உலக ஒழுக்கம் அழியும்*

வேந்தனே யில்லா விடினுல கத்து
மேலது கீழதா மணஞ்செய்
காந்தனுக் கடங்கிக் களத்திரம் நடவாள்
காதலர் தந்தைசொற் கேளார்
மாந்தர்வே ளாண்மை முதற்றமக் குரிய
வளமைகூர் தொழில்களின் முயலார்
சாந்தருந் தீய ராவரேல் தீயர்
தன்மையைச் சாற்றுமா றெவனோ.

*நாடும் மொழியும் நலமுறக் கூடிவாழ்வதே குடிகள் இயல்பு. செங்கோல் மன்னன் இல்லாவிட்டால், மேன்மை தாழ்வை அடையும்; குடும்பம் குலையும்; மக்கள் தந்தைசொற் பேணார்; உழவர் பயிர்த்தொழில் செய்யார்; அமைதியினரும் கொடியவராவர்.*

*மன்னன் இன்றேல் மனையாள் செல்வம் மாள்வர்*

நம்மனை மைந்தர் கிரகவாழ் வெல்லாம்
நரபதி யாலவ னிலனேல்
அம்மனை தீயர் கைவச மாவள்
அருநிதி கொள்ளையாம் நாளும்
வெம்மையோ டொருவ ரொருவரை யுண்பார்
மேலவர் அசடரான் மெலிவர்.
அம்மஈ தெல்லா முணர்ந்தர சாணைக்
கமைதனற் குடிகளி னியல்பே.

*மனையாள் மக்கள் வாழ்வு எல்லாம் மன்னவனாலேயே நிலைக்கும். அவன் இல்லாவிட்டால் கற்பழிவும் கொள்ளையும் கொலையும், உயர்ந்தவரைத் தாழ்ந்தவர் துன்புறுத்தும் கொடுமையும் பெருகும். அதனால், அரசன் ஆணைக்கு அடங்கி நடப்பதே பெருமை.*

## வேறு

*மன்முறை தவறின் வளங்குன்றி அழியும்*

நதியினு முயர்பணை நந்துங் காருலாங்
கதியினு முயர்வரைத் தருக்கள் காயுமால்
பதியினு முயர்தடம் காப்பைஞ் ஞீலங்கள்
விதிசெயல் சிதைந்தக மேலிந்து நையுமே.

(செங்கோல் மன்னன் இல்லாவிட்டால்) யாற்றினும் மிக்க நீர்வளமுள்ள வயல்களும் கெடும். மேகத்தை ஊடுருவிச் செல்லும் உயர்ந்த மலைமேலுள்ள மரங்களும் வாடும். ஊரினும் சிறந்த குளம் சோலை நீலமலர்கள் வாழ்க்கைமுறைகள் எல்லாம் வளங் குன்றி யழியும்.

பணை-வயல், நந்தும்-கெடும், தருக்கள்-மரம், தடம்-குளம், கா-சோலை, ஞீலங்கள் - நீலமலர்கள். (௩)

*உடலுக்குத் தலை போலும் உலகினுக் கரசன்*

தரையெனு முடற்கொரு தலைவ னேதலை
நரர்பல வுறுப்புக ணலங்கொண் மெய்யது
சிரமுறும் பொறிவழிச் செல்லுந் தன்மைபோல்
உரவர சனுக்கமைந் தொழுகும் வையமே.

உலகமாகிய உடலுக்கு மன்னனே தலை; மக்கள் (மெய் வாய் கண் மூக்குச் செவி, கை கால் வாய் எருவாய் கருவாய் முதலிய) வுறுப்புக்கள். உடம்பு மூளைவழிச் செல்லும் தன்மைபோல் வலிமையுடைய அரசன்வழி உலகம் நடக்கும்.

நரர் - மக்கள். உரன் - வலிமை. ௪

*நயம்செய் மன்னவன் ஞாயிறு போல்வான்*

பானுவெப் புடையவ னெனினும் பானுவே
வானில வானெனில் வைய முய்யுமோ
கோனருங் கொடியனே யெனினுங் கோனின்றி
மானவ ருய்யவோர் வழியு மில்லையே.

ஞாயிறு வெப்பமுடையவன். ஆனாலும், அவன் வானில் உலாவாவிட்டால் இருளகலாது; ஒளியுண்டாகாது; உயிர்கள் வாழ முடியாது. அதுபோல், மன்னனும் தீயோருக்குக் கொடியனே; அவன் இல்லாவிட்டால் நல்லவர் வாழ வேறு வழியின்று.

பானு - ஞாயிறு, மானவர் - நல்லவர். ௫

வரிகொளல் மக்களை வாழ்வித் தற்கே

படியின்மன் னுயிர்க்கெலாம் பாது செய்கின்ற
நெடியமா சேனையை நெறிசெய் மாந்தரைக்
கடியொடுங் தாங்கவூர்க் காரி யஞ்செயக்
குடியிறை யிறையவன் கொள்ளுங் கோள்கையே.

மன்னவன் வரிவாங்குவது மக்களைக் காக்கும் படைகளுக்கும் அரசியல் அலுவல்களிலமர்ந்து நெறிமுறைசெய்யும் வேலையாட்களுக்கும், நாடு நகரங்களின் நலம் பெருகச் செய்யும் பணிகட்கும் செலவு செய்தற்கே.

படி - உலகம். மாந்தர் - வேலையாட்கள். ௬

மன்னனைக் குடிகள் உழைப்பால் காப்பர்

கோவரிய சீவன் குடிகளுட லாவார்
சீவன்சும் மாவிருக்கத் தேகமுழைத் தோம்புதல்போற்
பூவலய மீதினில்தம் பூட்சிகளி னுலுழைத்துக்
காவலனைக் காக்கக் கடனாங் குடிகளுக்கே.

மன்னவன் உயிர்போல்வான்; குடிகள் உடல் போல்வர்; உயிருக்கு உடல் உழைத்துக்கொடுப்பதுபோல் குடிகள் தங்கள் உடலா லுழைத்து, காக்கும் மன்னனைக் காத்தல் கடமை.

கோ - மன்னன். பூட்சி - உடம்பு. காவலன்-மன்னன். ௭

---

## அதி. ரு—ஞானாசிரியன் பெருமை

### இறைவனை உணர்த்தி இன்பருள்வோன் ஆசான்

அகவிரு ளகல ஞான விளக்கினை யருளின் ஏற்றிச்
சகலமு நல்குங் கேள்வித் தனத்தினை நல்கி யாதிப்
பகவன்தன்சொரூபங் காட்டிப் பவமற மிரண்டுங் காட்டிச்
சுகநிலை காட்டுந் தியாகத் தோன்றலை மறவாய் நெஞ்சே.

*ஞானவள்ளல் மனவிருள் நீங்க மெய்யுணர்வு விளக்கை ஏற்றுவன்; எல்லா நலமும் தரவல்ல கேள்விச்செல்வத்தைத் தருவன்; கடவுளருள் திருவுருவைக் காட்டுவன்; பாவ புண்ணியங்களை உணர்த்துவன். பேரின்பத்து அழுத்துவன். அப்படிச் செய்தருளிய ஞானாசிரியரை நெஞ்சே மறவாதே.*

*அகம் - மனம். தனம் - செல்வம். சொரூபம் - திருவுரு. பவம் - பாவம். தியாகத்தோன்றல் - ஞானவள்ளல்.* க

### வேறு

#### அழியா ஞான உடம்பளித்தோன் ஆசான்

கான லெனப்படு காய மிதப்பன்
தானவ மேபுவி தங்க அளித்தான்
ஈனமில் ஆரியன் என்று மொருங்கா
ஞானவு டம்பினை நல்கினன் அன்றே.

*பொய்யாகத் தோன்றும் உடம்பினை இவ்வுலகில் வீணாகத் தங்க அளித்தான் ஈன்ற தந்தை. ஞானாசிரியன் என்றும் அழியாத ஞான உடம்பினை அருளினன்.*

*கானல் - நீர்போல் தோன்றும் வெளி. காயம் - உடம்பு. அவம் - வீண். ஆரியன் - ஆசான். ஒருங்கா - அழியா.* உ

### வேறு

#### ஆசானு லன்றி அறியொணா நூற்பயன்

நாட்டமின்றி யொளியெப் பயனைநல்கும் மனையில்
பூட்டுபோன் திறவுகோ லினையலாது புகுமோ

வேட்டகத் தரியநூல்க ளுளவேனு மினிதாக்
காட்டருட் குரவனின்றி யெவர்காண்பர் பயனே.

*கண்ணில்லா விட்டால் ஒளியின் பயனின்று; திறவுகோல் இல்லாவிட்டால் வீட்டில் புகமுடியாது. அவைபோன்று, வீட்டில் விரும்பிய நூல் பல இருப்பினும் ஞானசிரியன் காட்டினல் அல்லாமல் ஒருவராலும் நூலின்பயன் காணமுடியாது.* ௩

*ஆசானு லன்றி யார்க்கும் பிறப்ப றுது*

ஞானசூ ரியனெனுங் குரவனின்றி நரர்தம்
ஈனவெம் பவவிரா வையகலா ரேவருமே
கானம்வாழ் மிருகமாவர் கதிவாயில் போதியு
மானவர்க் குறையுளாய் நிரயம்வாய் விரியுமே.

*மக்கள் ஞானசிரியனாகிய விளக்கின்றிப் பிறவியாகிய இருளைக் கடவார், பிறவியைக் கடவாதவர் காட்டுவிலங் காவர். அவர்க்குக் கடவுள்நிலை கிட்டாது. அவர்கள் நரகத் தழுந்துவர்.*

*குரவன் - ஆசான். பவம்-பிறப்பு. நிரயம் - நரகம். மானவர் - மக்கள். கதி - கடவுள்நிலை.* ௪

*தெய்வநூல் ஓதுவோன் சிறந்தமெய் ஆசான்*

மண்ணிறைக் கடியரா யுயிர்வளர்ப்பர் பலரும்
விண்ணிறைக் கடியரா யெவரும்வீடு பேறவே
புண்ணியத் திருமறைப் பொருளையோது புனிதர்
எண்ணிடற் கரியபெற்றி யையியம்ப லெளிதே.

*உலகத்தார் மண்ணரசர்க்கு அடிமையாய் வாழ்வர். மெய் யுணர்ந்தார் கடவுளுக்கு அடிமையாய்த் தூய மறைப்பொருளை எல்லாரும் வீடுபெறும் பொருட்டு ஓதுவர். அளவிட முடியாத அவர்கள் பெருந்தன்மையைச் சொல்லமுடியாது.*

*விண்ணிறை - கடவுள். வீடு - கடவுளின்பம்.* ௫

*ஆசான் அரும்புகழ் அளவிடற் கரிதே*

ஐம்புலக் கதவடைத்து மனமாவை அறிவாங்
கம்பம்வீக் கியஞருஞ் சுகமெனக் கருதியே

செம்பொனைத் திரணமா மதித்திடத் தகுதியோர்
தம்பெரும் புகழியம் புதற்குந் தரமதோ.

மெய் வாய் கண் மூக்குச் செவியெனும் ஐம்புல ஆசையை அகற்றி, மனமாகிய விலங்கை அறிவுத்தூணிற் கட்டித், துன்பத்தையும் இன்பமாகக் கருதிப் பொன்னைத் துரும்பு என மதித்து நடக்கும் பெரியோர் பெரும்புகழைச் சொல்லமுடியாது.

கம்பம் - தூண். வீக்கல் - கட்டல். அளுர் - துன்பம். திரணம் - துரும்பு. ௬

வேறு

மெய்யுணர்ந்தார் துன்புறினும் விலகார் பெருந்தகைமை

தலைகீழுறச் செய்யினுந் தீபம்விண் டன்னை நோக்குங்
கலைதேயினுந் தண்கதிர் வீசுமக் கங்குற் றிங்கள்
விலையாமணி யைப்பொடி செய்யினு மின்ன ருது
நிலைநீங்குவ ரோதுயர் மேவினு நீர்மை யோரே.

விளக்கினைத் தலை கீழாகப் பிடிப்பினும் சுடரொளி வானத்தையே நோக்கும். திங்கள் தேய்ந்து வரினும் குளிர்ந்த கதிரையே வீசும். மாணிக்கம் பொடிசெய்யப்படினும் விளக்கம் குன்றாது. இவைபோன்று பெரியவர் துன்புறினும் பெருந்தன்மையிற் குன்றார்.

கங்குல் - இரவு. மின் - விளக்கம். ௭

இன்மொழியா லறமுரைத்து ஈடேற்றுவன் ஆசான்

கைத்திட்ட மருந்திலக் காரங் கலந்து கூட்டி
மத்தித்தருள் பண்டிதர் போன்மற நோய்த விர்ப்பான்
எத்திக்கினுங் கேட்பவர் காதுள மின்ப மேவித்
தித்தித்திட ஆரியர் நன்மறை செப்பு வாரே.

மருத்துவர் கைப்பு மருந்தின்மேல் இனிப்புப் பூசி உண்பித்து உடல் நோயை நீக்குவார். ஆசிரியரும் தம் இன்மொழிகளால் அறமுரைத்து நன்னெறி ஒழுகச் செய்து உயிர்நோயாகிய பிறவியை மாற்றுவர்.

அக்காரம் - இனிப்பு. மறம் - பாவம்; உயிர் நோய். ௮

*பலர்க்கும் விளங்கப் பகுத்துரைப்போன் ஆசான்*

சிறுவாய்க் கலத்துட் டுளியாகச் செலுத்து நீர்போல்
அறியாச் சிறுவர்க்கு முணர்ந்தறி யாத வர்க்கும்
வறியார்க்கும் விளங்கிட வேதெளி வாவகுத்து
நெறியைத்தெரி விப்பர்நன் ஞானெறி நின்ற மேலோர்.

*வாய் ஒடுங்கிய கலத்துள் நீரைச் சிறிது சிறிதாகச் செலுத்துவதுபோன்று, ஆசானும் நன்னெறி நூன்முறையைச் சிறுவர்க்கும், உணர்ந்தறியாதார்க்கும், ஏழைகட்கும் விளங்கும்படி வகை செய்து தெளிவாக உரைப்பான்.*

*கலம் - ஏனம் (பாத்திரம்).* கூ

*இயைந்தெல்லார்க்கும் இன்புறுத்துவோன் ஆசான்*

வைவார்தமை வாழ்த்தியு நெஞ்சில் வருத்த முற்று
நைவாருடன் நைந்தழு துந்தமை நண்ணித் துன்பஞ்
செய்வாருறு பீழை நினைந்துதஞ் சிந்தை நொந்து
மெய்மாமறை யின்பய னோதுவர் மேன்மை யோரே.

*மெய்யுணர்ந்தார் தம்மை வைவாரை வாழ்த்துவர். உளம் வருந்தித் துன்புறுவாருடன் தாமும் துன்புற்று அழுவர். தமக்குத் துன்பஞ் செய்வார்க்கு அத்தீவினைப் பயனால் துன்பம் வருமே என்று மனம் நொந்து ஆண்டவன்பால் மன்றாடுவர். எல்லார்க்கும் உண்மைத் தெய்வமறையின் சிறப்பை எடுத்துக் கூறுவர்.*

*வைவார் - திட்டுவோர். நைவார் - துன்புறுவார். பீழை - துன்பம். மேன்மையோர் - மெய்யுணர்ந்தார்.* ௧௦

## வேறு

*கீழோர்க்குப் போதிக்கினும் மெய்யுணர்ந்தார் கேடுறார்*

பரிதியின் கிரணமங் கணமதிற் படியினும்
அரிதின்மா சணுகுறு தகலல்போ லினியநற்
சரிதமில் லவர்குழாஞ் சார்ந்துபோ திக்கினுந்
துரிதவெம் பவமுறார் தோன்மறைக் கிழவரே.

ஞாயிற்றின் கதிர்கள் அங்கணத்துள் தூய அல்லாத அழுக்கு நீர் முதலிய வற்றில் படியினும் அக்கதிர்கள் கெடுவன அல்ல. அதற்கு மாறாக அந்நீர் முதலியன தூய்மை எய்தும். இவை போன்று, மெய்யுணர்ந்தார் நல்லொழுக்கமில்லாரிடைச் சார்ந்து போதித்தாலும் தாம் தீங்கெய்தார். அவர்களை நல்லொழுக்கத்தில் நிற்கச்செய்வர்.

பரிதி-ஞாயிறு. அங்கணம்-கலங்கழுவுமிடம். மாசு-அழுக்கு, சரிதம் - ஒழுக்கம். துரிதம் - கேடு. மறைக்கிழவர் - மெய்யுணர்ந்தார். கக

---

## அதி. சு—பொய்க்குருவின் தன்மை

### அருளில் நெஞ்சத்தான் ஆசான் ஆகான்

திருடன் பொருட்கா வலனுதலுஞ் செல்வழிக்குக்
குருடன் குருடன்றனை யேதுணைக் கோள்ளல்போலும்
இருடங் குளமாந்தரை வான்கதி யேற்றவேன்னு
அருடங்கிய நேஞ்சமி லான்குரு வாயவாறே.

பொருளைக் காக்கக் கள்ளனை வைத்தலும், குருடனுக்கு வழித்துணை குருடனாக அமைதலும் பயன் இல்லாமைபோல், அருள் சேர்ந்த நெஞ்சமில்லாதவன் ஆசானாய் மக்கள் அறியாமையை நீக்க மேற்கொள்வது பயனில்லாததாகும்.

இருள் - அறியாமை. க

### குற்றமிலான் உரையையே கொள்வர் உலகோர்

பேருவேம் பிணியாளன் மற்றோர்பிணி பேரும்வண்ணந்
திருமந் திரஞ்சோல்வ னேன்றேதிடிற் றிண்மையாமோ
தருமந் தனைநாட்ட வந்தோன்குறை தானுளானேல்
இருமண் டலமீதவன் சோல்லேவ ரேற்பர் மாதோ.

தன்நோயைப் போக்கிக்கொள்ள முடியாதவன் பிறர் நோயைப் போக்க மந்திரிப்பேன் என்பது உறுதிதராது. அதுபோன்று, குற்றமுள்ள ஒருவன் நன்மையை உலகுக்குச் சொன்னால் உலகத்தார் அதனை ஏற்றுக்கொள்ளமாட்டார்.

இரு மண்டலம் - பெரிய உலகம். உ

### பேராசை ஆசானைப் பேருலகோர் கொள்ளார்

பாவச் சலதிக்குள் உருவகை பாருளோர்க்குக்
காவல் துணையாங் குரவன்குணங் கல்வியின்றி
ஆவல் தளைபூண் டவனேயெனி லாருங்கோள்ளார்
ஏவத் தெரியான் திமின்மீதேவர் ஏறுவாரே.

*மரக்கலத்தைச் செலுத்த அறியாதவன் துணைகொண்டு யாரும் மரக்கலத்தி லேறார். அதுபோன்று, நல்ல குணமும் நற்படிப்பும் இல்லாதவனும், ஆசைப் பிணிப் புற்றவனுமான ஆசானைக்கொண்டு யாரும் பிறவிக்கடலை நீந்த முன்வரார்.*

*பாவச் சலதி--பிறவிக்கடல். திமில் - மரக்கலம்.* ௫

### அடக்க மிலாதவர் ஆசிரியர் ஆகார்

பழிதீர் கலையாவும் உணர்ந்தும் பலர்க்குரைத்தும்
இழிவே யுறத்தாம் அடங்காமதி யீனரார்க்கும்
வழிகாட் டிடநாட்டு மரத்தையும் வையமேச
விழியற் றவன்கையினில் வைத்த விளக்குநேர்வார்.

*கற்றும் பிறர்க்குச் சொல்லியும் தாம் அடங்காத அறிவிலாரை யாரும் ஆசானுக் கொள்ளார்; கொண்டால், வழிகாட்டி மரம் நின்ற இடத்தே நிற்பது போலவும், குருடன் கையில் விளக்கு ஏத்திக் கொடுப்பது போலவும் பயனின்றாம். இவையிரண்டும் கூட வரும்துணையாகா.*

*மதியீனர் - அறிவிலார். விழியற்றவன் - குருடன்.* ௬

### பொருளாசை யுள்ளான் அருளாசன் ஆகான்

சொன்னத் திருடன்சிறு கள்வனைத் தூரியேசல்
என்னப் பொருளாசை யுளான்பிறர் இச்சைதீர்ந்து
மன்னத் திருஞான முரைத்தன்மற் றோர்துறக்கும்
பொன்னைக் கவரச்செயும் வஞ்சனை போலுமாதோ.

*பெருமதிப்புள்ள தங்கத்தைக் களவு செய்வோன் குறைந்த மதிப்புள்ள சிறு பொருள்களைக் களவு செய்பவனைப் பழித்துத் திட்டுவன். அதுபோன்றதேயாம், பண ஆசை உள்ளவன்*

பிறருக்குத் துறவு ஞானம் போதிப்பது. மேலும், துறந்தவர் பொருளைத் தான் கவர்ந்துகொள்ளும் கருத்துக்கு ஏதுவுமாகும்.

சொன்னம் - தங்கம்; பொன். திருஞானம்—மெய்யுணர்வு. ரு

## வேறு

*சிறுவரும் தன்உளமும் சிரிக்கும் கொடியனை*

வாயில் தேனுந்தன் வாலிற் கொடுக்குஞ்சேர்
ஈயின் வாயினி லிங்கிதச் சொல்லொடுந்
தீய செய்கையு ளானைத் தினஞ்சிறு
சேயும் எள்ளுந்தன் சிந்தையும் எள்ளுமே.

தேனுங் கொடுக்கும் முன் பின் அமைந்த தேன் ஈயைப் போன்று வாயில் இனிய சொல்லும் கையில் கொடுஞ்செயலும் உள்ளவனை நாளும் சிறுவர்களும் இகழ்வர். அவனுடைய உள்ளமும் சிரிக்கும். சு

*இம்மைப்பற் றில்லானே ஆசானுக் கேற்றவன்*

இகத்தின் வாழ்வினில் இச்சைய றுன்றனை
சகத்தி னிற்குரு சாமியென் றேதுதல்
சுகத்தை நீங்கித் துயரஞ் செறிநரர்
அகத்தை வீடென்(று) அறைதல் சிவணுமே

இவ்வுலக வாழ்வில் விருப்ப மறுதவனை ஆசிரியனாகக் கொள்ளுதல் துன்பம் நிறைந்தவர் வீட்டைக் கடவுளின்ப நிலையமாகக் கொள்ளுதல் ஒக்கும்.

அகம்-குடியிருக்கும் வீடு. வீடு - கடவுளின்பம். சிவணுதல்-பொருந்துதல் ; ஒக்கும். எ

*உணர்ந்து நெறிபிழைத்தோர் உய்யார் ஒருநாளும்*

ஆதி தேவன் அறிவில் லவர் செயுங்
கோதி னைக்கமை கொண்டு பொறுக்கினும்
நீதி நூலை யுணர்ந்து நெறிதவிர்
வேதி யர்க்கு விமோசன மில்லையே.

முதல்பெருங்கடவுள் அறிவில்லாத மக்கள் செய்யும் குற்றங்களைப் பொறுத்து மன்னித்தாலும் கற்றுணர்ந்தும் முறை தவறிய அறிவுடையவரை ஆண்டவன் மன்னிக்கமாட்டான். அ

கோது - குற்றம். கமை-பொறுமை வேதியர்-அறிவுடையர்.

அறிவில் ஆசான் ஆட்டுத்தோல் புலியே

ஒருமை யாய்த்தன் உதர நிமித்தமே
தரும வேடந் தரிக்குதல் வெம்புலி
புருவை தன்னைப் புசிக்கப் புருவையின்
சருமம் பூண்டங்குச் சார்தல் நிகர்க்குமே.

தனித்துத் தன் வயிறு வளர்த்தற்பொருட்டு ஆசிரியக் கோலம் பூணுதல், புலி ஆட்டை உண்ணுதற் பொருட்டு ஆட்டுத் தோலைப் போர்த்தலோடு ஒக்கும்.

ஒருமை - தனிமை. உதரம் - வயிறு. புருவை-ஆடு. சருமம்-தோல். நிகர்க்கும் - ஒக்கும். க

---

## அதி. எ—தாய் தந்தையரை வணங்கல்

### தாய் தந்தைக்கு ஈடெங்கும் சாற்றில் இல்லை

சின்னவோர் பொருள்தந் தோரைச்
சீவனுள் ளளவு முள்ளத்து
உன்னவே வேண்டு மென்ன
உரைத்தனர் பெரியோர் தேகந்
தன்னையா ருயிரைச் சீரார்
தரணியின் வாழ்வைத் தந்த
அன்னைதந் தைக்குச் செய்யும்
அருங்கைம்மா றுளதோ அம்மா.

*சிறுபொருள் தந்தவரையும் வாழ்நாள் முற்றும் மனத்தில் நினைக்கவேண்டும் என்பது பெரியோர் திருமொழி. அப்படியானால் நம் உடல் உயிர் வாழ்வு எல்லாம் தந்தருளிய தாய் தந்தையரை மறவாதிருப்பதல்லாமல், செய்யும் கைம்மாறு இல்லை.*

*தரணி - உலகம்.* க

### ஈன்று புறந்தந்த தாயினை ஏத்து

கடவுளை வருந்திச் சூலாய்க் கைப்புறை யுண்ட னந்தம்
இடர்களுற் றுதரம் தன்னில் ஈரைந்து திங்கள் தாங்கிப்
புடவியில் ஈன்று பன்னாள் போற்றனப் பாலை யூட்டித்
திடமுற வளர்த்து விட்ட செல்வியை வணங்காய் நெஞ்சே.

*கடவுளைத் தொழுது கருவுற்றுக் கசக்கும் மருந்துண்டு பல துன்பங்கள் அடைந்து பத்துத்திங்கள் சுமந்து பெற்றெடுத்துப் பாலூட்டி வலிமையுடன் வளர்த்த அருமைத் தாயை நெஞ்சமே வணங்குவாயாக.*

*சூல் - கரு. உறை - மருந்து. அனந்தம் - பல. புடவி - உலகம். செல்வி - அருந்தாய்.* உ

### கண்காண் தந்தைதாய்க் கொப்பிலை கண்டீர்

எப்புவி களும்பு ரக்கு மீசனைத் துதிக்க வேண்டின்
அப்பனே தாயே யென்போ மவரையே துதிக்க வேண்டின்

ஒப்பனை யுளதோ வேலை யுலகிற்கட் புலனில் தோன்றுஞ்
செப்பருந் தெய்வம் அன்னார் சேவடி போற்றாய் நெஞ்சே.

*எல்லா உலகங்களையும் படைத்துக் காக்கும் ஆண்டவனைத் தொழவேண்டுமானால் அம்மையே அப்பா என்று ஒப்புரைத்துத் தொழுவோம். கண்கண்ட தெய்வமாகக் காணப்படும் தாய் தந்தையருக்கு எங்கும் ஒப்பில்லை; அவர்கள் திருவடியை நெஞ்சே போற்று.*

*புவி - உலகம். புரத்தல் - காத்தல். வேலை - கடல். புலன்- பொறியுணர்வு.* ௫

*தாய் தந்தையர்ப் போற்றாரைத் தண்டிப்பன் ஆண்டவன்*

வைத்தவர் உளமு வப்ப மலர்நிழல் கனியீ யாத
அத்தருத் தன்னை வெட்டி அழலிடு மாபோல் ஈன்று
கைத்தலத் தேந்திக் காத்த காதற்றாய் பிதாவை யோம்பாப்
பித்தரை அத்தன் கொன்று பெருநர கழற்சேர்ப் பானே.

*வைத்து வளர்த்தவர்க்குப் பூ, நிழல், பழம் நல்காத மரத்தை வெட்டி எரிப்பது போன்று, தாய் தந்தையரை வணங்காத அறிவிலாரை ஆண்டவன் இருள் உலகில் தள்ளி வருத்துவன்.*

*தரு - மரம். அழல் - தீ. இருள் உலகு - நரகம்.* ௬

*ஈன்றார் வன்சொல் இனிய நற் பாகே*

ஈன்றவர் நம்மால் உற்ற எண்ணரும் இடர்கட் கான்ற
மூன்றுல கமுமோப் பாமோ மூப்பினால் இளைப்பால் அன்னார்
கான்றவன் சொற்கள் கன்னல் கான்றவன் பாகெ னக்கொண்டு
ஊன்றுகோ லென்னத் தாங்கி ஊழியஞ் செய்யாய் நெஞ்சே.

*பெற்றவர்கள் பிள்ளைகள் பொருட்டு அளவிலாத் துன்பம் அடைந்தனர். அத்துன்பத்திற்கு ஈடாக மூன்றுஉலகமும் கொடுப்பினும் போதா. அவர்கள் தங்கள் மூப்பினாலும் சோர்வினாலும் கடுஞ் சொற்கள் சொல்ல நேர்ந்தால், அச்சொற்களை வெல்லப்பாகென்றுகொண்டு அவர்களைப் போற்றிவரல் மக்கட்குக் கடன்.*

*கன்னல் - கரும்பு. பாகு - வெல்லப்பாகு.* ௭

எதிர்நோக்கா அன்புதவி ஈன்றோரே செய்வர்

ஈங்கெதி ருதவி வெஃகா தேவரு மோருதவி செய்யார்
ஓங்குஞ்செய் வாழும் வீயு முடலெய்க்கும் பொழுது தம்மைத்
தாங்கிடுந் தாங்கா தென்னுந் தன்மைநோக் காது பெற்றோர்
பாங்குடன் வளர்க்கு மன்பு பரவலாந் தகைமைத் தன்றே.

உலகத்தார் எதிர் உதவி நாடியே ஓர் உதவி செய்வர். வாழ்வுக்கும் சாவுக்கும் இலக்காகிய உடம்பு தளர்ந்த காலத்துப், பிள்ளைகள் தம்மைக் காப்பாற்றுவார் என்று பெற்றோர்கள் எதிர் பார்த்துப் பிள்ளைகளை வளர்ப்பதில்லை. அதனால் பெற்றோர் அன்பு அளவிட்டுக் கூறமுடியாது.

வெஃகல் - விரும்பல். வீதல் - சாதல். சா

ஈன்றோர்க்கு நினைவுசெயல் எய்தும் மகப்பொருட்டு

மண்ணினி லன்னை தந்தை மறம்அறஞ் செயினும் நோன்பு
பண்ணினு முடல் வருந்தப் பணிபுரி யினும ருந்தொன்று
உண்ணினுங் களிக்கினுந் துன்புற்ற யரினுமனத்தொன்று
எண்ணினுந் தம்பொ ருட்டன்று ஈன்சுதர் பொருட்டா லன்றே.

பெற்றோர்கள் வன்செயல் மென்செயல்கள் செய்யினும், தவம் பேணினும், மெய்வருந்திப் பாடுபடினும், மருந்துகொள்ளினும், மகிழினும், இடருற்றுத் தளரினும், ஏதும் நினைக்கினும் எல்லாம் பிள்ளைகள் பொருட்டேயன்றித் தம்பொருட் டன்று.

பணி - பாடு. களிப்பு - மகிழ்வு அயர்வு - தளர்வு. சுதர் - மக்கள். எ

எல்லாம் பழக்கிவளர் ஈன்றோர்க்கு ஒப்பாரியார்

ஐயமெய் யம்ம ணத்தோ டழுவதை யன்றிப் பேசச்
செய்யவொன் றறியா நொய்ய சிற்றுடல் செய்வ ளர்ந்திங்
குய்யவேண் டுவன செய்தா ருயிரினு மினிதாக் காக்கும்
பொய்யிலன் புடைத்தாய் தந்தை போல்பவ ருளரோ நெஞ்சே.

நெஞ்சே நாம் ஆடைகட்டத் தெரியாது அழுஞ்செய லன்றி வேறு செயல் அறியாது பேச்சற்றிருந்தோம். நம்மை வளர்த்துப் பேசச், செய்யப் பழக்கி உயிரினும் சிறப்பாகக் காத்தவர் பெற்றோர்கள். அவர்களை யொத்த மெய்யன்புடையவர்கள் யாருளர்?

எல்லாம் பெறலாம் ஈன்றூர்ப் பெறலரிது

மனையவள் வீயின் வேறோர் மனைவினையக் கோளலாம் பெற்ற
தனையரா தியரி றப்பில் தனித்தனி பெறலாம் பின்னும்
புனைபொரு ளீங்கின் மற்றோர்பொருளையும் பெறலாமத்தன்
அனையிறந் திடின்வேறத்த னனைவரு வாரோ நெஞ்சே.

*நெஞ்சே இல்லாள், மக்கள், பொருள் இவரை இழந்தால் மீட்டும் பெற்றுக்கொள்ளலாம். அத்தன் அன்னையரிறந்திடின், வேறு அத்தன் அன்னையர் வருவாரோ? வாரார்.*

*அனை - அன்னை. அத்தன் - தந்தை.* க

வேறு

*தாங்கொணுத் துன்பினும் தந்தைதாயைக் காக்க*

ஒருத்திபஞ்ச காலத்தில் தாதைக்குத்
தன்முலைப்பா லூட்டிக் காத்தாள்
எருத்தமிசைத் தந்தையினைச் சுமந்தோடி
யொருவனொன்ன ரிடரைத் தீர்த்தான்
ஒருத்தன்தன் தந்தைக்கே உயிர்கொடுத்தா
னெனப்பலவா வுரோமை நாட்டின்
சரித்திரஞ்சொல் வதையறிவாய் நெஞ்சமே
யீன்றோரைத் தாங்கு வாயே.

*நெஞ்சே பஞ்சகாலத்தில் ஒருத்தி தன் முலைப்பாலூட்டித் தந்தையைக் காப்பாற்றினள். ஒருவன் தந்தையைக் கழுத்தில் சுமந்து ஓடிப் பகைவரினின்றும் காத்தான். ஒருவன் தந்தைக்காகவே உயிரைக் கொடுத்தான். இவைபோன்ற வரலாறுகள் பல உரோமை நாட்டில் நிகழ்ந்தன. அவைபோல் நீயும் ஈன்றோரைக் காப்பாற்றுவாயாக.*

*எருத்தம் - கழுத்து. ஒன்னர் - பகைவர். இடர் - துன்பம்.*

---

## அ௯. அ—மக்களை வளர்த்தலும் படிப்பித்தலும்

சேயர்க்குத் தீயவர் சேர்க்கை விலக்குக

அயற்பொருள் நிறங்கவர் ஆத னங்கள்போல்
செயப்பிறி தறிகிலாச் சேயர் சுற்றுளோர்
கயப்புறுந் தீச்செயல் கற்கை யாலவர்
நயப்புறுஞ் சேர்க்கையை விலக்கல் நன்றரோ.

*உடை முதலியன தாம்சார்ந்த இடத்துள்ள நிறங்களைக் கவர்ந்து அந்நிறமாகின்றன. அவைபோல் சிறுபிள்ளைகளும் தம்மைச் சுற்றியுள்ளார் தன்மைகளையே பழகுவர். அதனால், தீயவர் சேர்க்கையை விலக்குதல் நன்மையாம்.*

*ஆதனம் - உடை. கயப்பு - கசப்பு.* க

நலமெலாம் பாலர்க்கு நண்ணும் இளமையில்

வளையிள மரந்தனை நிமிர்த்தல் வாய்க்கும்பொன்
இளகிய பொழுதணி யியற்ற லாகுதல்
வளமுறு கேள்விநூன் மாண்பு நற்குணம்
இளமையி லன்றிமூப் பெய்தின் எய்துமோ.

*மரத்தின் வளைவை இளமையில் நிமிர்த்தலும் பொன் இளகியிருக்கும்போது நகை செய்தலும் வாய்ப்பதுபோல், மக்கட்கு இளமையில்தான் நல்ல நூற்கேள்வியும் மாண்பும் நற்குணமும் வாய்க்கும். முதுமையில் இவை வாயா என்க.*

*அணி - நகை.* உ

கல்லா மக்கள் காலனை ஒப்பர்

மாலினால் இருவரும் மருவி மாசிலாப்
பாலனைப் பயந்தபின் படிப்பி யாதுயர்
தாலமேற் செல்வமா வளர்த்தல் தங்கட்கோர்
காலனை வளர்க்கின்ற காட்சி போலுமே

*தாய் தந்தையர் அன்பால் கூடிக் குற்றமில்லாத பாலனைப் பெற்றபின் படிப்பிக்கவேண்டும். படிப்பிக்காமல் உலகத்தில்*

செல்வமாக வளர்த்தல் தங்கள் உயிரைக்கொள்ளும் கூற்றுவனை வளர்ப்பதாகும்.

மால் - அன்பு மருவல் - கூடல். மாசு - குற்றம். பாலன் - பிள்ளை. தாலம் - உலகம். காலன் - கூற்றுவன். ௩

சேயர்முன் தீமைசெய் பெற்றோர் தீப்பகை

தீதுநன் றறிகிலாச் சேயரேன் செய்வார்
கோதற அவரைநன் னெறியிற் கூட்டிடாது
ஏதங்க ளவர்முன்செய் திழிவைக் கற்பிக்குந்
தாதைதாய் புதல்வர்க்குச் சத்து ருக்களே.

தீமையும் நன்மையும் தாமாகத் தெரிந்துகொள்ளும் தன்மையில்லாத மக்களைத் தாய்தந்தையர் நல்வழிப்படுத்தவேண்டும். அப்படிச் செய்யாமல் அவர்கள் முன் குற்றமானவற்றைச் செய்து இழிவையே கற்பித்தல் பகைவரின் தீச்செயலாகும்.

சேயர் - மக்கள். கோது - குற்றம். புதல்வர் - மக்கள். ௪

படிப்பே பிள்ளைகட்குப் பயன்பெரி தளிக்கும்

சுகமுறு வாழ்வில வெனினுந் தோன்றற்குச்
சகமகிழ் கலையறந் தனைப்ப யிற்றுதல்
அகநினைந் ததுதரும் அரத னந்தனை
இகபரம் இரண்டினை யீத லொக்குமே.

செல்வவளம் குறைவாயிருப்பினும் பிள்ளைகட்கு நன்மையும் மகிழ்வும் தரத்தக்க கல்வியும் நற்பண்பும் பழகச் செய்தல், கருதியது கைகூடச் செய்யும் மணியினை—இம்மை, மறுமை இன்பினை ஈவதொக்கும்.

சுகம் - செல்வம். சுகம் - நன்மை. தோன்றல் - மக்கள். ௫

கல்வியில் செல்வம் பிள்ளையுயிர்க் காலன்

கலைபயிற் றுதுகா தலர்க்கு மாநிதி
நிலையென அளிக்குதல் நெறியில் பித்தர்க்குக்
கோலைசெய்வா ளீவதுங் குழவி தன்னைமா
மலையினூ ரத்துவைப் பதுவும் மானுமே.

பிள்ளைகளுக்கு விழுச்செல்வமாங் கல்வியைக் கொடுக்காது பெரும்பொருள் நிலையெனக் கருதிக் கொடுப்பது, முறைதெரியாத சிறுக்கருக்குக் கொலைக்கருவியாகிய வாளைக் கொடுப்பதும், பச்சிளங் குழந்தையைப் பெரிய மலைமேல் ஓரத்தில் வைப்பதும் போன்றதாம்.

காதலர் - பிள்ளைகள். நெறி - முறை. மா - பெரிய. மானும்-போன்றதாம். சு

தந்தைதாய் துன்பத்தைத் தகையும் பிள்ளைகள்

பயிர்களை யெடுத்திடப் பலன ளித்தல்போற்
செயிரினைக் கடிந்துநற் செயல்வி யந்தருந்
தயையொடுஞ் சேயினை வளர்க்குந் தந்தைதாய்
துயருறா வண்ணமத் தோன்றல் காக்குமே.

பயிர் களைஎடுத்ததும் செழித்து வளர்ந்து பெரும்பயன் தரும். அதுபோல் பேரன்போடு வளர்க்கும் தந்தைதாய் பிள்ளைகளைக் குற்றத்தினின்றும் விலக்கி நல்ல வழியில் செலுத்துவர். அவர்கள், பெற்றோர் துன்புறாவண்ணம் காப்பர்.

பலன் - பயன். செயிர் - குற்றம். வியந்தரும் - செலுத்தும். தயை - பேரன்பு. தோன்றல் - பிள்ளை. தகையும் - தடுக்கும். எ

கல்வியே முறையுயர் வீடு காட்டுமால்

நிதிசெல வாய்க்கெடு நீசர் வவ்வுவர்
மதியினை மயக்கிவெம் மறம்வி ளைத்திடுங்
கோதியழல் நரகிடுங் குணமுங் கல்வியும்
விதிதரும் பதிதரும் வீடு நல்குமே.

கல்லாதான் செல்வம் வீண் செலவாகும்; தீயவர் கொள்வர்; அறிவைக்கெடுக்கும்; பாவத்தைப் பெருக்கும்; இறுதியில் துன்பவுலகத்து ஆழ்த்தும்; கல்வி நல்லகுணம் தரும்; முறைதரும்; உயர்ந்த நிலைதரும்; கெடாக் கடவுளின்பமும் தரும்.

நிதி - செல்வம். மறம் - பாவம். பதி - நிலை. அ

கல்லாமை கடிவாளமில் குதிரைஏறல் ஒக்கும்

புவிநடை கடவுண்மெய்ப் போதம் அன்பறஞ்
செவியினோ தாதொரு சேயைப் பார்விடல்

அவியென வூருமா றறிகி லான்றனைக்
கவியமில் புரவிவைத் தோட்டுங் காட்சியே.

பிள்ளைகட்கு உயிர்க்கு உறுதிதரும் ஒப்புரவறிதல், கடவுளுண்மை, மெய்யுணர்வு, அன்பு, நன்மை முதலியவற்றைக் காதிலுணர்த்தாது உலகத்தில் விட்டுவிடுதல், மனத்தைப்போல் தாவிச்செல்லும் குதிரையை அடக்கிச்செலுத்த அறியாதவனைக் கடிவாளமில்லாத குதிரையில் ஏற்றி ஓட்டுவதை யொக்கும்.

புலிநடை - ஒப்புரவறிதல், போதம்—மெய்யுணர்வு. அவி - மனம் (ஆவி என்பது அவி என்றாயிற்று) கவியம் - கடிவாளம். காட்சி - ஒக்கும். கூ

பிள்ளைகட்காம் இன்பதுன்பம் பெற்றோர் நடத்துவதால்

தீயராய் வறியராய்ச் சிலர்வ ருந்தலுந்
தூயராய்ச் சிலர்புவி துதிக்க வாழ்தலுந்
தாயினால் தந்தையால் சமைந்த தன்மையால்
சேயரை நன்னெறிச் செலுத்தன் மேன்மையே.

சில பிள்ளைகள் கொடியவராய் ஏழைகளாய் வருந்துவதும், சில பிள்ளைகள் நல்லவராய்ச் செல்வராய்ப் புகழுடன் வாழ்வதும் பெற்றோர்கள் பிள்ளைகளை நடத்தும் முறைமையினா லுண்டாவன. கO

---

# அதி. கூ—மாதரைப் படிப்பித்தல்

பெண்கட்கும் கல்வியே பெருந்துணை யாகும்

கல்வியே அறவழி காட்டும் ஆண்மகன்
செல்வழி யறிந்திடான் வித்தை தேறுமுன்
அல்வளர் கூந்தலார் அறிய நூலின்றி
நல்வழி யுணர்ந்ததில் நடக்கற் பாலரோ.

யாவர்க்கும் படிப்பே நல்வழிகாட்டும். ஆண்மகனும் கற்பதன் முன் செல்லும் நல்வழி அறியான். அப்படியிருக்கப் பெண்மகள் நூல்படியாமல் எப்படி நல்வழி யறிந்து நடப்பள்?

கல்வி - படிப்பு. வித்தை - கல்வி. அல் - இருள். வளர் - போன்ற. கூந்தல் - தலை. க

கண்பறித்தலாம் பெண்பால் கல்வி கொடாமை

பெண்மகள் கெடுவளென் றஞ்சிப் பெற்றவன்
உண்மைநூ லவட்குணர்த் தாமை தன்மனைக்
கண்மறு புருடரைக் காணு மென்றதை
எண்மையாய்த் தவன்பறித் தெறிதல் ஒக்குமே,

கற்றால் பெண்மகள் கெட்டுவிடுவாள் என்று பெற்றவன் கல்வி கொடாமலிருப்பது, தன்மனையவள் கண் உடையவளாக இருந்தால் அயலானைக் காண்பாள் என்று கருதிக் கணவன் அவள் கண்ணை எளிமையாகப் பிடுங்குவதை யொக்கும்.

மறுபுருடன் - அயலான். தவன் - கணவன். எண்மை - எளிமை. பறித்தல் - பிடுங்கல். உ

நூலுணர்ந்தார் அயலானை நோக்கவும் அஞ்சுவர்

காவலன் பயத்தினுற் கற்பைக் காக்கின்ற
பாவையர் அரியநூல் பயன்தெ ரிந்திடில்
பாவபுண் ணியநெறி அறியும் பண்பினுல்
சீவனீங் கினுமய லாரைச் சேர்வரோ.

வேந்தன் காவலுக்கஞ்சிக் கற்பைக் காக்கின்ற பெண்கள், உண்மை நூல் உணர்ந்தால் பாவ புண்ணியங்கட்கு மிகவும் அஞ்சி உயிர் நீங்கினும் கற்பைக் கைவிடார்.

காவலன் - வேந்தன். அரிய நூல் - உண்மை நூல். பாவ புண்ணியம் - தீமை நன்மை, சீவன் - உயிர். ௩

மருந்துபோல் கல்வி பெண் மாண்பு தந்திடும்

பொருந்துநற் கலைதெரி பூவை கற்பது
திருந்தியே மிகுமலால் தேய்ந்து போமெனல்
வருந்திடா துயிர்தரு மருந்தை மானிடர்
அருந்திடில் சாவரென் றறைத லொக்குமே.

பெண்களுக்கு நாற்பொருளும் பொருந்தும் உண்மை நூல்களைக் கற்பதால் அறிவு வளர்ந்து மிகும் அல்லாது தேய்ந்து போகாது. தேயுமென்று சிலர் கூறுவது, உயிரை வளர்க்கும் மருந்தை மக்கள் உண்ணின் மாள்வர் என்று சொல்வதை யொக்கும்.

பூவை - பெண். மருந்து - அமிழ்து. ௪

கல்லாப்பெண் நன்னெறி காணகில் லாளே

முடவரே நடக்கினும் மூங்கை பேசினும்
திடமொடந் தகர்வழி தெரிந்து செல்லினும்
மடமயி லனையர்நூல் வாசி யாரெனில்
அடமில்நன் னெறிதெரிந் தமையற் பாலரோ.

கால் இல்லாதவர் நடத்தலும், ஊமையர் பேசலும், குருடர் வழிதெரிந்து செல்லுதலும ஒரு வேளை நிகழ்ந்தாலும், பெண்கள் நூல் கல்லாவிடின் குற்றமற்ற நல்வழி தெரிந்து நடத்தல் முடியாது.

மூங்கை - ஊமை. அந்தகர் - குருடர். அடம் - குற்றம். ரு

விளக்கை மறைப்பதாம் பெண்கல்வி விளக்காமை

அரிவையர் நேசமும் ஆர அல்லினில்
விரிசுடர் விளக்கென விளங்கு வாரவர்க்கு

உரியநன் னூலுணர்த் தாமை கூடையால்
எரியொளி விளக்கினை மறைத்தல் ஒக்குமே.

பெண்கள் அன்பு நிறைய இருளினில் ஒளிதரும் விளக்குப் போல் விளங்குவர். அவர்களுக்குரிய நல்ல நூற்களை உணர்த்தா திருப்பது விளக்கைக் கூடையால் மறைப்பதை ஒக்கும்.

அரிவை - பெண். நேசம் - அன்பு. ஆர - நிறைய. அல் - இருள். ௬

படிப்பிலாப் பெண்ணேல் பாதியுடற் கழகிலை

நீதிநூன் மைந்தர்க்கு நிகழ்த்தி மென்மலர்
ஓதியர்க்கு ஓதிடா தொழித்தன் மெய்யினில்
பாதியை யேயலங் கரித்துப் பாதிமெய்
மீதினி லணியின்றி விடுத்தல் ஒக்குமே.

அறமுறைநூல்களை ஆண்களுக்கு உணர்த்திப் பெண்களுக்கு உணர்த்தாதிருப்பது, உடம்பில் ஒரு பாதியை ஆடை அணி பூச்சால் அழகு செய்து, மற்றோர் பாதியை அழகு செய்யாமல் விடுவதை யொக்கும்.

நீதி - அறமுறை. மைந்தர் - ஆண்கள். ஓதியர் - கூந்தலை யுடைய பெண்கள். அலங்கரித்தல் - அழகுபடுத்தல். ௭

கண்போற் பெண்களும் காணிற் சமமே

இக்கினை நகுமொழி யெழின்மின் னாரின்ஆண்
மக்கள்மிக் கோரெனல் மடமை யாமிரண்டு
அக்கமும் ஒக்குமே யன்றி நல்லகண்
எக்கண்மற் றெக்கணே யிழிவு டைக்கணே.

கரும்புங் கசக்கும்படி இனிய சொற்களைச் சொல்லும் அழகிய பெண்களைக் காட்டிலும ஆண்கள் சிறந்தவர்கள் என்று சொல்லுவது அறியாமை ஆகும். இரண்டு கண்களுள் உயர்ந்த கண் எது? இழிந்த கண் எது? (இரண்டும் சமமே.)

இக்கு - கரும்பு. அக்கம் - கண். ௮

**கல்லாப்பெண் குடும்பழுத்தல் நீந்தறியான் கடலழுத்தல்**

கலையு ணர்ந்தறி யாதவோர் கன்னியை
உலையு றுஞ்சமு சாரத்தின் உயக்குதல்
நிலையு ணர்ந்தறல் நீந்தறி யான்றனை
அலைக டற்கண் அமிழ்த்தலை யொக்குமே.

*கல்லாத பெண்களைத் துன்பமிக்க குடும்பவாழ்க்கையில் செலுத்துதல், ஆறு குளம் நீந்த அறியாதவனைக் கடலினுள் தள்ளுவதை யொக்கும்.*

*உலைவு - துன்பம். அறல் - நீர்.* கூ

வேறு

*கல்லாப் பெண் உயிர் இல்லா உடலே*

நல்லறி வேயணி நன்னுத லார்க்கஃது
இல்லவ ரோடுமி யைந்து கலத்தல்
புல்லுயிர் நீங்குபு ழுக்கோள் சவத்தைக்
கல்லுரு வைப்புணர் காம நிகர்த்ததே.

*பெண்களுக்கு நல்லறிவே அணிகலத்தினும் மிக்க அழகு தருவது. அவ்வழகில்லாருடன் கூடி வாழ்தல் உயிரற்ற உடலோடும் உணர்வற்ற கல்லுருவோடுங் கூடி வாழ்வதை யொக்கும்.*

*அணி - அழகு. நன்னுதலார் - பெண்கள்.* ௧0

# அதி. ௧௦—உடன் பிறந்தாரியல்பு

உடன்பிறந் தார்க்குத் தந்தைதாய் வீடொன்றே

தந்தைதா யொருவர் தம்மைத் தாங்கிய
வுதர மொன்று
முந்தவின் பால ருந்து முலையொன்று
வளரு மில்லொன்று
இந்தவா றெல்லா மொன்ற யிையைந்தசோ
தரரன் புற்றுச்
சிந்தையு மொன்றிப் பாலுந் தேனும்போல்
விளங்கல் நன்றே.

ஒரு வயிற்றுத் தோன்றிய உடன் பிறந்தார்க்குத் தந்தை தாயர் ஒருவர்; ஈன்ற வயிறும் ஒன்று; பருகிய இனிய பாலும் ஒன்று; வளரும் வீடும் ஒன்று இவ்வாறெல்லாம் பலவும் ஒன்ற யமைந்த உடன் பிறந்தார், அன்புபூண்டு உள்ளமும் பொருந்திப் பாலும் தேனும்போல் விளங்குவது நன்மையாம்.

உதரம் - வயிறு. சோதரர் - உடன் பிறந்தார். சிந்தை - உள்ளம்.

௧

எல்லாரும் உடன்பிறப்பேல் இயைந்தாருக் களவெவன்

ஆதரை மிசைநர ராய யாவருஞ்
சோதர ரேனமிகத் துன்னல் நன்றென
வேதமே யோதுமால் விளங்குஞ் சோதரர்
மீதமை நட்பினை விளம்பல் வேண்டுமோ.

உலகத்தில் மக்களாய்த் தோன்றியவர்கள் எல்லாரும் உடன் பிறந்தாராய் ஒற்றுமையுடன் வாழ்தல் நன்றென்று மறைநூல் சொல்லும். ஆயின் ஒருதாய் வயிற்றுப்பிறந்த உடன் பிறந்தார் அன்பும் ஒற்றுமையும் கொண்டு வாழவேண்டும் பொறுப்பைக் கூறவும் வேண்டுமோ?

நரர் - மக்கள். துன்னல் - நெருங்கல், ஒற்றுமை. விளம்பல் - சொல்லல்.

௨

குடும்பம் பேணுரைக் கொள்ளார் உயர்ந்தோர்

பயந்தவர் சோதரர் தமரைப் பண்போடு
வியந்துபே ணுதவன் வேறு ளோர்களை
இயைந்துபே ணுனென எண்ணி நீக்குவர்
உயர்ந்தவ ரவனேடும் உறவு தன்னையே.

பெற்ருேர்களையும் உடன்பிறந்தார்களையும் உறவினர்களையும் அன்பொடு பேணுதவன், மற்றையோர்களை இணங்கிப்பேண மாட்டானென்று கருதி உயர்ந்தோர் அவனுடன் உறவுகொள்ளுதலை நீக்குவர்.

பயந்தவர் - பெற்ருேர், தாய்தந்தையர். தமர் - உறவினர். ரு

ஒற்றுமைசேர் உடன்பிறப்பை ஒருவரும் வெல்லார்

ஒற்றையோண் சுடரினை யொழிக்கும் மேல்வளி
கற்றையாப் பலசுடர் கலப்பின் மாவளி
சற்றும்வெல் லாதுசூழ் தமர்ச கோதரர்
பற்றேடு மருவிடிற் படரு ருர்களே.

பலதிரியும் ஒன்ருகி எரியும் சுடரினைப்பெருங் காற்ருலும் அவிக்கமுடியாது. ஆனுல் ஒருதிரியாய்த் தனித்து எரியின் சிறு காற்றும் அணைத்துவிடும். அதனுல், ஒற்றுமையாயுள்ள உடன் பிறப்பாளர்களை எவரும் வெல்லக்கருதார் என்பது துணிபு.

மெல் வளி - சிறு காற்று. சு

அமைஉடன் பிறப்பை வெல்லார் அனைவரும்

ஓரிழை யறுத்திடல் எளிதோன் ருகவே
சேரிழை பலவுறத் திரித்த தாம்பினை
யாருமே சிதைத்திடா ரமைச கோதரர்
சீரோடு பொருந்திடில் திறல்கோள் வாரரோ.

கயிருதற்குரிய ஓர் இழையினை அறுத்தல் யாவர்க்கும் எளிது. அவ்விழை பல ஒன்ருகிக் கயிருக அமையின், அதனை யாராலும் அறுத்தல் முடியாது. அதுபோல உடன் பிறந்தார் பிரிந்து போய்த் தனிப்பாராளுல் எளியரும் எளிதில் வெல்லுவர். ஒன்று கூடிவாழின் வலியரும் அரிது முயன்றும் வெல்லார்.

தாம்பு - கயிறு. சிதைத்திடார் - அறுத்திடார். எ

## அதி. கக—கணவ மனைவியரியல்பு

### உடலுயிர்ச் சண்டையாம் காதலர் பிணக்கம்

ஆவியின்றி யுடலில்லை யுடலின்றி யாவியிலை
யதுபோற் பத்தா
தேவியெனு மிருவர்சேர்ந் தோருருவாஞ் செழுமலருந்
தேனும் போல
மேவியவ ரிருவருமே நள்ளாது முரண்செய்யில்
விளங்கு மெய்யுஞ்
சீவனுமோன் றேடோன்று போராடி யழிந்ததொக்குஞ்
செப்புங் காலே.

உயிரில்லாமல் உடம்பில்லை; உடம்பில்லாமல் உயிரில்லை. அது போன்று கணவனில்லாமல் மனைவி யில்லை. மனைவியில்லாமல் கணவ னில்லை. இவ்விருவரும் பூவுந் தேனும் போலச் சேர்ந்து ஒருருவானவர். இவர்கள் ஒற்றுமையாக வாழாது பிணங்குவாராஞல், அப்பிணக்கம் உடம்பும் உயிரும் ஒன்றோ டொன்று சண்டையிடுவதை யொக்கும்.

ஆவி - உயிர். பத்தா - கணவன். தேவி - மனைவி. நள்ளல் - சேர்தல். க

### காதலர் ஒற்றுமை கணக்கிலாப் பெரும்பொருள்

மணியுமொளி யும்போலாண் மகனுமனை
வியும்பொருந்தி வாழு வாரேல்
பிணியுறுமா துலரேனினும் பெருஞ்செல்வர்
நகுலமும்வெம் பெரும்பாம் பும்போல்
தணியாத பகையுற்று நள்ளாரேல்
உயிரற்ற சவத்தின் மீது
பணிகண்மிகப் பூட்டியலங் கரித்தலொக்கு
மவர்செல்வப் பயன்தா னம்மா.

மணியும் ஒளியும்போல் கணவனும் மனைவியும் மனம் பொருந்தி வாழுவாராஞல், அவர்கள் நோயுறும் வறியவர்களே

எனினும் பெருஞ்செல்வர் ஆவர். இங்ஙனமின்றிக் கீரியும் பாம்பும் போல் நீங்காப் பகைகொண்டு ஒற்றுமையுறார் எனில், அவர்களின் செல்வப் பயன் பிணத்தின்மேல் அணிகள் பூட்டி அழகு செய்வதை ஒக்கும்.

ஆண்மகன் - கணவன். ஆதுலர் - வறியர். நகுலம் - கீரி. தணியாத-நீங்காத. சவம்-பிணம். பணி-அணிகள்; நகைகள். உ

பெண்களுந் தொழுதெய்வம் பெருங்கற்புடையாள்

தந்தைதாய் சோதரருற் றுரையெலாங்
கைவிடுத்துத் தன்னைச் சார்ந்த
பைந்தொடியை அனையவர்போ லாதரிக்கக்
கணவனுக்கே பரமாம் ஆதி
அந்தமிலான் முதற்றெய்வம் பதியிரண்டாந்
தெய்வமென வன்பி னோடு
சிந்தைதனில் நினைந்துருகுஞ் சேயிழைபூ
வையர்க்கெல்லாந்தெய்வ மாமால்.

மனைவியானவள் தந்தை தாய், உடன்பிறப்பு, உற்றார் முதலியவர்களைக் கைவிட்டுக் கணவனை அவ்வவர்களாகக் கருதிச் சார்ந்தனள். அதனால் கணவன் மனைவியை அவ்வவர்கள் போல் நின்று காக்கும் பொறுப்புடையவன். முதலும் முடிவுமில்லாத முழுமுதலே முதல்தெய்வம். கணவன் கடவுளாக்கருதும் இரண்டாம் தெய்வம். கணவனை அன்புடன் நினைந்துருகும் கற்புடைய பெண்கள் பெண்களுக்கெல்லாம் தெய்வமாவர்.

பைந்தொடி :— அழகியவளையலணிந்த பெண். ஆதரித்தல் - காத்தல். பதி - கணவன். சேயிழை - சிறந்த அணியணிந்த பெண். பூவையர் - பெண்கள். ங

மணத்தின்பின் குணங்குற்றம் மனங்கொளாது வாழ்க

தவனுட்டி யிருவரினற் குணமுளா ரிலரென்னுந்
தன்மை நோக்கல்
நவமணஞ்செய் முன்னன்றிப் பின்னுன்னிற் பயனுளதோ
நாவாய் தன்னை

உவராழி நடுவினன் றன்றெனக்கை விடத்தகுமோ
வுடல்பன் னோய்சேர்ந்து
அவயவங்கள் குறைந்தாலு மதையோம்பா தெறிவாரோ
வவனி மீதே.

*தவத்தானமைந்த இருவரிலும் குணம் உள்ளவர் இவர் இல்லாதவர் இவர் என்று ஒருவரை ஒருவர் ஆராய்வது புதுமணம் செய்துகொள்வதற்கு முன்னரேயாம். மணத்தின்பின் ஆராய்வது, கப்பலை நடுக்கடலில் ஆராய்ந்து நன்றன்று எனக் கண்டாலும் விடமுடியாமையும், உடம்பில் நோயும் உறுப்புக்குறைவும் ஏற்பட்டாலும் அவ்வுடம்பை விடமுடியாமையும் போலப் பயனின்றாம்.*

*நவமணம் - புதுமணம். நாவாய் - கப்பல். உவராழி - கடல். அவயவம் - உறுப்பு. ஓம்புதல் - பாதுகாத்தல்.* ௬௦

ஒருவரையொருவர் இன்சொலால் நல்வழி உய்க்க

கொழுநனு யினுமனையா யினு மியல்பில் லாரேன்னிற்
கூறின் சொல்லாற்
செழுமைநெறி யினிற்றிருப்ப வேண்டுமிதத் தால்வசமாஞ்
சினவி லங்கும்
அழல்வதினுற் றுன்பமிகு மல்லாது பயனுளதோ
வருநோ யுற்ற
விழிமிசைநன் மருந்திடா தழற்பிரம்பை விடிலங்நோய்
விலகுங் கொல்லோ

*கணவனுயினும் மனைவியாயினும் நல்ல தன்மை யில்லாதவராஞல் ஒருவரை யொருவர் இன்சொல்லால் நல்ல வழிக்குத் திருப்புதல் வேண்டும். கொடுவிலங்கும் இனிமையால் கட்டுப்படும். கடுஞ்சொல்லும் கடுஞ்செயலும் எவ்வகைப் பயனையுந் தாரா. நோயுற்ற கண்ணுக்கு மருந்தை இடுவதல்லாமல் காய்ச்சிய கெய்யை இடுவார்களா? இட்டால் நோய் நீங்குமா?*

*கொழுநன் - கணவன். செழுமை நெறி - நல்லவழி. அழல் - காய்ச்சிய. பிரம்பு - நெய்.* ௬௧

எல்லாரினும் சிறந்த கணவனோ டிகலல்பழி

**தந்தைதாய் சோதரரை நீங்கியின்னொ ரொருவன்கை**
**தன்னைப் பற்றிப்**
**பந்தமுற லாலவரேல் லாரினுமிக் குரிமையுளான்**
**பத்தா வன்றே**
**இந்தநிலை யுணராம லவனையிகல் செயுமேழை**
**யிகப ரத்தை**
**நிந்தையுற வழித்தலால் தன்னைத்தான் கொலைசெய்தல்**
**நிகர்க்கு மாதோ.**

*தந்தை தாய் உடன்பிறப்பு முதலியவர்களினும் கணவனே பெண்களுக்கு உரியவனாவன். இதனை உணராமல் கணவனுடன் மாறுகொள்ளும் பெண் இம்மை மறுமை நலங்களைப் பழியுண்டாகக் கெடுத்தலால் தன்னைத் தானே தற்கொலை செய்து கொண்டவளாவாள்.*

*மின்னார் - பெண்கள். இகல் - மாறுபாடு. நிந்தை - பழி. நிகர்க்கும் - ஒக்கும்.* கூ

செம்மையிலாக் காதலரைச் செம்பொருள் காயும்

**பொய்யான நாடகத்திற் பதிமனைபோல் வேடமுற்றோர்**
**பூண்ட கன்மஞ்**
**செய்யாரேல் நகைக்கிடமா முலகறிய மணவாளன்**
**தேவி யென்ன**
**மெய்யாவுற் றோர்தம்முள் நட்பிலரேல் பிரபஞ்ச**
**விநோதக் கூத்தைக்**
**கையாற்கொண் டாட்டுவிக்கும் பரனவரை யழற்புகுத்திக்**
**காய்வா னம்மா**

*ஊர் நாடகத்தில் பொய்யாகக் கணவன் மனைவியென்று கோலங்கொண்டார் செம்மையாக நடிக்காவிட்டால் எல்லாரும் சிரிப்பர். அதுபோல் உலக நாடகத்தில் உண்மையாகவே கணவன் மனைவியரென்ற இருவரும் செம்மையாக ஒழுகல் வேண்டும். இல்லாவிட்டால் உலக நாடகத்தைச் செய்விக்கும் ஆண்டவன் அவர்களைத் துன்பத்திற் புகுத்தி வருத்துவன்.*

*பதி - கணவன். அழல் - துன்பம். காய்வான் - வருத்து வான்.* ௭

மனங்கலவாக் காதலரை வலவன் வருத்தும்

பரவுசமு சாரமெனும் பண்டியில்வாழ்
வெனும்பொருளைப் பரப்பிப் பூண்ட
புரவிகள்போல் காந்தனுங்காந் தையுமமைந்தார்
மனமொத்தோர் போக்கை நாடி
விரவொடுமே காரென்னின் ஊர்தியோடப்
பொருள்விளியும் விண்பு ரக்கும்
பரமனெனுஞ் சாரதியப் பரிகண்மேற்
சினமுற்றுப் படர்செய் வானே.

*புகழ்ந்து சொல்லப்படும் குடும்பமாகிய வண்டியில் இல் வாழ்க்கை யென்னும் சரக்கை ஏற்றிக் கணவனும் மனைவியுமாகிய இரண்டு குதிரைகளைப் பூட்டி, அக்குதிரைகள் போன்ற இருவரும் மனம் ஒத்துக் (கடவுளையடையும்) குறிக்கோள் ஒன்றை நாடிக் கலந்து இழுத்துச் செல்லாவிட்டால் வண்டியும் சரக்கும் அழிவுறும். ஆயின், வண்டியைச் செலுத்தும் வலவன் போன்ற முழுமுதல் குதிரைகளை யொத்த காதலர்மேல் சினமுற்றுத் துன்புறுத்துவன்.*

*சமுசாரம் - குடும்பம். காந்தன் - கணவன். காந்தை-மனைவி. போக்கு - குறிக்கோள். ஊர்தி - வண்டி. விளியும் - அழியும். சாரதி - வலவன். படர் - துன்பம்.* ௮

சிற்றுயிரைப் பார்த்தேனும் ஒற்றுமையன் புறல் சிறப்பு

உறவினரெல் லாங்கூடி மணவிழாச் செய்துரியோ
னுரிமை யென்னப்
பெறலரும்பேர் பெற்றுமொரு வரையொருவர் பேணரேல்
பெருமை யென்னே
அறமறிவி லாவெனினும் விடாநகைப்புற் றண்பெண்ணும்
அமைந்து வாழும்
பறவைமிரு கங்களைப்பார்த் தாயினுநன் னேயமன்னோர்
பயிலல் நன்றே.

உறவினர் ஊரவர் எல்லாம் ஒன்றுகூடி மணவிழாக் கொண்டாடி ஒருவருக்கொருவர் உரிமையாக்கப் பெற்ற இருவரும் (காதலா) ஒருவரையொருவர் பேணி வாழவேண்டும். அங்ஙனம் வாழப் பயிலாதார் அறமும் அறிவும் இன்னவென்றறியாத விலங்கும் புள்ளும் ஆணும் பெண்ணுமாகக் கூடி நீங்கா மகிழவுற்று வாழ்வதைப்பார்த்தேனும் அன்புறப் பழகுவது நன்மையாம்.

நகைப்பு - மகிழ்வு. அமைந்து - பொருந்தி. கூ

கற்பிலாள் தாலி கழுத்துறு சுருக்கே

தாங்குபொருள் சுட்டழித்துத் தானுமழி யுங்கனல்போல்
  தலைவ னெஞ்சைத்
தீங்குகளாற் சுடுமனைவி தன்வாழ்வைக் கெடுத்தலால்
  செழுங்கண் டத்தில்
தூங்குதிரு நாணினா லென்னபய னதைக்கழுத்திற்
  சுருக்கிக் கொண்டு
தேங்குமுயிர்ப் பொறைநீக்கில் பூமகடன் பெரும்பொறையுந்
  தீரு மன்றே.

தீ தனக்குப் பற்றுக்கோடாகிய விறகு முதலிய பொருள்களைச் சுட்டழித்துத் தானும் அதனுடன் மாய்வதுபோல், மனைவியும் தனக்குப் பற்றுக் கோடாகிய கணவன் உள்ளத்தைப் பழி பாவங்களால் சுட்டழித்து உடன் தானும் அழிவள். அத்தகைய பெண் கழுத்தில் தாலிதொங்கவிடுவதால் மட்டும் பயனென்ன? அதைவிட அத்தாலிக்கயிற்றையே கழுத்துச் சுருக்காகக் கொண்டு உயிர்விடுதல் நன்மை. அதுமட்டுமன்று; நிலத்துகரும் சுமை நீங்கும்.

கனல் - தீ. திருநாண் - தாலி. பூமகள் - நிலம். பொறை - சுமை. கo

உழைப்பால் தளர்மனையை ஓம்பல் பெருங்கடன்

அனைதந்தை இல்லத்துஞ் சுகமில்லை நமக்குரிய
  ளான பின்னர்
மனைதாங்கல் சூதகஞ்சூல் சேய்பெறுதல் வளர்த்தலோடு
  மாமன் மாமி

இனையவரை யுபசரித்தல் விருந்தோம்பல் நம்பணிக
 ளியற்ற லென்னும்
வினைகளிற லயர்மனையைப் பரிவுடனா தரவுசெய்ய
 வேண்டு நெஞ்சே.

*நெஞ்சே! மனைவி நமக்குரியவளானபின், அவளுக்குத்தன் தாய் தந்தையரில்லத்தும் இன்பம் இல்லை. நம் வீட்டிலும் மனையறம் பேணல், கருத்தாங்கல், மகப்பெறுதல், வளர்த்தல், மாமன் மாமியாரையும் பாதுகாத்தல், விருந்தோம்புதல், நமக்கு வேண்டுவன செய்தல் முதலிவற்றால் தளர்ந்து மெலிந்து வருந்தும் வருத்தம் மிகுதி. ஆதலின், அவளைப் பேரன்புடன் துணைநின்று இன்புறச்செய்ய வேண்டுவது நம் கடன்.*

*பரிவு - பேரன்பு. ஆதரவு - துணை.* கக

*பின் தூங்கி முன்னுணரும் பெண்ணே பெரும்பொருள்*

தந்துணைவர் வடிவிலா முடவரேனி னுந்திருவின்
 றனையன் ஒப்பாம்
அந்தமுளார் அயல்குமர ரேனினும்விடம் அனையராம்
 அரும ணாளர்
வந்தமுதுண் டுறங்கியபின் தாமுண்டு துயின்று முனம்
 வல்லெழுந்து
பந்தமுறுங் கருமமெலா முடிப்பர்கற்பி னணிபூண்ட
 படைக்கண் ணாரே.

*கணவன் கை கால் இல்லா நொண்டியாக இருப்பினும் காமனை யொப்பான். அயலார் பேரழகு வாய்ந்தவரே எனினும் கொல்லும் நஞ்சினை ஒப்பார். இவ்வகை நினைவுடன் கணவன் உண்டு உறங்கியபின் தான் உண்டு உறங்குதலும், கணவன் எழு முன் எழுந்து வேண்டுவன செய்தலும் கடனாகக்கொண்டவளே கற்புடையாள்.*

*திருவின் தனயன் - திருமகள் மகன்; காமன்.* க௨

*எப்பணிசெய் தாலுமில்லாள் எழிற்கணவன் நினைப் பொழியாள்*

வினைப்பகைதீர் பெரியரில்வாழ் வினிற்கலந்து நின்றாலும்
வேத நாதன்
தனைப்பரவி நினைத்தலென்றும் ஒழியார்போல் கற்பின்மிக்க
தைய லார்தம்
மனைப்பணிகள் செய்தாலுந் துயின்றாலுங் கனவினுந்தம்
மணாளர் மாட்டு
நினைப்பொழியார் கணவருடன் அவர்மனமோன் றய்க்கலந்து
நிற்கு மாதோ.

*மலமற்ற பெரியோர் மனைவாழ்வு நடத்தினும் தொழுங் கடவுள் நினைவாகவே இருப்பர். அதுபோன்று கற்புடைய மனைவி, மனைக்கடன் செய்தாலும், உறங்கினாலும், விழித்தாலும் கணவன் நினைப்பாகவே இருப்பள். இருவர்மனமும் ஒன்றாகவே இருக்கும்.*

*வேதநாதன் - கடவுள். வேதம் - கடவுள் நூல். தையலார் - பெண்கள்.* கரு

*இணைபிரியா திருக்கநல்கும் இடம்பொருள் பேரின்பே*

ஏந்தலாந் தந்தையைத்தாய் சகியர்கோ யிலைவிட்டோ
ரேளியர் சிற்றில்
சார்ந்தனனென் றிகழுமின்னே சிற்றில்லா லவரருகே
தங்கப் பெற்றேன்
சேர்ந்தமிடி யாலவர்தம் பணியாவும் என்கையாற்
செய்யப் பெற்றேன்
பாந்தவமீ தின்றியெந்தை அன்னையையே றக்குநிதி
பாழ்த்த தன்றே.

*பெருமை மிக்க தந்தை தாயாரைத், தோழியரை, சான்றோர் பேரில்லை விட்டு ஓர் எளியாருடைய சிறிய வீட்டைச் சார்ந்தேன் என்று குறை சொல்லும் தோழியே! சிறு வீடாக இருப்பதால் எப்பொழுதும் அவரருகிலேயே தங்கியிருக்கின்றேன். வறுமையினால் கணவனுக்கு வேண்டும் எல்லாப் பணிகளும் யானே என்*

கையால் செய்கின்றேன். இவையே சிறந்த தவமாகும். பேரில்லும் பெரும் பொருளும் உடைத்தாயிருப்பதால் எந்தையும் எம்மன்னை யும் எப்பொழுதும் ஒன்ருக இருக்க இயலவில்லை. வேறுபடுத்திப் பயனில்லாமல் செய்யும் பொருள் சிறந்ததா?

ஏந்தல் - பெருமை. கோயில் - பேரில்; மாளிகை. மிடி - வறுமை. பா - அழகு; சிறப்பு. பாழ்த்தல் - பயனில்லாமற் போதல். கச

துணைவனுடன் வாழ்வதே சொல்லொணுப் பேரின்பம்

முதல்வியிவ டுணைவனே தேய்வமென்ரு ளவன்சிற்றில்
மோக்க மென்ருள்
அதிலவனே டுறைதல்சா லோகசா மீபமென்ருள்
அவன்கை தீண்டி,
மதமோடுமே யடித்தல்சா ரூபசாயுச் சியமென்ருள்
மயற்பேய் கோண்டாள்
பதவியெலா மீன்ரேர்பா லிருக்கநண்ப ஞேடுமேலிந்தாள்
பசிநோ யுற்றே.

பெற்றோர் வீட்டில் எல்லா நலங்களுமிருக்கத் துணைவ னுடன் கூடிவாழ்தலால் மெலிவும் பசியும் எய்திய தலைவியான வள் தன் துணைவனே தெய்வம்; அவன் வாழும் சிறு வீடே பேரின் பப் பெருவீடு. அவ்வீட்டில் அவனுடன் ஒற்றித்து வாழ்வதே சாலோக சாமீபம். அவன் கையைப் பற்றி மகிழ்ச்சியோடு இன் புறுவதே சாரூப சாயுச்சியம்; என்று மயங்குங் கொள்கைய ளாளுள்.

மதம் - மகிழ்வு. அடித்தல் - இன்புறல், விளையாடல். மயல் - மயக்கம். கரு

வேறு

காரிகைசெய் அழகெலாம் கணவன் கண்டுவக்க

உண்ணல்பூச் சூடனெஞ் சுவத்த லோப்பனை
பண்ணலெல் லாமவர் பார்க்க வேயன்ரே
அண்ணறன் பிரிவினை யறிந்துந் தோழிநீ
மண்ணவந் தனையிது மடமை யாகுமே.

தோழீ! உண்டல் பூச்சூடல் மனமகிழ்தல் அழகுசெய்தல் முதலியன துணைவன் கண்டு களிப்பதற்கே. அவன் இல்லாத போழ்து எனக்கு அழகு செய்யவருகின்றனையே, அஃது அறிவுடைமையாகுமா?

ஒப்பனை - அழகு. அண்ணல் - வாழ்க்கைத் துணைவன்; கணவன். மண்ணல் - அழகு செய்தல். கசு

மனைமுகத் தாமரை மலரும் கணவனால்

கதிரவ னனையதங் கணவ ரேர்முகம்
எதிருற மலருமற் றேதி லார்முக
மதியநோக் கிடவிதழ் வாடிக் கூம்புமால்
சதியர்வாண் முகமெனுஞ் சலசப் பூவரோ.

மனைவியர் முகமாகிய தாமரை கணவர் முகமாகிய அழகிய கதிரவனைக்கண்டுதான் மலரும். அயலார் முகமாகிய திங்களைக் கண்டு குவியும்.

சதி - மனைவி; கற்புடையவள். வாள் - ஒளி. சலசப்பூ - தாமரை. கன

அரசும் அரசுறுப்பும் ஆம்நற் கணவனே

மிடியுளார் கேள்வரென் றுரைத்த மின்னனாய்
கடிநகர் சிறுகுடில் காந்தர் வேந்தராம்
அடியளே குடியவ ரன்பெண் செல்வமாங்
குடியிறை யென்னிறை குறையுண் டோசோலாய்.

கணவர் வறுமை யுள்ளவர் என்று சொல்லும் தோழியே! அவருடைய சிறு வீடே சிறந்த அரண்மனை. அவரே அரசர்க்கரசர். அடியாளாகிய யானே குடி. அவர் அன்பே எண்பெரும் செல்வம். என்னுடைய கற்பே அவர்க்கு நல்கும் வரி. வேந்தற்கு வேண்டியவற்றுள் வேறென் குறைவுண்டு சொல்லாய்.

மிடி - வறுமை. கடி - சிறப்பு. நகர் - அரண்மனை. இறை - வரி. நிறை - கற்பு. வேந்தன் - மன்னர் மன்னன். கஅ

கணவனுறை நெஞ்சில்வேறு கருத இடம் ஏது

தோழிகே ளெனக்குமோர் துணைவ னுண்டவன்
வாழித யத்தினன் மற்ற மாதரைப்
பாழினி னினைக்கின்றாய் பாவி நெஞ்சுனக்கு
ஆழிசூ ழுலகினில் அனந்த மேசொலாய்.

தோழியே! உனக்கும் ஒப்பில்லாத கணவன் ஒருவன் உண்டு. அவன் உன் உள்ளத்து உறைகின்றான். வீணில் மற்றைய பெண் களைப்போல் நினைக்கின்றாய். உன் கணவன் உறையும் நெஞ்சல்லாமல் வேறு நெஞ்சும் உனக்கு உண்டோ? சொல்.

ஓர் - ஒப்பிலாத. வாழ்தல் - உறைதல்.

இதயம் - நெஞ்சு. பாழ் - வீண். ஆழி - கடல். அனந்தம் - பல.

கக

பொருள்தேடப் போங்கணவனுடன் போம் நெஞ்சுயிர்

இங்கிரு பொருள்வயி னேகுவே னென்றீர்
தங்குவ துடலொன்றே தளர்நெஞ் சோடுயிர்
அங்குறு நாசமே யபல மெய்யிதன்
பங்கதாம் அழிவுநும் பங்க தாகுமே.

(தலைவ! நீர் என்னை) "இங்கிரு பொருள் தேடப் போகின்றேன்," என்று சொல்கின்றீர். இங்குத்தங்குவது உடலொன்றே. என் நெஞ்சும் உயிரும் உம்முடன் அங்கு வரும். வலுவில்லாத வெற்றுடல் அழியும். அவ் அழிவும் உம்மைச் சார்ந்ததேயாகும்.

நாசம் - அழிவு. பங்கு - சார்பு.

உ0

கணவனை அகலாக் கற்பினள் எதற்கும் கலங்காள்

விரியுல கழியினு மிறைகள் சூழினுஞ்
சுரிகுழல் கற்பினார் துணைவ னேயமும்
பிரிவிலா வாழ்க்கையும் பெறுவ ரேலவர்
பரிவெலாம் இரவிமுன் பனியின் நீங்குமே.

விரிந்த உலகம் அழிந்தாலும், பெருந்துன்பம் நேர்ந்தாலும் கற்புடைய மனைவி கணவன் அன்பும் அவனைப் பிரியா வாழ்க்கையும் பெறுவாளேயானால், துன்பங்களெல்லாம் ஞாயிற்றின் முன் பனிபோல் நீங்கிவிடும்.

மிறை - பெருந்துன்பம். சுரி - சுருண்ட. குழல் - கூந்தல். (தலைமயிர்)

உக

தலைவன் பின் தூதர்த் தலைவியுயிர் சாரும்

தினவினை செயவகல் செல்வ முன்னந்தூது
அனம்வரும் அதினேடும் அடைகிலாயேனின்
மனம்வரும் உயிர்வரும் வராத மெய்விலங்கு
இனமுறு வனமுறும் இனம்வ ருந்தவே.

நாள்தோறும் செய்யும் முயற்சிக் (பொருள் ஈட்டுதல்) காகச் செல்லும் தலைவ! (நீ சென்றால்) முதல் முதல் அன்னந்தூதாக வரும். அவ்வன்னத்துடன் நீ வராவிட்டால் என் நெஞ்சம் வரும்; உயிர்வரும். ஆனால், வர இயலாத உடம்பு நரி முதலிய விலங்கினஞ் சாரும சுடுகாடடையும். உறவினர் வருந்துவர்.

தினவினை - நாள்முயற்சி. அனம் - அன்னம் (அனம் இடைக்குறை). மெய் - உடம்பு. வனம்-சுடுகாடு. இனம்-உறவினர். உஉ

வேறு

மணமகன் உடலுயிர் மனைவியின் உடைமை*

இந்த வுடலுள மைம்பொறி யின்னுயிர்
யாவுமணஞ் செயும்
அந்தநன் ஞளினில் இல்லவட் கன்போ
டளித்தனன் யான்போதுப்
பைந்தொடி யேயுனைச் சேர்ந்திடப் பாரி லெனக்
குடல் வேறிலை
சிந்தை புலன்களும் வேறிலை சீவனும்
வேறிலை செல்வையே.

பொதுமகளே! உன்னைச் சேர உடல் உள்ளம் ஐம்புலன் உயிர் எனக்கு வேறில்லை. ஏனென்றால், மணஞ் செய்த காலத்து அவையாவும் மனையவட்கு அன்புடன் அளித்துவிட்டேன்.

சிந்தை - உள்ளம். உங

* கண்டுகேட். திருக்குறள். கக0க.

## வேறு

*நெடுவழித் துன்பெலாம் நீங்கலவர் புன்னகையால்*

அந்தநாள் நடந்திலாத யானகன்ற நெடுவழி
எந்தவாறு சென்றதென்ன எனைவினவு சிலதிகேள்
பந்தவூர்தி யேறியே படர்ந்தனன் படர்ந்தநாள்
வந்தபீழை யாவும் அன்பர் மந்தகாசந் தீர்த்ததே.

தோழி! நடக்க அறியாத யான் நெடுவழியை எப்படி நடந்தேனென்று வினவுகின்றாய். காதலாகிய வண்டி ஏறி நடந்தேன். நடந்ததால் ஏற்பட்ட துன்பமுற்றும் காதலர் புன்னகையால் நீங்கிற்று.

சிலதி - தோழி. பந்தம் - காதல். ஊர்தி - வண்டி. படர்தல்- நடத்தல். பீழை - துன்பம். மந்தகாசம் - புன்னகை. உச

*அருவொப்புக் கழுதவள் உருவப்பேர்க் குயிர்விடும்*

திருவனை யெனப்புகழ்ந்து தேவியை விளிக்கமா
மருமலர் துறந்துநெஞ்சின் வாழ்ந்ததென்னென் றழுதனள்
அருவமாதை யொப்புரைக்க வழுதுவாடு நங்கையாம்
உருவமாதர் பெயருரைக்கி னுயிர்துறப்பள் நெஞ்சமே.

நெஞ்சே! திருமகளை ஒப்பாய் என்று மனைவியை புகழ்ந்து அழைத்தேன். அவள், செந்தாமரையை விட்டுத் திரு(மக)ள் உம்முடைய நெஞ்சில் எப்படி வாழ்ந்தாள், என்று அழுதாள். அருவ மாதரை ஒப்பாய் என்னும் சொல்லையே பொறாதவள், உருவுடைப் பெண் பெயரைச் சொன்னால் திட்டமாக வுயிரைத் துறப்பள்.

திரு - திருமகள் (இலக்குமி). தேவி - மனைவி, விளிக்க - அழைக்க, மா - திருமகள், மலர் - தாமரை. உரு

*கணவனல்லா ஆண்களைக் காணக்கண் ணிலாள்மனை*

பூணலங்கன் மார்பினரை யன்றிவேறு புருடனைக்
காணநோக்கி லேனினைந்து கழறநெஞ்சு வாயிலேன்
பாணவேறு பொறியிலேனை நடனம்பார்க்க வாவென
நாணமின்றி யேயுரைத்த நண்பர்வம்ப ரேகொலாம்.

பாணனே! தலைவனையன்றி வேறு ஆண்களைக் காணக் கண்ணிலேன்; நினைக்க நெஞ்சிலேன்; பேச வாயிலேன்; வேறு பொறியில்லாத என்னைக் கூத்துக் காண அழைக்கும் தலைவர் நாணமில்லா வம்பராவர். ௨௬

## வேறு

### சீரிய கற்பால் சித்திரமும் பாரார்

ஓவியர்நீள் சுவரேழுதும் ஓவியத்தைக் கண்ணுறுவான்
தேவியையா மழைத்திட ஆண் சித்திரமேல் நான்பாரேன்
பாவையர்தம் உருவெனின்நீர் பார்க்கமனம் போறேனென்
காவிவிழி மங்கையிவள் கற்புவெற்பின் வற்புளதால். [ருள்

சுவரின்கண் எழுதப்பட்ட சித்திரத்தைப் பார்க்கவேண்டுமென்று யான் மனைவியை அழைத்தேன். அவள், 'ஆண் ஓவியமானால் நான் பாரேன்; பெண் உருவமென்றால் நீர் பார்க்க யான் மனம் பொறுக்கமாட்டேன்,' என்று கூறினாள். அவளுடைய கற்பு மலைபோன்ற திண்மையுடையது.

ஓவியர் - சித்திரம் எழுதுவோர். ஓவியம்-சித்திரம், கண்ணுறுவான் - பார்க்கும் பொருட்டு, காவி-நீல மலர், வெற்பு-மலை. ௨௭

### அன்பர்பொருட் ககலுதலால் அக்காளென் பதுதகும்

திருவென்ன வெனைநினையார் சீர்கேடி யெனநினைந்து
பொருள்வயினே கிடச்சீவன் போல்வாரே யுன்னுதலால்
ஒருதரமோ பலதரநீ ஓஅக்காள் அக்காளென்று
இருவினையேன் றனையழைத்த லிழுக்கன்று பைங்கிளியே.

பசுங்கிளியே! உயிர் போன்ற காதலர் என்னைத் திருமகள் என்று நினையாமல், அவளுக்கு மூத்தவளாகிய மூதேவி யென்று கருதிப் பொருள் தேடச்செல்ல நினைக்கின்றார். அதனால் நீ கொடுவினையேனை அக்காள் அக்காள் என்று, பலமுறை அழைப்பதனால் குற்றம் ஒன்றும் இல்லை.

திரு - திருமகள்; பொருளருளும் தெய்வம். சீர்கேடி - மூதேவி. உன்னுதல் - நினைத்தல், அக்காள்-மூதேவி, இருவினை - கொடுவினை. ௨௮

### கணவனே மனைவியின் காப்புயிர் ஆகும்

நள்ளிரவில் தமயந்தி நளன்றனையே பிரிந்தபின்னுந்
தெள்ளுயிர்நீங் கிலளேன்னச் சேடிநீ பொய்யுரைத்தாய்
உள்ளுயிரே பத்தாவா வுடையகற்பி னூர்க்கவன்றான்
தள்ளியகன் றுல்வேறு தனியுயிரே துரையாயே.

*நடு இரவில் நளன் தமயந்தியைப் பிரிந்தனன். நளன் பிரிந்த பின்னும் தமயந்தி உயிர் விடவில்லையே என்று தோழி நீ பொய் யுரைக்கின்றாய். கற்புடைய பெண்களுக்கு கணவனே உள்ளுயிர். அக் கணவன் தானே பிரிந்துபோனால் மனைவி உயிர் விடுவதற்கு அவளுக்கு வேறாகத் தனியுயிர் ஏது? சொல்லுவாயாக.*

*நள்ளிரவு-நடு இரவு. சேடி-தோழி. பத்தா-கணவன்.* உகூ

### கற்புடையார் மன்னன்கை வாளுக்கும் அஞ்சார்

நரபதிநீ யானலு நண்பரின்பா தத்துகட்குன்
சிரமகுட நிகராமோ சேர்கிலையேல் கோல்வனெனக்
கரவாளை யுருவிநின்றாய் கற்பினுக்குகோர் குறைவின்றித்
தரமாநீ யேனைக்கோல்லிற் றந்தைதாய் குருநீயே.

*மன்னவன் நீயானாலும் என் தலைவன் திருவடித்தாளுக்கு உன் தலைமேற்காணும் மணிமுடி ஒப்பாகாது. உன்னை யான் சேராவிட்டால் கொல்லுவேன் என்று கைவாளை உருவி நின்றாய். என் உயிரினும் சிறந்த கற்புக்கு ஒரு குறைவு நேராமல் என்னைக் கொன்றுவிட்டால், நீயே தந்தை தாய் குரு முதலிய துணைவர்கள் ஆவாய்.*

*நரபதி - மன்னன். நண்பர் - தலைவர். சிரம் - தலை. மகுடம் - முடி. கரம் - கை.*

கூ0

### இன்ப துன்பம் இருவருக்கும் ஒன்றே

அன்பருண்ணில் என்பசிபோம் அவர்களிக்க யான்களிப்
துன்பமவ ருறில்யானுந் துன்புறுவேன் ஆதலினல் [பேன்
என்புடல்வே றெனினுமெமக் கின்னுயிரோன் றெனவறிந்தேன்
பின்பவர்தாம் என்னைவிட்டுப் பிரிவதேவ்வா றுரைசகியே.

தோழியே! காதலர் உண்டால் என் பசி நீங்கும். அவர் மகிழ்ந்தால் யான் மகிழ்வேன். அவர் துன்புற்றால் யான் துன்புறுவேன். அதனால் எலும்பாலாகிய உடம்பு வேறாக இருந்தாலும் அதனுள் இருக்கும் இனிய உயிர் ஒன்றேயாம். அம் முறையால் தலைவர் என்னைவிட்டுப் பிரிவது எப்படி?

அன்பர் - காதலர். களிப்பு - மகிழ்வு. சகி - தோழி. நக

நற்குணமே நல்லணியாம் நாதன் மகிழ்வே நகையாம்

பொன்னகையி லாயெனச்சொல் பொற்றொடியே பரத்தை
அந்நகைக ளுரியவையா மச்சநாண் மடம்பயிர்ப்பும்[யர்க்கே
இன்னகையாங் கற்பினர்க்கு மேதினியுள் நீசொலுமப்
புன்னகையு நண்பரினோர் புன்னகைக்கு நிகராமோ.

தங்கத்தாலாகிய அணிகலன்கள் இல்லையென்று சொல்லும் தோழியே! தங்க நகைகள் விலைமகளிர்க்கே உரியன. குலமகளிராகிய எமக்கு, அன்பு காரணமாகத் தோன்றும் நடுக்கமும், மன ஒடுக்கமும், அடக்கமும், கூச்சமும் ஆகிய நான்குமே அழியாத இனிய நகைகளாகும். உலகத்துள் நீ சொல்லும் அந்த இழிவான நகைகள் காதலர் கனிந்துகாட்டும் புன்முறுவலுக்கு ஒப்பாகுமோ?

பரத்தை - விலைமகளிர். புன்நகை - இழிந்த அணிகலன். புன்நகை - குறுஞ்சிரிப்பு. நிகர் - ஒப்பு. நஉ

கணவரை நீங்கில் கற்புடையார் வாழார்

செழுமுளரி புனல்நீங்கில் செழிக்குமோ படர்கொடிகள்
கொழுகொம்பைப் பிரியின்வளங் கொண்டுய்யு மோகணவர்
அழுதயர வைதாலும் அரந்தைபல இயற்றிடினுந்
தொழுதகுகற் புடையார்தந் துணைவரைவிட் டகல்வாரோ.

செழித்த தாமரை தண்ணீரைவிட்டு நீங்கினால் செழிப்பை இழக்கும். படர் கொடிகள் கொழு கொம்பைப் பிரிந்தால வளங் கெடும். அவை போன்று கணவர் அழும்படியாகத் திட்டித் துன்பம் பல செய்தாலும் கற்புடையார் கணவரைப் பிரிந்தால் வாழார். அதனால், கற்புடையார் கணவனைவிட்டு நீங்கார்.

முளரி - தாமரை. புனல் - தண்ணீர். அரந்தை - துன்பம். துணைவர் - கணவர். அகலார் - நீங்கார். நந

*காதலர் நெஞ்சுயிர் மாறிக் கலந்தன*

பேதைமதி யுற்றனையென் றெனையிகழும் பெருந்தகையென்
காதலியைப் பிரிந்ததிந்தக் காயமொன்றே உயிருநெஞ்சும்
மாதவள்பா லுறையுமன்னுள் மனமுயிரென் பாலுறையும்
ஆதலினன் பேதைமதி ஆயினனேன் பதுநிசமால்.

*அறியாமையை அடைந்தேன் என்று என்னை இகழும் பாங்கனே! காதலியைவிட்டு நீங்கியது இவ்வுடம் பொன்றே, என் உயிரும் உள்ளமும் காதலியின்பால் உறைகின்றன. அவளுடைய உயிரும் உள்ளமும் என்பால் உறைகின்றன. அதனால் நான் பெண்ணறிவினேன் என்று நீ சொல்வது மெய்ம்மையே.*

*பேதைமதி - அறியாமை. பெருந்தகை - பாங்கன். காயம் - உடம்பு. பேதைமதி - பெண்ணறிவு. நிசம் - மெய்ம்மை.* கூஉ

*தலைவி தலையசைப்பால் தலைவற்காம் பெருமிதம்*

உரனொடுமோ மதுகையினை யுலகமெலாந் துதித்தாலும்
பெருமிதங்கோள் ளேமறியாப் பேதையெனு நந்துணைவி
ஒருசிரக்கம் பிதஞ்செய்யின் உடலெலாம் பரவசமாம்
பருவமதிற் சிறியாளிவ் வசியமெவண் படித்தனளால்.

*(தோழனே!) நம்முடைய அறிவின் திண்மையையும், உடல் வலிமையையும் உலகோரெல்லாம் போற்றிப் புகழ்ந்தாலும், யாம் உள்ள மகிழ்வு கொள்ளேம். நம் துணைவியாகிய அறியாச் சிறு பருவத்தினள் ஒருமுறை (நம்மை வியந்து) தலையசைத்தால் நம் உடம்பெல்லாம் மகிழ்ச்சியால் அவள் வயப்பட்டுவிடுகின்றது. இச்சிறு பருவத்துள் பிறரைத் தன் வயப்படுத்தும் தன்மை எங்குப் படித்தனள்.*

*உரன் - அறிவின் திண்மை. மதுகை - உடலின் வன்மை. பெருமிதம்-உள்ள மகிழ்வு. சிரக்கம்பம்-தலையசைத்தல். வசியம் - வயப்படுத்தல்.*
கூ௩

*படம்வேண்டாள் என்றென்றும் பக்கமுறைவே வேண்டும்*

என்னுருவைப் படத்தெழுதி யிதுநானே பேதமிலை
நன்னுதலே யிதைக்கோடி நல்கெனக்கு விடையென்ன
அன்னதுநீ ரேயாயிற் பொருளீட்ட வதுசெல்க
மன்னியிவ ணுறைமினென்றள் மறுசெயல்யா தறியேமால்.

(தோழனே) என்னுடைய உருவைப் படமெழுதி நல்ல நெற்றியையுடைய காதலியே இப்படத்துக்கும் எனக்கும் ஒரு சிறிதும் வேறுபாடில்லை; இதைப்பெற்றுக்கொள். எனக்கு விடை கொடு என்று சொன்னேன். (அவள்) அப்படம் நீரேயானால் பொருளீட்டுதற்கு அப்படமே போகட்டும், நீர் இங்கேயே நிலைத்துத் தங்கியிருமென்று கூறினாள். வேறு என்ன செயல் செய்வது என்று புரியவில்லை.

பேதம் - வேறுபாடு. நன்னுதல் - நல்ல நெற்றியையுடைய காதலி. மன்னி - நிலைத்து. ௧௬

அன்புடையர் பொருள்சுற்றம் அவரேபோல் காக்க

**வேதனன்ப ரவற்குரிய விமானமுதல் யாவையுமிக்கு**
**ஆதரமோ டோம்புவரா லார்வலன்பா லன்புடைய**
**மாதரவ னனைதந்தை தமர்மாட்டும் அன்புறுவார்**
**காதலியின் தமரிடத்துக் கணவனுமத் தன்மையனால்,**

கடவுளடியார் அவருடைய திருக்கோவில் முதலிய பொருள்களைப் பேரன்புடன் பாதுகாப்பர். அதுபோல், கணவன்பால் அன்புடைய பெண்கள் அவனின் தாய்தந்தை சுற்றத்தாரிடத்தும் அன்பு செய்வர். கணவனும் மனைவியின் தாய்தந்தை சுற்றத்தாரையும் அன்புடன் பாதுகாப்பன்.

வேதன் - கடவுள். விமானம் - திருக்கோவில். ஆர்வலன்- அன்புடையன்; கணவன். காதலி - மனைவி ௧௭

பயிலுமிடம் நோக்கிப் பரிவாள் தலைவி

**போனவர்தா மிருக்குமிடம் புசிக்குமிடம் துயிலுமிடம்**
**மானனையாள் நோக்குபுநோக் குபுவருந்தும் வல்லேகேன்று**
**ஈனமில்நா ளைத்தொழுமன் னேகும்வழி பார்த்தழுமால்**
**மானவர்சென் றேருதினமே மறுதினம்போம் வகையெவனால்.**

(தோழீ) மான்போன்ற நோக்கமுடைய தலைவி பொருள் தேடச் சென்ற தலைவர் வழக்கமாக இருக்குமிடம் உண்ணுமிடம் உறங்குமிடம் முதலியவற்றைப் பார்த்துப் பார்த்து வருந்துகின்றாள். குற்றமற்ற பகற்பொழுதைக் கைகூப்பித் தொழுது 'விரைவாகச் செல்க', என்கின்றாள். தலைவர் பிரிந்து சென்ற வழியை நோக்கி அழுகின்றாள். தலைவர் சென்ற நாள் இன்று ஒருநாளே; நாளையாகிய மறுநாள் எங்ஙனம் கழியும்?

நோக்குபு - பார்த்து. வல் - விரைவாக. ஏனமில் - குற்ற மற்ற. நாள் - பகல். மானவர் - தலைவர். எவன் - எங்ஙனம் கழியும். ௬அ

உடலுயிர்க்காம் இருதலைவர்* எவர்க்குமுளர் உண்மையே

கேள்வரிலா விடத்தோர்பிழை செயினறியா ரெனக்கிளக்கும்
வாள்விழியென் றுகத்துறையு மகிழ்நரிரு வரிலொருவர்
மூள்வினையாற் பிரியினுமற் றொருவர்சக முழுதுநிறை
கோள்வினையா ரவரறியாச் செயலுளதோ கூறுவையே.

வாள்போலும் கண்ணையுடைய தோழி! தலைவரிலாதவிடத்து ஒரு பிழை செய்தால் அவர் அறியமாட்டார் என்று சொல்லு கின்றாய். என்னுடைய உள்ளத்தில் தலைவர் இருவர் உறைகின் றார்கள். அவர்களுள் ஒருவர் உடல் தலைவர். மற்றொருவர் உயிர்த் தலைவர். உடல் தலைவர் முயற்சியின் பொருட்டுப் பிரிந்தாலும் உயிர்த்தலைவர் உலகு எங்கணும் நீக்கமற நிறைந்திருக்கும் கொள் கையினை யுடையர். அவர் அறியாச் செயல்உண்டோ? கூறுவாயாக.

கேள்வர் - தலைவர். கிளக்கும் - சொல்லும். மகிழ்நர் - தலைவர். மூள்வினை - ஊக்கத்துடன் முற்படுந்தொழில். சகம் - உலகம். கோள் - கொள்கை. ௬௯

உயிர்த்தலைவர் படைத்தளிக்கும் ஒப்பில் முழுமுதல்வர்

இருதுணைவர் தனக்குளரென் றிறைவிசொல ஐயமுற்றிங்
கொருதுணையான் அறிதுவன்மற் றெருதுணையா ரெனவினவப்
பெருமகனையுன்னை யென்னைப்பேரண்டங் களையமைத்தான்
தருமநிலை மூர்த்தியென்றாள் சதியிவட்கோர் குறையுளதோ.

தலைவி தனக்கு இருவர் தலைவர் உளர் என்று சொன்னாள். தோழி ஐயமுற்றுத் தலைவியே! ஒரு துணைவரை யானறிவேன். மற்றொரு தலைவர் யார் என்று வினவினாள். தலைவி, தோழியே நம்தலைவரை உன்னை என்னை இந்தப்பேர் அண்டங்களைப் பேரரு ளால் படைத்துக் காக்கும் அறவாழி அந்தணனை ஆண்டவன் என்றாள். இத்தகைய மெய்யறிவு படைத்த நம் தலைவிக்கு என்ன குறையுளது? (ஒன்று மின்று.)

---

* ஆங்கவன்றன், கஉ. காரைக்காலம்மையார் கச.

துணைவர் - தலைவர். இறைவி - தலைவி. ஐயம் - தடை; துணிவின்மை (சந்தேகம்). பெருமகன் - தலைவன். தருமம் - அறம். சதி - தலைவி. ச0

## வேறு

மனையவள் நகைப்பஞ்சிவாள் வெல்லலே வலிமை

வினையில் வென்றியி லாதிங்கு மீண்டதற்கு
இனன்மு னிந்திடு மென்றஞ்சி லேம்வசை
தனையு மென்னிலந் தாரந் திறலிலேம்
எனந கிற்செய்வ தென்சொ லிதயமே.

நெஞ்சே! முயர்சியில் வெற்றிபெறாது இங்கு மீண்டதற்கு உறவினர் வெறுப்பார் என்று அஞ்சிலேன். உலகோர் கூறும் பழியையும் கருதிலேன். மனையவள் வலிமையில்லாதவன் என இகழ்ச்சிச் சிரிப்புச் சிரித்தால் என் செய்வது? சொல்வாயாக.

வினை - முயற்சி, இனன் - உறவினன், தாரம் - மனைவி, நகின் - சிரித்தால். சக

எப்பெருந் துன்பும் ஏகும் மனைநோக்கால்

இரிஞ ராலுறும் எவ்வமுந் தேகமார்
பெரிய புண்களும் பேசருந் துன்பமும்
உரிமை வாண்முக நோக்க வொழிதலாற்
பிரியை நோக்கம் பெருமருந் தாமரோ.

பகைவர்களால் ஏற்படும் துன்பமும், போரில், உடம்பில் ஏற்படும் பெரிய புண்களும், அதனாலுண்டாகும் இடும்பையும் கற்புநிறை காதலியின் அன்புப் பார்வையால் நீங்குகின்றன. ஆயின், காதலியின் நோக்கம் துன்பம் நீக்கும் சிறந்த மருந்தாம் என்க.

இரிஞர் - பகைவர். எவ்வம் - துன்பம். உரிமை - காதலி; மனைவி. பிரியை - காதலி. சஉ

இல்லவள் முகத்துக்கு ஈடின்று திங்களும்

எழிலி லாளில் லவளேனும் வேசிதேன்
மொழிமு கத்தை மதியைமுன் னான்முகன்
சுழித ராசினிற் றூக்கத்தட் டோடும்பர்
எழுநி சாபதி யின்னுமிங் கெய்திலான்.

மனையவள் அழகில்லாதவள் எனக் கூறும் பரத்தையே! உலகைப்படைத்த நான்முகன் தேன்போலும் மொழியையுடைய மனையவளின் முகவொளியின் சிறப்பையும வானூர்மதியின் சிறப்பையும் உட்குழிந்த தராசுத் தட்டில் வைத்துத் தூக்க, மதியின் தட்டு, முகததிங்களுடன் தலையொவ்வாது மேலெழுந்து வானஞ் சென்றது. அத் திங்கள் மீட்டும் நிலவுலக மெய்தவில்லை

வேசி - பரத்தை, சுழி - உட்குழிவு. நிசாபதி - திங்கள். நிசா - நிசி; இரவு. சரு

தலைவியோடு உறையின் தருங்கேடு இன்று

ஓவி யாரும் ஒழிக வுறுவல்கள்
மேவி நாளும் விளைகநஞ் செல்வியை
ஆவி யைஅமு தத்தை அனத்தினைத்
தேவி யைப்பிரி யோஞ்சிதை வென்னெஞ்சே.

நெஞ்சே! நம்மைவிட்டு யாரும் நீங்குக. துன்பங்கள் நாளும் பொருந்திப் பெருகுக. நம் வாழ்வை, உயிரை, அமுதத்தை, அன்னம்போலும் மென்னடை யுணர்வை, கற்புக்கடம் பூண்ட தெய்வத்தை நாம் பிரியாதிருந்தால் நமக்கு வரும் கேடு என்ன இருக்கின்றது? (ஒன்றும் இன்று.)

ஓவி - விட்டு. உறுவல்கள் - துன்பங்கள். சிதைவு-கேடு. சச

தலைவற்குக் கால்கண்ணும் தலைவிமிகு பேறுடையாள்

ஏலுங் கால்கண் ணிலார்கோன்கர ரேன்னும்வேல்
போலுங் கண்ணி புனிதரைத் தாங்கிடக்
காலு நானிரு கண்களு நானெனின்
மேலு மேற்கினிப் பாககியம் வேண்டுமோ.

வேல்போலுங் கண்களையுடைய தோழியே! தலைவர் உலாவும் காலும் பார்க்குங் கண்ணும் இல்லாதவர் என்று சொல்லுகின்றனை. அவருக்கு யானே இருகால்களும், இரு கண்களும் ஆவேன், இவற்றுக்குமேல் யான் அடையவேண்டிய பேறு வேறு என்ன இருக்கின்றது? (ஒன்றும் இன்று.)

ஏலும் - உலாவும். பாக்கியம் - பேறு. சரு

அகமென்மை மாதரை அருளொடும் காக்க

மென்மை யாகும் விழிமுதல் யாவையும்
நன்மை யாவிட ரின்றிநன் கோம்பல்போல்
வன்மை யின்மட மாதர்கள் பாற்கொடுந்
தன்மை யின்றித் தயையுற வேண்டுமால்.

மென்தன்மையுடைய கண் நாக்கு மூக்கு காது முதலிய பொறிகளை நலம்பொருந்தக் கேடில்லாமல் செம்மையாகப் பாது காத்தல்போல், வன்மைகுறைந்து மென்மை மிகுந்துள்ள அடக்கம் வாய்ந்த பெண்களிடம் கொடுந்தன்மையின்றி அன் பிரக்கம் கொள்ளல்வேண்டும்.

மென்மை - (அறிவுப் பொறியாகிய இயற்கை) மென்மை. ஓம்பல் - பாதுகாத்தல். மடம் - அடக்கம். தயை - இரக்கம். சசு

வேறு

காதலர்க்கெம் மெலிவினைக் கதிர்க்காற்றே யுரைமின்

ஈண்டிவண் வருவலெனும் இறைவருகி லரவரைத்
தீண்டிய கிரணமதால் தீண்டுதி யெனைவெயிலே
தாண்டிய வளியவர்மெய் தடவியென் னுடல்படர்வாய்
மீண்டில ரிடமெனது மெலிவினை யுரைமுகிலே.

'மேகம் தவழும் கார்காலத்து இங்கு வருவேன்', என்று கூறிச் சென்ற தலைவர் வரவில்லை. ஞாயிறே! அவரைத் தீண்டிய கதிரால் என்னையும் தீண்டுகின்றாய். காற்றே! அவர்மேல் தழுவி என்மேலும் படர்கின்றாய். கூறிய முறை தவிர்ந்து மீளாத தலைவரிடம் என் மெலிவினை நீவிர் கூறுமின்.

முகில்-மேகம். இறைவர்-தலைவர் கிரணம்-கதிர். வெயில் - ஞாயிறு. வளி - காற்று. படர்தல் - படுதல். சஎ

வேறு

இல்வாழ்வார் இருவரும் இயற்கையில் ஒருவரே

ஒருதருமற் றொருதருவி னுதவியின்றிக் காய்க்கும்
உயராண்பெண் சேர்க்கையின்றி யொருமகவுண்டாமோ
இருமையின்றி யிருவருமே நம்மனைநம் பொருணம்
மிகுளைநஞ்சேய் எனப்போதுவி னியம்புரிமை யாலும்

உருவமொன்ற லாண்பெண்ணை யமைத்தனன்முன் பரனென்
றுயர்ந்தோர்சொல் வதுநிசமா முரியோனில் லென்னும்
இருவர்கள்தம் நயந்துயரம் ஏகமெனக் கருதி
யிட்டமொடு பெட்டமரிற் கட்டமவர்க் குளதோ.

*ஒரு மரத்திலேயே ஆண் பெண் பூக்கள் அமைந்திருப்பதால், அம்மரம் வேறு ஒரு மரத்தின் உதவியில்லாமல் காய்க்கும். (விலங்கு முதலிய சிற்றுயிர்கள் இனம் பெருக்கக் கூடினாலும் பெரும்பாலும் தனித்தனியாகப் பிரிந்தே வாழ்கின்றன.) ஆனால், பிறப்பிலுயர்ந்த உயர் திணை ஆண் பெண் என்னும் இருவரின் குடும்பவாழ்க்கையின்றி மகப்பேறு உண்டாகுமா? இருவரும் வேறுபாடின்றி ஒருமை எண்ணத்துடன் நம்வீடு, நம்பணம், நம் சுற்றம் நம் பிள்ளைகள் எனப்பொதுவாகவே சொல்லுகின்றார்கள். அவ்வுரிமையாலும், ஆண்டவன் முன்னாளில் ஆண்பெண்ணை ஒருடம்பினின்றும் படைத்தான் என்று ஆன்றோர் கூறுவது உண்மையாம். தலைவன் தலைவியென்னும் இருவர்களும் இன்ப துன்பங்களை ஒருமையாகக் கருதி விருப்பமுடன் பொருந்தி வாழ்ந்தால், துன்பம் அவர்க்கு ஏதும் உண்டோ? (இல்லையென்க.)*

*தரு - மரம். சேர்க்கை - குடும்பவாழ்க்கை. மனை - வீடு பொருள் - பணம். இருளை - சுற்றம். சேய் - பிள்ளை, பரன் - ஆண்டவன். நயம் - இன்பம். துயரம் - துன்பம். ஏகம்-ஒருமை. இட்டம் - விருப்பம். பெட்டம் - பொருத்தம்.* சஅ

---

## அதி. கஉ—பரத்தைமை

### (கற்பு நிறை அழிவு)

*முறைகடந்து புணர்வோரைத் தண்டிக்கும் முழுமுதல்*

பண்டோராண் பெண்ணமைத்தவ் விருவருக்கு
மணமியற்றிப் பரனி ரக்கங்
கொண்டளித்த முறைகடந்து கள்ளவழிப்
புணர்ச்சிசெயுங் கொடியோர் தம்மை
மண்டலமே வாய்பிளந்து விழுங்காயோ
அவர்தலைமேல் வானு லாவுங்
கொண்டலே பேரிடியை வீழ்த்தாயோ
விதுசெய்யில் குற்ற முண்டோ.

*ஆண்டவன் பழமையாகவே ஆண் பெண் இருவரையும் அமைத்தருளிப் பேரிரக்கத்தால் மணமும் நிகழ்த்துவித்தனன். அம் மணமுறையைக் கடந்து தீய வழியாகக் கூடி இன்பமடையும் கொடியவர்களை நிலமே வாய்பிளந்து விழுங்கமாட்டாயா! வானில் திரியும் மேகமே பெரிய இடியை அவர் தலைமேல் விழச் செய்யமாட்டாயா! இப்படிச் செய்யின் ஏதேனுங் குற்றமுண்டாமோ?*

*பண்டு - பழமை. பரன் - கடவுள். மண்டலம் - நிலம். உலாவல் - திரிதல். கொண்டல் - மேகம்.* க

### வேறு

*கண்மூடும் பூனையொக்கும் கரவயலானைக்கூடல்*

ஒருவரு மறிகிலா ரெனவோ ரொண்ணுதல்
கரவயற் குமரரைக் கலத்தல் பூசைதன்
இருவிழி மூடிமற் றெவர்கள் பார்வையுந்
தெரிகிலா தெனப்பயன் றிருட லொக்குமே.

*ஒரு பெண் தன்னுடைய தவறுதலான ஒழுக்கத்தை ஒருவரும் உணரமாட்டார் என்று கருதி, அயல் ஆடவனைக் கள்ளமுறையாகச் சேர்தல், பூனை தன் கண்களை மூடிக்கொண்டால் யாருக்*

கும் பார்வை தெரியாதென்று கருதிப் பாலைத் களவுசெய் வதை யொக்கும்.

ஒண்ணுதல் - அழகிய நெற்றியையுடைய பெண். கரவு - திருட்டு. பூசை - பூனை. விழி - கண். பயன் - பால். உ

கள்வர் சொல் ஒக்கும் கற்பிலார் சொல்லும்

அன்னிய ரெம்மியை பன்றிச் சேர்ந்தனர்
என்னமின் னிடையவர் இயம்பல் சோரர்கள்
பொன்னையாம் வவ்விலெம் பொருள்வந் தெங்களை
முன்னைவவ் வியதென மொழித லொக்குமே.

மின்போலும் இடையையுடைய பெண்கள் அயலார் எங்களுடைய இணக்கமில்லாமல் எம்மைச் சேர்ந்துவிட்டனர் என்று சொல்லுதல், கள்வர் பொருளை யாங்கள் களவுசெய்யவில்லை அப்பொருளே எங்களை வலிய வந்து பற்றியது என்று சொல்வதை யொக்கும்.

அன்னியர்-அயலார். இயைபு - இணக்கம். சோரர் - கள்வர். வவ்வியது - பற்றியது. ௩

அயலார் அன்புரையால் அழியுங் கற்பு

மனமகிழ் வாயயல் மைந்தர் தம்மோடுந்
தினமுரை யாடிடுந் தெரிவை கற்பது
புனலுறு முப்பினைப் போலு மென்மெழுகு
அனலுற லென்னவும் அழிவ துண்மையே.

ஒரு பெண் நாள்தோறும் அயல் ஆண்களுடன் மனமகிழ உரையாடுவாளானால் அவள் கற்பு தண்ணீரைச் சார்ந்த உப்பும், தீயைச் சார்ந்த மெழுகும் அழிவனபோல் அழியும் என்பதாம்.

புனல் - தண்ணீர். அனல் - தீ. ௪

ஆடவன் செயலெலாம் ஆற்றல் பெண் பழிப்பாம்

வலதுகை துணைவனு மற்றோர் கைமனை
தலைவன்செய் தொழிலெலாந் தாரம் ஆற்றுதல்
தொலைவிலா வலக்கையின் தொழிலி டக்கர
நிலமிசைச் செய்தென நிந்தை மேவுமே.

குடும்ப வாழ்வில் ஆடவர் வலது கையும் மகளிர் இடது கையும் ஆவர். காதலன் செய்யும் தொழில் எலாம் காதலி செய்ய எண்ணுவது வலக்கையின் தொழிலாகிய உண்டல் முதலியவற்றை இடக்கை செய்ய எண்ணின் இகழப்படுவதுபோல் இகழ்ச்சிக் குரியதாம்.

தலைவன் - காதலன். தாரம்-காதலி. ஆற்றுதல்-செய்தல். ௫

பரத்தையர் பெருநஞ்சு பாம்பினுங் கொடிதே

உண்டவர் தமைக்கோலும் ஓத வெவ்விடம்
அண்டினோர் தமைக்கோலு-மாளி கையினால்
தண்டினோர் தமைக்கோலுஞ் சற்பந் தையலார்
கண்டவர் நினைப்பவர் தமைக்கோல் காலமே.

கடலில் எழுந்த நஞ்சு உட்கொண்டவரைக்கொல்லும். அரிமா நெருங்கினவரைக் கொல்லும். பாம்பு கையால் தொட்டவரைக் கொல்லும். தீயபெண்கள் தங்களைப் பார்ப்பவர்களையும் நினைப்பவர்களையும் பெருநஞ்சுபோல் கொல்லுவர்.

ஓதம் - கடல். அண்டல் - நெருங்கல். ஆளி - அரிமா; சிங்கம். தண்டல் - தொடுதல். சற்பம் - பாம்பு. காலம் - சாவு; விடம் - நஞ்சு. ௬

சிற்றின்பால் செய்பாவம் வீட்டில் தீயிடலாம்

நிலையில்சிற் றின்பத்தி னேயத் தால்தினம்
அலைவுசெய் பவந்தனை ஆற்றல்] கோள்ளியால்
தலையினைச் சோறிதலுந் தகிக்குந் தீயினை
எலியினுக் கஞ்சியில் லிடலும் எய்க்குமே.

நிலையாத சிற்றின்பத்துக்காக நாள்தோறும் நிலைத்த துன்பந் தரக்கூடிய பாவத்தைச் செய்தல், தலையின் தினவு நீங்குதற்காகத் தலையினைக் கொள்ளிக் கட்டையால் சொறிதலும், எலிக்கு நடுங்கிச் சாம்பராக்குந் தீயினை வீட்டில் கொளுத்தலும் போன்றதாம்.

அலைவு - துன்பம். தகித்தல் - சுடுதல்; சாம்பராக்குதல். இல் - வீடு. எய்க்கும் - ஒக்கும். ௭

காமத்திக்குச் சுள்ளி பரத்தையைக் காண்டல்

மின்னெரி மூட்டிடு விறகு போற்சுவைக்
கன்னலைப் பழித்தசொல் லாரைக் காணலுந்
துன்னலும் உன்னலுஞ் சுடுவெங் காமத்தீ
தன்னையே மூட்டிடுஞ் சமிதை போலுமே.

கரும்பினும் இனிய சொல்லையுடைய பொதுமகளிரைப் பார்த்தலும் நெருங்கலும் நினைத்தலும் தீயை மூட்டும் விறகு போன்று உயிரையும் சுடும் கொடிய காமத்தீயை உண்டாக்கும் சுள்ளி ஆம்.

மின் - ஒளி கன்னல் - கரும்பு. துன்னல் - நெருங்கல். உன்னல் - நினைத்தல். சமிதை - சுள்ளி. அ

பிறர்மனை சேர்வோர் பெருங்கே டுறுவர்

உணர்வறுஞ் செல்வமும் உயர்வு மேயறுங்
குணமறுங் குலமறுங் கோடிய நோயெலாம்
அணவுறு நரகுறு மாயுள் தேயுமால்
கணமறு மாதர்தோள் கலக்குந் தூர்த்தர்க்கே.

கண்ணிமைப் பொழுதும் அயல் பெண்டிர் தோளைச் சேரும் காமுகருக்கு அறிவு கெடும்; பொருளும் மேன்மையும் நீங்கும்; நல்லதன்மைகள் அழியும்; குடும்பம் ஒழியும்; கொடுமையான நோய்களெல்லாம் வந்து பொருந்தும். இருளுலகத் துன்பமும் எய்தும்; வாழ்நாளும் குன்றும்.

அணவுறும் - பொருந்தும். கலத்தல் - சேர்தல். தூர்த்தர் - காமுகர். கூ

வேறு

கற்பிலார்க் காத்தல் களவின்பின் காத்தலாம்

உவந்து தன்னுளத் தோங்கிய கற்பிலாச்
சிவந்த வாயுடைச் சேயிழை யைப்பதி
இவர்ந்து சேமஞ்செய் தேய்க்குதல் பட்டிகள்
கவர்ந்த பின்பொருட் காவலை யொக்குமே.

மனமகிழ்ந்து தன் நெஞ்சத்து உறுதியாகிய கற்பிலாச் சிவந்த வாயையுடைய பெண்ணை, அவள் கணவன் விரும்பி (மக்களாலும்

மதிலாலும்) காத்து வருந்துதல், கள்வர்கள் செல்வப் பொருள்களைக் களவு செய்தபின் (அப்பொருள்களிருப்பனவாக நினைத்து) காத்துக்கொண்டிருக்கும் அறியாமையை ஒக்கும்.

சேயிழை - சிவந்த அணிகலனையுடைய பெண். பதி - கணவன். இவர்ந்து - விரும்பி. சேமம் - காவல். எய்க்குதல் - வருந்துதல். பட்டிகள் - கள்வர். கவர்ந்த - களவுசெய்த. ௧0

கற்பிலார்க் கெதிராமை கடன்சேர் வெற்றி

ஓயப் பாரில் உறுந்தெவ்வர் தம்மொடும்
ஏயப் போரி லெதிர்ந்திட வென்றியாம்
மாயப் போர்செய் மடந்தையர்க் குப்புறம்
ஆயப் பாற்செல வென்றி யமையுமே.

உலகில் பகைமை அழியப் பகைவர்களுடன் சண்டையில் பொருந்தி எதிர்தல் வெற்றியாகும். கற்பிலாத பெண்கள் செய்யும் மயக்கமாகிய தீயசண்டையில் அவர்க்குத் தோற்று அப்பாற் செல்லல் வெற்றியாம்.

ஒய்தல் - அழிதல். பார் - உலகம். தெவ்வர் - பகைவர். மாயம் - மயக்கம். ௧௧

வேறு

பிறனைச் சேர்வாள் பெரும்பழி சேர்வாள்

கொழுந னறியில் உயிர்க்கொலையாங்
கோவாக் கினையாம் பெரும்பழியாம்
அழல்போ னெஞ்சைச் சுடும்பயத்தோ
டயலா டவரை யொருபேதை
தழுவி யின்ப முறல்மதமா
தானுண் டகல்வா யிடையொழுகுங்
கழையின் சாற்றை விழைந்ததன்பாற்
கடுகி நக்க லேய்க்குமால்.

நெஞ்சைத் தீப்போல் சுடும் அச்சத்துடன் ஒரு பெண் அயலானைச் சேர்தலைக் கணவன் அறிந்தால் உயிர்க்கொலை நேரும். மன்னன் அறிந்தால் கடுந்தண்டனை யுண்டாம். (உலகோரறிந்

தால்) பெரும்பழியுமாகும். மேலும், இச் செயல் யானை கரும்பை முறித்து மென்றுதின்பதினின்று ஒழுகும் சாற்றை விரும்பி நக்குதற்குச் செல்லும் செயலை ஒப்பதாம்.

கோ - அரசு. பயம் - அச்சம். மதமா - யானை. கழை - கரும்பு. கஉ

## வேறு

*பிறனைச்சேர் மாது பேரிருள் அடைவள்*

மற்றொரு வனைச்சேர் மாதிறந் தாலும்
வசைநிற்கு முலகமுள் ளளவுஞ்
சுற்றமும் வாழ்வுந் துணையுமே நீங்குஞ்
சோரநா யகனுமே மதியான்
பெற்றசந் ததியு மிழிவுறும் மாண்ட
பின்னவி யாஎரி நரகாம்
சற்றுநே ரங்கோள் சுகத்தினால் விளையுந்
தன்மையீ தரிவையீ ருணர்வீர்.

அயலானைச் சேரும் பெண் மாண்டாலும் உலகமுள்ளவரையும் இகழ்வு நிலைபெறும். உறவு செல்வம் நண்பு நீங்கும். கள்ளக் காதலனும் மதிக்கமாட்டான். பிறந்த பிள்ளையும் பழியுறும். பின்நீங்காத் தீ நரகாம். சிறுபொழுது எய்தும் சிற்றின்பத்தால் எத்துணைப் பெருந் துன்பங்கள் நிகழ்கின்றன என்பதைப் பெண்கள் கருதிப் பார்த்தல் நன்று.

வசை - இகழ். துணை - நண்பு. சோரநாயகன் - கள்ளக் காதலன். சந்ததி - பிள்ளை. அரிவை - பெண். கங

## வேறு

*கணவன் நிறையழியின் மனைவியுங் கற்பழிபவள்*

ஓர்பிழை குருவே செய்யின் ஒன்பது பிழைகள் செய்ய
நேர்சிறு சீட ரென்ன நிதம்பதி பலமின் னார்தோள்
சேர்வது காணு மில்லாள் தினம்பல புருடர்ச் சேர்தல்
சீரென வுன்னியன்னோன் செலவுபார்த் திருப்பள்மாதோ.

ஆசிரியன் ஒரு குற்றம் செய்யின் அவன் சிறு மாணக்கர்கள் ஒன்பது குற்றம் செய்ய நேர்வர். அதுபோல கணவன் நாளும்

பல பெண்களைச் சேருவது காணும் மனைவி, தானும் பல ஆண்களைச் சேர்வதற்குக் கணவன் வெளியே போகும் நேரத்தை எதிர்பார்த்திருப்பாள். கசு

அயலான் மனையன்னை அரும்பிறப் பாவாள்

தன்னைப்போற் பிறரை யெண்ணல்
 தகுதியாந் தான்ம ணந்த
மின்னைப்போ லிடையி னளை
 விழியினால் நோக்கு வோரைத்
தின்னல்போன் முனிவு கோள்வோர்
 அயலவன் தேவி தன்னை
அன்னைசோ தரிபோ லெண்ணா
 தணைந்திட விரும்ப லென்னே.

ஒருவன் தன்னைப்போல் பிறரை நினைப்பது நடுவு நிலையாம். தான் கலியாணஞ் செய்துகொண்ட மின்போலும் இடையினை யுடைய மனைவியை வேறொருவன் கண்ணால் பார்த்தலும் குற்றமென்று அவனைக் கொல்லத்தக்க சினங்கொள்வோன், அயலவன் மனைவியைத் தாயைப்போலவும் உடன்பிறப்புப் போலவும் கருதாமல் முறைகடந்து கூட ஆசைப்படுவது என்ன கொடுமை?

தகுதி - நடுநிலைமை. தின்னல் - ஈண்டுக் கொல்லல். முனிவு - சினம். தேவி - மனைவி. சோதரி - உடன்பிறப்பி. கரு

பரத்தைமைச் செயல்கள் பலவாம் என்ப

விதவையைக் கன்னி தன்னை வேசையைப் பிறனில்லாளை
இதமொடு சேர்தல் சேர இச்சித்தல் ஆண்பு ணர்ச்சி
மதனநூ லாதி கேட்டல் வாசித்தல் தகாத செய்கை
விதவிதந் தானே செய்தல் விபசார வினைகளாமே.

கைம்பெண் மணமாகாதபெண் பரத்தை அயலான் மனைவி இவர்களை அன்புடன் சேர்தலும், சேரவிரும்புதலும், ஆண் சேர்க்கையும், காமநூலைக் கேட்டலும், படித்தலும், ஒவ்வாச் செய்கை பலவகையாகத்தானே செய்தலும் பரத்தைமைச் செயல்களாம்.

விதவை - கைம்பெண். வேசை - பரத்தை. மதனநூல் - காமநூல். விபசாரம் - பரத்தைமை. வினைகள் - செயல்கள். கசு

பரத்தையர் அழகுண்டார் பதங்கம்போல் மாள்வர்

விட்டமின் னேடாங்கெய்தும் வெடியெனத் தீமைசெய்யுங்
கட்டழ கினைய வாவிக் காமசா கரத்தி னாழ்வோர்
கிட்டருஞ் சுடரை மேவிக் கேடுறும் பதங்கம் போலும்
தோட்டகோப் பத்து வீழ்மா வென்னவுந் துயர்சார் வாரால்.

மின்னலும் இடியும்போன்று தீமைசெய்யும் பெண்களின் அழகினை ஆசைப்பட்டுக் காமக்கடலினுள் ஆழ்வார், விளக்கொளியை விரும்பி அதனில் விழுந்து மாளும் விட்டிலைப்போலவும், தோண்டப்பட்ட யானை பிடிக்கும் பெருங்குழியில் வீழ்ந்த யானையைப் போலவுந் துன்புறுவர்.

வெடி - இடி, சாகரம் - கடல், பதங்கம் - விட்டில், தொட்ட தோண்டிய, கோப்பம் - யானை பிடிக்கும் மறை. பெருங்குழி. கஎ

---

## அதி. கரு-உயர்ந்தோர் தாழ்ந்தோரைத் தாங்கல்

தொழிலாள ரின்றேல் தொல் உலகு அழிவுறும்

வாழகமும்பனை தூசணி யும்பல வாகன மஞ்சமொடுஞ்
சூழ்பொரு ளுஞ்சுவை சேரமு துங்கமழ் சோலையு மாசுகமுங்
கீழவ ராலவர் தாமில ரேன்மிகு கேவல மாயுலகம்
பாழது வாமத னலரு டானவர் பாலுறு வாய்மனனே.

நெஞ்சே! வீடும் ஆடையும் பலவகையான ஊர்திகளும் பொருளும் சோறும் சோலையும் வேறு இன்பங்களும் தாழ்வென்று தப்பாகக் கருதும் தொழிலாளிகளாலேயே உண்டாம். அவர்கள் இல்லாவிட்டால் உலகம் தூய்மையற்று மிகவும் இழிந்த நிலைமையை எய்தி அழிவடையும். அதனால், செல்வத்தில் உயர்ந்தோர் தாழ்ந்தோரைப் பேணுதல் அருளும் கடமையும் ஆகும்.

அகம் - வீடு. தூசு - ஆடை. கேவலம் - இழிவு. க

### வேறு

*ஆண்டவன் தருபொருள் அனைத்துயிர்க்கும் பொதுவே*

நாதனே யுயர்வாந் தந்தை
நரரெலா மன்னான் சேயர்
பூதலப் பொருள்கள் யார்க்கும்
பொதுமையல் லாது சொந்தச்
சாதனப் பொருள்போற் செப்புச்
சாசனம் பெற்றோ ரில்லை
ஆதலில் தாழ்ந்தோர் தம்மை
யருஞ்செல்வர் தாங்கல் மாண்பே.

*ஆண்டவனே எல்லார்க்கும் சிறந்த தந்தை. மக்களெல்லாம் அவன் பிள்ளைகள். உலகப்பொருள்கள் எல்லாருக்கும் பொது. இவ்வாறன்றிப் பொருள்களைத் தங்கட்கே உரிய கருவிபோல் செப்பேட்டில் எழுதி ஆவணம் பெற்றவர்கள் இல்லை. ஆதலால், செல்வர் தொழிலாளர்களை வேண்டுவன கொடுத்துக் காத்தல் உயர்வாகும்.*

*நாதன் - ஆண்டவன். நரர் - மக்கள். சேய் - பிள்ளைகள் சாதனம் - கருவி. சாசனம் - ஆவணம். மாண்பு - உயர்வு.* உ

*முறைநலம் கல்வியுளோர் மூத்தோ ராவர்*

நயமறங் கல்வி யின்றி நனிநிதி யாற்கு லத்தால்
வயதினாற் பெரிய ரென்னல் மைந்தர்தந் தையின்றோ ளேறி
இயலித்தாம் பெரியோ ரென்ன இயம்பலுங் காலை மாலை
உயர்நிழ லுள்ளோர் தம்மை யுயர்ந்தவ ரெனலு மொப்பே.

*முறை நன்மை படிப்பு முதலிய உயிர்க்குத் துணையாகும் பொருள்கள் இன்றி உடலுக்குத் துணையாம் பெருஞ்செல்வத்தால் பிறப்பால் ஆண்டால் தம்மைப் பெரியவரென்று சொல்லிக்கொள்வது, பிள்ளைகள் தந்தையின் தோள்மேலேறித் தங்களைப் பெரியவராகச் சொல்லுவதையும், காலையிலும் மாலையிலும் தங்கள் நிழல் நீண்டிருப்பதைப் பார்த்துத் தாங்களே பெரியவர்கள் என்று கூறுவதையும் ஒக்கும்.*

*நயம் - முறை. (நீதி) நனி - மிகுதி. குலம் - பிறப்பு. வயது - அகவை ; ஆண்டு.* ௩

செல்வமும் வறுமையும் மாறி மாறிச் செல்லும்

ஏலிராட் டினவூ சற்க ணேறியே சுற்றுங் காலை
மேலவர் கீழுங் கீழோர் மேலுமாய்ச் சுழலல் போல
ஞாலமீ தின்று யர்ந்தோர் நாளையே வறிய ராவர்
சீலநேஞ் சினர்கீ ழோரைச் சினந்திக ழார்கள் மாதோ.

*மேலுங்கீழும் சுழன்று இயலும் இராட்டின ஊஞ்சற்கண் ஏறிச் சுற்றுங்கால் மேல்தட்டிலுள்ளோர் கீழும், கீழ்த்தட்டிலுள்ளோர் மேலுமாய்ச் சுற்றுவது போல இன்று செல்வத்தாலுயர்ந்தோர் நாளை ஏழையாவர். ஆயின், அன்பொழுக்கமுள்ள மனத்தர் தொழிலாளர்களைச் சினந்து தாழ்வுபடுத்தார்.*

*ஏல் - இயல். சீலம் - அன்பொழுக்கம். இகழ்வு - தாழ்வு.* ௬

எல்லாரும் உடன்பிறப்பே இயலும் கருமுறையால்

மக்கள்யா வருமோ ரன்னை
வயிற்றிடை யுதித்த தாலிச்
சக்கரந் தனி லேல்லாருஞ்
சகோதர ராவர் சீரின்
மிக்கவர் தாழ்ந்தோ ரேன்னல்
வெறும்போய்யா மேன்மை யேன்பது
ஒக்கவே பிறப்பி றப்பி
லுறுங்கோலோ வுரையாய் நேஞ்சே.

*மக்கள் எல்லாருந் தாய்வயிற்றினின்றே தோன்றுதலால் பிறப்பு முறையில் எல்லாரும் உடன் பிறந்தாரேயாவர். பிறப்பால் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்று கூறிக்கொள்வது வெறும்பொய்யாகும். மேன்மைஎன்பது தாந்தாம் செய்துகொள்ளும் நல்லொழுக்கங்களாலே உண்டாம். பிறப்பு இறப்பால் உண்டாவதில்லை.*

*சக்கரம் - பிறப்பு.* ௭

ஏவலரை இகழ்வோர் எய்தார் இறையடி

சிலதரு நரரே யங்கஞ் சீவனேஞ் சவர்க்கு முண்டாம்
நலநவை யின்ப துன்ப நானிலத் துளஅ வர்க்கும்
நிலமிசை யவரைச் சேய்தோன் நித்தனே யவரை யேதும்
புலனிலாப் போருள்போ லேன்னும் புல்லர்வீ டில்லர் மாதோ.

ஏவல் செய்வோரும் மக்களே; அவர்க்கும் உறுப்பு உயிர் உள்ளம் உண்டு. நன்மை தீமை இன்பதுன்பம் முதலியனவும் நானிலத்து முண்டு. அவரைப் படைப்பித்தோனும் முழுமுதலே-ஆதலால், வேலைசெய்வோரை அறிவிலாப்பொருள்போல் இகழும் கீழோர் இறைவன்பேரின்பத்தை எய்தார்.

சிலதர் - ஏவல்செய்வோர். நரர் - மக்கள். நவை - தீமை. நானிலம் - குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் ஆகிய நான்கு பிரிவினவாகிய உலகம். சு

## எல்லாரும் உழைத்து வாழ்வதே இயல்பு

கொற்றவர் நரர்க் குழைத்துக் கூலியா மிறையைக் கொள்வர்
மற்றவ ரெவருந் தம்மெய் வருந்தவே யுழைப்பர் செல்வம்
பெற்றவர் களுமு ழைப்பர் பின்னவர்க் குழைப்பர் சேடர்
உற்றவித் தன்மை யுன்னி னுழையரார் தலைவ ராரே.

மன்னர் குடிகளாகிய மக்களுக்குக் காவலாகிய உழைப்பினை உழைத்து அதற்குக் கூலியாகிய வரியை வாங்குவர். மற்றவர்களும் தம்மெய்வருந்த வுழைப்பர். செல்வர்கள் முன் உழைத்தே செல்வர்களானார்கள். வேலையாட்கள் செல்வர்களுக்குப்பின் நின்று வேலை செய்வர். இந்த முறையால் எல்லாரும் உழைப்பவர்களே. ஆதலின், வேலைசெய்வோர்யார்? தலைவர் யார்? (எல்லாரும் வேலை செய்வோரே.)

கொற்றவர் - மன்னர். இறை - வரி. சேடர் - ஏவல் செய்வோர். எ

## எல்லார்க்கும் ஈயவே ஈறைசெல்வம் அருளினன்

உடலுறுப் புகள்மேல் கீழென்
 றன்னிடா தோம்பல் போலுந்
தடமலை கொண்ட நீரைத்
 தாழ்தரைக் களித்தல் போலுந்
தொடர்புறு மேலோர் தங்கைத்
 தோய்நிதி யாவுந் தாழ்ந்தோர்க்
கிடவெனக் கடவுள் ஈந்த
 னெனநினைந் திடுவர் மாதோ.

உடலிற் காணப்படும் மெய், வாய், கண், மூக்குச் செவி முதலியவைகளையும், கை, கால், வாய், கருவாய், எருவாய், முதலியவைகளையும் ஒப்பப் பாதுகாத்தலும், பெரியமலை தன்பாற் கொண்டமழை நீரைத் தாழ்ந்த தரைக்கு வலியக்கொடுப்பதும் போன்று, உயர்ந்தோர் கடவுள் தம்பால் அருளிய செல்வமுற்றும் தாழ்ந்தோர்க்கு இடவென எண்ணி எல்லார்க்கும் வரையாது வழங்குவர். அ

உழையரை வருத்துவோர் உயர்ந்தோர் ஆகார்

என்றுமெய் வருந்த வேலை
இயற்றுவோர்க் குயர்ந்தோர் அற்பப்
போன்றனை ஈவர் செட்டுப்
புரிகின்ற வணிக ரேன்ன
ஒன்றுகோண் டோன்றை யீவோர்
உழையரில் தாமு யர்ந்தோர்
என்றுகோள் எண்ணம் திண்ணம்
என்னலெவ் வண்ணம் அம்மா.

எந்நாளிலும் உடல் வருந்த உழைக்கும் வேலையாட்களுக்கு வேலை வாங்கும் உயர்ந்தோர்கள் குறைந்த கூலி கொடுக்கின்றனர். நயமே கருதும் கொண்டுவிற்பாரைப்போல் வேலை வாங்கிக் கொண்டு சிறிது கூலி கொடுப்போர் வேலையாட்களிலும் தாம் உயர்ந்தோர் என்று கொள்ளுதல் எப்படிப் பொருந்தும்? (பொருந்தாது)

செட்டு - நயம்; ஊதியம். உழையர் - வேலை செய்வோர். ௯

உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்று உரைப்பது மயக்கே

ஒளிமுடி யோடும்பி றந்தே உலகமாண் டவரும் இல்லை
எளியராய் ஓடோன் றேந்தி இங்குதித் தவரும் இல்லை
குளிர்கட லுடுத்த பாரில் குறைந்தவர் மேலோர் என்னல்
வெளிமயக் கன்றிச் சற்றும் மெய்யல வுணர்வாய் நெஞ்சே.

மனமே! விளக்கமிக்க மணி அழுத்திய முடியுடன் பிறந்து நாடு ஆண்டவரும் இலர். கையில் ஓடேந்திப் பிறந்து வறுமையை மேற்கொண்டவரும் இலர். கடல் சூழ்ந்த இவ்வுலகில் தாழ்ந்

தோர் உயர்ந்தோர் என்று பாகுபடுத்திக் கூறுவது உண்மை அல்லாத வெளி மயக்கமே ஆகும்.

*கடலுடுத்த - கடல் சூழ்ந்த. பார் - உலகம்.* ௧0

## அறவோரைத் தக்கோர் அனைவருந் தாங்குவர்

அமலனே எவர்க்குங் கத்தன் அவற்கர சருமில் லாருஞ்
சமமலாற் பேத மில்லை தரித்திரர் அறத்தோ ராயின்
அமரரா குவரன் னோர்தாள் பொடியையும் அரச ரோவ்வார்
தமரெனத் தாழ்ந்தோர்தம்மைத் தகையினர் தாங்குவாரால்.

*மாசற்ற கடவுளே எல்லாருக்கும் முதல்வராவர். அவருக்கு அரசரும் வறியரும் ஒன்றேயன்றி வேறுபாடின்று. வறியவர் நன்மையுடையவரானால் தேவராவார். அவர்களுடைய காலிற் பட்ட தூகளுக்கும் அரசர் ஒப்பாகமாட்டார். நற்பண்புள்ளவர் வறியரைத் தம்மவர்களே என்று காப்பாற்றுவார்.*

*அமலன் - மாசற்றவன்; கடவுள். சமம் - ஒப்பு. பேதம் - வேறுபாடு.* ௧௧

## பகலவன்போற் செல்வர் பலர்க்கும் பயனுவர்

சுடரவன் விளங்கிற் பூமி சோதியாம் விளங்கி லானேற்
புடவியு மிருளா மன்ன வாறுபோல் திருவோர் செல்லு
நடவையின் தாழ்ந்தோர் மேவி நடத்தலால் வரைமே லேற்றும்
அடர்சுடர் விளக்கிற் செல்வ ரறத்தராய்ச் சிறத்தல் நன்றே.

*ஞாயிறு விளங்குமானால் நிலமும் ஒளியுடன் விளங்கும். அது விளங்காவிட்டால் நிலமும் இருளாய் இருக்கும். அதுபோல் செல்வர் நடக்கும்வழியில் அவர்கள் விளக்கத்தில் வறியவர்களும் நடக்கின்றார்கள். ஆதலால், செல்வர்கள் மலைமேலிட்ட பெரு விளக்குப்போல் எல்லோருக்கும் நன்மை செய்பவராய் மேன்மை எய்துதல் நன்று.*

*சுடரவன் - ஞாயிறு. சோதி - ஒளி. நடவை - வழி. வரை- மலை. சிறத்தல் - மேன்மை எய்துதல்.* ௧௨

வறியர்போல் துன்பெலாம் வருமே செல்வர்க்கும்

தாழ்ந்தவ ரேனச்செல் வர்க்கும் சாப்பிணி மடமை யச்சஞ்
சூழ்ந்தபே ரிடர்கள் பாவந் துஞ்சிமண் ஞுத லள்ளல்
வீழ்ந்தவ லித்த லாதி மிகையெலாம் எய்தும் இவ்வாறு
ஆழ்ந்தவவ் விருதி றத்தார்க் காகும்வேற் றுமையா தம்மா.

தாழ்ந்தவரைப்போலவே செல்வர்க்கும் உடல்நோய், அறியாமை, நடுக்கம், துன்பங்கள், பாவம், இறப்பு, இருளுலகத் துன்பம் முதலிய தண்டனைகள் உண்டாகும். இவ்வகையான் (துன்பத்து) அழுந்திய இருவகையானவர்க்குள்ளும் உண்டாகும் வேற்றுமை யாது?

சடம் - உடல். மடமை - அறியாமை. இடர் - துன்பம். துஞ்சி - இறந்து. அள்ளல் - இருளுலகம் (நரகம்). அவலித்தல்- துன்புறல். மிகை - தண்டனை. கங

சிறந்தோர் தாழ்ந்தோரைப் பேணுதல் செல்வம்

பதிமுத லதிகா ரத்தோர் பண்ணவர் உழவர் மேலோர்
மதியுறு பரதர் நூலோர் மருத்துவர் முதலோர் தத்தம்
விதிவழி யொழுகித் தம்மை மேவுறு தாழ்ந்தோர் தம்மை
அதிதயை யொடுநன் கோம்பி யாண்டிடக் கடனு மாதோ.

நாடாள் மன்னர், அந்தணர், வேளாளர் எனப்படும் சிறந்தோர், வணிகர், உயிர் நோயாயாகிய அறியாமையை அகற்றும் நூலாசிரியர், உடல் நோய் நீக்கும் மருத்துவர் முதலியோர் தங்கள் தங்களுக்குரியமுறை தவிராமல் நடந்து தம்மைச் சார்ந்து வாழும் தாழ்ந்தோரை மிக்க பரிவுடன் பாதுகாத்துப் பேணுதல் கடமையாம்.

பதி - நாடு. பண்ணவர் - அந்தணர்; முனிவர். உழவர் - வேளாளர். பரதர் - வணிகர். அதிதயை - மிக்க பரிவு. கச

அதி. கச—

## தாழ்ந்தோர் உயர்ந்தோர்க்கு அடங்கல்

படைப்பெலாம் பார்க்கில் பெரிதும் சிறிதுமாம்

விரிசு டர்க்கதி ரோன்மதி தாரகை
விலங்கு பக்கி மரமலை யாவினும்
பெரிது சின்னதேன் ருகிய தன்மைபோற்
பிழையி லான்வகுத் திட்ட வுலகியல்
திரித லின்றி நடப்பதற் காகவே சிறியர் மேலவ
ரென்னவிங் காயினர்
உரிய விம்முறை யின்படி தாழ்ந்த வருயர்ந்த வர்க்குள்
ளடங்க லொழுக்கமே.

*பேரொளியைப் பரப்புகின்ற ஞாயிறு, திங்கள், விண்மீன், நாற்காலின, பறவை, மரம், மலை முதலிய எல்லாவற்றினும் பெரியதும் சிறியதும் ஆகிய வேறுபாடுகள் படைப்பின் இயற்கையிலேயே அமைந்திருப்பன போன்று மக்களுள்ளும் உலகியல் நடத்தற் பொருட்டு உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்னும் முறைமையும் அமைந்துள்ளது. ஆதலால் தாழ்ந்தோர் உயர்ந்தோர்க் கடங்கி வாழ்தல் நல்லொழுக்கமாம்.*

*தாரகை - விண்மீன். விலங்கு-நாற்காலின. பக்கி-பறவை.* க

காப்போர் சொல்லுக்கு அடங்கல் கடமை

குடிகள் சீடர் குடிப்பணி செய்குவோர்
கோல்லர் தச்சர் நாவிதர் காழியர்
அடிய ரேமுதற் பலரேழி லாளர்கள்
அனைவ ருந்தமை யாதரித் தாளுபாக்கு
ஒடிவில் கங்கணம் பூண்டுகோண் மேலவர்
உரைக்க மைந்துத மாது தொழிலெலாங்
குடில மின்றி யியற்றிடி லிம்மையும்
கோதி லம்பர மும்பெறு வாரரோ.

குடிகள், மாணுக்கர், வீட்டுவேலை செய்வோர், கொல்லர், தச்சர், நாவிதர், வண்ணூர், வேலையாட்கள் முதலிய பல தொழிலாளர்கள் எல்லாரும், தம்மை ஆதரித்து ஆளும்பொருட்டு அழியாக் காப்பணிந்து முன்வரும் உயர்ந்தோர் சொல்லுக்கு அடங்கித் தாம் செய்யும் பெருமை மிக்க தொழிலெலலாம் வஞ்சமின்றிச் செய்தால் இம்மையின்பமும் மறுமையின்பமும் எளிதாக அடைவர்.

காழியர் - வண்ணூர். ஆளுபாக்கு - ஆளும்பொருட்டு. குடிலம் - வஞ்சனை. மாது - பெருமை. உ

### உணவு தருவோர்க்கே உடம்பு பொருளாம்

ஐயன தருளான் மெய்யை யனைதந்தை யீந்தா ரம்மெய்
உய்யவூண் யசமா னன்றூன் உதவலா லவற்கே தம்மெய்
ஐயமில் பொருளேன் றுன்னி யன்போடு மேவ லாளர்
மையறு பணிகள் யாவும் மகிழ்வோடும் புரிவர் மாதோ.

கடவுள் அருளால் உடம்பை அன்னையும் அத்தனும் ஈந்தனர். அவ்வுடம்புக்கு வேண்டும் உணவை வேலை வாங்குகின்றவர் (முதலாளி) தருகின்றனர். ஆதலால், வேலை செய்கின்றவர்கள், தம் உடம்பு, உணவு தரும் முதலாளிமாருக்கு உடைமையென்று கருதி உண்மையான அன்புடன் உழைக்கவேண்டும்.

மெய் - உடம்பு. பொருள் - உடைமை. புரிவர் - விரும்பிச் செய்வர். ௩

### இணங்காத் தலைவனை விட்டேகல் நன்று

தலைவன்றீ யவனே லன்னூன்
தனைவிடுத் தேகல் நன்றாம்
விலைதரு மவன்பால் வைகி
விரவுறுங் காறுஞ் சேடர்
உலைவில்தம் வாழ்நா ளன்னூற்
குரியதேன் றுனிய வன்சொல்
நிலையுறப் பணிகள் செய்து
நெறிவழி நிற்றல் சீரே.

முதலாளி நல்லவனாக இல்லாவிட்டால் அவனைவிட்டு விலகி விடுதல் நல்லது. கூலிதரும் அவனோடு இருக்கும்வரையும் தன் வாழ்நாள் அவனுக்குரியதென்று கருதி அவன் சொல்வழி ஏவல் செய்வது முறை.

தலைவன் - முதலாளி. விலை - கூலி. சேடர் - வேலையாளர். உனி - கருதி. ச

எல்லா நலமும் இயைந்தவர் ஏவலர்

அறநெறி யலாத செய்கை யாண்டகை சொல்லிற் கேளார்
புறமுற வவன்குற் றத்தைப் புகன்றிடார் பொய்க ரத்தன்
மறமிலா ரவனை யன்னை தந்தைபோன் மதிக்கும் நீரார்
இறவிலாக் கடவுள் வாழும் இதயத்தர் சேட ரம்மா.

தலைவர் முறையல்லன கூறின், அதனைக் கேளார். தலைவர் குற்றத்தை யாரிடமும் சொல்லார். பொய், மறைப்பு, முதலிய தீமையில்லார். தலைவரைத் தாய்தந்தைபோல் எண்ணுந் தன்மையர், என்றும் அழியா இறைவன் நின்று நிலவு நெஞ்சினர், வேலையாட்கள்.

ஆண்டகை - தலைவன். கரப்பு - மறைப்பு. சேடர் - வேலையாட்கள். ரு

தலைவன்தன் பகைநண்பு தமக்கும் பகைநண்பே

அண்ணல்தன் தமரை யண்ணல்
என்னவும் அவனோன் னூரை
நண்ணல ரேனவு மன்னோன்
நண்பரை யினிய ரென்றும்
எண்ணற வன்னோன் கொண்ட
பொருளெலாஞ் சீவ னென்றும்
திண்ணமா வெண்ணிப் போற்றுஞ்
சேடர்விண் ணோட ராவார்.

தலைவன் சுற்றத்தாரைத் தம் தலைவனே யெனவும், அவன் பகைவரைத் தம் பகைவரெனவும், அவன் நண்பரை இனிய ரெனவும், அவனுடைய அளவில்லாத பொருளெல்லாம் தம்

உயிரே எனவும் உறுதியாகக் கருதிப் பேணும் வேலையாட்கள் மறுமை இன்பம் எய்துவர்.

அண்ணல் - தலைவன். தமர் - சுற்றத்தார். நண்ணலர் - பகைவர். சு

குறிப்பின்வழி யியற்றுங் குணமிக்கான் ஏவலன்

நாவியல் உணவில்லனை நல்வினை களில்நம் பிக்கு
மேவிய விருப்பி னோடும் வெறுப்பினற் குறிப்ப றிந்து
தாவிய லாது தக்க ததியில்யா வுஞ்செய் சேடர்
ஆவியோ விழியோ எய்தற் கரும்பொனோ மணியோ யாதோ.

நாவுக்குச் சுவையான உணவு, வேண்டும் நன்மைகள் முதலியவற்றைத் தலைவனுக்குச் செய்யும்பொழுது தலைவனது விருப்பு வெறுப்பாகிய நிலை அறிந்து உற்றநேரத்துக் குறைவின்றி எல்லாம் செய்யும் வேலையாட்களை உயிரெனவோ கண்ணெனவோ பொன்னெனவோ மணியெனவோ என்ன எனக் கூறுவது?

நம்பி - தலைவன். தா - குறைவு. ததி - உற்ற நேரம். எ

---

## அதி. கரு—பொய்

மெய்யே உரைக்கின் மேவா இடர்கள்

முன்னமோர் பொய்யுரைக்க வப்பொய்வெளி
யாகாமல் மூடும் வண்ணம்
பின்னுமோர் பொய்யுரைக்க வதையுநிலை
நிறுத்தவோர் பெரும்பொய் சொல்ல
இன்னவகை கைதவமொன் றிருநூறு
கைதவத்துக் கிடமாம் வாய்மை
தன்னையே முன்பகரிற் சங்கடமொன்
றிலையதுவே தகைமை நெஞ்சே.

முதற்கண் சொன்ன பொய் வெளியாகமல் மறையும்படி பல பொய் சொல்லல் நேரிடுகின்றது. இதனால், ஒரு பொய் சொல்லுதல் ஒரு நூறு பொய் சொல்லுவதற்கு இடமாகின்றது.

மெய்சொல்லின் நெஞ்சமே, எவ்வகையான துன்பமும் நேரிடாது.

கைதவம் - பொய். க

பொல்லாங்கு எவைக்கும் பொய்யே பிறப்பிடம்

இழுதைசொல்லி மறைக்கலா மெனுந்திடத்தாற்
பாதகங்க ளெல்லாந் தீயர்
பொழுதெலாம் புரிதலாற் குற்றங்கள்
யாவுக்கும் பொய்பி தாவாம்
வழுதொன்றை நீக்கிடிற்றீ வினைகளெலா
நீங்கிடுநல் வண்மை யொன்றே
முழுதுமுண ரறிஞர்க்குத் தோழனு
மவர்க்கதனுன் மோச முண்டோ.

பொய் சொல்லி மறைக்கலாமென்ற திடத்தால் தீயவர்கள் எப்பொழுதும் எல்லாப் பாவங்களும் செய்கின்றனர். அதனுல், குற்றங்களுக்கெல்லாம் பிறப்பிடம் பொய் ஆகும். (கொடிய) பொய் ஒன்றை நீக்கிவிட்டால் தீமைகளெல்லாம் தாமே யகலும். மெய் ஒன்றே எல்லாமுணர்ந்த சான்றோர்க்கு நண்பனுகும். அதனுல் அவர்களுக்குக் கேடு ஒன்றும் இன்று.

இழுதை - பொய். வழுது - பொய். வண்மை - மெய். உ

பொய்யர் மறந்துமெய் புகலினும் மதியார்

அங்கதமே பொருளென்னக் கைக்கொண்டோர்
மறந்தொருமெய் யறைந்திட் டாலும்
இங்கதனை யெவருநம்பார் துணைவியர்புத்
திரர்தமரும் இகழ்ச்சி செய்வார்
அங்கனுல கெங்கனுமே வசையாடி
நரரெலாம் அகித ராவார்
பங்கமுறும் பொய்யரைப்போய் யருஞ்சேரார்
தம்முளமும் பழிக்கு மன்றே.

பொய் சொல்லுவதே தம் திறமையாகக் கொண்டோர் தம்மை மறந்து ஒரு மெய் சொன்னாலும் அம்மெய்யை ஒருவரும் நம்பார். மனைவி, மக்கள், உறவினர் முதலியோரும் இகழ்வர். உலகமெலாம் வசையுண்டாகும். உலகத்தாரெல்லாரும் பகைவராவர். இழிவு தரும் பொய்யரைப் பொய்யரும் சேரார். பொய்யர் உள்ளமும் அவர்களைப் பழிக்கும்.

அங்கதம் - பொய். நரர் - உலகத்தார். அகிதர்-பகைவர். ௩

அரும்பொய் வெளிப்படும் அழியும் அடைபயன்

ஏதேனும் பயன்வேண்டிப் பொய்சொல்லி
னப்போய்தா னெவ்வி தத்தும்
மாதரையில் வெளியாகும் அப்பொழுதப்
பயனழியும் வளருந் துன்பஞ்
சாதலின்மை வேண்டிவிட முண்ணலொக்கும்
பயன்கருதி சலமு ரைத்தல்
ஆதலினல் உண்மைதனைத் துணைக்கொள்ளி
னெப்பயனு மடைவோ நெஞ்சே.

ஒன்றை விரும்பிப் பொய் சொன்னல், அப்பொய் எப்படியும் வெளியாகும். அப்பொழுது கிடைத்த பொருளும் அழிந்துவிடும். அதனல், துன்பம் மிகும். இச்செயல் சாவாமையை விரும்பி நஞ்சு உண்பதை ஒக்கும். உண்மையைக் கைக்கொண்டால் நிலையான எல்லாப் பயனும் அடைவோம்.

பயன் - இன்பம். விடம் - நஞ்சு. சலம் - பொய். ௪

பொய்யரை நம்பார் செல்லாப் பொருளுங்கொடார்

மெய்யரெனப் பெயர்பூண்டார் வறிஞரே
யெனினுநிதி மிகவு மன்னர்
கையதனிற் கொடுத்துவைக்க எவருமஞ்சார்
பொய்யரெனக் கவ்வை பூண்டார்
செய்யபொருள் மிகவுளா ரெனினுமவர்
கையிலொரு செல்லாக் காசும்
அய்யமின்றி யொருவர்கொடா ரெனிற்படிறின்
தன்மைதனை யறைவ தென்னே.

மெய் சொல்வோர் செல்வத்தால் ஏழைகளா யிருந்தாலும், பெரும்பொருளையும் அவர் கையில் கொடுத்துவைக்க எவரும் அஞ்சமாட்டார். பொய் சொல்வார் பெருஞ்செல்வம் படைத்தவ ராயினும், அவர்கள் கையில் ஒரு செல்லாக் காசும் ஒருவரும் கொடுக்கமாட்டார்கள். ஆயின், பொய்யுடையான் தன்மையைப் பற்றி என்ன சொல்லுவது?

கவ்வை - பழி. படிறு - பொய். ரு

பேச்சால் உயர்மக்கள் பேசுபொய் யாற்கடையர்

விலங்குபற வையினுநரர் வாக்கோன்றுற்
சிறப்புடையர் விளங்குந் திண்மை
இலங்குவா யாலுரையா தவத்தமுரைப்
போருலகம் இகழ்வி லங்கின்
குலங்களினுங் கடையராஞ் சாணமதை
யமுதுவைக்குங் கோலச் செம்போற்
கலங்களின்வைத் தலையோக்கும் மெய்க்குரிய
வாயாற்பொய் கழற லன்றே.

விலங்கு பறவை இவற்றைவிட மக்கள் மனக்கருத்தை (பேச்சு மொழியாலும் எழுத்து மொழியாலும்) விளக்குவத னாலேயே சிறந்தவராகின்றனர். வாயால் உறுதி பயக்கும் உண்மையே உரைக்க வேண்டும். மெய் சொல்லாது பொய் சொல்லின் தாழ்வான விலங்கினத்தினும் தாழ்வாவர். அது, அமிழ்து வைக்கும் பொற்கலத்தில் சாணம் வைப்பதை யொக்கும்.

நரர் - மக்கள். அவத்தம் - பொய். கடையர் - தாழ்வானவர். கழறல் - சொல்லுதல். சு

பொய்யர்க்கு இடுக்கு வழியே பொருந்தும்

பழியிலா ரொருவர்க்கு மஞ்சாது
நேர்வழியே படர்வார் வவ்வுந்
தொழிலுளார் பகற்கஞ்சுந் துரிஞ்சில்போ
லிட்டிகையில் தொடர்ந்து செல்வார்
இழிவுளா ரென்பதற்குப் பொய்த்தலே
சான்றுகும் ஏசில் தூய
வழியுளா ரென்பதற்குச் சரதமே
சாட்சியாம் மகியின் கண்ணே.

*பொய் முதலிய பழியில்லாதவர் ஒருவர்க்கும் அஞ்சாது அறவழியிலே நடப்பர். பொய் களவு முதலிய தீமையுடையவர் பகலைக் கண்டு அஞ்சும் வௌவாலைப்போல் இடுக்கு வழியிற் செல்வர். இவர்கள் இழிந்தவர்கள் என்பதற்கு இவர்கள் கூறும் பொய்யே சான்றும். நேர் வழியில் நடப்போர் குற்றமற்ற தூயவர் என்பதற்கு அவர்கள் சொல்லும் மெய்ம்மையே உலகத்தின் கண் சான்றும்.*

*துரிஞ்சில் - வௌவால். இட்டிகை - இடுக்கு வழி. மகி - உலகம்.* ௭

*புரையிலா நன்மைக்காம் பொய்ம்மையும் வாய்மையே*

அயலார்செய் குற்றங்கள் கூறுமல்
மறைத்தலே யறமா மன்னுர்
துயருரு வண்ணம்நாம் பொய்த்தாலும்
பிழையன்று சொந்த மாவோர்
பயன்வேண்டிச் சிறியதோர் பொய்சொலினும்
பெரும்பழியாம் பார்மேல் கீழாய்
அயர்வாகப் புரண்டாலும் பிறர்க்கின்ன
தரும்பொய்யை அறையல் நெஞ்சே.

*மற்றவர்களுடைய நன்மைக்காம் குற்றத்தைக் கூறுமல் நீக்குதலே நன்மையாம். அவர்கள் துன்புருதபடி நாம் பொய் சொன்னுலும் குற்றமாகாது. நமக்கு ஒரு பயன் கருதிச் சிறு பொய் சொன்னுலும், அது பெரியதோர் பழியாகும். உலகம் கீழ்மேலாகத் தடுமாறினும் பிறர்க்குத் துன்பந் தரும் பொய்யை மனமே சொல்லாதே.*

*அயலார் - மற்றவர். மறைத்தல் - நீக்குதல். சொந்தம் - தனது. பார் - உலகம். அயர்வு - தடுமாற்றம்.* ௮

*பழியும் பாவமும் பயப்பன பொய்யே*

பாரினிற்பொய்த் திடல்பொய்க்க வுன்னுதல்பொய்
யினைப்பிறர்க்குப் பயிற்றல் யாதோர்
காரியஞ்செய் வேனென்னச் சொலித்தவிர்தல்
தனக்கேலாக் கருமந் தன்னை

வீரியமாய்ச் செய்வனெனல் அற்பரையே
துதித்தல்பொய்யை வியந்து கொள்ளல்
சீரியரை இகழ்தல்பிறர் மீதொருவன்
சொலும்பழியைச் செவியிற் கோடல்.

உலகில், பொய் சொல்லல், பொய்சொல்ல நினைத்தல், பிறரைப் பொய் சொல்லப் பழக்குதல், ஒன்றைச் செய்வேன் எனக் கூறிச் செய்யாதொழிதல், முடியாச் செயலை முடிப்பேன் எனல், கீழோரைப் புகழ்தல், பொய்யைப் பாராட்டல் மேலோரை இகழ்தல், பழிச்சொற்களைக் கேட்டல். கூ

உலகோர் ஒவ்வா துனுற்றுவ பொய்யே

தற்புகழ்தல் புறங்கூறன் மிகஇருணம்
வாங்குதல்பொய்ச் சான்று ரைத்தல்
பற்பலவாக் கட்சாடை சிரகரகம்
பிதஞ்செய்து பசுமை போய்போற்
பிற்பயன்றேன் றிடச்செய்தன் மெய்யுரைக்க
வஞ்சிவாய் பேசி டாமல்
சற்பனையா யிருத்தல்பொய்க் கதைகூறல்
கேட்டலெலாஞ் சலங்க ளாமே.

தன்னையே புகழ்ந்து கொள்ளல், புறஞ் சொல்லுதல், அளவுக்கு மிஞ்சிக் கடன் வாங்குதல், பொய்ச்சான்று கூறல், கண் தலை கை முதலியவற்றால் (ஒப்புக்கொள்ளும் அடையாளமாகிய) சாடை செய்து உண்மையைப் பொய்போல் பயனிலதாக்கல், மெய்சொல்ல அஞ்சி ஊமைபோல் வஞ்சித்திருத்தல், பொய்க் கதை சொல்லல், கேட்டல் இவைகளெல்லாம் பெரும்பழி தரும் பொய்க்குற்றங்களாம்.

இருணம் - கடன். சற்பனை - வஞ்சனை. சலம் - பொய். க0

ஆண்டவனுக் கஞ்சாரே அறைவர் முழுப்பொய்

வியனுல கெங்கணும் வீற்றி ருக்குமோர்
வயமுளான் முனிவிற்கஞ் சாது மாக்கட்குப்
பயமொடு மநுத்தமே பகர்தல் தேவினும்
கயவுளார் நரரெனக் கருதல் போலுமே.

விரிந்த உலகமெங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் ஒப்பில்லாத முழுமுதல்வனுடைய சினத்துக்கு அஞ்சாது, நல்அறிவில்லாத கீழோர்க்கு அஞ்சிப் பொய் கூறுதல், தெய்வத்தினும் மக்கள் மேன்மையுள்ளவர் என்று நினைத்து நடப்பதை ஒக்கும்.

வியன் - விரிந்த. வீற்றிருக்கும் - சிறப்புடனிருக்கும். ஓர் - ஒப்பில்லாத. முனிவு-சினம். அநுத்தம்-பொய். கயம்-மேன்மை. கக

---

## அதி. கசு—களவு

நினைத்தல் செய்தல் நிறையிற் குறைவுங் களவே

களவு செய்குதன் மனத்தினில் நினைக்குதல் கவரென்று
உளம கிழ்ந்துப தேசித்தல் உதவிசெய் தோழுகல்
வளமி லாப்பொருண் மாறுதன் மிகுவிலை வாங்கல்
அளவி னும்நிறை தனினும்வஞ் சித்தப கரித்தல்.

களவு செய்தல், செய்ய நினைத்தல், செய்யென்று வழி சொல்லிக் கொடுத்தல், துணைபோதல், பழுதான பொருளை விற்றல், கூடின விலை வாங்குதல், அளத்தல் நிறுத்தல் முதலியவற்றில் ஏமாற்றிக் கொள்ளையிடல் களவின்பாற் படுவன.

கவர் - களவுசெய். க

பேராசை கூலி குறைத்தல் பெருங் களவே

கண்டெ டுத்தவோர் பொருளனு பவித்தலுங் களவின்
பண்டம் வாங்கலும் வாங்கிய கடன்கொடாப் பழியும்
மண்டும் வண்பொரு ளாசையாற் பொய்வழக் கிடலுந்
தொண்டு செய்பவர் கூலியைக் குறைக்கின்ற தொழிலும்.

கண்டெடுத்த பிறன்பொருளைக் கொண்டு துய்த்தலும், களவு முறையாக நுகர்பொருளை வாங்கலும், பெற்ற கடனைத் திரும்பக் கொடாமையும், பேராசையால் இல்லாத வழக்கைத் தொடர்தலும், கூலியைக் குறைத்துக் கொடுத்தலும் களவாம்.

அனுபவித்தல் - துய்த்தல்; அழுந்தியறிதல். உ

*கொடுவட்டி சூதுபொருள் இழப்பித்தல் களவே*

நட்ட மேபிறர்க் கெய்திடச் செய்தலும் நம்பி
இட்டர் வைத்தநற் பொருளப கரித்தலு மிறப்ப
வட்டம் வட்டிகள் வாங்கலுஞ் சூதிற்பொன் பெறலும்
இட்ட வேலைசெய் யாதுகைக் கூலிகோள் ளியல்பும்.

*பிறருக்குப் பொருள் இழப்பு உண்டாக்கலும், நண்பர்கள் நம்பித்தந்த பொருளைத் தனதாக்கிக் கொள்ளலும், அளவுமீறி வட்டம் வட்டி வாங்குதலும், சூதாடிப் பொருள் சேர்த்தலும், வேலை செய்யாது கூலி பெறுதலும் களவாம்.*

*நட்டம் - இழப்பு. வட்டம் - பணமாற்றக் கொடுக்கும் வாசி. வட்டி - பெற்ற முதலுக்குக் கொடுக்கும் ஊதியம்.* ௩

*கன்னம் பொய்காசு கைக்கூலி களவே*

கன்னம் வைத்தல்செல் லாப்பணம் வழங்குதல் கள்ள
மன்னு சீட்டையுண் டாக்குதல் கைலஞ்சம் வாங்கல்
என்னும் யாவுமே களவதா மித்தொழிற் கியைவோர்
மன்ன ராக்கினை வசைநர கடைந்துவா டுவரால்.

*கன்னம் வைத்தலும், செல்லாக் காசை வழங்கலும், கள்ளச் சீட்டுப் பிறப்பித்தலும், கைக்கூலி வாங்கலும் முதலிய எல்லாமும் களவாகும். களவு செய்வோர் வேந்தரால் தண்டிக்கப்படுவர். பழியும் நரகும் எய்துவர்.*

*கன்னம் - மதில், பூட்டு முதலியவற்றைத் திறக்குங் கருவி. கைலஞ்சம் - கைக்கூலி.* ச

*களவால் விலங்கு, சிறை, காதற் பிரிவுண்டாம்*

திலக வாணுதல் தேவியைச் சேயரைப் பிரிந்து
கலக லென்னவே யொலிசெய்மா விலங்குகாற் பூண்டிவ்
வுலகம் ஏசிடச் சிறையகத் துற்றுமண் சுமந்து
சிலுகெ லாமுறல் சிறிதுபொன் திருடலா லன்றே.

*சிறுபொருட் களவால் மனைவியையும் மக்களையும் நீங்கி, கையிலும் காலிலும் இருப்பு விலங்கு பூண்டு, உலகோர் பழிக்கச் சிறைபுகுதல், மண்சுமந்து துன்புறல் முதலியன உண்டாகும்.*

நுதல் - நெற்றி. தேவி - மனைவி. சேய் - மக்கள். சிறை - காவற்கூடம். சிலுகு - துன்பம். ௫

பழிகுலத் தாழ்வினும் களவுபே ரிழிவே

தள்ள ரும்பெரும் பழியுளா ரேன்னினுந் தரையில்
எள்ளல் சேரிழி குலத்தரே யென்னினு மேசிக்
கள்ள ரேன்றவர்ப் பழித்திடப் பொருரேனிற் களவிற்
குள்ள பேரவ மானத்தை யுரைப்பதேன் னுளமே.

நீக்கமுடியாத பெரும்பழியுள்ளவரும், தாழ்ந்த குலத்தைச் சார்ந்தவரும் தங்களைக் கள்வரெனப் பிறர் திட்டினால் மனம் பொறுக்கமாட்டார். அதனால் களவுப் பட்டத்தாலுண்டாகும் பேரிழிவு எவ்வளவு என்று சொல்லமுடியுமா?

அவமானம் - பெருமையின்மை; இழிவு ௬

அச்சமெலாங் கள்வர் உள்ளத் தமர்ந்தன

அரிமுழை நுழைதல் போல அயலகம் புகும்போ தச்சம்
பொருள்திரு டும்போ தச்சம் புறப்பட்டே குங்கா லச்சம்
தெருவினி லெவர்க்கு மச்சம் கவர்ந்தன திளைக்க வச்சம்
உருமுருக் கொண்டு கள்வ ருளங்குடி கொண்ட போலும்.

சிங்கத்தின் குகையுள் நுழைவார் கொள்ளும் நடுக்கம் போன்று களவு செய்வதற்காக அயல் வீட்டில் நுழையும்போது அச்சம். பொருளைக் களவு செய்யும்பொழுது அச்சம். வெளியில் வரும் பொழுது அச்சம். தெருவில் காண்பார்க்கெல்லாம் அச்சம். களவுப் பொருளை நுகரும்பொழுது அச்சம். அதனால், அச்சமே உருக்கொண்டு கள்வர் நெஞ்சத்துக் குடிகொண்டது ஆகும்.

அரி - சிங்கம். முழை - குகை. கவர்ந்தன - களவு செய்த பொருள்கள். உரும் - அச்சம். ௭

எத்துன்பம் வந்தாலும் களவுசெய இசையேல்

நிரந்தரம் பலநோ யுற்று
நெடிதய ரினுங்கை யேந்தி
இரந்துணப் பெருநி ரப்பே
யெய்தினும் பகர வோண்ணு

அரந்தைசூ ழினும்போன் வவ்வும்
அத்தொழிற் கியையா வண்ணம்
வரந்தர வேண்டு மென்னக்
கடவுளை வழுத்தாய் நெஞ்சே.

*எந்நாளும் நீங்காத பலநோய் அடைந்து துன்புற்றாலும், கைஎந்திப் பிச்சை எடுக்கும்படி வறுமை வந்தாலும், சொல்லமுடியாத வருத்தம் ஏற்பட்டாலும் களவு செய்யும்படியான தீச்செயலுக்கு இசையாதபடி வாழ நெஞ்சமே ஆண்டவனை வணங்கித் தொழு.*

*நிரந்தரம் - எந்நாளும். அயர்தல் - கவலைகொள்ளல். நிரப்பு - அவறுமை. அரந்தை - துன்பம்.*

---

## அதி. கஎ—கொலை

*கொல்ல நினைத்தலும் கொடுமொழியும் கொலையே*

உயிரினை வதைத்திடல் வதைக்க வுன்னுதல்
அயிலெனக் கொடியசொல் அறைத லெற்றல்வெண்
தயிருடை மத்தெனத் தாபம் பல்புரிந்து
அயலவர் ஆயுள்நாட் கழிவுண் டாக்குதல்.

*உயிரைக் கொல்லுதல், கொல்ல நினைத்தல், கணைபோன்ற கொடிய சொற்களைக் கூறுதல், அடித்தல், தயிர்கடையும் மத்துப் போன்று பல துன்பஞ்செய்தல், அடுத்தார் வாழ்நாளைக் கெடுத்தல் முதலியவும் கொலையே.*

*வதைத்தல் - கொல்லுதல். உன்னல் - நினைத்தல். அயில் - கணை. எற்றல் - அடித்தல்.*

*கருவழித்தல் துன்பம் களையாமை கொலையே*

கருவினை யழிக்குதல் கயமிங் கேனையார்
மருவிட விரும்புதல் மற்றன் ஞேரிடர்
ஒருவிட வகைசெயா தொழிதல் வெவ்விடஞ்
சருவினி லிடல்கொடுஞ் சமர்க்கு டன்படல்.

கருவைக் கெடுத்தல், பிறர் கேடடைய வேண்டுமென்று ஆசைப் படல், அவர்க்கு ஏற்படும் துன்பம் நீங்குவதற்குரிய வகை செய்யாது இருத்தல், சோற்றில் நஞ்சிடுதல், சண்டைக்குச் சம்மதித்தல் முதலியவும் கொலையே.

கயம்-கேடு. ஒருவிட-நீங்க. சரு - சோறு. சமர்-சண்டை. உ

செருக்குகள் காமம் தீ தற்கொலை கொலையே

முனைவுகட் காமம்வெம் முரண்மு தற்கொலை
வினையினுக் கேதுவாம் வினைக்க மைந்திடல்
மனையினிற் றீயிடல் மண்ணில் தற்கொலல்
இனையயா வுங்கொலை யென்னும் வேதமே.

செருக்கு, கள், காமம், பகை முதலியன கொலையைத் தூண்டும் கருவியாம்; இவற்றை மேற்கொள்ளல், வீட்டில் தீவைத்தல், தற்கொலை முதலியவும் கொலையே.

முனைவு - செருக்கு. ஏது - கருவி. ௩

கொலைஞர்க்கு உலகெலாம் கூறும் இயமனும்

பெறலரு முயிர்தரும் பிறப்பி லானதை
அறவோரு வழிசெய் வாண்மை பூண்டனன்
பறவையை நரர்விலங் கினைப்ப டுக்குமோர்
மறவனுக் குலகெலா மறலி யென்பவே.

பிறப்பு இறப்பு இல்லாத கடவுள் உயிர்கள் உய்ய அவைகட்குப் பிறப்பை அருளினன். அவைகள் உய்யுநிலை எய்தின் அவற்றின் பிறப்பற ஆண்மையும் பூண்டனன். அத்தொழிலால் அவனை இயமன் என்று கூறுவர். நல்லுயிர்க்கு இயமன் ஒருவனே. பறவையை, மக்களை, விலங்கைக் கொல்லும் தீய உயிர்க்கு உலகமெல்லாம் இயமன் ஆகும்.

ஆண்மை-வலிமை. படுத்தல்-கொல்லுதல். மறலி-இயமன். ச

கொலையொறுப்புச் செய்யுரிமை மன்னற்கே கொள்வர்

கொலைபுரி வோரையுங் குடிவ ருந்தவே
அலைவுசெய் பவரையும் ஆவி நீக்கிடத்
தலைமுடி தரித்தவர் தமக்கு நீதியாம்
இலைகொலை செயுமுறை யிதர ரார்க்குமே.

கொலை செய்வோரையும், கொன்றாலொத்த பெருந்துன்பம் செய்வோரையும் உயிர்ஒறுப்புச் செய்யும் உரிமை மணிமுடி தாங்கிய வேந்தர்க்கேயுளது. அதுவே முறைமையுமாகும். மற்று யார்க்கும் உயிர்ஒறுப்புச் செய்யும் உரிமையில்லை. செயின் அது முறைகேடுமாகும்.

அலை - துன்பம். ஆவி - உயிர். நீதி - முறைமை. இதரர்- மற்றவர். உயிர்ஒறுப்பு - கொலை. ௫

குருதிக் கறையாடை கூறும் கொலைஞனை

சுதமுறு முகத்தோடு சோல்வு மாற்றமும்
பதமுறு கறைக்கறை படிந்த வாடையும்
வதனையே காட்டலால் வதைம றைக்குதல்.
உதயனைக் கரத்தினால் மறைத்தல் ஒக்குமே.

பொலிவிழந்த முகத்துடன் தடுமாற்றமுள்ள சொல்லும், குருதிக்கறை படிந்த ஆடையும், கொலைஞன் இவன் என்று காட்டுதலால், கொலையை மறைப்பது கதிரவனைக் கையினால் ஒருவன் மறைப்பதையே ஒக்கும்.

சுதம் - பொலிவின்மை. கறை - குருதி. வதன் - கொலைஞன். உதயன் - கதிரவன். கரம் - கை. ௬

அரியது நிகழினும் கொலைஞன் உயர்தலரிது

பவமற மாயினும் பவர்க்க முத்தியாய்ச்
சிவமுறப் பொலியினுஞ் சிதைந்த ழிந்தவோர்
சவமுயிர் மேவினுந் தகையில் காதகர்
அவனியி லுயர்ந்திட லரிது நெஞ்சமே

மனமே, பாவம் புண்ணியமாகமாறினும், இருளுலகம் ஒளியுலகாய்ப் பேரின்பம் விளங்கினும், வெட்டுண்டு மாண்டழிந்த பிணம் மீண்டும் உயிர்பெற்று வாழினும் கொலைஞர் மேன்மை எய்துதல் இன்று

பவர்க்கம் - நரகம்; இருளுலகம் முத்தி - ஒளியுலகம். சிவம்- பேரின்பம். காதகன் - கொலைஞன். ௭

குடும்பம் முற்றுங் கோறலாம் தலைவற் கோறல்

பத்தினி சேயரும் பரிச னங்களும்
தத்தம நிலைகெடத் தலைவ னைச்சமன்
ஒத்தவ னியிற்கொல லொருவன் றன்னையன்று
அத்தனை பேரையு மடுதல் போலுமே.

*மனைவி மக்கள் ஒக்கல் முதலிய அனைவர்களும் நிலைகெட்டு அழியும்படி அவர்களைப் பேணிக் காப்பாற்றிய குடும்பத் தலைவனை இயமனை யொத்து ஒருவன் கொன்றால், அக்கொலை அக்குடும்பம் முழுதையுமே கொன்றதை யொக்கும்.*

*பத்தினி - மனைவி. சேயர் - மக்கள். பரிசனம் - சுற்றத்தார்; ஒக்கல். சமன் - இயமன்.* அ

கொலைஞனை விருப்பாய்க் கூடுவான் எமன்

தீயிடை மூழ்கினேன் சிங்கி யுண்டவன்
மாய்விலா துய்யினும் வதனுய் யானமன்
ஆயதன் றொழில்புரி வோனை யன்போடு
மேயதன் னுலகினுக் கீண்ட ழைக்குமே,

*தீக்குளித்தோனும் நஞ்சுண்டவனும் ஒருவேளை சாவாது பிழைத்தாலும், கொலைஞன் ஒருநாளும் எமனுக்குத் தப்பான். எமன் தன் தொழிலாகிய சாவினைச் செய்யும் கொலைஞனை மிகவும் அன்புடன் தன்னுலகுக்கு அழைத்துக்கொள்வான்.*

*சிங்கி - நஞ்சு. வதன் - கொலைஞன்.* கூ

கொலையே பெரும்பாவம் விழுங்கும் கொடுநரகம்

சீவனை வதைசெயல் சிறந்த தாயுங்கால்
பாவமோ ரைந்தினுங் கொலைசெய் பாவியைப்
பூவல யம்பொறு தெரியும் பூதிதான்
ஆவன வாய்திறந் தவனை நுங்குமே.

*பொய் களவு கள் காமம் கொலை ஆகிய ஐம்பெருந் தீமைகளுள் கொலையே மிகக் கொடுமையானது. கொலைப் பாவியை நிலவுலகம் பொறாது. எரிந்துகொண்டிருக்கும் கொடிய நரகம் அவனை எடுத்து விழுங்கும்.*

பூவலயம் - நிலவுலகம். பூதி - கொடிய நரகம். நுங்கும் - விழுங்கும். கO

யார்க்கும் கொலேசெயும் உரிமை யின்று

அகந்தனே யுடையவ னழித்தல் நீதியேண்
இகந்தபல் லுயிரேலா மியற்றிஞேற் கன்றிச்
சகந்தனி லவைகளேத் தம்மைக் கொன்றிட
உகந்தபே ருரிமையீங் கொருவர்க் கில்லேயால்.

வீட்டுக்குரியவன் அவ்வீட்டை அழிப்பது முறையாம். அது போல, அளவிறந்த பல உயிர்களேயும் படைத்துக் காக்கின்ற கடவுள் துடைப்பது முறைமையாகும். கடவுளுக்கல்லாமல் வேறு ஒருவர்க்கும் அவ்வுயிர்களேயேனும், தம்மையேனும் கொல்லும் உரிமையில்லே.

அகம் - வீடு. அழித்தல் - துடைத்தல். நீதி - முறைமை. சகம் - உலகம். கக

தடுக்க முடியாவிடில் தானுங் கொல்லுக

தனேயேனி னும்பிறர் தம்மை யென்னினும்
முனேயோடு கொலவரு முசுண்டன் தன்னுயிர்
இனேவதை செயலலா லுபாயம் வேறின்றேல்
அனேயனேக் கொல்கநல் தீர்வும் ஆற்றுக.

தன்னேயாவது பிறவுயிர்களேயாவது மற்றவன் செருக்குடன் கொல்ல வந்தால், அவனே எவ்வகைச் சூழ்ச்சியினுலாவது தடுக்க முடியாவிட்டால் கொல்லுக. கொலேப் பாவம் நீங்கக் கழுவாய் செய்க.

முனே - செருக்கு. முசுண்டன் - கீழ்மகன். உபாயம் - சூழ்ச்சி. கஉ

# அதி. கஅ—மது

*அறியாமை நோய் மறதி கட்குடியால் ஆம்*

ஞானமேய்ச் சுகம்புகழ் நலம்பெ றத்தனந்
தானமே செய்குவர் தகுதி யோரறிவு
ஈனமேய் மறதிநோ யிழிவு றப்பொருள்
வானென வழங்குவர் மதுவுண் போர்களே.

*தக்கோர் மெய்யுணர்வு துன்பில்லாத இன்பம் பெரும்புகழ் உடல்நலம் அடைவதற்குத் தம் நற்பொருளை நல்லவர்க்குத் தானம் செய்வர். கள்ளுண்போர் அறிவின்மை, உடல்மறதி, நீங்கா நோய், வசை முதலியன பெறுதற்குத் தங்கள் பொருளை மழைபோல் வாரி இறைப்பர்.*

*ஞானம் - மெய்யுணர்வு. தனம் - பொருள். மது - கள்.* க

*நஞ்சனைய கள்ளுண்பார் நாடுமனை மகவிழந்தார்*

மருந்தநேர் மதுவுண்போர் மாண்ட பான்மையால்
அருந்தவப் பாலருக் கப்ப னில்லையால்
பொருந்திய மனையவள் பூண்ட நாண்களத்
திருந்ததே யென்னினு மிழந்த தோக்குமே.

*நஞ்சையொத்த கள்ளையுண்போர் இறந்தவரோ டொப்பர். அதனால், தவப்பேற்றால் வந்த பிள்ளைகளுக்குத் தந்தையரில்லை. மனைவிமார் கழுத்தில் தாலி காணப்பட்டாலும் தாலியிழந்தவர் நிலையேயாவர்*

*மருந்தம் - நஞ்சு. பாலர் - பிள்ளைகள். களம் - கழுத்து.* உ

*அறிவிழப்புச் சாவால் கள் நஞ்சினுங் கொடிதாம்*

சித்தமு மவசமாஞ் செயல்வி கற்பமாம்
நித்தமு மரணமா நெடிய துன்பமாம்
அத்தமு நாசமா மவிழ்த மின்மையாற்
பித்தினு நஞ்சினும் பெரிது கள்ளரோ.

*கள்ளுண்பதால் உள்ளம் தன் வசமாவதில்லை; செய்யும் செயலும் தாறுமாறுகும்; அறிவிழந்து போவதால் நாளும் சாவாம்; சொல்லொணுப் பெருந்துன்பமாம்; பொருளழிவாகும்;*

மாற்று மருந்து இடையாது. பித்தையும் நஞ்சையும்விடக் கள் மிகவும் கொடியதாகும்.

சித்தம் - உள்ளம். அவசம் - வசமின்மை; கட்டுக்கடங்காமை. அத்தம் - பொருள். அவிழ்தம் - மருந்து. ௬

கள்ளுண்போர் கழிவுண்ணும் ஈயினை ஒப்போர்

பாலினைத் தேனையின் பாகை நீத்துவெண்
மாலியை மாந்துவோர் மலர்க்கள் நீத்துமெய்த்
தோலிர ணந்தனைச் சூத கந்தனைக்
கோலியுண் டுவக்குமீக் கூட்ட மோப்பரே.

உயர்ந்த ஊணாகிய ஆன்பாலும் தேனும் வெல்லப்பாகும் விடுத்துக் கள்ளையுண்போர், ஈ மலரைவிட்டுப் புண்ணையும் கழிவுக் குருதியையும் வாரியுண்டு மகிழ்வதை யொப்பார்.

இரணம் - புண். சூதகம் - கழிவுக்குருதி. ௭

யாரையும் மருவச்செய் கள் மிக இழிவே

சீயென இகழ்தரு தேனுண் போர்களை
நாயெனக் கோகென வாக்கு நாடோறும்
ஆயினை மகளையில் லாக்குந் தான்கொண்ட
சேயிழை யையும்விலை செய்யச் செய்யுமால்.

நல்லோரால் 'சீ' என்று இகழப்படும் கள், தன்னை உண் போர்களை நாயையும் கழுதையையும்போல் மதிப்பில்லாதவ ராக்கும். தாய், மகள் முதலிய முறையினரை முறையிலாது மருவச்செய்யும். மணந்த மனைவியையும் விலைப்படுத்தச் செய்யும்.

ஆயினை - தாயை. கோகு - கழுதை. ௮

தீமையை நன்மையெனத் திரிப்பது கள்ளே

மலந்தனை யமுதென மாந்தச் செய்திடும்
மலர்ந்தபூ வெனவன லள்ளச் செய்யும்வெஞ்
சலந்தரும் பகைவர்கை தனக்குள் ளாக்குநல்
நலந்தனை யழித்திடு நறவு நெஞ்சமே.

நெஞ்சமே! கள், மலத்தை அமுதென்று நினைத்து உண்ணச் செய்யும்; தணலை விரிந்த பூவென அள்ளச்செயும்; மிக்க சினத்தைத் தரும் பகைவர்களைத் தனக்குத் துணையாகச் சேர்க்கும்; நன்மையைக் கெடுக்கும்.

மாந்த-உண்ண. அனல்-தணல். சலம் - சினம். நறவு-கள். சு

கள்ளுண்பார்க் குலகம் கடுநர காகும்

அலருற ஈயெறும் பரவு தேளோடும்
பலவிலங் கணுகுறப் படுத்த பாயலின்
மலசல வாந்தியு மயக்குங் கோடலால்
நிலமது நரகமாம் நிதங்கள் ளுண்பார்க்கே.

பழியுண்டாக, ஈ, எறும்பு, பாம்பு, தேள், விலங்கு முதலியன தம்மை வந்து நெருங்க, படுத்த படுக்கையிலே மலம், சிறுநீர், கக்கலுண்டாகக் கள்ளுண்பார் அறிவிழந்து மயங்கிக் கிடத்தலால், அவர்களுக்கு என்றும் உலகம் நரகமேயாகும்.

அலர் - பழி. நிதம் - என்றும். எ

கள்ளில் பிறப்பன கடுவினை பேராசை

கொஞ்சமுஞ் சுவையிலை குளத்தைக் கோணியே
நஞ்சென நுகர்வர்மெய் நலிய மூப்புற
விஞ்சிய ஆவல்தீ வினைகள் யாவுமே
குஞ்சுகள் கள்ளெனுங் கொடிய பக்கிக்கே.

விரைவாக உடல்தளர மூப்புவர முகத்தைக்கோணி, சிறிதும் சுவையில்லாத கள்ளை நஞ்சுபோன்று உண்பார்கள். கள்ளாகிய கொடிய பறவைக்குப் பேராசை கொடுஞ்செயல் முதலிய எல்லாத் தீமையும் குஞ்சுகளாகும்.

குளம் - நெற்றி; முகம். கோணல் - வெறுப்படையாளம். விஞ்சிய - பெருகிய. பக்கி - பறவை. அ

## வேறு

*களவு மயக்கம் காமம் தருங் கள்*

வறுமையால் களவு செய்வர்
 மையலாற் காமத் தாழ்வர்
குறுமைசேர் பகையி னால்வெங்
 கொலைசெய்வர் வசையி னோடுஞ்
சிறுமைதந் துயிரி ருந்துஞ்
 செத்தவ ராக்கி யிம்மை
மறுமையை யழிக்குங் கள்ளை
 மாந்தலெப் பயன்வேட் டம்மா.

*கள்ளுண்பவர்க்கு அக் கள்ளினாலே வறுமை விரைவில் வரும். அதனால் களவு செய்வர். அறிவிழந்து மயக்கங்கொள்ளுத லால் முறைதவறிக் காமந் துய்ப்பர். பொறுக்குந்தன்மை வாய்ந்த சிறு குற்றஞ் செய்தாரையும் பெரும் பகைவராக்கிக் கொலை செய்வர். பழியும் இழிவும் தரும். உயிரிருந்தும் செத்தவராவர். இம்மை மறுமைப் பயனிழப்பர். இப்படிப்பட்ட கள் அருந்துவது என்ன பயன் கருதி?*

மையல் - மயக்கம். குறுமை - சிறுமை. மாந்தல் - குடித்தல். வேட்டு - விரும்பி. க

## வேறு

*வழிநடைப் பிணமாம் வரும் இழிவு கள்ளால்*

நரிநாய் பறவை சூழவழி
 நடுவிற் கிடந்த சவமதனை
உரியா ரிலரேன் றிடுகாட்டுக்
 குடன்கொண் டேகிக் கட்டையில்வைத்து
எரியா நின்றேன் பிணம்விழித்திஃ
 தின்தேன் மயக்கென் றியம்பிமெய்கொள்
அரியை யவிக்கு முன்னமெழுந்
 தயற்கட் கடையுட் புகுந்ததுவே.

கள்ளுண் களிப்பால் நரி, நாய், கழுகு, காகம் முதலியன சூழ நடுவழியில் சவமாய்க்கிடந்த ஒருடலை இடுகாட்டுக்குத் தூக்கிச் சென்று கட்டையில் வைத்து எரிக்கச்செய்தோம். பிணம் விழித்து 'இவ்வாறுயது கள்ளின் களிப்பு', என்று கூறிற்று. நாங்கள் தீயை அவிப்பதற்கு முன்னமே குடிகாரன் எழுந்து பக்கத்துக் கள்ளுக் கடைக்குள் சென்றனன்.

மெய் - உடம்பு. அரி - தீ. க0

மயக்கும் பொருளால் விரைவில் மாளுவர்

அரக்கும் அரக்கு மதுகஞ்ச
மாதி யாக வறியாமை
சுரக்குஞ் சரக்கைச் செய்தல்விற்றல்
துணிந்து கொள்ளல் நுகர்தலெலாம்
பரக்கும் பழியைப் பாவத்தைப்
பயக்கு மத்தீத் தொழிற்கிசைவோர்க்கு
இரக்குந் தொழிலும் ஆயுள்குறைந்து
இறக்குந் தொழிலு மெய்துமால்.

கள், தேன், கஞ்சா முதலிய குடித்தாருக்கு அறிவுமறைப்பைத் தரும் அப்பொருள்களைச் செய்தல் விற்றல் பழிக்கஞ்சாது வாங்கல் உண்டல் எல்லாம் பழி பாவத்தைத் தரும். இந்தத் தீய தொழிலுக்கு இணங்குவோர் வறுமையுற்றுப் பிச்சை எடுப்பர்; அகவை குறையும்; விரைவில் மாளுவர்.

அரக்கும் - குடிக்கும். அரக்கு - கள். மது - தேன். கஞ்சம் - கஞ்சா. அகவை - வயது. கக

# அதி. கக—சூது

*சித்திரப் பெண்போல் செல்வம் சேரா சூதில்*

வித்தமே மிகுமென வெஃகிச் சூதினில்
அத்தமார் அத்தமும் அழித்தல் தீட்டிய
சித்திர மாதெழி னம்பிச் சேர்ந்ததற்
பத்தினி தனையகல் பான்மை யொக்குமே.

*சூதில் வரும் சிறுபொருளே மிகுமென்னும் ஆசையால் மலை போன்ற பெரும் பொருளையும் இழத்தல், ஓவியத்தின் பெண்ணழகை நம்பிச் சேர்ந்த கற்புறு மனைவியைக் கைவிட்டது ஒக்கும்.*

*வித்தம் - சிறுதாயம்; சூதாட்டப் பொருள். அத்தம் - மலை. ஆர்-போன்ற; அத்தம்-பொன்; பொருள். எழில்-அழகு. பத்தினி-கற்புறு மனைவி.* க

*கல்லாது சூதினிற் காலம் போக்கல் இழிவே*

வையமேன் மானிடர் வாழும் நாட்சில
ஐயமில் கேள்விதான் அளவில ஆருயிர்
உய்யநல் வினைகளை உஞற்றி டாதுநாள்
பொய்யமர் சூதினிற் போக்கல் புன்மையே.

*உலகத்தில் மக்கள் வாழும் நாட்கள் சில; கேட்டுணர்ந்து ஒழுக வேண்டிய நூல்கள் அளவில்லன. அறிவு நிரம்பும் உயிர் ஈடேற ஒவ்வொரு நாளும் நன்மைகளைச் செய்யாது பொய்ச் சூதினில் காலம் போக்கல் இழிவாகும்.*

*வையம் - உலகம். கேள்வி - நூல். உஞற்றல் - செய்தல். புன்மை - இழிவு.* உ

*புண்ணியமில்லாதார் சூதால் போது போக்குவர்*

ஓத விசையோடு மோடு நாளென
மேதையர் தந்தொழில் விடாது செய்குவர்
போதுநீட் டித்தெனப் பொறியி லாரதைச்
சூதேனும் வாள்கொடு துணிக்க நேர்வரே.

*அறிவான் மிக்கவர் சொல்ல முடியாத விரைவுடன் நாள் போகின்றதென்று தானமும் தவமும் ஆகிய தம் தொழிலை இடைவிடாது செய்வர். புண்ணியப்பேறு இல்லாதார் பொழுது போக*

வில்லையென்று கருதி நீண்ட பொழுதைச் சூதாகிய வாளினால் வெட்டுவர்.

ஓதரு - சொல்ல முடியாத. விசை - விரைவு. மேதையர் - அறிவான் மிக்கவர். போது - பொழுது. பொறி - புண்ணியம். ௩

அளவிலாத் தீமையை ஆற்றும் சூது

வளமலி நிடதநா டளிக்கு மாண்புசேர்
நளனையும் அலைவுசெய் நாசச் சூதுதான்
களவுபொய் சினம்பகை காம மியாவையும்
அளவறப் பயிற்றிடும் ஐயன் போலுமே.

செழிப்புமிக்க நிடத நாட்டை யாண்ட சிறப்புப் பொருந்திய மன்னர் மன்னனாகிய நளனையும், சூது பெருந்துன்பம் எய்தும்படி செய்திற்று. அச் சூது களவு, பொய், சினம், பகை, காமம் முதலிய தீமைகளுக்கெல்லாம் தந்தையாகும்.

வளம் - செழிப்பு. மாண்பு - சிறப்பு. அலைவு - துன்பம். ௪

மனைவி மாளினும் சூதன் மனமகிழ்ந்தாடுவான்

கவறினை யாடுவோன் காந்தை வீயினுஞ்
சவமதிவ் வழிசெலு மென்று தானெழான்
அவள்புனை தாலிபந் தயத்துக் காமென
உவகைபூத் தாடுவா னுயர்வு றுனரோ.

சூதாடுவோன் தன் அருமையான மனைவி மாண்டாலும் அச் சூதாட்டத்தினின்றும் எழுந்திரான். மேலும் அப்பிணம் இவ் வழிதானே வரும் என்றுங் கூறுவான். அம் மட்டோ, அவன் தாலி சூதாடும் ஒட்டத்துக்கு ஆகும் என்று மனமகிழ்வான். ஒரு காலும் மேன்மை அடையான்.

கவறு - சூது. காந்தை - மனைவி. வீதல் - சாதல். பந்தயம் - ஒட்டம். உவகை - மனமகிழ்வு. உயர்வு - மேன்மை. ௫

வேறு

அளவில் ஆசையாற் பொருளெலாம் சூதிலிழப்பர்

வட்ட மாநில மீதுமன் னுர்விடம்
இட்ட பாலை யினிதளித் தாலெனக்
கட்ட மேவுங் கழகத்தில் வென்றுகோள்
ஒட்டங் கையினி லோட்ட மளிக்குமால்.

உருண்ட பெரிய உலகத்தில் உணவாகப் பகைவர், நிறைந்த நஞ்சு கலந்த பாலைத் தருவதுபோலத் துன்பமே பெருகும். சூதாடும் இடத்தில் வெற்றியால் கிடைத்த பந்தயப்பொருள் மேலும் மேலும் பொருளிழக்கும் ஆசையை உண்டாக்கிக் கையில் ஓட்டைத் தரும்.

மன்னூர் - பகைவர். கட்டம் - துன்பம். கழகம் - சூதாடுமிடம். ஒட்டம் - ஆசை. ஒட்டு - ஓடு. சுு

### கவலை தரலால் சூதுக்குக் கவறெனும் பேர் காரணப்பேர்

இவற லேதந் திழிவையுந் தந்துபின்
தவறு யாவையுந் தந்துநெஞ் சந்தனைக்
கவறென் னேவிக் கலக்கங் கொடுத்தலாற்
கவறெ னும்பெயர் காரண நாமமே.

பேராசையைத் தந்து, இழிவையும் கொடுத்து மேலும் எல்லாப் பிழைகளையும் நிறைத்து மனத்தை வருந்தும்படி தூண்டி நீங்காக் கவலையைக் கொடுத்தலால் சூதாட்டத்துக்குக் 'கவலை' என்னும் பொருள் தரும் 'கவ'றென்னும் பெயர் காரணப் பெயரேயாகும்.

இவறல் - பேராசை. தவறு - பிழை; குற்றம். கவறு - கவலை கொள். எ

### போர்க்கும் பழிக்கும் புகலிடம் சூதே

பந்த யந்தனைப் பற்றிவெஞ் சூதினோடு
எந்த ஆடற் கெனினும் இயைபவர்
வந்த சீர்நல மாறிவ யாவுக்கு
நிந்த னைக்கு நிலயம தாவரால்.

பந்தயப்பொருளை விரும்பிக் கொடுஞ் சூதாட்டத்தை யாடுபவர், போர் முதலிய தீமைக்கும் இணங்குபவராவர். அவர்களுக்குள்ள மேன்மை நன்மை எல்லாம் நீங்கும். வருத்தம் பழி முதலியவற்றிற்கு உறைவிடம் ஆவர்.

சீர் - மேன்மை. வயா - வருத்தம். நிலயம் - உறைவிடம் அ

# அதி. ௨௦—கைக்கூலி

கைக்கூலி வாங்குவோர் கர்ணூர் நடுநிலை

வலியினால் இலஞ்சங்கோள் மாந்தர்பாற் சென்று
மெலியவர் வழக்கினை விளம்பல் வாடிய
எலிகள்மார்ச் சாலத்தி னிடத்தும் மாக்கள்வெம்
புலியிடத் தினுஞ்சரண் புகுத லொக்குமே.

அரசியல் முதன்மை வலியினால் கைக்கூலி வாங்கும் கொடிய மக்களிடம் சென்று எளியவர் வழக்கைச் சொல்லுவது, பசியால் வாடிய எலிகள் பூனையினிடமும், விலங்குகள் புலியினிடத்தும் போய் அடைக்கலம் புகுவதை யொக்கும்.

முதன்மை - அதிகாரம். இலஞ்சம் - கைக்கூலி. மார்ச்சாலம்- பூனை. சரண் - அடைக்கலம். க

கைக்கூலி வாங்குவோரைக் கொன்றாலும் போதாது

அல்லினிற் களவுசெய் பவரை வெஞ்சிறை
யில்லிடும் பண்பினுக் கியைந்த மாக்களே
எல்லினி லெவரையும் எய்த்து வவ்வலாற்
கொல்லினும் போதுமோ கொடியர் தம்மையே.

இராக்காலங்களில் களவு செய்யும் கள்வரைச் சிறையிடும் முறைமன்ற நடுவரே, பகற்காலத்தில் எல்லாரையும் ஏமாற்றிக் கைக்கூலி வாங்குகின்றனர். இக் கொடியவரைக் கொன்றாலும் அக் குற்றத்திற்குப் பொருந்திய தண்டனையாகுமா?

அல் - இரவு. வெஞ்சிறை - கடுங்காவல் எல் - பகல். ௨

உலகிய லழிப்பர்பால் உறும்பழி பாவம்

கொலைஞருஞ் சோரருங் கொடிய வஞ்சரும்
நிலைபெற வவர்கையி னிதியைக் கொண்டுதண்
அலைகட லுலகிய லழிக்குந் தீயர்பால்
மலையெனப் பாவமும் பழியு மண்டுமே.

உலகில் கொலை செய்வோரும் கள்வரும் கொடிய வஞ்சரும் நிலைபெறும்படி, அவர்கள் கையில் கைக்கூலி வாங்கிக்

கொண்டு உலக வாழ்வைக் கெடுக்கும் முறைமன்றக் கொடியவர் பால் பாவமும் பழியும் மலைபோல் பெருகும்.

சோரர் - கள்வர். நிதி - செல்வம். மண்டும் - பெருகும். ௩

கனலுறும் வெண்ணெய்போல் கைக்கூலி அழியும்

பயிரினை வேலிதான் மேய்ந்த பான்மைபோற்
செயிருற நீதியைச் சிதைத்தோர் தீயன்சாண்
வயிறினை வளர்த்திட வாங்கு மாநிதி
வெயிலுறு வெண்ணெய்போல் விளியும் உண்மையே.

வேலியே பயிரை அழிப்பதுபோல் முறையைச் செய்யும் தலைவன் அதைக் கெடுத்துச் சாண்வயிறு வளர்ப்பதற்குக் கைக் கூலி வாங்கித் தீயவனாகின்றான். அத் தீயோன் வாங்கும் பெரும் பொருளும் வெயிலில் பொருந்திய வெண்ணெய்போல் கெடும்.

மாநிதி - பெரும்பொருள். விளியும் - கெடும். ௪

கைக்கூலி வாங்குவோன் கயவரின் அடிமை

ஆசையால் வாங்கிடு மவனை யீந்தவர்
கேசமா மதிப்பரக் கீழ்நன் சென்னிதம்
ஆசன மாக்குவ ரடிமை நானெனச்
சாசன மவர்க்கவன் தந்த தென்னவே.

பேராசையால் கைக்கூலி வாங்கும் கயவனை, கைக்கூலி கொடுத்தவர் 'தலையினிழிந்த மயிர்' என மதிப்பர். அவன் தலையைத் தாம் இருக்கும் இருக்கையாக்குவர். அவன் கைக்கூலி பெற்றுக் கொண்டது, தன்னை அடிமைப்படுத்தி எழுதிக் கொடுத்த அடிமை முறியாகும்.

ஈந்தவர் - கொடுத்தவர். கேசம் - மயிர். ஆசனம் - இருக்கை. சாசனம் - எழுத்துமுறி. ௫

கடையனும் வேசையினும் கைக்கூலி பெறுவோன்

காசதி கந்தனைக் கருதி வாதந்தீர்த்து
தேசுற ஏழைகட் கிடர்செய் வோன்தனம்
மீசரங் குறைவுபா ராது மேவிடுந்
தாசிய ரினுமிழி தகவு ளானன்றே.

மிகுந்த கைக்கூலி தருபவர்க்கு வாசியாக வழக்கைத் தீர்த்து அதனால் ஏழைகள் வயிறெரிந்து ஏசும்படி அவர்களுக்குத் துன்பம் செய்வோன், உயர்வு தணிவு கருதாது பணம் ஒன்றே கருதிக்கூடும் வேசையரினும் இழிந்தவனாவன்.

வாதம் - வழக்கு. தனம் - பொருள். மீசரம் - உயர்வு ௬

வழக்கிடாது மனமொத்துப் பங்கிடல் மாண்பு

எனதுன தெனவொரு பொருட்கு இரண்டுபேர்
சினமொடு வாதித்தோர் தீயன் பாற்செலின்
தனதென அப்பொருள் தனைக்கொள் வானவர்
மனதொரு மித்ததை வகிர்தன் மாண்பரோ.

ஒரு பொருளை 'என்னுடையது என்னுடையது' என்று இருவர் சினமுற்று வழக்கிட்டு, அதை முடிவுசெய்யத் தீயவனிடம் சென்றால், அவன் அப் பொருளைத் தனதெனச் சொல்லிப் பிடுங்கிக் கொள்வன். அதனால், இருவரும் தம்முள் மனமொத்துப் பங்கிட்டுக்கொள்வதே நன்மையாம்.

வாதித்தல் - வழக்கிடல். வகிர்தல் - பங்கிடல். மாண்பு - நன்மை. ௭

கைக்கூலிப் பழிசொலக் காணு வோர்வாய்

பசியினா லெளியனோர் பகலி ரப்பினும்
அசியுறு மெங்கணும் ஆக்க முள்ளவர்
நிசிபகல் பலரிட நிதமுமேற் கின்ற
வசையினைச் சொல்லவோர் வாயும் போதுமோ.

எளியவன் பொறுக்க முடியாத பசியினால் ஒருபொழுது பிச்சை எடுப்பான். அவனை எல்லாரும் இகழ்வர். செல்வமும் முதன்மையும் உடையவர் இரவு பகலாக எல்லாரிடத்தும் கைக்கூலி பெறுமுறையில் ஏற்கின்றார்கள். இதனால் வரும் இழிவையும் பழியையும் ஒரு வாயால் சொல்ல முடியுமா? (முடியாது.)

அசி - இகழ்ச்சிச் சிரிப்பு. நிசி - இரவு. வசை - பழி. ௮

*ஈந்தோர்க்கெலாம் கைக்கூலி ஏற்போன் பிள்ளை*

பெற்றவன் கைப்பொருள் பிள்ளைக் கேயலான்
மற்றவர்க் கிலையெனன் மனுவி னீதியாம்
குற்றமே விடநிதி கோடி பேர்கையிற்
பற்றுவோ னவர்க்கெலாம் பாலன் போலுமே.

*பெற்றவர் பொருள் பிள்ளைகளுக்கே உரிமை என்பது மனு முறை கைக்கூலி பெறுவான் பாவம் பெருகக் கோடி பேர் கையில் பொருள் ஏற்கின்றான். ஆயின், அவன் அக்கோடி பேருக்கும் பிறந்தவன் ஆவான் போலும்.*

*மனு - சட்டம் வகுக்கும் வேந்து நீதி - முறைமை. குற்றம் - பாவம். நிதி - பொருள்.* கூ

வேறு

*மானமழியாது தொண்டுசெய்து வாழ்வதே மதிப்பு*

மண்டலீ கன்றன் தண்டனை நரகவ மானங்
கண்டபேர்க் கெலாம் பயம்பெரும் பகையொடும் கவ்வை
பண்ட மிவ்வகை யீட்டலின் அனுதினம் பலரை
அண்டி மானமாத் தொண்டுசெய் துயிருயல் அழகே.

*கைக்கூலி வாங்குவதால் இம்மையில் மன்னர் ஒறுப்பு, மதிப்பின்மை, யாரைக் காணினும் நடுக்கம், ஊர்ப்பகை, நீங்காத் துன்பம் நாளும் பெருகும். மறுமையில் இருளுலகத் துன்பமும் எய்தும். இவற்றைவிட்டுப் பலரையும் அடுத்து மானமழியாது இயன்ற தொண்டு செய்து வாழ்தல் அழகாகும்.*

*மண்டலீகன் - மன்னன். நரகு - இருளுலகம். கவ்வை - துன்பம்.* க0

வேறு

*இருகையும் கைக்கூலி ஏற்றல் முழுக்கொள்ளை*

இருவ ரிடத்தும் விவாதநிதிக்
கிரட்டி கொள்வர் தகாதென்னின்
அருமை சயமென் பார்தோல்வி
யடைந்தோன் தந்த நிதிகேட்பின்

வெருவ வவன்மேற் பொய்வழக்கை
மெய்போற் கற்பித் திடரிழைத்துச்
சருவ கொள்ளை யடிப்பர்பரி
தானம் வாங்கும் பாதகரே.

*கைக்கூலி வாங்கும் பெரும்பாவி வழக்காளர் இருவரிடத்திலும் வழக்கின் தொகைக்கு இரண்டு பங்கு வலுகட்டாயமாகப் பெறுகின்றான். யாரேனும் கொடுக்க மறுத்தால் அவருக்குத் தோல்வி யாக்கி விடுகின்றான். இருவர் கொடுத்தாலும் ஒருவரே வெல்லுவர். தோற்றவர் தாங்கொடுத்த கைக்கூலிப் பொருளைத் திருப்பித்தரக் கேட்டால், அவர்கள்மேல் பொய் வழக்கு ஏற்படுத்தித் துன்புறுத்துவன். இவ்வகையாக முழுக்கொள்ளை யடிப்பன்.*

*சருவ கொள்ளை - முழுக்கொள்ளை.* கக

**கைக்கூலியால் முறைசெயல் களவுப்பொருள் விலையொக்கும்**

பொய்வா தியர்பாற் பொருள்கொண்டு
வழக்கைப் புரட்டல் அநீதிபொருள்
மெய்வா தியற்பாற் கொண்டவர்க்கு
விவாதந் தீர்க்கும் நிலைஎற்றேல்
உய்வார் பொருளைக் கவர்ந்ததற்கு
விலைகொண்டு உவர்க்குஉஃது இடல்போலும்
பெய்வான் மழைக்கு வரிவாங்கிப்
பிழைக்கும் கொடுங்கோன் போலுமால்.

*பொய் வழக்காடுபவரிடம் கைக்கூலிபெற்று வழக்கை அழிவழக்குச் செய்வது முறைகேடு ஆகும். மெய் வழக்காளர்பால் கைக்கூலி பெற்று அவ் வழக்கை முடிப்பது (முறை கேடன்று) ஒருவன் பொருளைக் கவர்ந்து அப் பொருளுக்கு அவனிடம் விலை வாங்கிக்கொண்டு கொடுப்பதையும், கைம்மாறு கருதாது பெய்யும் மழைக்கு வரிவாங்கிப் பிழைக்கும் கொடுங்கோல் மன்னன் செயலையும் ஒக்கும்.*

*வாதியர் - வழக்காடுபவர். அநீதி - முறைகேடு.* கஉ

நன்றாய் வின்மையும் நண்ணுங்கைக் கூலிபால்

வரும்வா தியரோ டுறவுபற்று
　　வரவு முதல்செய் குதல்விரைவில்
கருவி விவாதம் தீர்க்காது
　　காலங் கழித்தல் சோம்பலினால்
உருவ வழக்கின் நிலையினைநன்
　　குணராத் தன்மை பொதுநீங்கல்
பொருவில் இவையா தியபுரைகள்
　　இலஞ்ச மதனைப் பொருவுமால்.

வழக்காளிகளுடன் நட்புக்கொள்ளுதல், கொடுக்கல் வாங்கல் செய்தல், நுணுகி ஆராய்ந்து விரைவில் வழக்கைத் தீர்க்காமை, வீண் காலம் கடத்தல், மடியினால் வழக்கின் உண்மையினைத் தெளியாமை, நடுவுநிலைமை தவறுதல் முதலிய குற்றங்கள் பலவும் கைக்கூலியோடு ஒக்கும்.

கருவி - நுணுகி. விவாதம் - வழக்கு. சோம்பல் - மடி. பொது - நடுவுநிலைமை. புரைகள் - குற்றங்கள். இலஞ்சம் - கைக்கூலி. கரு

வேறு

மேல்கீழ் மிகுபொருள் எண்ணல் கைக்கூலியே

நேயர் பற்சர் தீனர் நிதியோ ரெனச்சொல்
　　பேத மதையே நினைத்த நீதி புரிதன்
மாய முற்ற பேர்கள் சொலையே மதித்த
　　டாத பக்க வாதமுற்று நீதி தவிர்தல்
தீய வத்த மாதி யோடு லோகரத்ந
　　ராசிபல தேயமுற்று மார்பொ ருளெலாம்
தேய முற்றி யேலலவை காதலித்
　　தலாதிபரி தான மொத்த தீது களரோ.

நண்பர் பகைவர் ஏழை செல்வர் என்று சொல்கின்ற வேறுபாட்டை நினைந்து முறைகோடுதல், பொய்யர் சொல்லை மெய்யென மதித்து ஓரஞ்சார்ந்து முறை தவறுதல், தீயவழிச் செல்வமுடன் பல பண்டம் மணி முதலிய ஒளிக்கற்கள் முற்றும்பெற ஆசைப்படுதல் முதலியவை கைக்கூலியே ஆகும் தீமையாம்.

பற்சர் - பகைவர். தீனர் - ஏழைகள். நிதியோர் - செல்வர். அத்தம் - செல்வம். ரத்நம் - ஒளிக்கல். காதலித்தல் - ஆசைப்படுதல். கசு

---

# அதி. உக—புறங்கூறல்

*பழியஞ்சும் பண்பினர் பகரார் புறங்கூறல்*

சாம்பிணம் இடுவனஞ் சாருந் துன்மணம்
பூம்பொழில் பரிமளம் பொருந்தி நாறிடும்
தாம்பழி யுளரலால் தகுதி யோர்பிறர்
நோம்படி யவர்குறை நவலு வார்களோ.

*செத்த பிணத்தை இடுதலும் சுடுதலும் செய்யும் காடு தீய நாற்றமே நாறும். அழகிய தேனிறை மலரும் தீங்கனியும் பொருந்திய சோலை நல்ல மணமே தரும். பிறர் மனம் வருந்தும் படி அவர் குறையை அவரில்லாத இடத்துச் சொல்லுதலாகிய புறங்கூறுதலைத் தக்கவர் கூறார்; கூறின், புறங்கூறுவார்மேல் பழி சுற்றும் என்னும் உண்மை உணர்தலான்.*

*வனம் - காடு. பொழில் - சோலை. உளரல் - சுற்றுதல்.* க

*புறங்கூறுவோன் குலநலம் பொருந்தாப் புன்மையன்*

நலத்தின்மிக் கார்சொலார் நயமில் சொல்லையே
சொலத்தகாப் பழிபிறர் மீது சொல்லுவோன்
குலத்தினு நலத்தினுங் குறையு ளானெனத்
தலத்தவன் வாய்மொழி சாட்சி யாகுமே.

*நன்மை மிகுந்தவர் கடுமையான சொல்லைச் சொல்லார். பிறர்பால் சொல்லக்கூடாத பழிமொழிகளைப் புறங்கூறுபவன் உயர்ந்த ஒழுக்கமும் சிறந்த பண்பும் இல்லாதவன் ஆவன். இதற்கு உலகில் புறங்கூறுதலாகிய அவன் வாய்மொழியே சான்று பகரும்.*

*குலம் - உயர்ந்த ஒழுக்கம். நலம் - சிறந்த பண்பு. தலம் - உலகம். சாட்சி - சான்று.* உ

*புறங்கூறலாலுள்ளப் புன்மை வெளியாம்*

உள்ளவங் கணங்கசிந் தோடல் போலொரு
கள்ளநெஞ் சினன்புறங் கழற லன்னவன்
உள்ளமார் புரையெலாம் ஒழுகி வாய்மொழி
வெள்ளமாய் வழிகின்ற விதத்தை மானுமே.

வஞ்ச நெஞ்சுடையவன் புறங்கூறுதல், அவனுடைய உள்ளத்திலுள்ள தீமைகளெல்லாம் வாய்வழியாக வழிந்தோடுவதாம். அது, சாக்கடை கசிந்தோடுவதை யொக்கும்.

அங்கணம் - சாக்கடை. புறங்கழறல் - புறங்கூறுதல். புரை-தீமை. மானும் - ஒக்கும். ௩

*மெய்யே புறங்கூறினும் வேண்டாப்பொய் ஆகும்*

இன்னலே யேதிலார்க் கிழைக்கு மச்சொலே
முன்னமெய் யென்னினும் முழுப்பொய் போலுமாம்
அன்னவர் குறையினை யறிந்து மின்றெனப்
பன்னுபொய் மெய்யினும் பாடு டைத்தரோ.

பிறர்க்குத் துன்பம் தரக்கூடிய சொல், வாய்மையாக இருப்பினும் பொய்ம்மையாம். அவருடைய குற்றத்தை உணர்ந்தும், இல்லையென்று பொய் சொல்லுவது மெய்ம்மையாம்.

இன்னல் - துன்பம். ௪

## வேறு

*சான்றினில் குற்றம் கூறுதல் தருமமாம்*

ஆட்சியா முலகரசன்முன்
சாட்சிசொல் சமையத்தலான்
மாட்சியோர் பிறர்மறுவினை
நீட்சியா நிகழ்த்தார்களே.

உலகாள் வேந்தன்முன் சான்று சொல்லும்போது மட்டும் பிறர் குற்றத்தை எடுத்துச் சொல்லுவார். மற்று எவ்விடத்தும் எக்காலத்தும் பிறர் குற்றத்தை எடுத்துக் கூறார்.

ஆட்சி - ஆளுவது. மறு - குற்றம். நிகழ்த்தார்-சொல்லார். ௫

*புறங்கூறார் கடமை பொன்றுப் புலவர்*

மதியிலார் செய்வடுஅவர்
எதிரினின் றியம்பினும்
முதுகினின்று மொழிவரோ
விதியுணர்ந்த விபுதரே.

முறையுணர்ந்த நல்லறிஞர், அறிவிலார் செய்யும் பழியினை அவர் முன்னின்று கூறினும் அவரில்லாத இடத்துக் கூறூர்.

வடு - பழி. முதுகு - புறம்; இல்லாத இடம். விதி - முறை. விபுதர் - அறிஞர். கூ

புறங்கூறுவோனைப் புறத்தாக்கல் கோன்முறை

ஒருவ னொருவன் குறையையுரைத்
திடவே யதனைக் கேட்டோர்கள்
பெருக பத்தங் கலந்துபல
பேருக் குரைக்க விவ்வாறே
மருவி யெங்கும் பரவுதலான்
மண்ணின் முன்னம் தூறுமவன்
குருநோ யொப்பா னவனைக்கோ
னூர்விட் டகற்றல் நன்றேயாம்.

பிறன் குறையை ஒருவன் கூறினால், அதைக் கேட்டோர்கள் பொருந்ாதன மிகவுங் கலந்து பலபேருக்குக் கூறுவார்கள். இம்முறையாக உலகெங்கும் அது பரவும். ஆதலின், மண்மேல் முதலில் புறங் கூறுபவன் தொத்துப் பிணியாம் அம்மை நோயை ஒப்பான். அவனை மன்னன் ஊரைவிட்டு அகற்றுதல் நன்மையாம்.

பெருகு - மிகவும். அபத்தம் - பொருந்ாதன. தூறல் - புறம் கூறல். குரு - அம்மை நோய். எ

வேறு

புறங்கூற்றுளர் பொல்லாப் பகைஞர்

வாட்படைவாங் குவரிலரேன் மாறுவரார் புறங்கூற்றைக்
கேட்பவர்தா மிலரேன்னிற் கிளப்பவரார் பிறன்பழியை
வேட்போடுசோல் வோரவற்கு மேவலரேன் றனியதனைக்
கோட்புறலி லாதுசினங் கோண்டகற்றல் நெறியாமே.

வாளாயுதத்தை வாங்குவாரில்லாவிட்டால் விற்பவரும் இல்லை. அதுபோல், புறங்கூறுதலைக் கேட்பவரில்லாவிட்டால், சொல்வாரும் இல்லை. விரும்பிப் புறங்கூறுவோர் கூறப்படுவார்க்குப் பகைவரென நினைத்து அதனைக் கொள்ளுதலில்லாது அவரைச் சினந்து அகற்றுதல் முறையாம்.

மாறுவார் - விற்பார். வேட்பொடு - விருப்பொடு. அ

## அதி. உஉ—பெரியோரைத் தூறல்

### பெரியோர் புகழை, மாசுறப் பேசல் பெரும்பிழை

அரிய குணஞ்சேர் பெரியர் தமக்கு
அமையக் கடல்சூழ் புவனமெங்கும்
விரியும் இசைமா சுறவவர்மேல்
விளம்பும் பொய்ச்சொல் அண்டமிசைத்
திரியும் பானுக் கிரணமதைத்
திரட்டிப் பற்றி அதன்மீது
கரியைப் பூச வேண்டுமெனக்
கருதுந் தன்மை பொருவுமால்.

*பெரியோர்க்கு அரிய குணங்கள் பல பொருந்துதலால், கடல்சூழ் உலகமெங்கும் அவர் புகழ் பரவுகின்றது. அப்புகழைக் கறைப்படுத்த அவர்மேல் பொய்ப்பழி கூறுகின்றனர். அது, ஞாயிற்றின் கதிரைச் சேர்த்துப் பிடித்து அதன்மீது கரியைப் பூசவேண்டுமென்று எண்ணுவதையொக்கும்.*

*அமைதல் - பொருந்தல். புவனம் - உலகம். இசை - புகழ். அண்டம் - உலகம். பானு - ஞாயிறு. கிரணம் - கதிர். பொருவும் - ஒக்கும்.*

### பெரியோரைப் பழிப்போன்மேல் பெய்யும் அப்பழி

காற்றின் எதிரே நின்றொருவன்
காறி உமிழும் உச்சிட்டம்
மாற்றி யவன்மேல் வந்துவிழும்
வாய்மை போலித் தாரணியில்
தோற்றி யொழியும் வாழ்வதனைத்
துறந்த மேலோர் மீதொருவன்
தூற்றிக் கூறும் வசைச்சொற்கள்
சொன்னோன் மீதே தோயுமால்.

*ஒருவன் காற்றுக்கு எதிராக நின்றுகொண்டு காறித்துப்பும் எச்சில் அவன்மேலே வந்து விழுவதுபோல், உலகில் 'காமவெகுளி*

மயக்கங்கள்' அற்ற பெரியோர்மேல் பழிச் சொற்களைச் சொன்னால் அச் சொற்கள் சொன்னவன்மீதே சாரும்.

உச்சிட்டம் - எச்சில். வசை - பழி. தோயும் - சாரும். உ

ஆன்றோர்மேல் சொல்பழியை அறிவுடையார் கொள்ளார்

கடலனலுற்று எரிந்ததென்றுங்
கதிர்குளிர்நோ யுற்றதென்றுந்
தடவரையே சாய்ந்ததென்றுஞ்
சாற்றுமொழி நம்புவரார்
திடமுடைய சான்றோர்மேற்
செப்புமவ தூறதனைப்
புடவிமிசை வாழறிஞர்
பொய்யெனவே தள்ளுவரால்.

கடலில் தீப்பற்றி எரிந்ததென்றும், கதிரவன் குளிர் நோயுற்றானென்றும், பெருமலை அடியொடு சாய்ந்ததென்றும் ஒருவன் சொன்னால், அதனை நம்புவார் யார்? ஒருவருமிலர். அதுபோலவே உரனுடைப் பெரியார்மேல் ஒருவன் பழி சொன்னால் அதனை அறிவுடையார் பொய்யெனவே தள்ளுவர்.

திடம் - உரன். அவதூறு - பழி. புடவி - உலகம். ௩

தீயோர் தூயோரைத் தேறுவர் தம்போல்

வாய்கைக்கு நோயினர்க்கே மாமதுவுங் கைப்பாகுங்
காய்வெயிலு மஞ்சணிறங் காமாலைக் கண்ணருக்கே
சாய்நிழலுஞ் சுடுவெயிலாந் தாபச் சுரத்தினர்க்கே
தீயவர்க்குத் தூயவருந் தீயவர்போற் றோன்றுவரே.

வாய் கசக்கும் பித்தநோய் உடையார்க்கு உயர்ந்த கொம்புத் தேனும் கசக்கும். காமாலைக் கண்நோய் உடையார்க்கு நடுப் பகல் வெயிலும் மஞ்சள் நிறமாகக் காணப்படும். காமச்சுர நோயுடையார்க்கு மாலை வெயிலும் உச்சி வெயில்போல் மிக்க சூடாம் தீயவர்களுக்கு நல்லவர்களும் தீயவர்கள் போன்றே காணப்படுவர்.

மாமது - பெருந்தேன்; கொம்புத்தேன். தாபம் - காமம். தூயவர் - நல்லவர். ச

*கீழோர் தம்பழியைப் பிறர்மேல் சாற்றுவர்*

கஞ்சனத்தில் தம்முகமே
காணுவது போற்கயவர்
தஞ்செயிரைப் பிறர்செயிர்போல்
தாமெண்ணித் தூறுவரோர்
வஞ்சகனை நம்பியொரு
மாசிலான் இன்னலொடும்
எஞ்சலுறு வண்ணமவன்
இழிவுரைத்தன் முறையாமே.

*கண்ணாடியில் தம் முகமே காண்பதுபோல் கீழோர் தங்களிடமுள்ள குறைகளையே பெரியோர்மேல் ஏற்றிப் பழிப்பர். வஞ்சகனை நம்பும் நல்லோன் அவனால் துன்பம எய்துவதுடன் பழியும் பெறுவன்.*

*கஞ்சனம் - கண்ணாடி. கயவர் - கீழோர். செயிர் - குற்றம். இழிவு - பழி.* ரு

---

## *அதி. உரு—கடும்பற்று*

*பொன்னைப் புதைத்துப் புல்லன் மண்கொள்வான்*

பொன்னினைப் புதைத்திடப் புவியைத் தோண்டுவோன்
தன்னிடந் தோட்டமண் தனையி ழுத்தலான்
உன்னுடை யதுநிதி உலகமே யிம்மண்
என்னுடை யதுவென இயம்ப லொக்குமே.

*வேண்டும் நற்செயலுக்குப் பொருள் கொடாது கடும்பற்றுச் செய்து, அப் பொன்னை மண்ணினுள் புதைக்கப்போகும் இவறன்மையுடையான் மண்ணைத் தோண்டுகின்றான். தோண்டும் பொழுது குழிவாயிலுள்ள மண்ணைத் தன்பக்கம் இழுக்கின்றான். அப்பொழுது உலகைப் பார்த்து "உலகமே! பொன் உன்னுடையது; மண்ணே என்னுடையது," என்று சொல்லுவதை யொக்கும்.*

*இவறன்மை - உலோபம்.* க

*பொன்னைப் புதைப்பார் வாயில் மண்ணை புதையும்*

பொன்னமா நிலத்தில்யான் புதைக்கும் எல்வையின்
அன்னையே யனையபா ரருளி நோக்கிநற்
சொன்னமேன் வாயிடைச் சொரியு முன்றன்வாய்க்கு
என்னையே யிடுவனென் றிசைத்திட் டாளரோ.

*கடும்பற்றுள்ளவன் பொன்னை நிலத்தில் புதைத்தான். அப்பொழுது தாயையொத்த நிலமகள் அவனைப் பார்த்து அருள் கூர்ந்து என்னிடம் பொன்னைச்சொரியும் உன் வாய்க்குக் கைம் மாருக என்னையே (மண்ணையே) இடுவன் என்று இசைத்தாள்.*

*(மண்ணையிடுதல் - பொருளிழந்து போதல்.) இசைத் திட்டாள் - கூறினுள்.* உ

*பாத்துண்டலும் பலர்க்கீத்தலும் இல்லான் பொன் பாழே*

பொலிவளந் தங்கிய புவியிற் றுனுண்டும்
பலிபிறர்க் கிட்டுமே பயன்றுவ் வான்பொருள்
வலியிலாப் பேடிகை வாள்கோல் ஆணென
அலியினை மேவிய அரம்பை யேகோலோ.

*மிகுந்த செழிப்புள்ள உலகத்தில் தன் வயிறு ஆர உண்டும், வறியவர்கட்குக் கொடுத்தும் பயன் அடையாதவன் செல்வம், ஆண்மையில்லாத பேடி கை வாள் போலவும் அலியைப் பொருந்திய தெய்வப் பெண்போலவும் பயனிழந்து வீணும்.*

*பொலி-செழிப்பு. பலி-பிச்சை. அரம்பை-தெய்வப்பெண்.* ௩

*பயன்பெருச் செல்வன் பாரந்தாங்கியும் கழுதையுமொப்பான்*

நித்திய மனுபவி யாது நீணிதி
பத்திரஞ் செய்குவோன் பாரந் தாங்கவூர்
மத்தியிற் புதைத்தகல் மாசில் தூசர்க்கு
வத்திரஞ் சுமக்கும்வா லேய மொப்பனே.

*செல்வத்தை நாள்தோறும் நல்ல முறையாக நுகராது தொகுத்துக் காப்போன் ஊர் நடுவுள் சுமை தாங்க நாட்டிய சுமைதாங்கிக் கல்லையும், அழுக்ககற்றும் வண்ணுர்க்கு ஆடை சுமக்கும் கழுதையையும் ஒப்பான்.*

*நித்தியம் - நாள்தோறும். அனுபவியாது - நுகராது. பாரம்-சுமை. தூசர் - வண்ணுர். வாலேயம் - கழுதை.* ௪

புதைக்கும் புல்லரைப் பொருள்குடி கெடுக்கும்

செல்லவோர் போக்கின்றிச் செறிந்த நீர்கனல்
இல்லமே யழித்தெழுந் தேகல் போற்செலவு
இல்லையென் றடைத்தபொன் னெழுந்து தன்னைக்கோள்
புல்லரைக் குடிகெடுத் தகன்று போகுமே.

போக்கிடமில்லா நீரும் நெருப்பும் தாமுள்ள வீட்டை அழித்துச் செல்லும். அவைபோல், செலவில்லையென்று புதைத்து வைக்கும் செல்வம், அறிவில்லாத அச் செல்வனைக் குடிகெடுத்துச் செல்லும்.

புல்லர் - அறிவில்லாதவர். ௫

செல்வச் சுமையினர் இரங்கார் சிறிதும்

வேம்புதே னீயுமோ வெயில்தண் ணாகுமோ
பாம்பமு தளிக்குமோ பரிவில் பூரியர்
தாம்பொதி யாளெனத் தாங்கும் பொன்னினைத்
தேம்புமா துலர்க்குளஞ் சிறந்த ளிப்பரோ.

வேம்பு தேனையும், வெயில் குளிரையும், பாம்பு சாவா மருந்தினையும் தாராமைபோலக், கீழோர் பொன்னைச் சுமக்கும் பொதியாளர் ஆவதல்லாமல் வாடி வருந்தும் ஏழைகட்கு மன மகிழ்ந்து ஏதுங் கொடார்.

தண் - குளிர்ச்சி. அமுது - சாவாமருந்து. பூரியர் - கீழோர். தேம்பும் - வாடும். ஆதுலர் - ஏழைகள். ௬

ஈயாச் செல்வன் சாவையே எவரும் விரும்புவார்

ஈகையில் லாதுபொன் ஈட்டு வோன்கொண்ட
தோகையு மைந்தருந் தொலைகி லானென
ஓகையா யருவிட முணவி லிட்டவன்
சாகையே கருதிமா தவஞ்செய் வார்களே.

ஈயாது பொன்னைமட்டும் தேடுவோனின் மனைவியும் மக்களும் அவன் சாவையே விரும்புவர். அதன்பொருட்டுச் சோற்றினில் நஞ்சு கலந்து கொடுக்கத் தவமும் செய்வர்.

தோகை - மயில்போன்ற மனைவி. மைந்தர் - மக்கள். தொலைவு - சாவு. சாகை - சாதல். ௭

## வேறு

*நன்றியில் செல்வக்காப்பு நச்சுமரக் காப்பாம்*

அனுபவ மொன்றே பொன்னால்
ஆயநற் பயனஃ தின்றேற்
புனலிலாத் தடத்தைப் பெய்யாப்
புயலினைப் பொருவு மப்பொன்
தினமுமே நுகர்த லின்றித்
தீனர்க்கும் வழங்க லின்றித்
தனமதைக் காத்தல் நச்சுத்
தருவினைக் காத்தல் போலாம்.

*செல்வத்தின் பயன் ஈதலும் பகுத்துண்டலும் ஆகிய நுகர்வாம். இவ் வுண்மை யறியார் பணத்தைத் தேடிக் காப்பர். இவர்கள் பணம் புனலிலாக் குளத்தையும் பெய்யா மழையையும் போலும். இப் பணமுள்ளவர் தாம் நுகர்தலும் ஈதலும் செய்யாது பொருளைக் காத்திருப்பது நச்சுமரத்தைக் காப்பது போலாம்.* அ

*அனுபவம் - நுகர்வு; அழுந்தயறிதல்.*

*எல்லாரும் தமதென்பர் இவறியான் பொருளை*

தமதேன உலோபர் ஈட்டுந்
தனத்தினைக் கொடுங்கோன் மன்னர்
எமதேன இருப்பர் கள்வர்
எமதென்பர் கிளைஞ ரெல்லாம்
உமதெம தெனவா திப்பர்
உலகென தென்னும் யாமும்
நமதென்போம் பாரம் தாங்கி
நலிவதென் பிசின ரம்மா.

*ஈட்டும் பணம் முழுவதும் தமக்கே என்று இறுமாப்புக் கொண்டிருக்கும் இவறன்மையுடையார் அப் பணத்தைச் சுமக்கும் சுமை தாங்கியாவர். அப் பணத்தைக் கொடுங்கோலர் தமதென்பர். கள்வர்கள் எமதென்பர். உறவினர்கள் ஒருவரோடொருவர் உமது எமதென்றுரைத்து வழக்காடுவர். உலகு தன்*

னுடையது என்று சொல்லும். நாமும் நம்முடையது என்போம். அவன் இவற்றை மறுக்க முடியாது.

வாதிப்பர் - வழக்காடுவர். பாரம் - சுமை. கூ

## வேறு

### ஏழைக்கு இடாமல் செல்வர்க்கு வழங்குதல் இழிவு

மெலியு மேழைக் கிடாமல் விளைபொன்னை
மலியுஞ் செல்வர்க்கு வாரி வழங்குதல்
நலியி லார்க்கருள் நன்மருந் தும்பெருகு
ஒலிக டற்பெய் யுறையையும் ஒக்குமே.

ஊணின்றி மெலியும் ஏழைகளுக்கு உண்ண ஏதும் கொடாமல் நலம் தரும் பொருளைப் பெருஞ் செல்வர்க்கு வாரி வழங்குதல், நோயிலார்க்கு நல்ல மருந்து கொடுத்தலையும் கடலகத்து மழை பொழிதலையும் ஒக்கும்.

விளை - (நலம்) தரும். மலியும் - பெருகும். நலி - துன்பம்; நோய். உறை - மழை. க0

### ஈயாக் கயமை இனம்விழை விலங்கினும் இழிவு

வனவி லங்கும்விண் வாழ்பக்கி யுந்தம்
இனமோ டன்றியே டாவிரை யேழைகட்கு
அனமி டாதுதம் ஆகம தோன்றையே
மனமு வந்து வளர்ப்பர் கயவரே.

காட்டில்வாழ் விலங்கும் வானத்துப் பறக்கும் பறவையும் தங்கள் தங்கள் இனங்களோடு கூடியல்லாது இரை எடாது. கீழோர்மட்டும் மக்களினமாகிய உயிர்கட்குச் சோறிடாது தம் உடம்பு ஒன்றையே மனமகிழ்ந்து வளர்ப்பர்.

வனம் - காடு. பக்கி - பறவை. அனம் - சோறு. ஆகம் - உடம்பு. கக

## வேறு

### பழம் உதிரா மரம்போல் பறிபடுவர் கயவர்

தானற்கனி சிந்தாதுயர் தருவைச்சிலை கழியால்
ஊனப்பட மோதிப்பழம் உதிர்ப்பாரென வுலகில்
தீனர்க்குவ ழங்காதுறை தீயன்பசி யுளரால்
மானத்தையி ழந்தேபொருள் வவ்வப்படு வானே.

நல்ல பழங்களைத் தானே தராது வான் அளாவி வளர்ந்துயர்ந்த மரங்களைக் கல்லாலும் கழியாலும் எறிந்து பழங்களை உதிர்ப்பர். ஏழைகட்கு வழங்காது வாழ்கின்ற கொடியவன் மிக்க பசியுள்ளவரால் வைது அடித்து வலுச்செய்து பொருள் முழுதும் பறிக்கப் படுவன்.[1]

கனி - பழம். தரு - மரம். சிலை - கல். தீனர் - ஏழை. கஉ

கொடாக் கண்டனுயிர் கொள்வரப் பணத்தால்

சாங்காலையோர் பிசினன்பொரு டானஞ்செய வுன்னித்
தேங்கான்மொழி மனைமைந்தரை விளித்தானவர் தெரிந்தே
ஆங்காயவ னுரையாவித மவன்மேல்விழுந் தழுதார்
தாங்காதவ னுயிர்தீர்ந்தனன் தனம்போற்பகை யுளதோ.

ஓர் இவறன்மையுடையான் தான் சாகும்பொழுது பொருளைத் தானம் செய்யவேண்டுமென்று நினைத்துத் தேன்போலும் சொல்லையுடைய மனைவியையும் மைந்தரையும் அழைத்தான். அவர்கள் அவன் கூப்பிடுங் குறிப்பு உணர்ந்தனர். அவ்விடத்து அந் நோக்கமுடைய அவன் அச் சொல்லைச் சொல்லவிடாதபடி அவர்கள் அவன்மேல் விழுந்து அழுதார். அவர்கள் தன்மேல் விழுந்தது தாங்காது இழுத்துக்கொண்டிருந்த மூச்சு நின்று உடனே இறந்தான். அவனுடைய பணமே அவன் சாவுக்குக் காரணமாயிருந்ததால்,பணம்போல் கொடியபகை வேறுண்டோ?

பிசினன் - இவறன்மையுடையான்; உலோபி. தேம் - தேன். விளித்தான் - அழைத்தான். ஆங்கு - அவ்விடத்து. ஆயவன் - அப்படிப்பட்டவன்.

கங

---

1. ஈரங்கை. திருக்குறள், க0எஎ.

# அதி. உசு—சோம்பல்

*மடியராய் உழையாதார் மரம் சவம் ஆவரே*

சிற்றெறும் பாதியாச் சீவ கோடிகள்
முற்றுமெய் யுழைத்துயிர் முறையிற் காக்குமால்
சற்றுமெய் யசைவிலாச் சழக்க ராருயிர்
அற்றவோர் சவங்கோன்மற் றசர மேகோலோ.

*சிறிய எறும்பு முதல் பெரிய யானைவரை எல்லா உயிரினங்களும் உழைத்து முறையாகத் தம் உயிரைக் காக்கின்றன. உடல் ஒரு சிறிதும் அசையாது மடியராய் இருக்கும் தீயோர் உயிர்அற்ற சவமோ? அல்லது நிலைத்திணையாகிய பட்ட மரமோ?* க

*உழையாது சோம்புவோர் ஒரு பெருந் தீயரே*

விடக்குறுஞ் சடம்பல வேலை செய்தற்கா
நடக்கவு மோடவு நனியு றுப்புகள்
மடக்கவு நீட்டவும் வாய்ந்த தாற்சும்மா
கிடக்குமெய்ச் சோம்புளோர் கேடு ளார்களே.

*இறைச்சி நிறைந்த அறிவில்லதாகிய இவ்வுடல் வேலை செய்தற் பொருட்டே, உறுப்புகள் நடக்கவும், ஓடவும், மடக்கவும், நீட்டவும் பொருத்தமாக வாய்ந்தன. அப்படியிருந்தும், வேலை செய்யாது அவ் வுறுப்புகளை வறிதே கிடக்கும்படி செய்வோர் தீயவராவர்.*

*விடக்கு - இறைச்சி. சடம் - அறிவில்லது; உடல். சும்மா - வறிது.* உ

*குடும்பம் பேணுவோர் சோம்பலைக் கொள்ளார்*

தெளிவுற நூல்பல தினமும் வாசித்து
மிளிருடல் வருந்தியும் வெறுக்கை யீட்டிநற்
கிளிமொழி மனைவியைக் கிளைஞ ரைப்பல
எளியரைத் தாங்குவோர்க் கில்லை மந்தமே.

*மெய்ந்நூல்களை நாடோறும் தெளிய ஓதி, விளங்கும் உடல் வருந்தப் பாடுபட்டுப் பணம்தேடி, கிளிமொழிபோன்ற மனைவியையும் கிளைஞர்களையும் பல எளியவர்களையும் பேணி வருவோர்க்குச் சோம்பல் உண்டாகாது.*

*தெளிவுற - (ஐயந்திரிபின்றிச்) செம்மையாக. வெறுக்கை - பணம். மந்தம் - சோம்பல்.* ௩

## வேறு

### வறுமை, பாவம், துன்பம் சோம்பலால் வரும்

மடிசேரு மவர்க்கொரு நாளுமறல்
விடியாதவர் நெஞ்சிடை வெந்துயரே
குடியாகு மறந்தொடர் குற்றமெலா
நெடிதாக வளர்ந்திடு நிச்சயமே.

ஒன்னார்க்கு அடிமைப்படுத்தும் வன்மைவாய்ந்த மடியைமேற் கொள்வார், எப்பொழுதும் வறுமைப்பிணி நீங்கார்; மனத்திடத்துக் கடுந்துன்பம் குடிகொள்ளும்; பாவம் சேரும் தீமைகளெல்லாம் வளரும்; இவை உறுதியேயாம்.

மடி - சோம்பல். மறல் - வறுமை. மறம் - பாவம். நிச்சயம் - உறுதி. அ

## வேறு

### கொடுமையும் களவும் கொள்வர் சோம்பரே

பாரெல் லாமாள் வேந்தரு நூல்தேர் பண்போருஞ்
சீரெல் லாஞ்சூழ் செல்வரு மந்தஞ் சேராரே
நேரில் லாமா பாதகர் தீனர் நெடுஞ்சோரம்
ஊரெல் லாஞ்செய் துய்பவர் மாசோம் புடையாரால்.

உலகையாள் வேந்தரும் கற்றுவல்ல புலவரும் சிறப்பெய்தும் செல்வரும் சோம்பலுடையவராயிரார. பெரும் பாதகரும் கொடியவரும் ஊரெல்லாம் களவு செய்யும் பெருங்கள்ளரும் மிக்க சோம்புதல் உடையவராவர்.

பார் - உலகம். மந்தம் - சோம்பல். தீனர் - கொடியவர். சோரம் - களவு. இ

### உழையாச் சோம்பர் பெருவசை உறுவர்

எய்யா வம்பே வல்லிசை மாறி யிறுமென்று
மெய்யா விரத மாழி யொடுங்கெட் டொழியுந்தம்
மெய்யா னதுவே வியர்வை யுறப்பல் வினைகையாற்
செய்யா தவரே நோய்பல வுற்றுத் தேய்வாரே.

நெற்றி வியர்வை நிலத்தில் விழ உடம்பு வருந்திப் பாடு படாதவர் பல நோய்உற்று மாய்வர். இசையிழந்து வசை பெறுவர். கொண்ட கொள்கையும் கெட்டழிவர்.

வம்பு - வசை. வல்லிசை - உறுதியான புகழ். விரதம் - கொள்கை. சு

வேறு

உடல் அசையார் உறுவர் பெரும்வசை

அசையும் வளிபுவி அசையும் அனல்சலம்
அசையும் மரம்விளை பயிரேலாம்
விசையி னுடுமவை யசைவ திலையெனில்
விளியு மெனல்நிசம் நரர்கள் தந்
தசைகோள் உடல்நிதம் அசைய வினைபல
தரணி மிசைபுரி கிலரேனில்
இசையும் வலிகெடும் நலிகள் அடுமுறும்
இசையின் மிசையோடு வசையுமே.

காற்று நிலம் நெருப்பு நீர் முதலியன அசையும். மரம் பயிர் முதலியவும் அசையும். இவையெல்லாம் விரைவுடன் அசைய வில்லையானால் அழிவெய்தும் என்பது உண்மை. இவைபோன்று மக்களும் தம் உடம்பு அசையும்படி உலகில் பல செயல் செய்யா ராயின் பொருந்திய உடல்வலி கெடும். துன்பங்கள் வருத்தும். புகழின்மேலாக இகழ்வு பெருகும்.

இசை - புகழ். மிசை - மேல். வசை - இகழ். எ

# அதி. உரு—சினம்

*மெலியரைச் சினப்போர் ஆழ்வர் மீளா நரகில்*

வலியரைச் சினப்போர் வரையினின் மோது
மட்கல மெனவுடைந் தழிவார்
பொலிவுறத் தமையொப் பவர்களைச் சினப்போர்
புலியிரண் டொன்றையொன் றடித்து
மெலிவொடு இரண்டுங் கெடுவபோற் கெடுவார்
மெலியரை வெகுளுவோர் வேங்கை
எலியினை யெதிர்த்த தன்மையோ லிழிவுற்
றெரிநர கிடையமிழ்ந் துவரே.

*ஆறவேண்டிய சினம் மீறி மிக்கோரைச் சினந்தால் மலையில் மோதும் மட்கலம்போன்று சினந்தவர் அழிவர். ஒத்தவரைச் சினந்தால் இரண்டு புலி ஒன்றோடொன்று சண்டையிட்டு இரண்டும் கெடுவபோல் கெடுவர். தாழ்ந்தாரைச் சினந்தால் வேங்கைப் புலி, எலியை எதிர்த்துப் பழி பெறுவதுபோல் இகழ் வெய்தித் தீவாய் நரகில் அழுந்துவர்.*

*வலியர் - மிக்கார். மெலியர் - தாழ்ந்தோர்.* க

### வேறு

*மெலியர்பால் சினம் வேண்டுமென்றே கொள்வர்*

எம்மை யுந்தெரி யாமலிச் சினம்வந்த தென்பீர்
உம்மை நோய்செயும் வலியரை வெகுண்டிடா தொளிப்பீர்
இம்மை வாழ்விலா எளியர்பாற் றினமுமக் கெய்தும்
வெம்மை நீரறிந் தோவறி யாமலோ விளம்பீர்.

*உமக்குத் துன்பஞ் செய்யும் வலியவர்மேற் சினம் வந்தால் அச் சினத்தை யடக்கி மறைக்கும் நீர், வலிமையில்லாத எளியவர் பால் சினங்கொள்வது உமக்குத் தெரிந்தா தெரியாமலா? தெரியாமல் வந்ததென்று நீர் சொல்லுவது பொருந்துமா?* உ

*சினங்கொள்வார் நெஞ்சுடற் சேருந் துன்பம்*

கண்சி வந்திட மெய்யெலா நடுங்கிடக் காலான்
மண்சி தைந்திட வுதைத்துநாக் கடித்திதழ் மடக்கி
எண்சி தைந்திடச் சினங்கொள்வீர் நும்மெயோ டிதயம்
புண்சு மந்தத லாற்பிறர்க் கென்குறை புகல்வீர்.

தீப்போற் கண் சிவப்பேற உடம்பெலாம் நடுங்க மண்ணைக் காலால் உதைத்து நாக்கைப் பல்லால் கடித்து உதட்டை மடக்கிக் கருத்தழியச் சினங் கொள்வீர் அச் சினத்தால் உம்முடைய நெஞ்சந் துடிக்கும்; உடம்பெலாம் கொப்புளிக்கும். இவற்றையன்றிப் பிறர்க்கு என்ன குறையுண்டு சொல்வீர்.

இதழ் - உதடு. எண் - கருத்து. இதயம் - நெஞ்சு; புண் - கொப்புளம். ௩

தன்னுருவம் தான்தேருத் தகைசினத் தால்வரும்

கோட வாண்முகஞ் சுழித்திதழ்
மடித்தெழில் குலையச்
சேடன் மீதியான் சினமுற்ற
பொழுதெதிர் திகழும்
ஆடி நோக்கயா னியான்கொன்மற்
றூர்கொலன் றயிர்த்துத்
தேடி நோக்கவோர் குரூபமே
கண்டுளந் திகைத்தேன்.

ஒளிபொருந்திய முகத்தைக் கோணவைத்துச் சுருக்கு விழ உதட்டை மடித்து அழகுகெட வேலையாள்மேல் சினங்கொண்டேன். அப்பொழுது என் எதிரிலிருந்த கண்ணாடியில் என் முகத்தைப் பார்த்தேன். எனக்கே ஐயம் உண்டாகிவிட்டது. யான் யானு? மற்று யாரோ? என்று. நன்றாக ஆராய்ந்து பார்க்க என் தீய உருவமே கண்டு உள்ளந் திகைத்தேன்.

கோட - கோண. சுழித்து-சுருக்கி. எழில் - வளரும் அழகு. சேடன் - வேலையாள். ஆடி-கண்ணாடி. குரூபம் - தீய உருவம். ௪

சினமுளோர்ன் இறக்கின் சேர்ந்தாரும் மகிழ்வர்

சினமு ளோன்மனை மைந்தர்க ளவன்வெளிச் செல்லுந்
தினமெ லாந்திரு விழவுகொண் டாடுவர் செல்லாது
இனையன் தங்குநா ளிழவுகொண் டாடுவ ரிறப்பின்
மனையி லோர்பெரு மணவிழா வந்தென மகிழ்வார்.

சினமுள்ளவனின் மனைவியும் மக்களும் அவன் வெளியில் போகும் நாளெல்லாம் வீட்டில் திருவிழாக் கொண்டாடுவர். வெளியில் போகாது வீட்டில் தங்குநாளில் இழவு கொண்டாடுவர். அவன் இறந்தால் அன்று வீட்டில் திருமணவிழா வந்ததுபோல் மகிழ்வர்.

இனையன் - இப்படிப்பட்டவன்; சினமுள்ளவன். ௫

*சினமுளார் நச்சுயிர்சேர் துன்புறுவர்*

நாளு நாங்கோளுந் துயர்க்கெலாங் காரண நாடின்
மூளுஞ் சீற்றத்தின் விளைவதா முனிவக முடையோர்
தேளும் பாம்பும்வெஞ் சினவிலங் கினங்களு நனிவாழ்ந்து
ஆளுங் கானில்வாழ் பவரேனத் தினமளு ரடைவார்.

*என்றும் நாம் அடையும் துன்பத்திற்குக் காரணம் சினமேயாம். உள்ளத்தில் சினமுடையோர் தேள் பாம்பு கொடிய விலங்குகள் முதலியன மிகுதியாக வாழ்ந்து ஆட்சிசெய்யும் கொடுங்காட்டில் வாழ்பவர் போன்று நாள்தோறும் நீங்காத் துன்பம் அடைவார்.*

*நாளும் - என்றும். முனிவு - சினம். அகம் - உள்ளம். தினம் - நாள்தோறும். அளுர் - துன்பம்.* சு

*அறிவிலா வேலையாளைச் சினப்பது அறமன்று*

தழையுஞ் செல்வத்துட் பிறந்துநல் லோரவை சார்ந்து
பிழையில் நூலெலா முணர்ந்துநீ வைகலும் பிழைத்தாய்
இழையுந் தீனராய்ப் பிறந்துகற் றிடவகை யில்லா
உழையர் செய்பிழைக் காமுனிந் தனையிதேன் னுளமே.

*உள்ளமே! வளரும் செல்வத்துட் பிறந்து நல்லோர் கழகம் சேர்ந்து குற்றமற்ற நூல்களையெல்லாம் உணர்ந்து நாடோறும் நீ வாழ்கின்றாய். மூச்சுவிடவும் வலியில்லாத வறியராய்ப் பிறந்து கற்க வகையில்லாமல் உன்னையன்றிப் புகலிடமில்லாமல் வேலை செய்யும் உன் வேலையாளைச் சினப்பது தகுதியா?*

*தழைதல் - வளர்தல். அவை - கழகம். வைகலும் - நாள் தோறும். உழையர் - வேலையாள்.* எ

வேறு

*கடுஞ்சினம் கோடல் கல் அம்பைக் கடிதலாம்*

பைதலே யெய்த லாதிப் பரன்செய லாமப் பைதல்
செய்தவர் தமைச்சி னத்தல் சினவரா தன்மேற் கல்லைப்
பெய்தவன் தனைவிட் டக்கல் பிளந்திடப் போரலுங் கையால்
எய்தவன் தனைவிட் டம்பை முனிதலு மேய்க்கு மாலோ.

*துன்பம் வருதல் நம் செய்வினைக்கீடாக முழுமுதற் கடவுள் ஆணையாம். அத்துன்பத்தை நேர்நின்று செய்தவரிடம் சினம்*

கொள்ளல் சினங் கொள்ளப்போதல் தம்மேற் கல் எறிந்தவனை விட்டு விட்டு அக்கல்லைப் பிளக்கச் சண்டை செய்வதையும் அம் பெய்தவனை விட்டு விட்டு அம்பை முனிவதையும் ஒக்கும்.

பைதல் - துன்பம். அ

விலங்கோ டறிவில் சிறூர்பித்தா கிழவர் வெகுள்வர்

தெருளுறு விலங்கி னுக்குந் தெளிவறி யாச்சி றூர்க்கும்
மருளுறு பித்த ருக்கும் மடவிருத் தருக்கும் கோபம்
பொருளலால் அயலோர்க் கில்லை புகன்றவிந் நால்வரேயோ
அருளறு சினமீக் கொள்வார் அனையருள் ஒருவ ரேயோ.

தெளிவில்லாத காட்டுக் கொடிய விலங்குகளும் நல்லறிவு வாயாத சிறுபிள்ளைகளும், மயக்கமுடைய பித்தரும்; அறிவில்லாத முதியோரும் சினங்கொள்வதல்லால், மற்றையோர் சினம் கொள்ளார். சினம் கொண்டால், சினம் கொண்டவர் இந்நால்வரோ அல்லது அவருள் ஒருவரோ?

தெருள் - தெளிவு. மருள் - மயக்கம். மடம் - அறியாமை. விருத்தர் - முதியோர். க

சினத்தால் வெற்றி பகைக்கே சேரும்

பெற்றதன் நாட்டை யாளான்
பிறர்நாட்டை யாள்வான் கொல்லோ
உற்றதன் சீற்ற மாற்றி
உரத்தோடு தனைத்தான் வெல்லக்
கற்றறி யானொன் றூராங்
கனலிக்கோர் வையே யாவன்
கொற்றமவ் வோல்லார் கொள்வார்
கோபம்போல் தாப* முண்டோ.

தன் நாட்டை ஆளத்தெரியாதவன் பிறர் நாட்டை எப்படி ஆளுவன்? தன் சினத்தை அடக்கித் தன்னையே வெல்லத் தெரியாதவன் பகைவனை எப்படி வெல்லுவன்? சினமுள்ளவன் பகைவனுக்குத் தீ முன்பட்ட வைக்கோலாவன். அதனால் பகைவனே வெல்லுவான். கோபம்போல் பெருந்தீ வேறொன்றில்லை.

---

* சினமென்னும். திருக்குறள், ௩0௬.

கனலி - நெருப்பு. வை - வைக்கோல். கொற்றம் - வெற்றி. தாபம் - தீ. க0

## வேறு

செய்வோரைத் திருத்தவே செய்கையிற் சினமுறல்

உருமினை யஞ்சியாரு மிகழுவ ரன்றியாய
　　ஒலிதரு கின்றகாரை முனிவரோ
தருவுறை கின்றதீய முயிறுக ளன்றியாய
　　தருவைவே குண்டுசீறல் தகுதியோ
அருமறம் மீதுபகை செயலன்றி நாளுமவை
　　புரிகின்ற தீய அசடர்பால்
பெருமுனை கொண்டுகோய்தல் அழகல வென்றுகோதில்
　　பெரியவர் என்றும்ஆள்வர் கலரையே.

இடிமுழக்கங்கேட்டு எல்லாரும் நடுங்கி அவ் இடியை இகழுவர். இடிக்கு இடமாகிய மேகத்தைச் சினப்பரோ? (சினவார்.) பெரியமரங்களில் தங்கியிருக்கும் கடிஎறும்பைச் சினப்பதல்லாமல் அம்மரங்களைச் சினத்தல்பொருத்தமாகுமோ? பாவத்தின்மீது பகையின்றிப் பாவவினையைச் செய்யும் மூடர்பால் சினந்துகொள்ளுதல் சீராகுமோ? இவை எல்லாம் தக்கன ஆகாவென்று குற்றமற்ற பெரியவர் எந்நாளும் அத்தீயவர்களைத் திருத்தி நல்வழிப்படுத்துவர்.

உரும் - இடி. தரு - மரம். முயிறு - கடி எறும்பு. அரும் - கொடிய. மறம் - பாவம். அசடர் - மூடர். கோதில் - குற்றமில்லாத. ஆள்தல் - நல்வழிப்படுத்தல். கலர் - தீயவர். கக

## அதி. உசு—பொறாமை

*பேராசை யுள்ளோர் பெருங்கே டெய்துவர்*

மாங்கனி வாயிற் கவ்வி
மரத்திடை யிருக்கு மந்தி
பாங்கர்நீர் நிழலை வேறோர்
பழமுணுங் குரங்கென் றெண்ணித்
தாங்கரு மவாவிற் றாவிச்
சலத்திடை யிறந்த தொப்ப
நீங்கரும் பொறாமை யுள்ளோர்
நிலத்திடைக் கெடுவர் நெஞ்சே.

*குரங்கு மாம்பழத்தை வாயில் பற்றிக்கொண்டு மரத்திடை யிருந்தது. பக்கத்து நீரில் தன் நிழல் தோன்றிற்று. அதை வேறோர் குரங்கு பழம் வாயில் வைத்திருப்பதாக நினைத்தது. அதைப் பிடுங்க ஆசைகொண்டது. நீரில் பாய்ந்து இறந்தது. இதைப்போன்று பொறாமைப் படுகிறவர்கள் உலகத்தில் கேடடைவார்கள்.*

*கனி - பழம். கவ்வி - பற்றி. மந்தி - குரங்கு. பொறாமை- பேராசை.*

க

*பொய்இன்ப துன்பைப் பொறாமையன் கொள்வன்*

தாரணியி லெவரேனுந் துயருற்றன்
தலையின்முடி தரித்த தொப்பாஞ்
சீரணியுஞ் செல்வமவர் படைத்திடிற்றன்
தாய்மனைசெய் செத்த தொப்பாங்
காரணமே யொன்றுமின்றிச் சுகதுக்கந்
தன்வலியாற் கணத்துக் குள்ளே
பூரணமா வாக்கிடுவோன் பொறாமையுளோன்
அன்றியெவர் புவியின் கண்ணே.

*பிறர்வாழ மனம் பொறுக்காத் தீயோருக்கு உலகில் யார் துன்புறினும் தந்தலையில் முடி சூடியது ஒப்பாம். பிறர் செல்வம்*

பெற்றூர்களானுல் தங்கள் தாய், மனைவி மக்கள் செத்த தொப்பாம். இப்படி ஒரு காரணமுமின்றி நொடிப்பொழு தினுள் தங்கள் மனத்துள்ளே இன்ப துன்பங்களை ஆக்கிடும் வன்மை பொருமையுள்ளார்க்கன்றி எவர்க்கு முடியும்?

*தாரணி - உலகம்.* உ

பொருமையால் பயன்வாரா பொருந்தும் பெரும்பாவம்

வவ்விடலே முதலாய வினையாலோவ்
வோர்பயன்கை வந்து கூடும்
அவ்வினைக ளியற்றவெவ்வே றிடங்கருவி
சமையமும்வந் தமைய வேண்டும்
எவ்விடத்தும் எப்பொழுதும் ஒழியாமல்
எரியென்ன இதயந் தன்னைக்
கவ்வியுண்ணு மவ்வியத்தாற் கடுகளவு
பயனுளதோ கருதுங் காலே.

கவர்தல் முதலாய தீமைகளால் ஒவ்வொரு பயன் வந்து கை கூடும். அதற்கும் இடம், கருவி, காலம் எல்லாம் பொருத்த மாக அமையவேண்டும். உள்ளத்தைத் தீப்போற் கவர்ந்து மேலெழும் பொருமைக் குணத்துக்கு இடம், காலம் எதும் வேண்டா. எப்பொழுதும் நிகழும். ஆனுல், அதனுல் கடுகளவு பயனும் கிடையாது.

*வவ்விடல் - கவர்தல். சமையம் - காலம்.* ௩

பொருமைத் துன்பத்தால் பொருந்திடா தப்பொருள்

ஆண்டே லாம்பிற ராக்க நோக்கியே
மீண்டு மீண்டுநெட் டுயிர்ப்பு வீங்கினுந்
தாண்டி யவர் தனந் தாழ்ந்துன் கைமிசை
ஈண்டுச் சேருமோ இதயமே சொலாய்.

ஆண்டு முழுவதும் பிறர்வாழ்வைக் கண்டு மீண்டும் மீண்டும் பெருமூச்சுவிட்டு வயிறு பொருமினுலும், அவ்வாழ்வு அவரை விட்டு விலகி உன் கைக்கு வந்து சேராது; நெஞ்சமே இதைக் கருதிப்பார்.

ஆக்கம் - செல்வம்; வாழ்வு. நெட்டுயிர்ப்பு - பெருமூச்சு. வீங்கினும் - பொருமினுலும்.

௪

பொறாமைத் துன்பம் போகா தொருநாளும்

மக்கள் பலருளார் மகிவி சாலமாம்
பக்க மவர்தினம் படைப்ப ரோர்நலம்
ஒக்க அதுபொறு துள்ள நைந்திடில்
துக்க மோயுமோ சொல்லென் நெஞ்சமே.

உலகம் பெரும் பரப்பினை உடையது. அப்பரப்புக்கு ஏற்ற வாறு மக்களும் பலர் வாழ்கின்றனர். அவர்கள் எல்லாரும் ஒவ்வொருநாளும் ஒவ்வொரு நலம் பெறுவர். அவற்றையெலாம் கண்டு மனம் பொறாது உள்ளம் இடிந்தால் அத் துன்பம் என்று முடியும்? நெஞ்சமே நீ சொல்

மகி - உலகம். விசாலம் - பரப்பு. நைந்திடில் - இடிந்தால். ஓயும் - என்று முடியும்? ரு

அவ்வியம் கொள்ளார் அறிவு மாண்புடையார்

நிறையு நீர்க்கசை யில்லை நீணிலத்து
அறையுங் கல்வியில் அறிவின் மேன்மையில்
குறையு ளார்க்கலாற் கோதின் மாண்பினூர்க்கு
இறையும் அவ்வியம் இல்லை யில்லையே.

கலம் நிறைய நீர் இருப்பின் அந்நீர் அசைந்து ஓசையிடாது. உலகத்துக் கல்வி யறிவினால் மேன்மையுற்றோர் பொறாமை கொள்ளார். அவற்றால் குறையுடையவரே பொறாமை கொள்வர்.

அவ்வியம் - பொறாமை. சு

தீமைக்கு வருந்துவோர்ச் சேரும் பெருந்துன்பம்

அறமு ளார்கள்போல் அறிஞர் போல்புகழ்
பெறவ ருந்துதல் பெருமை யாயினும்
புறமு ளார்கள்போல் பொருளி லேமென
உறுமவ் வுறுகணே உறுக ணீயுமே.

நன்மையுள்ளவர்களையும் அறிவுள்ளவர்களையும்போல் இசையுண்டாகப் பாடுபடுதல் மேன்மை. ஆனால் பிறரைப்போலப் பொருளில்லையே என்று பொறாமைகொண்டு வருந்தும் வருத்தம் பெருந் துன்பம் தரும்.

புகழ் - இசை. புறமுளார் - பிறர். பொருள் - பணம். உறுகண் - வருத்தம். உறுகண் - பெருந்துன்பம் எ

### வேறு

கொள்ளும் பொருமையால் கூடும் புதுத்துன்பம்

பூட்டுமரி கண்டம் புனைந்தழுங்கு வார்போலுந்
தோட்டியினைத் தானே சுமந்துகெடுங் கயம்போலும்
வாட்டுந் துயர்கள்பல வைய மிசையிருக்கக்
கோட்டமுளோர் வேறு குலந்தமக்குண் டாக்குவரே.

கழுத்தில் இருப்பு வளையம் மாட்டித் துன்புறுவாரைப் போலவும், தோட்டியைச் சுமந்து துன்புற்றழியும் யானை போலவும், உலகில் முன்வினைக்கீடாகப் பல வருத்தப்படும் மக்கள் பொருமைத் துன்பத்தை வேருகக்கொண்டும் வருந்துவர்.

அரிகண்டம் - கழுத்தில் மாட்டும் இருப்பு வளையம். கோட்டம் - வளைவு; பொருமை. ஆகுலம் - துன்பம். அ

---

## அதி. உஎ—கல்விச் செருக்கு

கல்வியால் செருக்குறக் காரணம் இல்லை

என்ன நீவருந் திக்கவி பாடினும்
எடுத்தகற் பனைமுன்னோர்
சொன்ன தேயலால் நூதன மோன்றிலைத்
தொன்மைநூல் பலவாகும்
முன்னந் நூலெலாந் தந்தவ னீயலை
முற்றுணர்ந் தனையல்லை
உன்னின் மிக்கவர் பலருளார் கல்வியால்
உள்ளமே செருக்கென்னே.

நெஞ்சமே! நீ வருந்திக் கவி பாடினும் அக்கவியின்கண் காணப்படும் கற்பனை நயங்களெல்லாம் முன்னோர் பாடியனவே அன்றிப் புதிது ஒன்றுமின்று. முன்னுள்ள நூலும் பலவாகும். அவை எல்லாந் தந்ததும் நீயன்று. எல்லாங் கற்று முற்றுணர்ந்ததுமில்லை. உன்னை விடக்கூடக் கற்றவரும் பலருளர். அதனல் கல்வியால் செருக்குதல் தக்கதன்று.

நூதனம் - புதிது. தொன்மை - பழைமை. செருக்கு - இறுமாப்பு; தற்பெருமை. க

### எல்லாம் உணர்ந்தோம் என்று இறுமாத்தல் தீது

தருக்க நூலறி வோர்வியா கரணநூல்
தகவறி யார்தேர்ந்தோர்
இருக்கி லக்கிய முதலறி யார்பலர்
இன்கவி செயக்கல்லார்
சுருக்க மாகவோர் நூலினிற் சிறிதலால்
துகளற எந்நூலும்
பெருக்க மாவுணர்ந் தோரிலைத் தருக்குறல்
பேதைமை நீர்நெஞ்சே.

*அன்புள்ள நெஞ்சே! அளவை நூல் உணர்ந்தார் இலக்கண நூலின் தன்மை யறியார். இலக்கண நூலறிந்தார் அவ்விலக்கண அமைதியுள்ள இலக்கியத்தின் முதன்மை யறியார். பலர் இனிய செய்யுள் செய்யும் ஆற்றல் இலராவர். ஒரு நூலிலும் சிறிது கற்பதல்லால் முற்றும் கற்று வல்லராகார். இப்படியிருக்கக் கல்வியால் தற்பெருமை கொள்ளல் அறியாமைத் தன்மையேயாம்.*

*தருக்கம் - அளவை. வியாகரணம் - இலக்கணம்.* உ

### யார்க்கும் முழுதுணர இயலா செருக்கலென்?

அத்திரங்கள் செய்வோர்தாம் எய்தல் தேரார்
ஆய்ந்தெய்ய அறிந்தோரம் பியற்றல் தேரார்
சித்திரங்கள் பொறிப்பவர்தாங் கருவி செய்யார்
திகழ்கருவி செய்பவர்சித் திரித்தல் கல்லார்
வத்திரங்கள் பூண்போர்நெய் தறியார் இன்ன
வாய்மைபோ லொன்றறிவோர் ஒன்று கல்லார்
சத்தியமாச் சகலமுநன் குணர்ந்தோர் போலத்
தருக்குற்றார் பெருக்குற்றார் திருக்குற் றாரே.

*படைக்கருவி உண்டாக்குவோர் அப்படையினைப் பகைவன் மேல் குறித்தப்பாமல் எறிய அறியார்; படை எறிய அறிவோர் படைக் கருவியை உண்டாக்க அறியார்; ஓவியம் எழுதுவோர் அதற்கு வேண்டும் கருவிசெய்ய அறியார்; கருவி செய்வோர் ஓவியம் எழுத அறியார். ஆடை யணிபவர் நெய்ய அறியார்.*

இவைபோன்று ஒன்றறிவோர் ஒன்று அறியாராவர். ஆதலால் எல்லாம் அறிந்தோமென்று செருக்குக் கொள்பவர் பாவத்தைப் பெருக்கியவராவர். மேலும் தம்மையே வஞ்சித்தவரும் ஆவர்.

அத்திரம் - படைக்கருவி. எய்தல் - எறிதல். சித்திரம் - ஓவியம். தருக்கு - செருக்கு. பெருக்கு - (பாவம்) பெருக்குதல். திருக்கு - வஞ்சனை. ரு

## வேறு

*நூல்கற்றுச் செய்யுள் நுவல்வதால் செருக்கலென் ?*

பருத்திவிதைத் தேடுத்துநூ லாக்கி யாடை
பண்ணியளித் தாலுடுத்தல் பார மாமோ
திருத்திமண்ணிற் செந்நெல்விதைத் தரிசி யாக்கித்
தீஞ்சோறட் டேட்டிலுண்ணச் செவ்வாய் நோமோ
அருத்தமொடு மிலக்கணங்க ளிலக்கி யங்கள்
அரியநூல் பலமுன்னோ ரளித்த தாலே
கருத்தேயந் நூல்கள்சில கற்று ணர்ந்து
கவிசொல்லல் வியப்பன்று கர்வ மென்னே.

பருத்தியைப் பயிராக்கி நூலெடுத்து ஆடைசெய்து தந்தால் உடுத்தல் வருத்தமா? நெல்லை விதைத்து அரிசியாக்கிச் சோறு தந்தால் உண்ண வாய் நோவுமா? முன்னுள்ளோர் இலக்கண இலக்கியங்கள் முடிய அமைத்துத் தந்துள்ளார்கள். அவற்றுள் சில கற்றுக் கவிசொல்லும் நெஞ்சே! ஏன் செருக்குக் கொள்கின்றாய்? இவ்வாறுள்ள நிலையில் பாட்டுப் பாடுவது ஒரு புதுமையன்று.

அடுதல் - சமைத்தல். வியப்பு-புதுமை. கர்வம்-செருக்கு. ச

## வேறு

*வெயில்முன் கல்லார் விளக்குமின் மினியே*

இய[illegible]லோடு தமிழ்மூன்று மேள்ளளவுந் தேராய்
அயர்வ[illegible]வு கலைஞான மறுபதி னெடுநான்கும்
பயனொடு [illegible]தேர்வாரே பலருள ரவர்முன்நீ
வெயிலின்மு[illegible]ர் இடுதீப மின்மினி யாநெஞ்சே.

இயல் இசை நாடக[illegible]ம் என்னும் முத்தமிழையும் அதனதன் தன்மையுடன் ஒரு சிறிதும[illegible] உணர்ந்தாயில்லை. கலையொழிக்கும்

கலைகள் அறுபத்து நான்கும் கற்றுப் பயன் தெளிவார் பலர். அவர் முன்னிலையில் நெஞ்சே நீ கதிரவன்முன் வைக்கப்படும் விளக்கும் மின்மினியும் போல் ஆவாய்.

இயல் - தன்மை. அயர்வு - கவலை. ரு

## வேறு

உண்மை யுணராது செருக்கல் ஒவ்வாது

எறும்புதன் பிலத்தைத் தன்னை
யாவுமென் றன்ல்போல் அண்டத்து
உறும்புவ னங்க ளேண்ணில்
உவைமுன்னம் நரரும் பாரும்
இறும்புமுன் அணுவோ வாழி
யெதிரோரு துளியோ நில்லாது
அறும்படி வத்தின் மாக்கள்
அகம்அகம் மிகல்த காதால்.

சிற்றெறும்பானது தன்னையும் தன் குழியையுமே எல்லா உலகமும் என்று எண்ணுவதுபோல், அண்டத்தைச் சார்ந்த புவனங்களுக்கு அளவு இல்லை. அவைகளுக்கு முன் மக்களும் இந்த உலகமும் மலைக்குமுன் அணுவோ ஒரு துளியோ ஆகா. நிலையில்லாத உடம்பினையுடைய மக்கள் உள்ளத்துச் செருக்குக் கூடும்படி செய்வது பொருத்தமாகாது.

பிலம் - வளை; குழி. புவனம் - உலகம். இறும்பு - மலை. அணு - மிகச் சிறியது. அகம் - உள்ளம். அகம் - செருக்கு. மிகல் - கூடுதல். தகாது - பொருந்தாது. சு

---

## அதி. உஅ—அழகாற் செருக்கல்

*ஆடையணி நீக்கின் அழகொன்றும் இன்று*

எழிலு ளேமெனச் செருக்குறு நெஞ்சமே யிழைதுகில் நீத்தங்கம்
கழுவிடாதுற நோக்குதி முகந்தனைக் கஞ்சந் தனில்நோக்கின்
எழுநி லத்திடை யுன்னின்மிக் காருள ரெனவறி வாயீமத்து
அழியும் வெண்டலை யுன்றலை போலிருந் தவணுற்றதறிவாயே.

*நெஞ்சே நீ 'அழகு மிகுதியாய் இருக்கிறோம்' என்று எண்ணித் தற்பெருமை கொள்ளாது இரு. உன்னுடைய ஆடையணியையும் அகற்றி, உறுப்புக்களையும் கழுவாது, கண்ணாடியில் உன் முகத்தைப் பார். பார்த்தால் உலகத்தில் உன்னைவிட அழகின் மிக்கவர்கள் இருக்கிறார்கள் என்று அறிவாய். சுடுகாட்டில் புறக்கணிக்கப் பட்டுக்கிடக்கும் வெள்ளிய தலைமண்டை உன் தலைபோல் முன் இருந்ததுதான் அங்குப் போய்ச் சேர்ந்ததென்று அறிந்துகொள்.*

*எழில் - அழகு. இழை - நகை; அணி. நீத்து - அகற்றி. அங்கம் - உறுப்பு. கஞ்சம் - கண்ணாடி* க

வேறு

*உறுப்புடல் அழகெலாம் எலும்பாய் ஒழியும்*

தோல்வாசம் துறந்திறந்து கிடந்தஅழ
கியைக்காணச் சுடலை சென்றோம்
கோல்போன்ற வெள்ளென்பின் குவையொன்றே
கண்டனஞ்செங் குமுத வாயும்
நூல்போன்ற இடையுமன நடையுமணி
தனமுமதி நுதலும் வாய்ந்த
சேல்போன்ற விழியும்பான் மொழியுங்கா
ணுமலளந் திகைத்தோ மன்னே.

*அழகும் மணமும் நீங்கி இறந்துகிடந்த அழகியென்னும் பெயருடைய பெண்ணைக் காணும்பொருட்டுச் சுடுகாட்டுக்குச் சென்றோம். கரும்புபோல் காணப்படும் எலும்பின் குவியலைக் கண்டோம். செவ்விய குமுத மலரையொத்த வாயும், இழையொத்த மெல்லிய இடையும், அன்னம்போன்ற நடையும், அழகிய கொங்கைகளும், எட்டாம்பிறைபோன்ற நெற்றியும், கெண்டை*

மீனையொத்த கண்களும், தீம்பாலையொத்த மொழியும் காணப் பெருமையால் மயங்கினோம்.

தோல் - அழகு. சுடலை - சுடுகாடு. திகைப்பு - மயக்கம். உ

நாறுடலழகால் செருக்குறுர் நல்லோர்

நோக்கதனிற் பீளையிரு செவிகளிலுங்
குறும்பியன நுகர்வா யெச்சில்
மூக்கதனிற் சளிதலையிற் பேன்வெயர்வை
மலசலங்கள் மூளு நாற்றம்
போக்கவோரு நாட்கழுவா விடிலழுக்கு
மிகத்திரண்டு புழுத்து நாறும்
ஆக்கமிலாத் தேகமிதை யழகென்னச்
செருக்கலறி யாமை யாமே.

கண்ணில் பீளை வடிதலும், காதில் குறும்பி சேர்தலும், வாயில் எச்சில் ஊறலும், மூக்கில் சளியுண்டாதலும், தலையின் கண் பேனும், உடம்பில் வெயர்வையும், ஒன்றுக்கிரண்டுக்குச் செல்லலும் அதனால் வரும் தீயநாற்றமும் ஆகிய இவற்றைப் போக்க ஒவ்வொரு நாளும் முழுகவேண்டும்; முழுகாவிட்டால் புழுத்து நாறும். இத்தகைய உடம்பில் காணும் அழகினுக்குச் செருக்குக்கொள்வது அறிவின்மையேயாகும்.

நோக்கு - கண். செருக்கு - தற்பெருமை. ௩

## வேறு

உடலுள் அழுக்கை உன்னில் செருக்குறுர்

கட்புலன்றனை யேகவர்ந்திடு கவினுளேமென வனுதினம்
பெட்புறப்புவி யிற்செருக்குதல் பெருமையன் றேளிர்பேருடல்
உட்புறத்தினை யேதிருப்பிடி லோங்கலாமலக் காடுசூழ்
மட்புறச்சுவர் தீட்டுசித்திர மானுநம்மெழில் நெஞ்சமே.

நெஞ்சே! கண்ணைக் கவரும் அழகுடையேம் என்று நாளும் உலகில் விருப்புடன் தற்பெருமை கொள்ளுதல் மாண்பாகாது. விளங்குகின்ற பெரிய உடம்பின் உட்பக்கத்தைத் திருப்பினால் மலைபோன்ற அழுக்குப் பெருக்கத்தைக் காணலாம். மண்சுவர் மேல் எழுதிய சித்திர அழகையொக்கும் நம் உடல் அழகு.

கவரும் - இழுக்கும். கவின் - அழகு. அனுதினம் - நாளும். பெட்புற - விரும்ப. ஒளிர் - விளக்கம். ஓங்கல் - மலை. மானும்- ஒக்கும். எழில் - ஓங்குமழகு. ச

### வேறு

*நயனிலான் உடலழகை நல்லோர் நயவார்*

மண்ணிற்செய் பாவைமீது வயங்குபோற் பூச்சோ தண்பூங்
கண்ணியை மாற்றிச் சூடுங் காட்சியோ பழம்பாண் டத்திற்
பண்ணிய கோல மோநற் பண்போடு ஞானங் கல்வி
புண்ணிய மேது மில்லான் பூண்டபே ரெழிலு டம்பே.

குணம் மெய்யுணர்வு படிப்பு நலத்தொண்டு முதலிய ஒன்று மில்லாதவன் கொண்டுள்ள உடலழகு, மண்பாவைமீது பூசும் பூச்சோ? அழகிய பூமாலையைத் துடைப்பத்தில் கட்டிக் காணும் காட்சியோ? பழைய ஏனத்தில் செய்த அழகோ?

வயங்கு - விளங்கு. மாறு - விளக்குமாறு; துடைப்பம். புண்ணியம் - நலத்தொண்டு. ரு

---

## அதி. உக—செல்வச் செருக்கு

*அழுக்கோ டழிபொருளால் அகங்கொளல் வீணே*

மணிகள்பல வகைக்கல்லாம் பொன்முதலு
லோகமின்னு மண்ணுங் கட்டி
துணிபட்டா டைகள்பருத்தி நூல்பூச்சிக்
குடர்நாயின் தோலு ரோமம்
அணிபுழுகு கத்தூரி முதலியபூ
னையின்மலம்பா லாவி ரத்தந்
தணிவில்தேன் வண்டேச்சில் இவைசெல்வ
மெனச்செருக்கல் தகுமோ நெஞ்சே.

நெஞ்சே! ஒன்பது வகையாக வழங்கும் மணிகள் கற்களாம். பொன் முதலியன மின்னுகின்ற மண்ணுங்கட்டிகள். துணி பட்டு முதலியன பருத்திநூல் பூச்சிக்குடர் நாயின்தோல் விலங்கு முதலியவற்றின் மயிர்கள். அணியப்படும் புனுகு கத்தூரி முதலி

யன பூனையின் அழுக்கு. பால் ஆவின் குருதி. சிறந்த தேன் வண்டின் எச்சில். இப் பொருள்களையே நிலையான செல்வ மென்று கருதி வீண் பெருமை கொள்ளுதல் தகுமோ?

மணி - இரத்தினம். புழுகு - புனுகு. ஆ - பசு. செருக்கல் - வீண் பெருமை கொள்ளுதல். க

தேரின் மணியுங்கல் செருக்குறல் வீணே

செங்கல்வெண்கல் கருங்கல்லை நவமணிக
ளெனச்செல்வர் சேர்ப்பார் யாமுஞ்
செங்கல்வெண்கல் கருங்கல்லைச் சேர்த்திட்டோ
மிருவர் கல்லுஞ்சீர்தூக் குங்கால்
நங்கல்லே யிடையதிகம் எங்கணுமுண்
டெதிர்ப்போரை நாசஞ் செய்யும்
பங்கமுறச் செல்வர்நம்மின் மிக்கோரேன்
றகங்கரிக்கும் பான்மை யென்னே.

மாணிக்கம் வைரம் நீலம் முதலிய கற்களைச் செல்வர்கள் மணிகள் எனச் சேர்ப்பர். யாமும் செங்கல் வெள்ளைக்கல் கருங்கல் இவற்றைச் சேர்த்து வைத்திருக்கிறோம். இருவர் கற்களையும் தராசிலிட்டு நிறுத்துப் பார்க்குமிடத்து நம்முடைய கல்லே எடை மிகுதியாக இருக்கும். எல்லா இடங்களிலும் கிடைக்கும். அம்மட்டுமன்று. எதிர்ப்போரையும் அழிக்கும். ஆயின், செல்வர்கள் நாணமுறல் வேண்டும். செருக்குக்கொள்ளும் தன்மை என்னவாகும்?

செங்கல் - மாணிக்கம். வெண்கல் - வைரம். கருங்கல் - நீலம். செங்கல் - சுட்டமண். வெண்கல் - பாறைக்கல். கருங்கல் - மலைக்கல். சீர் - தராசு. நாசம் - அழிவு. பங்கம் - நாணம். அகங்கரித்தல் - செருக்குறல். பான்மை - தன்மை. உ

வேறு

சுமை எருதுபோல் செல்வச் செருக்குறல் துரிசே

இடையிற்கோ வணமுமின்றி யிங்குதித்தோ மவ்வாறே
கடையில்வெறுங் கையோடுங் கழிகுவ நடுவிற்சேரும்
உடைமையாற் பெருமையென்னே வூர்க்கெலாம் பொதிசுமக்கும்
விடைதருக் குற்றதென்ன வீண்செருக் குற்றாய் நெஞ்சே.

நாம் இடுப்பில் கோவணமுமில்லாமல் பிறந்தோம். இறக்குங் காலத்தும் அவ்வாறே இறப்போம். நடுவில் சேரும் செல்வத் தால் நெஞ்சமே தற்பெருமை கொள்ளுவது எதற்காக? இப் பெருமை ஊரவர்களுக்கெல்லாம் சுமை சுமக்கும் எருது செருக் குறுதலை யொக்கும்.

இடை - இடுப்பு. உதித்தல் - பிறத்தல். கடை - இறப்பு. உடைமை - செல்வம். பொதி - சுமை. விடை - எருது; காளை. வீண்செருக்கு - தற்பெருமை. ௩

மாறிவரும் செல்வத்தால் செருக்குறல் வசையே

சுழல்சக டக்கால்போலுந் தோன்றியே யழிமின்போலும்
அழன்மன வேசைபோலு மருநிதி மேவிநீங்கும்
பழமைபோ லதனைநம்பிப் பழியுறச் செருக்கல்மேக
நிழலினை நம்பிக்கைக்கோள் நெடுங்குடை நீந்தலொப்பே.

உருளும் வண்டியுருளையின் கால்போலவும், தோன்றி மறை யும் மின்னைப்போலவும், நச்சுள்ளமுடைய பொதுமகள் போலவும் செல்வம் பொருந்தி நீங்கும். அச் செல்வத்தை அழியாதிருக்கு மென்று நம்பி வசை பெருகும்படி தற்பெருமை கொள்ளுதல், மேகத்தின் நிழலை நம்பிக் கையிலுள்ள பெரிய குடையை நீக்கி விடுவதை யொக்கும்.

சகடம் - வண்டியுருளை. அழியும் - மறையும். அழல் - நஞ்சு. வேசை - பொதுமகள். பழமை - தொன்மை; அறிவின்மை. பழி - வசை. நீத்தல் - நீக்கல். ௪

வேறு

செல்லும்பேர்ச் செல்வத்தால் செருக்குறல் நெறியன்று

தரித்திரந் தரித்திர மென்னுந் தாரணி
சிரித்திடச் செல்வமே செல்வ மென்னுமிச்
சரித்திர முணர்ந்துமே தரையிற் பொன்னெமக்
குரித்தெனச் செருக்குத லுரனன் றுள்ளமே.

நெஞ்சமே! உலகம் நகை செய்ய வறுமையாகிய தரித்திரம் நிலைப்பின்மையாகிய தரித்திரமென்று சொல்லும். பொருளாகிய செல்வமும் நீங்குதலாகிய செல்வம் என்று சொல்லும். இவ் வுண்மை உணர்ந்தும் 'உலகில் செல்வம் நமக்குரியது' என்று தற் பெருமை கொள்ளுதல் அறிவுடைமை ஆகாது.

தரித்திரம் - வறுமை. தரித்திரம் - சென்று விடுவோம். செல்வம் - பணம்; பொருள். செல்வம் - நீங்குவம். உரன் - உடைமை. ரு

செருக்கு வருங்கால் செல்வம் அழியும்

நாசமாங் காலமே நண்ணு முன்னிறகு
ஈசலுக் கெய்தலும் இரியு முன்னமே
தேசது மிகுத்தொளிர் தீபம் போலவும்
நீசர்தஞ் செருக்கினு னிதியி ழப்பரே.

ஈயலுக்கு அழிவுகாலம் வரும்பொழுது, முன் இறகு முளைக்கும். விளக்கு அணையப்போம்பொழுது கொழுந்துவிட்டு எரியும். இவைபோல் தீச்செயல் புரியும் கீழோர் செல்வம் அழிவெய்தும் பொழுது அவர்களுக்குச் செருக்கு உண்டாகும்.

நாசம் - அழிவு. இரியும் - கெடும். தீபம் - விளக்கு. நீசர் - கீழோர். சு

வேறு

செல்வம் அகன்றபின் செருக்கினர் நிலையென்?

செழித்திடுநாளினிற் செருக்குற்றாய்
கழித்துணைமா நிதிகைநீங்கிற்
பழித்திடுமுலகின் முன்பரிவின்றி
விழித்திடலெப்படி வினைநெஞ்சே.

தீவினை நெஞ்சே! பெரும்பொருள் வளமாக இருக்குங் காலத்து (நல்லது செய்யாது) தற்பெருமை கொண்டாய். அதனால் அப்பொருள் உன்னைவிட்டு நீங்கும். நீங்கியகாலத்துப் பழித்துக் கொண்டிருக்கும் உலகவர்முன் வருத்தமின்றித் தோன்றுவது எவ்வண்ணம்?

மாநிதி - பெரும்பொருள். செழிப்பு - வளம். பரிவு - வருத்தம். எப்படி - எவ்வண்ணம். வினை - தீவினை. எ

## அதி. ௩௦—தீயரைச் சேராமை

*தீயவர் பலரும் தீயரைச் சேர்வர்*

செழுமல ரிடைமது சிறையளி நுகரும்
முழுவிட மதுபெறு முனிவுடை யரவம்
பழுதறு மறநிலை பயிலுவர் சிலரே
வழுவய லவரிட மருவுவர் பலரே.

*சிறந்த பூக்களிலுள்ள தேனை வண்டுகள் உண்ணும். சீறும் அரவம் முழு நஞ்சினையே பெறும். குற்றமற்ற நன்னெறி நிற்பாருடன் சிலரே பழகுவர். குற்றமுடைய தீநெறி யொழுகுவோரிடம் பலர் கூடுவர்.*

*அளி - வண்டு. முனிவு - சீற்றம். வழு - குற்றம். மருவுவர்- கூடுவர்.* ௧

*சாரினும் கீழ்கள் தம் நிலை மாறு*

கரிநிற முறும்வெளி யுடைகரி யணுகின்
சோரிகரி கலையுறு சுசியினை யுறுமோ
பெரியவர் குணநிலை பெறலரி தறமே
யிரிகல ரோடுகல வறவுறும் இழிபே.

*வெண்மையான ஆடை கரியைச் சார்ந்தால் தன்னிறம் மாறிக் கருமையாகிவிடும். ஆனல் கரி அவ் வாடையைச் சார்ந்த தனல் தன் கருமை மாறி வெண்மையாவது இல்லை. அது போல், கீழ்மக்கள் மேலோரைச் சேர்ந்தாலும் மேன்மை யடைவது இல்லை. ஆனல் மேலோர் கீழோரைச் சேரின் இழிபினை எய்துவர்.*

*சுசி - வெள்ளை. இரி - கெடு. கலர் - கீழோர்.* ௨

*சேரிடத்தால் சிறப்பிழிபு யாரையும் சேரும்*

மனிதர்கோள் மருவுநர் தமைக்கோண் டோதுவர்
புனிதமில் இடையின்வீழ் பொருவில் வாசத்தீங்
கனியையுந் தள்ளுவர் கயவர் தம்மைச்சேர்
இனியநற் குணத்தரும் இகழ்ச்சி கோள்வரே.

*மக்கள் யாருடன் கூடுகின்றார்களோ அவர்கள் பெறும் மதிப்பையே பெறுவர். மணமுள்ள இனிய கனியும் தூய்மையல்லாத*

இடத்தில் வீழ்ந்துவிட்டால் அதனை யாரும் கொள்ளாது தள்ளுவர். இவைபோல் கீழோரைச் சேர்ந்த நல்ல குணமுடையோரும் இழிவு பெறுவர்.

கோள் - மதிப்பு. மருவுநர் - கூடுவோர். இகழ்ச்சி - இழிவு. ௩

வேறு

இழிந்தாரைச் சேரின் இழிவென்றும் நீங்கா

மணமனை சேர்மண மாலை மாண்புறும்
பிணவனத் தாரிழி வெய்தும் பெற்றியார்
கணமதிற் சேர்ந்தவர் கனங்கோண் டோங்குவர்
குணமிலா ரினமுறல் குறையுண் டாக்குமே.

கலியாண வீட்டைச் சேர்ந்த மணமுள்ள பூமாலை சிறப்படையும். அம்மாலை சுடுகாட்டைச் சேர்ந்தால் மிக்க இழிவடையும். நல்ல தன்மையையுடைய பெரியவர் கூட்டத்தில் சேர்ந்தவர் பெருமைபெற்று உயர்வர். நல்லபண் பில்லாதவர் கூட்டத்தைச் சேர்ந்தால், இழிவையுண்டாக்கும்.

பிணவனம் - சுடுகாடு. பெற்றியார் - பெரியவர். கணம் - கூட்டம். கனம் - பெருமை. குணமிலார் - இழிந்தவர். இனம் - கூட்டம். குறை - இழிவு. ௪

தாழ்ந்தோர் உயர்ந்தோர் எனும்பேர் சார்பாலுண்டாம்

மண்ணியல் பாற்குண மாறுந் தண்புனல்
கண்ணிய போருள்மணங் கலந்து வீசுங்கால்
புண்ணிய ராதலும் புல்ல ராதலும்
நண்ணினத் தியல்பென நவில லுண்மையே.

குளிர்ச்சி பொருந்திய தண்ணீர் தான் சேர்ந்த நிலத்தின் இயல்பினால் தன்மையில் மாறுதல் அடையும். காற்று தான் பொருந்திய பொருளின் மணத்தைக் கலந்து வீசும். அவைபோல் மக்கள் உயர்ந்தோர் ஆதலும் தாழ்ந்தோர் ஆதலும் அவரவர் சார்ந்த கூட்டத்தின் தன்மையெனக் கூறுவது உண்மையாகும்.

கண்ணிய - பொருந்திய. கால் - காற்று. புண்ணியர் - உயர்ந்தோர். புல்லர் - தாழ்ந்தோர். நண்ணல் - சார்தல். நவிலல் - கூறுதல். ௫

### நல்லார் பொல்லார் எனும்பேர் சார்பால் நண்ணும்

பாரினிற் பிறந்தபோ தேவரும் பண்பினர்
பூரிய ரெனப்பெயர் பூண்ட தில்லையால்
சீரிய ரென்னவுந் தீய ரென்னவுஞ்
சேரினத் தியல்பினற் சேர்ந்த நாமமே.

உலகில் பிறந்தபோது யார்க்கும் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்னும் பெயர் ஏற்பட்டதில்லை. நல்லவர் தீயவர் என்னும் பெயர் அவரவர் சேர்ந்த இனத்தினல் உண்டாயது.

பண்பினர் - உயர்ந்தோர். பூரியர் - தாழ்ந்தோர். சீரியர் - நல்லவர். நாமம் - பெயர். சு

### கயவரைச் சார்வதால் கணக்கிலர்த் தீமையாம்

கயவரைச் சேர்ந்தவன் கலந்த போதவர்
செயலினை யெண்ணுவன் தினஞ்செ லச்செல
மயன்மிகுந் தவர்செயன் மகிழ்ந்த னுட்டிப்பன்
இயவரைச் சேர்தல்போல் இல்லைத் தீமையே.

கீழ்மக்களைச் சேர்ந்தவன் சேர்ந்தபொழுது அவர் செயலை யிழிபாக நினைப்பான். நாளேற நாளேற மயங்கி அவர் செயலை மகிழ்ந்து கைக்கொள்வன். ஆதலால், கீழ்மக்களைச் சேர்தல் போல் பெருந்தீமை வேறொன்றும் இல்லை.

கயவர் - கீழ்மக்கள். தினம் - நாள். இயவர் - கீழோர். எ

## அதி. ௬௧—பிழை பொறுத்தல்

*நின்போற் பிறர் செய்யிற் சினப்பது நெறியோ*

எப்பிழைக்கா நீபிறரைச் சினந்தவர்க்கின்
னலியற் றவெண்ணி னாயோ
அப்பிழைநீ செய்திலையோ வுன்னைப்போ
லவர்பிழைக்க லாகா தோமா
வெப்பமுற நாணிலையோ நீயொருவன்
பிழைபுரிய விண்வேந் தன்கை
ஒப்பமுட னதிகாரம் பெற்றனையோ
மனமேநீ யுரைசெய் வாயே.

*நெஞ்சே! நீ பிறரை எப்பிழையின் பொருட்டுச் சினந்து அவர்க்குத் துன்பஞ் செய்யவேண்டுமென்று எண்ணுகின்றாயோ, அப்பிழையை நீ செய்ததில்லையா? உன்னைப்போன்று அறியாமையால் அவர் பிழை செய்தல் ஆகாதா? மிகுந்த சினம்கொள்ள உனக்கு வெட்கம இல்லையா? நீ யொருவன் மட்டும் பிழைசெய்ய மேலுலக மன்னர் மன்னன் கைச்சாத்து உரிமை பெற்றிருக்கின்றாயோ? சொல்வாயாக.*

*மா - மிக்க. வெப்பம் - சினம். நாண் - வெட்கம். வேந்தன் - மன்னர் மன்னன்; சக்கரவர்த்தி. கையொப்பம் - கைச்சாத்து. அதிகாரம் - உரிமை.* க

*ஒப்பில்லாக் கடவுள் ஒருவனே பிழையிலான்*

பிழையிலான் கடவுளன்றி மக்களில்தப்
பில்லாதார் பிறரு முண்டோ
மழையினுமே அசனியுண்டு மதிக்குமோர்
மறுவுண்டு மலர்க்கு முள்ளாம்
கழையினுமே சக்கையுண்டு கனியினுந்தோல்
கொட்டையுண்டு கதிக்குங் காம
விழைவினன் மறம்புரிதல் நரர்க்கியல்பா
தலினவரை வெறுக்கொண் ணதே.

*கடவுள் ஒருவரே குற்றம் இல்லாதவர். மக்களில் குற்றம் இல்லாதவர் இலர். மழைக்கு இடியாகிய குற்றமுண்டு. திங்கட்கு*

மறு இருக்கின்றது. மலருக்கு முள்ளிருக்கின்றது. கரும்புக்குச் சக்கை இருக்கின்றது. இனிய தீம்பழத்துக்கும் தோலும் கொட்டையும் உண்டு. மிகுந்த இன்ப ஆசையால் தீமை செய்தல் மக்கட்கு இயல்பு. ஆதலால் அவரைத் தீயோர் என்று வெறுத்தல் ஆகாது.

அசனி - இடி. கழை - கரும்பு. கதிக்கும் - மிகும். காமம்- இன்பம். மறம் - தீமை. நரர் - மக்கள். வெறுப்பு - விருப்பமின்மை. உ

குற்றத்தைப் பொறுத்தல் அறிவோர் குணமே

காவையே கடித்ததெனப் பல்தகர்க்கும்
பேருளரோ நடக்கும் வேளை
பூவையே பொருவுகழல் சருக்கியதென்
றதைக்களை வோர்புவியி லுண்டோ
காவையா ருலகமெனும் பேருடலி
னவயவம் போல்கலந்த சீவர்
தாவையே செய்யினுமிக் கறிவுடையோர்
கமைசெய்தல் தகுதி யாமால்.

பல் நாக்கைக் கடித்துவிட்டதென்று அதனை உடைப்பவர் இல்லை. பூப்போன்ற கழலணிந்த அடி நடக்கும்போது வழுவிவிட்டதென்று அதனை வெட்டுவார் இலர். சோலைகள் சூழ்ந்த உலகமாகிய பெரிய உடம்பினுக்கு உறுப்புப்போல் கூடியுறையும் மக்கள் குற்றம் செய்யினும் சிறந்த அறிவுடையார் பொறுத்தல் முறைமையாகும்.

தகர்த்தல் - உடைத்தல். சருக்கல் - வழுவுதல். கா - சோலை. கமை - பொறுமை. வேளை - பொழுது. ௩

இகழ்ந்தார் தமக்கும் இனியவே இயற்றுக

உனையொருவ ரிகழ்ந்தனரே லேதுக்கா
விகழ்ந்தனரேன் றுன்னி யுன்பால்
தினையளவு தப்புளதே லதைநீக்காய்
தப்பின்றேற் சினமு றாதே
கனைகழையை வேம்பேன்னிற் கழைக்குமோர்
குறையுண்டோ கல்லின் மோதித்
தனையுடைப்போர்க் குணவுதரும் தேங்காய்போ
லேவர்க்குநன்மை தனைச்செய் நெஞ்சே.

நெஞ்சே! உன்னை ஒருவர் இகழ்ந்தாராஞல், அவர் எதன் பொருட்டு இகழ்ந்தாரென்று நீ உன்னிடமே நினைத்துப் பார். உன்பால் குற்றம் தினையளவு இருப்பினும் அதை வருந்தியும் நீக்கிவிடு. குற்றமில்லையாஞலும் இகழ்ந்ததற்காகச் சினம் கொள்ளாதே. செறிந்த கரும்பினை வேம்பென்று சொல்லுவதால் கரும்புக்கு ஏதாவது குறையுண்டாகுமா? கல்லின்மேல் அடித்து உடைத்தாலும் தேங்காய் உண்ணும் பருப்பினைத் தருதல் போல் இகழ்ந்தவர்கட்கு நன்மையே செய்.

கனை - செறிவு. ௮

தீங்குசெய்வோர்க்கும் நன்மையே செய்க

தீதொருவர் செய்தனரேன் றதற்கெதிராய்
    நீயவர்க்கோர் தீங்கு செய்யின்
சாதுநீ யவர்தீய ரேன்பதற்குக்
    கரியேன்ன சக்கி லாதார்
ஓதவிட முண்ணின்விழி யுடையாரு
    முண்ணுவரோ வுலப்பில் செந்நேல்
சேதமுற அவைத்திடுவோர்க் குணவாதல்
    போனலமே செய்வாய் நெஞ்சே.

நெஞ்சே! உனக்கு ஒருவர் தீங்குசெய்தார் என்று நீ அவர்க்கு ஒரு தீங்கு செய்தால் நீ நல்லவன் என்றும் அவர் தீயவர் என்றும் வேறுபடுத்துக் கூறுவதற்குச் சான்று என்ன இருக்கின்றது? கண்ணில்லாதவர் சாவினைத் தரும் நஞ்சினை உண்டார்களாஞல், கண் உடையவர்களும் உண்பார்களோ? கெடாத செந்நெல்லை உமி நீங்குதலாகிய கேடெய்தும்படி குற்றுவோர்க்கு அந்நெல் உணவாகி நன்மை செய்வதுபோன்று தீங்கு செய்வார்க்கும் நன்மையே செய்.

சாது - நல்லவன். கரி - சான்று. சக்கு - கண். ஓதம் - குளிர்; சாவு. அவைத்திடுவோருக்கு - குற்றுவோருக்கு. ௯

தெய்வம் இரங்கல் நோக்கித் தீயவர்க்கு இரங்குக

நல்லவர்தீ யவரேன்ஞு தேவரையுமே
    புவிதாங்கு நனிநீர் நல்குஞ்
செல்லருண ஞெளிபரப்புங் காஅல்வீசு
    மந்தரமுஞ் சேரு மொப்பொன்று

இல்லாதான் தீயவர்க்கா இரங்கிமனு
வேடமுற்று னெனிலன் ஞர்பாற்
செல்லாதுன் சினமனமே பொறுமையே
பெருமையென்றே செப்புங் காலே.

நெஞ்சே! நிலம், நல்லவர் தீயவர் என்று கருதாமல் எல்லாரையும் சுமக்கும். தண்ணீர் மிகுதியும் வழங்கும். ஞாயிறு பெருக ஒளி தரும். காற்று வீசும். வானம் இடம் தரும். தனக்குவமை யில்லாத கடவுளும் தீயோர்பால் அருளிரக்கங் கொண்டு மக்கள் கோலங்கொண்டு எழுந்தருளினன். அதனுல், அவர்களிடம் உன் சினம் செல்லாது. சொல்லுமிடத்துப் பொறுமையே பெருமையாகும்.

கால் - காற்று. அந்தரம் - வானம். மனு - மக்கள். வேடம் - கோலம். ௬

பிழைபொருர் பிழையைப் பெருமானும் பொருன்
இன்னலெமக் கிழைத்ததனுல் வீடிழந்து
நரகாழ்வா ரெனநி னைந்து
பன்னரிய பெரியர்பிழை பொறுப்பர்பொருர்
தம்பிழையைப் பரம ஞற்ருன்
முன்ஞெருவன் செய்தனனென் றவற்கிறப்பச்
செயுமிடரம் முறையி லான்சேய்
பன்னிதம ரையுஞ்சேரு மவர்நமக்கேப்
பிழைசெய்தார் பகராய் நெஞ்சே.

அறியாமல் தீங்கிழைத்தவர் அத்தீவினைப் பயத்தால் பேரின்பப் பெருவாழ்வை இழந்து மீளாநரகத்தில் ஆழ்ந்துவிடுவாரே என்று வருந்தி அப்பிழையைப் பெரியவர் பொறுப்பர். பிழையைப் பொருதவர்கள் செய்யும் குற்றத்தை ஆண்டவனும் பொறுத்தருளான். தனக்கு முன்பொருவர் குற்றம் செய்தனர் என்று அவர்க்குத் தாமும் ஒரு குற்றம்—சாவினைத் தரும் பேரிடரைச் செய்யின் அவ்விடரால் அவருடைய மக்கள், மனைவியர், உறவினர் முதலானவர்கள் துன்புறுவர். அவர்களிடரெய்தும்படி என்ன பிழை செய்தார்கள் சொல்லு.

இன்னல் - துன்பம். இழைத்தல் - செய்தல். வீடு - பேரின்பம். இறப்ப - சாவ. இடர் - துன்பம். பகர்தல் - சொல்லுதல். ௭

*அறிவுக்குறைவால் நல்லோர் அல்லோர்போல் தோன்றுவர்*

வெருட்சியுளோர்க் கெங்கணும்பேய் உருத்தோன்றும்
எழின்முகத்தை விகற்ப மாக்கித்
தெருட்சியில்கண் ணடிகாட்டும் அவைபோல்தீ
தியற்றுருந் தீயர் போலப்
பொருட்சிதைவால் தோன்றுவர்தீ தெனவறமும்
தோன்றுமவர் புரிபி ழைக்கு
மருட்சியில்பல் காரணங்க ளுளவாமென்
றுனிப்பொறுப்பர் மாண்பி ஞரே.

மனக்கலக்கம் உடையவர்கட்கு எல்லா இடங்களிலும் பேயுருவே தோன்றும். தெளிவில்லாத கண்ணுடி அழகிற் சிறந்த முகத்தையும் அழகிற் குறைந்த முகமாக வேறுபடக் காட்டும். இவைபோன்று அறிவுக் குறைவால் தீமை செய்யாரும் தீயர்போல் காணப்படுவர். அறமும் தீமைபோல் காணப்படும். அவர் தீமை செய்வதற்கு மயக்கத்தால் பல காரணங்களுண்டு. இவைகளை எண்ணிப் பிழையைப் பொறுப்பர் பெரியோர்.

வெருட்சி - மனக்கலக்கம். விகற்பம் - வேறுபாடு. தெருட்சி- தெளிவு. பொருள் - அறிவு. மருட்சியில் - மயக்கத்தினுல்' மாண்பினர் - பெரியோர். அ

---

## அதி. ௩உ—இனியசொற் கூறல்

*இசைநன்மை நண்பெலாம் தருவது இன்சொல்*

வட்டவுல கெட்டுமிசை மட்டற நிரப்பும்
வெட்டவரு துட்டரை விலக்கிவச மாக்கும்
நட்டமிலெ யெட்டனெயு நட்டுநர ரெல்லாம்
இட்டமுறு கட்டுதவும் இன்மொழிய தன்றே.

இன்சொல், உருண்டை உலகத்து வழங்கும் திசை எட்டிலும் புகழை அளவில்லாமல் நிறைவிக்கும். கொல்ல வருகின்ற தீயவரையும் நீக்கி இணங்கச்செய்யும். இன்சொல் சொல்லுவதால் இழப்பு ஏதும் இன்று. மக்களை எல்லாம் நண்பராக்கி விருப்பகலாப் பிணைப்பை உதவும்.

வட்டம் - உருண்டை. இசை - புகழ். நட்டம் - இழப்பு. கட்டு - பிணைப்பு. க

எல்லாக் கேட்டையும் தருவ திழிசொல்

இக்குவல யக்கணிழி வுக்கிடம தாகும்
பக்கரொடு மக்கள்பகை புக்கவழி பண்ணும்
துக்கமும் விளைக்குமொரு துக்கமும் விளைக்குங்
குக்கனை நிகர்க்குமவர் கக்குமிழி கூற்றே.

நாயை ஒப்பவர் சொல்லும் அருவருக்கத்தகுந்த இழிசொல் இவ்வுலகத்தில் இழிவுக்கிடந்தரும். இனத்தாரையும் மக்களையும் பகைவர்களாக்கும். சாவைத் தரும்படியான ஒரு நோயைத் தரும்.

குவலயம் - உலகம். பக்கர் - இனத்தார். துக்கம் - சாவு. துக்கம் - நோய். குக்கன் - நாய். உ

நலம்பொலம் அவரவர் வாய்மொழி நவிலும்

சந்தநிறை செப்பிறைவை சாணமுள தென்னக்
கந்தம தெவர்க்குநனி காட்டிவிடல் போலும்
நிந்தனையு ளாரினிய நீர்மையின ரென்ன
முந்தவவர் வாய்மொழி மொழிந்துவிடு மன்றோ.

சந்தனம் நிறைந்த செப்பும் சாணம் உள்ள கூடையும் அவ்வவற்றின் மணம் காட்டிவிடுதல்போல, பொல்லாரையும் நல்லாரையும் அவரவர் வாய்மொழியே காட்டிவிடும்.

சந்தம்-சந்தனம். இறைவை-கூடை. நிந்தனை-பொல்லாங்கு.

இல்லாப் பெயரையும் இயற்றும் வாய்ச்சொல்

நன்மைபுரி யார்களு நயந்தவிர் கொடுஞ்சொல்
இன்மையெனி னல்லவ ரெனப்புகழ் படைப்பார்
தின்மைபுரி யார்களும் வழங்குமுரை தீதேல்
புன்மையுறு தீயரென எள்ளுமுயர் பூவே.

நன்மை புரியாதவர்களும் கொடுஞ்சொல் கூறாரானால் நல்லவரெனப் புகழ் பெறுவர். தீமை செய்யாதவர்களும் கொடுஞ்சொல் கூறுவாராயின் இழிவான தீயவரென உலகத்தார் இகழுவர்.

பூ - உலகம். ௩

*கடுஞ்சொற் கூறுவோர் கயவரே யாவர்*

வன்மொழி யுரைக்கினெதிர் வன்மொழி கிடைக்கும்
இன்மொழி யுரைக்கின்வரு மின்மொழி யெமக்கும்
நன்மொழிக ளேபல விருக்கநவி லாமற்
புன்மொழி யுரைப்பவர்கள் பூரியர்க ளன்றே.

*நாம் யாருடனும் வன்மொழி பேசினால் நமக்கும் வன்மொழியே கிடைக்கும். இன்சொல் சொன்னால் இன்சொல்லே கிடைக்கும். நல்ல சொற்கள் பல இருக்க அவற்றைக் கூறாது இழிவான கடுஞ்சொற் கூறுவோர் தாழ்வானவர்கள் ஆவர்.*

*பூரியர் - தாழ்வானவர்.* ௫

## வேறு

*அறிவிற் பெரியோர் அனைவரையும் பணிவர்*

தேமலி சுவைக்கனி பலசெ றிந்துயர்
காமரம் வளைதல்போல் கலையு ணர்ந்திடு
தூமன மாட்சியோர் தொழுவர் யாரையும்
பாமர ரெவரையும் பணிந்தி டார்களே.

*தேனும் சுவையும் மிகுந்த கனிகள் பல நிறைந்து உயர்ந்து வளரும் சோலைமரங்கள் வளைவது போன்று நிறைந்த கல்வியுணர்வுடையார் - தூய மனமாண்புள்ளார் - எல்லாரையும் தொழுவர். கல்வி அறிவு இல்லாத கீழோர் ஒருவரையும் தொழார்.*

*தே - தேன்; இனிமை. கா - சோலை. பாமரர்-அறிவிலாக் கீழோர். பணிதல் - தொழுதல்.* ௬

## வேறு

*இருக்கை இன்சொல் வரவேற்பால் எய்துவது அன்பு*

எதிர்சென்று முகமன் கூறி யிருக்கையும் நல்கி யுண்டே
அதிசய மெனவி ளைவி அன்பொடு முகம லர்ந்து
துதிபுரிந் துபச ரிக்கும் தொழிலினாற் செலவொன் றில்லை
அதிர்கடல் உலகு ளோர்தம் அன்பெலாம் வரவா மாதோ.

*ஒருவரைக் கண்டபொழுது எதிர்சென்று இனிய கூறி அழைத்து வந்து, நல்ல இருக்கையி லமர்வித்துச் சிறப்பு என்ன*

என உசாவி அன்புடன் முகமலர்ந்து வாழ்த்தி வரவேற்புச் செய்யும் செயலால் ஒரு செலவும் இல்லை. ஒலிக்கும் கடலால் சூழப்பட்ட உலகவருடைய அன்பு முழுவதும் வரவாகும்.

முகமன் - இன்சொல். இருக்கை - மணை; ஆசனம். அதிசயம் - நன்மை; சிறப்பு. துதி - வாழ்த்து. உபசரிக்கும் - வரவேற்கும். எ

### துன்பொழித் தின்பம் சுரக்கும் இன்சொல்

உருமைமின் னினைத்தன் பாற்கோண் டுதகமன் உயிர்க்கு நல்கும்
கருமுகி லெனக்கண் ணலென் காணினும் கேட்பி னுஞ்சூழ்
பருவர லேதி லார்க்குப் பயக்கும்வன் சொல்லை நீத்து
மருவிய நலங்க லந்த வசனமே பகர்வர் நல்லோர்.

இடியையும் மின்னலையும் தன்னிடம் வைத்துக்கொண்டு நிலைபெற்ற உயிர்களுக்குத் தண்ணீரையே தரும் மேகம் போன்று, அயலவர் பார்வையிலும் கேள்வியிலும் துன்புறும்படியான வன்சொல்லை விலக்கி நன்மை மிக்க இன்சொல்லையே நல்லோர் கூறுவர்.

உருமை - இடியை. உதகம்-நீர் பருவரல் - துன்பம். அ

### உற்றிடத்து நல்லன உரைப்ப தின்சொல்

நதிமுதல் புகுவ தெல்லாம் நன்ககட் டிடை யடக்கும்
அதிர்கட லெனவும் ஈயார் அருத்தமஞ் சிகையே போலும்
வதிசெவி நுழைவ தெல்லா மனத்தினு ளடக்கித் தக்க
ததியறிந் துரைப்ப தன்றிச் சகலர்க்கு முரையார் மிக்கோர்.

அறிவான் மிக்கவர் யாறு முதலிய வந்தவற்றையெல்லாம் தன்பால் வைத்திருக்கும் கடலை யொத்தும், ஈயாதவர் செல்வம் அடங்கியிருக்கும் பணப்பெட்டியை யொத்தும் செவிவழி நுழைந்தவற்றையெல்லாம் மனத்தினுள் அடக்கி நல்லவற்றையே உற்றவிடத்து நல்லவர்க்கு உரைப்பர். எல்லார்க்கும் உரையார்.

நதி - யாறு. அகடு - நடுவிடம். மஞ்சிகை - பெட்டி. வதி - வழி. ததி - உற்ற இடம். கூ

## அதி. ௯௯—பிறர்க்குத் தீங்குசெய்யாமை

*துன்புசெய்வானையே துன்பம் முதற்கொலும்*

விடதரம் பற்றிவே றொருவன் மேலிடும்
அடலுளோன் தன்னைமுன் னதுக டித்தல்போல்
இடர்பிறர்க் கிழைத்திடு மியவன் றன்னைமுன்
மிடலொடு மவ்விடர் மேவிச் சாடுமே.

*பாம்பைப் பிடித்து வேறொருவன்மேல் இடும் வலிமையுள்ளவனை அப்பாம்பு, முதன் முதலாகக் கடிப்பதுபோல, துன்பம் பிறருக்குச் செய்யும் கீழ்மகனை முதன்முதலாக அத் துன்பம், மிக்க வலிமையொடும் தெறும்.*

*விடதரம் - பாம்பு. அடல் - வலிமை. மிடல் - வலிமை. இயவன் - கீழ்மகன். சாடும் - கொல்லும்; தெறும்.* ௧

*நற்பண்பு உள்ளாரையே மக்களென நவில்வர்*

படியின்மா னிடர்மிகு பண்பு ளோரலாற்
கொடியரை நரரெனக் கூறல் பாரெலாம்
இடியெனக் கொலைத்தொழி லியற்றுந் தீவெடிற்
பொடியினை மருந்தெனப் புகல லொக்குமே.

*உலகத்தில் மக்களுக்குரிய நல்ல பண்புள்ளவர்களையே மானிடர் என்று சொல்லுவது. கொடியவர்களை மக்கள் என்று சொல்லுவது, இடிபோன்று கொல்லும் தன்மை வாய்ந்த தீய வெடியுப்புப் பொடியினை உயிரை நிலைக்கச்செய்யும் மருந்து என்று சொல்லுவதனோடு ஒக்கும்.*

*மானிடர் - மக்கள். நரர்-மக்கள். வெடில் - வெடியுப்பு.* ௨

*இடர்செய்வான் துன்ப இடையினில் நைவன்*

உரவுநீர்க் கருங்கட லுடுத்த பார்மிசைப்
பரர்வருந் திடவிடர் பண்ணு வோன்றனை
நரரெலாம் பகைசெய்வர் நண்ணு மாயிரம்
அரவுசூழ் கின்றவோர் தேரை யாவனே.

*மிக்க நீரையுடைய கடலால் சூழப்பட்ட உலகத்தில் பிறர் வருந்தும்படி துன்பம் செய்வோனை மக்கள் எல்லாரும் பகைப்பர்.*

அவனும் ஆயிரம் பாம்பின் மத்தியில் அகப்பட்ட தேரைபோன்று வருந்துவன்.

உரவுநீர் - கடல். ௩

## வேறு

### கெடுவான் கேடு நினைப்பான்

கயலிற் பாய்சிரல் கால்சிக்கிக் கொண்டேழ
வயமிலா துயிர்மாய் கின்ற தன்மைபோல்
அயல வர்க்கழி வாகவோ ரந்தரஞ்
செயநி னைத்தவர்க் கேவந்து சேருமே.

கெண்டைமீனைப் பிடிக்கப் பாய்ந்த சிச்சிலி சேற்றில் கால் சிக்கி எழ வலிமையற்று மாள்வதுபோன்று, பிறர் கெடும்படி ஒரு தீமை செய்ய நினைத்தவர்க்கே அத் தீமை வந்து சேர்ந்து அவர் கெடுவர்.

கயல் - கெண்டை மீன். சிரல் - சிச்சிலி. வயம் - வலிமை. அந்தரம் - தீமை. ச

## வேறு

### தீங்கு செய்வாரைக் காட்டிற்குச் செலுத்துதல் சிறப்பு

புயகமதைத் தேள்புலியைப் பொல்லாத விலங்கையெலாம்
அயர்வாக வடித்தோட்டல் அவைகள்குணத் தாலன்றே
இயல்பின்றி யெந்நாளும் எதிலார்க் கிடரிழைக்குங்
கயவனையே வைதடித்துக் கானோட்ட லன்றோமே.

பாம்பு தேள் புலி முதலிய கொடிய உயிர்களை மனக்கலக்கத் தோடும் அடித்து விரட்டுதல் அவைகளிடத்துள்ள கொடுந் தன்மையால் அல்லவா? முறையின்றி எந்த நாளும் பிறர்க்குத் துன்பஞ் செய்யும் கீழ்மகனைத் திட்டி அடித்துக் காட்டிக்கு ஓட்டுதல் நல்லதாகும்.

புயகம் - பாம்பு. அயர்வு - மனக்கவற்சி. ரு

## அதி. ௬௪—நெடுந்துயில்

*சிற்றுயிர் உணர்த்தியும் துயிலெழார் சிறப்பென்*

விடியலிற் பறவை மிருகம் யாவுமுன்
விரைந்தே ழுந்து பலவி னைசெயுங்
கடிமலர்ப் பொழில்கண் மலருமார் வமோடு
கடலெ ழுந்து கரைதா விடும்
படியின் மன்னுயி ரெலாமெ ழுந்து
தொழில்பல வியற்றிட வெழா மலே
தடியெ னத்துயி லுவோனரன் கொலொரு
தாவ ரங்கொ லறியே மரோ.

*வைகறைப்பொழுதில் புள் விலங்கு முதலிய யாவும் முன்னரே விரைந்தெழுந்து தத்தம் தொழில்களைச் செய்கின்றன. மணமிக்க மலர்களுடைய சோலைகள் மலர்கின்றன. கடல், மிக்க ஆர்வமுடன் கரையை மோதுகின்றது. இன்னும் உலகில் பலவுயிர்களும் தத்தம் தொழிலைச் செய்கின்றன. ஒருவன் உயிரில்லாத மரக்கட்டைபோன்று தூங்குகின்றான். அவன் மகனோ? மரமோ அறியமுடியவில்லை.*

*விடியல் - வைகறை. பறவை - புள். மிருகம் - விலங்கு. கடி - மணம். தாவிடும் - மோதும். படி - உலகம். தடி - மரக்கட்டை. தாவரம் - வேருள்ளது; மரம்.* க

### வேறு

*பகலும் தூங்குவர் படிப்பிலா மூடர்*

தங்கரு மங்கள் செய்யத் தனிப்பகல் போதா தென்ன
இங்கறி வுடையோர் தூங்கா ரிரவினு மூடர் துஞ்சக்
கங்குலும் போதா தென்னப் பகலுங்கண் படுவர் யாவும்
புங்கமாத் தேர்ந்து வேறோர் புரையிலார் போலு மாதோ.

*அறிவுடையோர் தம் கடமையைச் செய்யப் பகல்பொழுதும் போதாதென்று இரவினுந் தூங்காது செய்வர். அறிவில்லாத மூடர் தூங்குவதற்கு இராப்பொழுதும் போதாதென்று பகலிலுந் தூங்குவர். இவர், எல்லாம் சிறப்பாக ஆய்ந்து எவ்வகையான குற்றமும் இல்லாதவர் என்று தம்மைக் கருதுகின்றார்போலும்.*

*கருமம் - கடமை கண்படுவர் - தூங்குவர். புங்கம் - சிறப்பு தேர்ந்து - ஆய்ந்து. புரை - குற்றம்.* உ

### கதிரவன் கணக்கால் காலன் வருவான்

வானுலாம் அருண னென்னு மக்களா யுளின்க ணக்கன்
தானெழு முன்னே ழாரைச் சகத்திரக் கரத்தால் தட்டும்
ஏனென வெழார்வாழ்நாளை எண்குறைத் தெழுதிக் கோள்
ஆனது கண்டு கால னவரிடம் அணுகு வானே. [வான்

விண்ணிலே படர்ந்து செல்லும் ஞாயிறு என்னும் மக்கள் வாழ்நாளாகிய அகவையைக் கணக்கெடுப்போன், தான் தோன்றுவதன் முன்னம் மக்கள் எழுதல்வேண்டும். அப்படி எழாதவர்களை அவன் தன்னுடைய ஆயிரங் கதிர்க் கைகளால் தட்டி எழுப்புவன். உடன் ஏன் என்று சொல்லி எழாதவர்களின் அகவையைக் குறைத்து எழுதிக்கொள்வான். காலன் அக் கணக்கைப் பார்த்து மக்களுயிரைக் கொண்டுபோக நெருங்குவன்.

அருணன் - ஞாயிறு. சகத்திரம் - ஆயிரம். கரம் - கை. வாழ்நாள் - அகவை. அணுகுவன் - நெருங்குவன். ௬

### வேறு

### சிறுதுயிலற்றுப் பெருந்துயில் ஏற்பதே சாவு

உறங்குவது போலுஞ்சாக் காடென்ன உரைத்தார்
இறங்கலில்சீர் வள்ளுவனர் போலுமெனன் மிகையே
நிறங்குலவு சிறுதுயிலற் றேல்நெடிய துயிலே
மறங்குலவு மரணமே எனக்கூறல் வழக்கே.

பெருகுபுகழ் மிகுத்த திருவள்ளுவநாயனர் 'உறங்குவது போலுஞ் சாக்கா' டென்று அருளினர். அவ் வருண்மொழியில் 'போலும்' என்னும் திருமொழியில்லாமலே பொருள் பொருந்தும். அதனுல், அம்மொழி கூடுதல் ஆம். உடம்பைப் பொருந்தும் சிறுதுயில் இல்லாமல் எற்கும் பெருந்துயிலே எமன் பொருந்தும் சாவு என வகைப்படுத்திச் சொல்லுதல் முறைமையாம்.

சாக்காடு - சாவு. இறங்கலில் - குறைதல் இல்லாத; பெருகுகின்ற. மிகை - கூடுதல். நிறம் - உடல். அற்று - இல்லாமல். ஏல் - ஏற்கும். மறம் - எமன். வழக்கு - முறைமை. ௭

## அதி. ௩௫—பெருண்டி

பெருண்டி நோய்பிணி பெருக்குந் தூதன்

நனிநிழல் புனல்கோள் பைங்கூழ் நாசமா மிகவே யுண்ணும்
இனியமா மருந்து நஞ்சா மின்பமு மிகிற்றுன் பாகும்
பனிபிணி மடமை மந்தம் பழியெலாம் வம்மி னென்னக்
கனிவொடு மழைக்குந் தூதாங் கழியபே ருண்டி மாதோ.

நிழலும் அளவுக்கு மிஞ்சிய நீருங்கொண்ட நெற்பயிர் அழியும். அளவுக்கு மிஞ்சி யுண்ணும் அமிழ்தமும் நஞ்சாகும். சிற்றின்பமும் வரம்பு மீறினுல் துன்பமாம். (இவைபோல்) அளவுக்கு மிஞ்சி உண்ணும் ஊண் சுரம், நோய், அறியாமை, சுறுசுறுப்பின்மை, பழி முதலிய தீமைகளையெல்லாம் விருப்புடன் அழைக்கும் தூதாகும்.

நனி - மிகுதி. பைங்கூழ் - நெற்பயிர். மருந்து - அமிழ்து. பனி - சுரம்; காய்ச்சல். மந்தம் - சுறுசுறுப்பின்மை. கழிய - மிக; அளவுக்கு மிஞ்சிய. ௧

அளவிலா உண்டியால் ஆற்றலழியும்

கொள்ளுரு நீரைக்கொண்ட குளங்கரை புரண்டு முன்னம்
உள்ளநீ ரையுமி ழக்கும் உண்மைபோற் பேர கட்டின்
பள்ளமே டாக வுண்ணும் பதமுடல் வளத்தைப் போக்கும்
எள்ளலில் சிற்று ணவற் றுடலெங்கு மியங்கு மாலோ.

அளவுக்கு மிஞ்சிய நீரைக்கொண்ட குளம் நிரம்பி வழிந்து முன் உள்ள நீரையும் இழக்கும். இந்த முறைமைபோல் பெரு வயிற்றின் பள்ளம் மேடாக விலாப்புடைக்க உண்ணும் ஊண் உடல் வளமாகிய வலிமையைப் போக்கிவிடும். மதிக்கத் தகுந்த அளவு உணவாகிய சிற்றுணவு தூய குருதியாக மாறி வற்றிய உடல் எங்கும் பரவி வலிமையைத் தரும்.

கரை புரண்டு - நிரம்பி வழிந்து. அகடு - வயிறு. பதம் - உணவு. வளம் - வலிமை. ௨

பயன் மிகுந்தது பட்டினி யிருத்தல்

பாரண மின்றிச் சின்னுள் பசித்திருந் தாலு நன்றுஞ்
சீரண மின்றி யுண்ணும் தீனிநோய் செயும தற்கோர்
சூரண மிலைமெய்த் தன்மை துவ்வுணுத் தன்மை யேனைக்
காரண காரி யங்கள் கண்டுண்பா ரறிஞ ரம்மா.

உணவின்றிச் சிலநாட்கள் பட்டினி யிருந்தாலும் நலமே உண்டாகும். வயிறு செரியாதிருக்கும்போது உண்ணும் தீனி நீங்கா நோயினைத் தரும். அந்நோய் நீங்குவதற்குப் பொடி முதலிய மருந்துகள் கிடையா. உண்மையாக அந்நோய் நீங்குவதற்குப் பட்டினி கிடத்தலே மருந்தாம். இதனால், காரண காரியங்களை அறிந்துணர்ந்து அளவாக உண்பவர் அறிவுடையோராவர்.

பாரணம் - பட்டினி; உண்ணு நோன்பு. சீரணம் - செரித்தல். தீனி - விலங்குணவு. சூரணம் - பொடி; நீத்து மருந்து. காரணம் - செயல். காரியம் - பயன். கூ

பொருந்தும் உணவால் திருந்தும் அகமும்

தகவுணும் அனமுண் டோனைத்
தாங்குமால் வயிறு கீள
மிகவுணும் அனத்தை உண்டோன்
விறலோடு தாங்க வேண்டும்
அகமுறும் அவனைப் பல்லோர்
அனுதினஞ் சுமக்க வேண்டும்
இகமுறும் அவனைப் பூமா
தேவ்வணஞ் சுமப்பா ளம்மா.

வயிறு எற்றுக்கொள்ளும்படியாகச் சோறு உண்டவனை அச் சோறு தாங்கும். வயிறு எற்றுக்கொள்ளாது கிழியும்படி மிகுதியாக உண்டவன் அச்சோற்றினை வலிமையுடன் தாங்கவேண்டும். இம்மையே இன்பமிழந்து தீமை செய்யும் நன்மையற்றவனை நிலமகள் எப்படித் தாங்குவாள்.

தக - பொருந்த. அனம் - அன்னம்; சோறு. கிள - கிழிய. விறல் - வலிமை. அனுதினம் - நாடோறும். இகம் - இம்மை. பூமாது - நிலமகள். சுமத்தல் - தாங்கல். கூ

அற்றதறிந்து அளவூண் கொள்ளுதல் ஆக்கம்

மாந்தன மழிந்து தக்க மலசலங் கழிந்தூண் ஆவல்
சார்ந்தபின் னுணுஞ்சிற் றுண்டி சபலமாம் மீதூண் உண்டு
சோர்ந்திட அதைத்தான் தாங்கிச் சுமக்குதல் தன்னைத் தூக்க
நேர்ந்தமா வினைத்தான் தூக்கி நெஞ்சம்புண் ணுதல்போலும்.

உண்ட ஊண் செரித்து மலமும் சிறுநீரும் அளவுடன் வெளிப்பட்டு மேல் உண்ண வேட்கை உண்டாகி அதன்பின் உண்ணும் அளவூண் நற்பயனைத் தரும். அளவுக்கு மிஞ்சிப் பேர் ஊண் உண்டு, தளர்ந்து அவ்வூணைத் தான் தாங்கிச் சுமக்குதல், தன்னைச் சுமக்க வாய்ந்த குதிரை முதலியவற்றைத் தான் சுமந்து மனம் வருந்துவதோடு ஒக்கும்.

மாந்துதல் - உண்டல். சலம் - சிறுநீர். ஆவல் - வேட்கை. சிற்றுண்டி - அளவூண். சபலம் - நற்பயன். மா - விலங்கு. இ

அகட்டில் பல்லுணவு அடைப்போன் அழிவன்

புட்களும் விலங்கு மோவ்வோ
 ரிரையையே புசிக்கும் மாந்தர்
உட்கலி லாதி யாவும்
 உண்பரன் றியுஞ்சற் றேனும்
வேட்கமில் லாத கட்டின்
 மிகமிக அடைப்பர் உப்பார்
மட்கல மேனவன் ஞர்மெய்
 மட்கலாம் வட்க லாமால்.

பறவைகளும் விலங்குகளும் ஒவ்வொரு வகைத் தீனியையே தின்னும். மக்கள் சிறிதும் அச்சமின்றி கண்டனவெல்லாம் உண்பர். மேலும், சிறிதும் நாணமில்லாது (தலையணையில் பஞ்சு திணிப்பதுபோல்) வயிற்றில் காற்றுக்கும் இடமில்லாமல் கூடக் கூடத் திணிப்பர். உப்பு நிறைந்த மண் ஏனத்தையொத்து, அவர்கள் உடம்பு ஒளி மழுங்கி அழிவெய்தும்.

புள் - பறவை. புசிக்கும் - தின்னும். உட்கல் - அஞ்சுதல். வட்கல் - அழிவெய்தல். மட்கல் - ஒளி மழுங்கல். கூ

## அதி. ௯௬—தற்புகழ்

### பிறரால் புகழப் பெறுவதே பெருமை

தன்றுதி பிறர்சோலத் தகுமன் ஞோர்புகழ்
இன்றியே தன்னைத்தான் ஏத்தல் ஊர்தியில்
ஒன்றுமா பூட்டிடா தோருவன் உள்ளுறாஉம்
மன்றவே நடத்துவான் வலித்தன் மானுமே.

தன் புகழைப் பிறர் வாயாரச் சொல்லுவதே தக்கது. அப்படிக்கின்றித் தன்னைத் தான் புகழ்தல், வண்டியுள் இருப்பவன் அவ் வண்டியை இழுப்பதற்கு மாடு, குதிரை இவற்றுள் ஒன்றும் பூட்டாமல் இருந்தபடியே அவ்வண்டியை உந்தித் தள்ளுவதையே ஒக்கும்.

துதி - புகழ். ஊர்தி - வண்டி. மா - மாடு; குதிரை. வலித்தல் - தள்ளுதல். மானும் - ஒக்கும். க

### நேரில் புகழ்வது நினைக்கில் வைவாம்

ஒருவன்கா ணுவிடத்து உவனை மேச்சலே
தருமமாம் முகத்துதி சாற்றல் வைதலாம்
பேருமுறை யீதேனில் பிறர்முன் தன்னைத்தான்
போருளேன மேச்சல்போற் புன்மை வேறுண்டோ.

ஒருவனைக் காணுவிடத்து அவன் புகழை எடுத்துப் பேசுதல் அறமுறையாம். அவன் நேரில் புகழ்வது திட்டுவதே யாகும். இவற்றுக்கு மாறாகத் தன்னைத்தானே மதித்துப் புகழ்வது இழிவாம்.

முகத்துதி - புகழ். வைதல் - திட்டல். புன்மை-இழிவு. உ

### பல்லக்கைத் தான் சுமக்கும் பண்பே தற்புகழ்தல்

தன்துதி பிறர்சோலத் தகுந்தன் வாயினல்
ஒன்றறத் தன்துதி யோதல் ஊர்ந்துதான்
சேன்றிடும் ஊர்தியைச் சிவிகை யாரின்றித்
துன்றுதன் தோளினல் சுமத்தல் போலுமே.

தன் புகழைப் பிறர் கூறுவது தக்கது. தானே புகழ்வது, பல்லக்கின்மேற் செல்வோன் அப் பல்லக்கைச் சுமக்கும் ஆட்கள் இல்லாமல் தன் தோளினல் தானே சுமந்து செல்வதை ஒக்கும்.

ஊர்தி - ஏண்டுப் பல்லக்கு. சிவிகையார் - பல்லக்குச் சுமப்போர். ௩

மழைப்பயிர் வளம்போல் மன்னும் நற்புகழ்

நீரினுல் பயிர்வளம் நிலேத்தல் போற்குணச்
சீரினுல் புகழ்ப்பயிர் செழிக்க வேண்டும்நற்
பேரிலான் தற்புகழ் பிடித்தி ழுத்தரு
மாரியில் பயிரினே வளர்த்தல் மானுமே.

*மழைநீரால் பயிர்வளம் நிலேக்கும். அதுபோல் குணச் சிறப்பால் புகழ் நிலேக்கவேண்டும். நன்மை செய்து நற்பெயர் பெருதவன் தன்னேத்தானே புகழ்ந்துகொள்ளுதல், மழையால் செழித்துத் தானே நீண்டு வளர வேண்டிய பயிரைக் கையால் பிடித்து இழுத்து மழையில்லாமல் வளர்க்கத் தொடங்குவதை ஒக்கும்.*

*தற்புகழ் - தன்னேத் தானே புகழ்தல். மானும் - ஒக்கும்.* ச

நல்லொ ழுக்கமே நற்புகழ் பெறும்வழி

தற்புகழ் வோன்றனேப் பழிக்கும் தாரணி
சொற்புகழ் விரும்பிடான் தனேத்து தித்திடும்
நற்புகழ் பெறுவழி நன்ன டக்கையோடு
அற்பமுந் தற்புக ழாமை யாகுமே.

*தன்னேத்தானே புகழ்பவனே உலகோர் பழிப்பர். தன்புகழைப் பிறர் கூறக் கேட்கவும் விரும்பாதவனே உலகோர் போற்றுவர். நல்ல புகழைப் பெறும் வழி நன்மை செய்தலும் சிறிதும் தற்புகழாமையுமாம்.*

*அற்பமும் - சிறிதும்.* ரு

வேறு

தன்னே நெடிதாக்கத் தான் தூக்கல் தற்புகழ்தல்

துதிபெற ஆதர மிகலாலே
தூயவ ராகுவர் கலேதேறி
மதியினர் ஆகுவர் அரிபோல
வலியின ராகுவ ரேயேனும்
அதிதுதி பிறர்சொலின் அழகாகும்
அமைவொடு தனதுதி தான்கூறல்
கதிதன துடலுயர் வுறவேதன்
கைகொடு தூக்கிட வுனல்போலும்.

நற்புகழ் பெறவேண்டும் என்னும் பெருநசையுள்ளவர் உண்மை யொழுக்கத்தால் தூய்மை எய்துவர். கற்றறிவல்ல ஒண்மையராவர். அரிமாவையொத்த வலிமை யுடையவராயினும் தம் புகழ் பிறரால் சொல்லப்படுவதே அழகு. தாமே சொல்லுதல் தம்முடல் நெடிமை என்று காட்டத் தம் கையாலேயே தம் முடலைத் தூக்க நினைப்பதையே ஒக்கும்.

அரிமா - சிங்கம். சு

### தன்னைத்தான் புகழில் இகழ்வே சாரும்

சடமதைக் கழுவ வுன்னிச்
சகதியிற் றோய்தல் போலும்
சுடரினைத் தூண்ட வேண்டி
யூதியே தொலைத்தல் போலும்
மடமையால் தன்னைத் தானே
புகழுவோன் வசைக ளெல்லாம்
புடவியே யெடுத்து ரைக்கப்
பூணுவன் நிந்தை யம்மா.

குளிக்க நினைத்துப் போய்ச் சேற்றில் மூழ்குதலும், விளக்கைத் தூண்ட விரும்பி ஊதி அணைத்தலும் போல, ஒருவன் அறியாமையால் தன்னைத்தானே புகழ்ந்துகொள்வானானால் உலகோர் அவனுடைய பழியை எடுத்துரைப்பர். அதனால் இகழ்வு பெறுவன்.

சடம் - உடல். சகதி-சேறு. சுடர் - விளக்கு. தொலைத்தல் - அணைத்தல். வசை-பழி. நிந்தை-இகழ்வு. பூணுவன்-பெறுவன். எ

### வேறு

#### தற்புகழ்வோர் துரும்புபோல் தாந்திரிந் துழல்வர்

குலமணி வெளியு றுதாழ்
குரவையூ டொளித்தி ருக்கும்
சலமிசை எவருங் காணச்
சஞ்சரித் திடுந்து ரும்பு

கலமென மானம் பூண்ட
　　கலைவலோர் அடங்கி நிற்பர்
புலனில்சீத் தையர் தமைத்தாம்
　　புகழ்ந்தெங்கும் திரிவர் மாதோ.

சங்கு முத்து பவழ முதலிய உயர்ந்த விலை வரம்பிலாப் பொருள்கள் கடலினுள் ஆழத்தில் அமைந்திருக்கும். விலையிலாத் துரும்பு நீரின் மேன்மட்டத்து அலைந்து திரியும். அதுபோன்று மானமே அணிகலனைப் பூண்டோர் அடக்கமுடையராய்த் திகழ்வர். அறிவிலாக் கீழோர் தம்மைத்தாமே புகழ்ந்து உழல்வர்.

குலம் - உயர்வு. மணி - சங்கு, முத்து, பவழம். குரவை - கடல். சீத்தையர் - கீழோர். திரிவர் - உழல்வர். அ

---

## அதி. ௩எ—புகழும் இகழும் மதியாமை

உலகோர் புகழிகழ் உள்ளவாறுகா

தன்றுணை யிலானே யுள்ளத்
　　தன்மையை யறிவான் பூமி
இன்றொரு வனைத்து திக்கும்
　　ஏசிடு மவனைப் பின்னும்
நன்றினைத் தீதென் றுன்னுந்
　　தீதைநன் றென்ன வுன்னும்
பொன்றுமா னிடர்பு கழ்ச்சி
　　புனலின்மேல் எழுத்துக் கோப்பே.

தனக்கொப்பிலாத முழுமுதலே ஆவிகளின் மனப்பாங்கை அறிவான். உலகோர் இன்று ஒருவனை மட்டின்றிப் புகழ்வர். அவனையே உடன் அளவின்றித் திட்டுவர். மேலும் நன்மையைத் தீமையெனக் கருதுவர். தீமையை நன்மை எனவும் கருதுவர். நிலையிலா மக்கள் புகழும் புகழ்ச்சி நீர்மேல் எழுத்தாம்.

துணை - ஒப்பு. பூமி - உலகோர். புனல் - நீர். க

*பிறர் சொலால் துன்புறுத்தும் நெஞ்சநஞ் சொக்கும்*

வசையுமீக் கூற்று மற்றோர்
வாய்வரு வாயு வல்லாற்
பசையுள தோவக் காற்றைப்
பாரிலோர் பொருளென் றெண்ணி
இசையினுன் மகிழ்வும் பேசும்
இகழ்வினுல் துயரும் உற்று
நசையினுல் கொல்லு நெஞ்சம்
நஞ்சமே யொக்கு மாதோ.

நெஞ்சே! பழியும் புகழும் பிறர் வாயிலிருந்து வரும் காற்றாகிய வெற்றோசையல்லாமல், அதனால் ஒரு பயனும் இன்று. உலகத்தில் அவற்றைப் பொருள் எனக் கருதிப் புகழ்ச்சியால் இன்பும், இகழ்ச்சியால் துன்பும் கொள்கின்றாய். புகழ்ப்பற்றால் என்னைத் துன்புறுத்துகின்றாய். அதனால், நீ உயிர் கொல்லும் நஞ்சினையே ஒப்பாய்.

வசை-பழி. மீக்கூற்று-புகழ். வாயு-காற்று. நசை-பற்று. உ

*நாய்கழுதை புள்ளொலிபோல் நாடிடுக கொடுஞ்சொல்லை*

சுணங்கனோர் பாற்கு ரைக்கும்
சூழ்கரங் கத்து மோர்பால்
பிணங்கியே புள்ளோ லிக்கும்
பெரும்பறை யோர்பா லார்க்கும்
இணங்கியிவ் வொலிக ளெல்லாம்
ஏற்கின்ற செவியோர் தீயன்
குணங்கெடக் கூறும் வன்சொற்
கொண்டிடிற் குறையென் னெஞ்சே.

நெஞ்சே! ஒருபக்கம் நாய் குரைக்கும். கழுதை கத்தும். கோட்டான் முதலிய பறவை ஓசையிடும். பெரிய தோற்கருவிகள் முழங்கும். இவற்றையெல்லாம் பொருந்திக் கேட்கின்ற நம் காதுக்கு, ஒரு கொடியவன் கூறும் கடுஞ்சொல்லைக் கேட்பதால் வரும் தீங்கு என்ன இருக்கின்றது? ஒன்றும் இன்று.

சுணங்கன் - நாய். கரம் - கழுதை. புள் - பறவை. இணங்கி-பொருந்தி.

*தொழும் அருள் இலார்புகழ் துன்பமேற் பூச்சே*

பகவனை தருளும் நெஞ்சும்
  பழிச்சலும் நிலையாம் தன்னை
அகமுனிந் தனல்போல் தீக்க
  அறமென்ப தொருபால் சீறச்
சகமெலாம் புகழ்தல் மெய்மேற்
  சைத்திய உபசா ரங்கள்
அகமிலாக் கொடிய தாபச்
  சுரத்தினுர்க கியற்றல் போலும்.

*ஆண்டவனை மனமாரத் தொழுதலும் அவன் அருள் பெறுதலும் நிலையாக எய்தவேண்டிய ஒருவனை, செருக்கு தழல்போல் வாட்டுகின்றது. அறம் நன்மை செய்க எனச் சீறுகின்றது. இந்நிலையில் உலகோர் புகழும் புகழ்ச்சி, நலமுறாத கொடிய காமச் சுரநோய் உற்றவர்க்கு அவர் உடம்பின்மேல் சுரம் நீங்கும் பொருட்டுக் குளிர்ந்த பொருள்களைப் பூசுதல் போலும்.*

*பகவன் - ஆண்டவன். பழிச்சல் - புகழ்தல். அகம் - செருக்கு. அனல் - தழல். சகம் - உலகம். சைத்தியம்-குளிர். தாபம் - விரகதாபம்; காமம்.* ௬

*குணங்கொள்ளிற் குறைவிலாப் புகழ்கை கூடும்*

மங்கலில் சீர்த்தி வேட்டாய்
  மடஞ்சினம் உலோப மோகம்
அங்கதம் முதல்யா விற்கும்
  விடைகொடுத் தறிவன் பீகை
பங்கமில் குணங்கள் யாவும்
  வாழுமோர் பதிநீ யாயின்
சிங்கலில் புகழ்கோள் வாயுன்
  சிரத்தின்மேல் ஆணை நெஞ்சே.

*நெஞ்சே! நீ கேடிலாத புகழை விரும்புகின்றாய். அதற்கு அறியாமை வெகுளி இவறல் காமம் பொய் முதலிய குற்றங்கள் எல்லாவற்றையும் நீக்கிவிட்டு, அறிவு அன்பு ஈகை முதலிய குற்றமற்ற நற்பண்புகள் யாவும் உறைவதற்கு இடமாக இருப்பாயானால், குறையாத புகழ் எய்துவாய். உன் தலைமேல் ஆணையிட்டுச் சொல்லுகின்றேன்.*

*மங்கல் - கேடு. அங்கதம் - பொய். சிங்கல் - குறைவு.* ௭

உள்ளும் புறமும் ஒவ்வாச்சொல் உண்மையன்று

அத்திசூ ழுலகிற் சில்லோர்
அகத்தொன் றும் வாக்கி லொன்றும்
வைத்திதஞ் சொல்லா லியாவும்
வனச்செவி யேற்ப தன்றிச்
சத்திய மெனக்கொண் டேகல்
சக்கினை மூடி நீண்ட
பித்திகை யேறிச் செல்லும்
பேதைமை நிகர்க்கு மாதோ.

கடல் சூழ்ந்த உலகத்தில் சிலர் உள்ளொன்றும் புறம் ஒன்றும் வைத்து இன்உரையாடலால், அவ்வுரைகளை அழகிய செவியிற் கொண்டு விடுவதன்றி உண்மையெனக் கொண்டால், அது கண்ணை மூடிக்கொண்டு, பெரிய மதில்சுவர்மேல் ஏறும் அறியாமையை ஒக்கும்.

அத்தி - கடல். இதம் - இனிமை. வனம் - அழகு. சக்கு - கண். பித்திகை - சுவர். பேதைமை - அறியாமை. சு

வேறு

பகைவர்சொல் ஆய்வால் பயன்பெரி துண்டாம்

தன்னைத் தன்குணத் தன்மையைத் தேரவே
உன்னு கின்றவன் ஓங்கிய நட்பினோர்
நன்ன யச்சொல்நம் பாமல்நள் ளார்தினம்
பன்னு மாற்றங்கள் நம்பிற் பயனரோ.

தன்னையும் தன்னுடைய பண்புகளையும் பிழைப்பு வாய்ப்பு ஆராய நினைக்கின்றவன் தனக்கு வேண்டிய நண்பர்கள் சொல் லும் இன்சொற்களை முற்றும் அப்படியே நம்பாமல், தன் பகை வர்கள் சொல்லும் வன்சொல்லை நம்பி அச் சொல்லுக்குரிய குற்றங்களைத் தன்பால் நின்றும் அகற்றிவிடின் ஆராய்வின் பய னுண்டாம்.

குணம் - பண்பு. நள்ளார் - பகைவர். மாற்றம் - சொல். எ

## அதி. ௩அ—கைம்மாறு கருதா உதவி

**ஊண்மனை மருந் தின்பம் உறவாதல் உதவி**

அனமிலார்க் கனமாய் வாழ
அகமிலார்க் ககமாய்த் துன்ப
மனமுளார்க் குவப்பாய் நோயின்
வருந்துவோர்க் கரும ருந்தாய்த்
தனமிலார்க் கரும்பொன் ணய்நற்
ருய்தந்தை யிலார்க்கன் ஞராய்
இனமிலார்க் கினமா யார்க்கும்
யாவுமா யிசைத லன்பே.

உண்ணச் சோறிலார்க்குச் சோறு கொடுப்பவராய், உறைய வீடிலார்க்கு வீடு அளிப்பவராய்த், துன்புறுவார்க்குத் துன்பம் நீக்கி மகிழ்ச்சி விளைப்பவராய், நோயுற்ருர்க்குச் சிறந்த மருந்து கொடுப்பவராய், செல்வமிலார்க்குப் பணம் ஈபவராய், நல்ல தாய் தந்தையர் இல்லாதார்க்கு அவ்வவர்களாய் நின்று உதவுபவராய், உறவு இலார்க்கு உறவினர்போன்று காப்பவராய் எல்லார்க்கும் வேண்டும் எல்லாம் வழங்குபவராய் வாழ்தலே அன்பாகும்.

அனம் - சோறு. அகம் - வீடு. தனம்-பணம். இனம்-உறவு. ௧

**ஏழைகட்கு உதவாது இருப்பது இழுக்கு**

அருந்தவே கூழும் பூண
ஆடையும் வீடும் இன்றி
வருந்துவோர் எண்ணி லார்நம்
மருங்குளா ரேனவ றிந்தும்
விருந்திடாய் மணிமா டத்து
மேவிநீ யோருவன் வாழப்
போருந்திஞய் மனமே மக்கட்
போலிநீ விலங்கா ஞயே.

உண்பதற்குக் கூழும் உடுப்பதற்கு உடையும் உறைவதற்குக் குடிலும் இல்லாமல் வருந்துகின்ற பாட்டாளிமக்கள் அளவில்லாதவர் நம் அருகில் இருக்கின்றனர். அவர்கள் நிலையினை உணர்ந்

தும் அவர்கட்கு வேண்டும் உதவி செய்கின்றாயில்லை. அழகிய மாளிகையின்கண் பொருந்தி நீ ஒருவனாக வாழ மனம் இணங்கினாய். நீ மக்கட்பதரும் இரக்கமற்ற கொடு விலங்கும் ஆவாய்.

மருங்கு - பக்கம். விருந்து - உதவி. மக்கட்போலி - மக்கள் போன்று காணப்படுவது. உ

ஊண் உடையின் மிச்சமெலாம் உதவுவோர் வீடடைவர்

ஏவல்செய் வோர்க்குக் கூலி
யிடைத்துகி லுணவாம் யாமோர்
காவல னெனினுஞ் சோறு
கலையன்றி யொன்றுங் காணோம்
ஆவலாய்ப் பொருளை யீட்டி
அயலவர்க் காச்சு மந்தோம்
ஈவதை மேற்கொண் டேமேல்
இணையில்வீ டடைவோ நெஞ்சே.

இட்ட பணியை இயற்றும் வேலையாட்களுக்குக் கிடைக்கும் கூலிப்பயன் இடுப்பில் கட்ட உடையும், வயிற்றுக்கு உணவுமே யாம். உலகமெல்லாம் ஆளும் மன்னர் மன்னனே எனினும் உண்ணச் சோறும் உடுக்க உடையுமின்றி மிகுதியாக அடைவது ஒன்றும் இன்று. அளவில்லாத ஆசையொடும் பணத்தைத் தேடிப் பிறர் பொருட்டுச் சுமக்கின்றோம். வீண்சுமை சுமவாது அப் பணத்தால் வேண்டுவார்க்கு வேண்டுவது கொடுக்கும் ஈகையை இடையறாது செய்துவருவோமானால் இசைபட வாழ்ந்து ஊதியமாம் பேரின்பப் பெருவாழ்வையும் பெறுவோம்.

ஏவல் - இட்டபணி. இடை - இடுப்பு. காவலன் - மன்னர் மன்னன். கலை-உடை. ஆவல்-அளவிலா ஆசை. அயலவர் - பிறர். இணை - ஒப்பு. ந

கையேந்தும் ஏழைபோல் கடவுளும் வருவன்

சாந்தமார் வறியர் போலத் தற்பரன் வருவான் தாவென்று
ஏந்துகை வீடு கோள்ளேன் றேந்துகை யாமக் கையில்
ஈந்தபோன் விலைபோல் வீட்டுக் கிட்டபோன் னுமன் னுரைக்
காய்ந்திலை யென்போர் வேண்டோங் கதியென்பார் போலு
மாதோ.

பொறுமைமிக்க ஏழைபோன்று முழுமுதற்கடவுள், கோலங் கொண்டு எழுந்தருள்வன். ஒன்றுவேண்டித் தருக என்று கூறிக் கை ஏந்துவன். அக் கை நமக்குவேண்டிய பேரின்பவீட்டைப் பெற்றுக்கொள்க, என்று ஏந்திய கை ஆகும். அக் கையில் விருப் புடன் கொடுத்த பொருள், அவ்வீட்டுக்கு நல்கிய விலைப்பொரு ளாகும். அன்னவர்களை வெறுத்துச் சினந்து இல்லையென்று கூறுவோர், வீடுவேண்டாமென்று மனமாரச் சொல்லும் வீணரே யாவர்.

சாந்தம் - பொறுமை. தற்பரன்-கடவுள். காய்ந்து - சினந்து. கதி - வீடு. ௬

ஈவோர்க் கின்பும் ஈயார்க்குத்துன்பும் ஈவர் இரப்போர்

இரவலர் தம்மை யெள்ளும் ஏழைகாள் இயம்பக் கேளீர்
நரகைமோக் கத்தை விற்க நண்ணிய வணிகர் அன்னோர்
பரகதி அவரைத் தாங்கும் பண்பினோர்க் கீவர் அள்ளல்
கரவுளார்க் கீவர் என்னின் அவர்கதை கழற லென்னே.

இரந்துண்போரை இகழும் அறிவிற் குறைந்தவர்களே! உங்க ளுக்கு ஒன்று சொல்லுகின்றேன், கேளுங்கள். அவர்கள் நிரயம் வீடு என்னும் கிடையாப் பெரும் பொருள்களை விற்கும் செட்டிக ளாவர். அவர்க்கு வேண்டுவன கொடுத்துப் பாதுகாக்கும் நல்ல தன்மையுடையார்க்கு வீட்டினை நல்குவர். இயல்வது கரக்கும் தீத் தன்மையுடையார்க்கு நிரயத்தைக் கொடுக்கின்றனர். அதனால், அவர் நிலைமையைப்பற்றி என்ன சொல்லுவது? (மிகப் பெரியவ ரென்க.)

இரவலர் - பிச்சையெடுப்போர். எள்ளும் - இகழும். ஏழை - அறிவிற் குறைந்தார். நரகம் - நிரயம். மோக்கம் - வீடு. வணிகர் - செட்டியார். பரகதி - வீடு. அள்ளல் - நிரயம். கரவு - ஒளிப்பு. கதை - நிலைமை. ௭

புகழும் நாடாது செய்வதே புண்ணியம்

பிறர்புக ழினைக்கைம் மாற்றைப் பேணியே யுதவி செய்வோர்
அறமுளா ரல்லர் நித்தன் அருட்குமே யருக ரல்லர்
திறவலக் கரஞ்செய் நன்றைத் திகழிடக் கரங்காணுமல்
வறியர்பாத் திரமறிந்து வழங்குவோர் மாட்சி யோரே.

பிறர் கூறும் இசையையோ, வேறு பல உதவியையோ நாடி நன்மை செய்வோர் அறவோர் ஆகார்; அழியா ஆண்டவன் அருட்

கும் தகுதியுடையவரல்லர். சிறந்த வலக்கை செய்யும் அறத்தை விளங்கும் இடக்கை அறியாதபடி தகுதியுடைய ஏழைகட்கு நிலைமையுணர்ந்து கைம்மாறு கருதாது கொடுப்பவரே உயர்ந்தோராவர்.

அறம் - நன்மை. நித்தன் - அழிவில்லாதவன். கரம் - கை. யாத்திரம் - தகுதி; உரிமை. வழங்குதல் - கைம்மாறு கருதாது கொடுத்தல். மாட்சியோர் - உயர்ந்தோர். சு

உற்றிடத் துதவி உலகினும் பெரிது

மக்கடம் பொறையைத் தாங்கு மகிக்குமன் றுரைக் காக்க
மிக்கநீர் பொழியா நின்ற விண்முகி லினுக்குஞ் செய்யத்
தக்கவோ ரெதிர்நன் றுண்டோ சமயத்தோர் பயனும் வேண்டாது
ஒக்கவே செய்த நன்றி யுலகினும் பெரிதா மாதோ.

மக்கள் முதலிய உயிர்களை எல்லாம் சுமக்கும் நிலத்திற்கும், நீரை வழங்கி நிலைப்பிப்பதாகிய காத்தலைச் செய்யும் மழைக்கும் செய்வதற்கியன்ற கைம்மாறு நம்மிடத்து என்ன இருக்கின்றது? ஏதும் இல்லை. உற்றகாலத்து எவ்வகைப் பயனையும் நாடாது மனமொத்துச் செய்த நன்மை 'ஞாலத்தினும் மாணப் பெரிதாம்.'

பொறை-சுமை. மகி-நிலம். முகில்-மழை. சமயம் - உற்ற காலம். உலகு - ஞாலம். எ

உயிரும் ஈந்து பிறர்க்கு உதவுவர் நல்லோர்

மன்னிய கனிகாய் நீழல் மற்றெலா முதவிப் பின்னுந்
தன்னையு முதவா நின்ற தருவெனத் தங்கை யார்ந்த
பொன்னெலா முதவிப் பின்னும் பூட்சியா லுழைத்திட் டேனு(ம்)
இன்னுயி ருதவி யேனும் இடுக்கண்தீர்ப் பார்நல் லோரே.

நிலைத்த பழம் காய் நிழல் முதலிய பலவும் உதவிய மரம் தானும் கோவில் வீடு கப்பல் முதலிய பலவற்றுக்கும் பயன்படும் படி தன்னையும் உதவுகின்றது. அதுபோன்று நல்லோர்கள் தம் கைப்பொருளெல்லாம் உதவிய பின்னும் உடல் வருந்தி உழைத்திட்டும் இன்னுயிர் கொடுத்தும் பிறர் துன்பங்களைப் போக்குவர்.

தரு - மரம். பூட்சி - உடல். இடுக்கண் - துன்பம். அ

பகைவர்க்குச் செய்யும் உதவிக்குப் பேரின்பம் பயன்

நள்ளுநர் தமக்கும் என்றும் நன்றேமக் கியற்று வோர்க்கும்
உள்ளுவந் தியற்று கின்ற உதவிதான் அரிய தன்று
புள்ளுவம் இழைக்கா நின்ற பொருந்தலர்க் காற்று நன்றி
விள்ளும்வீட் டின்பந் தன்னை விளைக்கின்ற வித்தாம் நெஞ்சே.

நெஞ்சே! செறியும் நண்பர்க்கும் நமக்கு எப்பொழுதும் நன்மையே செய்வோர்க்கும் மனமகிழ்ந்து செய்யும் உதவி சிறந்தது அன்று. நமக்கு வஞ்சகம் செய்யும் பகைவர்க்குச் செய்யும் நன்மை புகழ்ந்து சொல்லப்படும் வீட்டின்பத்தினைத் தருதற்குச் சிறந்த காரணமாகும்.

நள்ளுநர் - நண்பர். அரியது - சிறந்தது. புள்ளுவம் - வஞ்சகம். இழைத்தல் - செய்தல். விள்ளும் - சொல்லும். வித்து - காரணம். கூ

வேறு

அளவிலார் உதவியால் ஆவி வாழும்

ஊட்டி நீர்கறி யுடைபணி விறகில்
உரிய யாவையும் நாம்பெறு வான்பல்
நாட்டில் காட்டில்பொற் சுரங்கத்தில் கடலின்
அகத்தில்எண் ணிறந்தவர் நமக்கு ழைப்பார்
சூட்டி வைகலும் ஆயிரம் பேர்தம்
துணையி லாதுயி ருயல்நமக் கரிதாம்
ஆட்டி யித்தனை பேர்பணி கொளுநாம்
அன்பி லாதிருப் பதுதகா துளமே.

நெஞ்சே! உணவு தண்ணீர் காய்கறி ஆடை அணிகலன் விறகு முதலிய வீட்டுக்கு இன்றியமையாது வேண்டிய எல்லாப் பொருள்களையும் நாம் அடைவதற்கு நாட்டிலும் காட்டிலும் கீழறையாகிய சுரங்கங்களிலும் கடல் நடுவிலும் அளவில்லாதவர்கள் நமக்காக உழைக்கின்றார்கள். நம் தூண்டுதலால் நாள் தோறும் செய்யும் ஆயிரக்கணக்கானவர் துணையின்றி நாம் உயிர்வாழ முடியாது. இவ்வளவு மக்களையும் அலைத்து வேலை கொள்ளும் நாம் எல்லாரிடத்திலும் அன்பில்லாமலிருப்பது முறைமையாகாது.

ஊட்டி - உணவு இல் - வீடு. பெறுவான் - அடைவதற்கு. சூட்டி-தூண்டி. ஆட்டி-அலைத்து. தகாது-முறைமையாகாது. ௧௦

**பிறர்க்குள்ளன நமக்கென்று உதவுவோர் பேரன்பர்**

சீவ அன்பு சுகுணங் களின்முதலாம்
தீதி லன்பை யுடையோர் பிறர்துயர்தம்
தாவ தென்ன அயர்வார் பிறர்சுகமும்
தம்ம தென்ன மகிழ்வார் தினம்வணிகர்
மேவ லோடு கொளுவோர் வரவுன்னும்
விதமே னத்தம சகாய மதுறவே
யாவர் சார்வ ரெனவா னசயினோக்கி
என்ற மட்டு நலமே புரிவாரால்.

உயிருக்கு அமைந்துள்ள அன்பு நல்ல பண்பு முதலியவற்றில் சிறந்த அன்பையே உயிராகக் கொண்டுள்ளோர், பிறர் படும் துன்பம் தம்மதாகக்கொண்டு மனங் கவல்வார். பிறர்கொள்ளும் இன்பத்தைக் கண்டு அதுவும் தம்மதெனவே கொண்டு மகிழ்வார். நாள்தோறும் செட்டிகள் விழைவுடன் பண்டம் வாங்க வருவோர் வரவையே நினைக்கும் முறைபோல் தம்முடைய கைம்மாறு கருதாத உதவியைப் பெற்றுக்கொள்ள வருவோர் யாவர் என்று விருப்பத்துடன் வழி பார்த்திருந்து ஒல்லும் வகை நல்லதே செய்வர்.

சுகுணம் - நல்ல பண்பு. தாவு - வருத்தம். அயர்வார் - மனங் கவல்வார். மேவல்-விருப்பம். உன்னும்-நினைக்கும். என்றமட்டும் - ஒல்லும்வகை. புரிவார் - விரும்பிச் செய்வார். கக

வேறு

**அன்பின்றேல் பேரின்பம் அடையார் யாரும்**

எவ்வருணர் எச்சமயர் எப்பதியர்
எத்தொழிலர் எனினும் நாணோடு
அவ்வவர்க ளெவ்வமுரை யாமுன
முணர்ந்துதவல் அன்பின் நிலையாம்
இவ்வரிய அன்புடைமை யின்றிநிரு
வாணமுற எண்ணி விழைதல்
பௌவவுல கத்துருளில் தேரினொடு
டாத்தவுனு பான்மை நிகரால்.

எவ்வகைக் குலத்தினரும் எவ்வகைக் கொள்கையரும் எவ்வகை ஊரவரும் எவ்வகைத் தொழில்செய்வோரும் தங்கள் மானத்தைவிட்டுத் தங்களுக்கு ஓர் உதவிவேண்டும் எனக் கூற

வதன்முன் குறிப்பாலுணர்ந்து செய்தல் அன்பு நிலையாகும். இத்தகைய சிறந்த அன்பில்லாமல் வீடடையக் கருதி விரும்புதல் கடல்சூழ்ந்த உலகத்தில் சக்கரமில்லாத தேரைச் செலுத்த நினைப்பதை யொக்கும்.

வருணம் - குலம். சமயம் - கொள்கை. பதி - ஊர். நாணம் - மானம். எவ்வம் - துன்பம். நிருவாணம் - வீடு; பேரின்பம். பௌவம் - கடல். உருள் - சக்கரம். கஉ

வேறு

*துன்பந் துடைப்போர் கலைதேர் தூயோராவர்*

கலைதேர் கழகமோ டனநீர் தருமனை
கயமா மதகுகள் வழிசாலை
நிலையா லயநலி யினர்வா ழிடமுதல்
நிருமா ணமதுற நெறிமேவி
உலைவால் வருபவர் துயரே கெடவவர்
உளமா னதுமகிழ் வோடுதேறக்
கலையூ ணகமுத லினிதீ குவர்வளர்
கலையோர் நிலையுண தலையோரே.

பள்ளிக்கூடம், சோறும் தண்ணீரும் வரையாது வழங்கும் வீடு, குளம் முதலிய நீர்நிலைகளிலுள்ள நீர் போக்குவரத்துக்குரிய வாயில், நடைவழி பெருவழி, அழிவில் முதல்வன் திருக்கோவில், துன்புற்றோர் தங்குமிடம் முதலியவற்றை ஏற்படுத்தி அவற்றின்கண் துன்பம் நீக்கிக்கொள்ள வருபவர்களுடைய துன்பங்கெட உள்ளம் மகிழ்ந்து தெளிவு எய்தக் கல்வி உணவு உறையுள் முதலியன இனிமையுடன் கொடுப்பர் உண்மை நூலைத் தெளிந்து அவ்வழி நடக்கும் சிறந்தோர்.

கயம் - குளம். மதகு - நீர் போதற்கும் வருதற்கும் வாய்ந்த மடை. நலியினர் - துன்புறுவோர். நிருமாணம் - ஏற்பாடு; அமைப்பு. தலையோர் - சிறந்தோர். கங

வேறு

*ஆண்டவன் அருள் பொருள் அனைவர்க்கும் பொதுவே*

எல்லோருங் கொளவே பரமன் எண்ணில் பொருளீந்தான்
சில்லோர் யாவும் வவ்வி ஒளிக்குபு தீமைகள் செய்தலினால்
பல்லோ ரில்லோராய்ப் பசிப்பிணி பாய்ந்துள நைவார்கள்
சொல்லோர் நல்லோர்தாம் இல்லோரைக் கைதூக்கி
அளிப்பாரால்.

தந்தை தாய் அனைய ஆண்டவன் மக்களனைய பல்லுயிர்க்கும் அளவில்லாத உலகியற் பொருள்களை அருளால் படைத்தளித்தான். இவ்வுண்மை யறியாத சிலபேர்கள் அவற்றையெல்லாம் முறைகெடக் கவர்ந்து மறைத்துத் தீமைகள் செய்தலினால், பலபேர் வறியராய்ப் பசி நோய் மிகுந்து உள்ளம் துன்புற்று வருந்துவர். உறுதிநூல்களைக் கற்றுத் தெளிந்த நல்லவர் ஏழைகளைக் கைதூக்கிக் காப்பவர் ஆவர்.

வவ்வுதல் - கவர்தல். ஒளிக்குபு - மறைத்து. சொல்-உறுதிநூல். அளித்தல் - காத்தல். கசு

உளமுவந் தீபவை உயிர்க்குறுதி யர்கும்

துய்க்கும் பொருள்களுமே நமதல துய்த்தலில் லாதுசும்மா
வைக்கும் பொருள்களுமே நமதல* மாண்டபின் கூடவரா
எய்க்கும் வறுமையினர்க் கனுதினம் ஈயும் பொருள்நமது
கைக்குள் உறுபொருளாம் இதனைக் கண்டுணரா ராய்மனமே.

நெஞ்சே! நாம் உண்ணும் பொருளும், உண்ணாது சேர்த்து வைத்திருக்கும் பொருள்களும் நம் உயிர்க்குப் பயன்தரக்கூடிய பொருளன்று. அவை இறந்தபின் நம்முடன் வருவதில்லை. கொடிய வறுமையினால் இளைத்து வாடும் எளியவர்கட்கு மனமுவந்து குறிப்பறிந்து ஈயும் பொருளே நமக்குரிய பொருளாம். இதனை உணர்வாயாக. கஙு

வேறு

பெருந்துன்புற்றும் பெரியோர் பிறர்நோய் ஒழிப்பார்

நூனு ழைந்த நுவலருஞ் சீலர்தம்
பானு ழைந்த படர்மதி யார்பிறர்
கானு ழைந்த கடுவுந்தங் கண்ணின்வை
வேனு ழைந்தென முன்னி மிறைப்பரே.

நுண்ணிய நூலறிவு கைவரப்பெற்ற நல்லொழுக்கமுடைய சான்றோர், தங்களுக்கு ஏற்பட்ட துன்பத்தைப் பொருட்படுத்தார். (ஆனால்) பிறருடைய காலில் தைத்த முள்ளின் துன்பம் தம்முடைய கண்ணில் பகைவர்களால் பாய்ச்சிய கூரிய வேலின் துன்பத்தினும் கடுமையெனக் கருதி வருந்தி அத்துன்பத்தை நீக்குவர்.

படர் - துன்பம் மதியார் - பொருட்படுத்தார். கடு – முள். முன்னி - கருதி. மிறைப்பர் - வருந்துவர். கஅ

---

* ஈத்துவக்கும், திருக்குறள்: உஉஅ.

### பிறர்துயர் போக்கிப் பேணுக புகழுடல்

புறம்வ ருந்திடப் பூத வுடம்பினை
மறவு டம்பை வளர்ப்ப ரறிவிலார்
உறவி டும்பை உருவண்ண மீந்துநல்
அறவு டம்பை வளர்ப்ப ரறிஞரே.

*பக்கத்திலுள்ளவர்கள் பசி நோய் முதலியவற்றால் வருந்தக் கண்டும் அறிவில்லாதவர் ஐம்பூதத்தாலாகிய பருவுடம்பை—பாவவுடம்பை—வளர்ப்பார்கள். அறிவுடையவர்கள் எவரும் எவ்வகைத் துன்பமும் அடையாதபடி மிகுதியாகக் கொடுத்துத் தம் அறவுடம்பை—புகழுடம்பை வளர்ப்பார்கள்.*

*புறம் - பக்கம். பூதம் - பருமை. மறம் - பாவம். உற-மிகுதியாக. அறம் - புண்ணியம்; புகழ்.* கஎ

### தேடிநல் உதவி செய்வோர் பெரியோர்

ஓடி யெங்கு முலரும்பைங் கூழ்களை
நாடி மைமுகி னன்மழை பெய்தல்போல்
வாடி நையும் வறிஞ ரிருக்கையைத்
தேடி மேலவர் செய்வ ருதவியே.

*மழையின்றி வாடும் நெற்பயிர்களை ஆராய்ந்து விரைந்து சென்று எவ்விடத்தும் கரிய மேகம் மழையைப் பொழிதல் போல, அறிவுடையோர் வாடி வருந்தும் ஏழைகள் தங்கும் இடத்தைத் தேடிச்சென்று வேண்டும் உதவிகளைச் செய்வர்.*

*பைங்கூழ் - நெற்பயிர். மை - கருமை. முகில் - மேகம். நையும் - வருந்தும். மேலவர் - அறிவுடையோர்.* கஅ

### இரந்தும் ஏழைகளுக்கு ஈவர் நல்லோர்

காரி டத்திரந் தேனுங் கயநதி
நீரி னைப்பணை யெங்கு நிறைத்தல்போல்
யாரி டத்திரந் தேனு மறமுளார்
பாரி டத்துப் பகுப்பர் வறிஞர்க்கே.

குளமும் யாறும் மழையினிடத்து வேண்டிப் பெற்றும் நீரை வயல்களெங்கும் நிறைத்து வைக்கும். அதுபோல், நன்மை நாடும் நல்லோர்கள் எவரிடத்து இரந்தும் ஏழைகள் இருக்கும் இடத்தைப் போய் ஆராய்ந்து பகுத்து உண்டு பயன் பெறுவர்.

கார் - மழை. இரத்தல்-வேண்டிப்பெறுதல். கயம்-குளம். பணை - வயல். அறம் - நன்மை பார் - உலகம். கக

## வேறு

### ஆல்போல் பிறர்க்குநன்மை ஆற்றுவர் நல்லோர்

சாடுவெங் கோடையைத் தலையிற் றங்கியும்
மாடுளோர்க் கருநிழல் வழங்கும் ஆலெனக்
கேடுதம் பான்மிகக் கிளைக்கி னுங்குணப்
பீடுளோர் நன்மையே பிறர்க்குச் செய்வரால்.

ஆலமரம் தன்மேல் மோதும் கடுமையான கோடை வெயிலைத் தாங்கித் தன்பக்கம் வருவார்க்கு அருமையான குளிர்ந்த நிழலைத் தருவதுபோல், நற்பண்பு வாய்ந்தவர் பொருளிழப்புத் தமக்கு மிகுதியாக நேர்ந்தாலும் பிறர்க்கு நன்மையே செய்வர்.

சாடுதல் - மோதுதல். கேடு - பொருளிழப்பு. குணம்-பண்பு. பீடு - பெருமை. உO

### பிறர்க்குதவி இன்பம் பெறுவர் மேலோர்

இதமிலா வுலோபர்தம் பொருளை யெண்ணியே
மதமோடு நாடோறு மகிழ்வர் மேலவர்
பதவிதீர் மிடியர்க்குப் பரிவிற் றுஞ்செயும்
உதவியை யுனுந்தோறும் உளங்க ளிப்பரே.

நன்மையில்லாத கடும்பற்றுள்ள இவறியர் நாள்தோறும் பயனில்லாத எண்ணிக்கைப் பெருக்கமுள்ள தம் பணத்தையே பெரிதாக நினைந்து செருக்குற்றுப் பொய்யின்ப மகிழ்ச்சி அடைவர். பிறர் நலம் பேணும் சான்றவர் நிலையில்லாத ஏழைகட்கு மிகுந்த அன்புடன் தாம் செய்யும் உதவியை நினைக்கும்பொழுதெல்லாம் மெய்யான உள்ளத்துவகை அடைவர்.

இதம் - நன்மை. உலோபர் - இவறியர். மதம் - செருக்கு. பதவிதீர் - நிலையில்லாத. மிடியர் - வறியர். பரிவு - பேரன்பு. களிப்பு - உவகை. உக

*பிறர்க்குதவி செய்வோர் பேரின்பம் பெறுவர்*

காமமே வின்பங்கள் கணத்தி னீங்கிப்பின்
தீமையே விளைத்திடும் பிறர்க்குச் செய்கின்ற
சேமநல் லுதவியாற் சேரு மின்பந்தான்
நீமவீட் டின்பென நிகரு மற்றதே.

*தகாத ஆசையால் உண்டாகும் இன்பங்கள் இமைப்பொழுதில் கழிந்த பின் துன்பத்தையே பெருகச்செய்யும். பிறருக்கு வேண்டிய நல்லுதவி செய்யும் நன்மையால் இடையறாத இன்பம் உண்டாகும். அந்த இன்பம் பேரின்ப வீட்டின்பத்தை ஒத்திருக்கும்.*

*காமம் - தகாத ஆசை. மேவு - பொருந்தும். கணம் - இமைப்பொழுது. சேமம் - நன்மை. நீமம் - ஒளி ; பேரின்பம். நிகரும் - ஒக்கும்.* உஉ

---

## *அதி. ௩௯—பொருளாசை யொழித்தல்*

*தன்பெயர் எழுதாப்பொருள் தனதெனல் எங்ஙனம்?*

என்பொருளேன் பொருளேன்று சீவன்விடு
மனமேயோன் றியம்பக் கேளாய்
உன்பொருளா னாலதன்மே லுன்னாமம்
வரைந்துளதோ வுன்ற னோடு
முன்பிறந்து வளர்ந்ததுகொல் இனியுனைவிட்
டகலாதோ முதிர்ந்து நீதான்
பின்பிறக்கும் போததுவுங் கூடவிறந்
திடுங்கொல்லோ பேசு வாயே.

*நெஞ்சே! என்னுடைய பொருள், என்னுடைய பொருள் என்று உயிர்விடுகின்றனை. உனக்கு ஒன்று சொல்லுகின்றேன் கேள். உன்னுடைய பொருளானால் அப் பொருளின்மேல் உன் பெயர் எழுதப்பட்டிருக்கின்றதா? நீ பிறக்கும்போது உன்னுடன் பிறந்து வளர்ந்ததா? இனிமேலும் அஃது உன்னைவிட்டு நீங்காதா? நீ மூப்படைந்து சாவும்பொழுது அதுவுங் கூடச் செத்திடுமா? ஆராய்ந்து சொல்வாயாக.*

*சீவன் - உயிர். நாமம் - பெயர். இறத்தல் - சாதல்.* க

துன்பெலாம் பெருக்குபொருள் தூயபொருள் ஆகா

ஒப்பருநற் குணத்தவர்க்குங் கொலைகாமங்
கட்களவை யுபதே சிக்கும்
அப்பனாய் நட்பினர்க்குட் பகைவிளைக்குஞ்
சத்துருவா யகிலத் துற்ற
செப்பரிய துயர்க்கெல்லா மாதாவாய்த்
தீவினைக்கோர் செவிலி யாய
இப்பொருளை நற்பொருளென் றெப்படிநீ
யொப்புகின்றா யேழை நெஞ்சே.

அறிவிலாத நெஞ்சே! ஒப்புச்சொல்ல முடியாத சிறந்த நல்ல பண்புகளை யுடையவர்க்கும் கொலை காமம் கள் களவு (பொய்) முதலிய பெருந் தீமைகளை மனத்தழுந்தப் போதிக்கும் அத்தனாய், நண்பர்களுக்குள் பகையை விளைவிக்கும் மாற்றானாய், சொல்லமுடியாத உலகியல் துன்பங்கட்கெல்லாம் அன்னையாய், கொடுஞ் செயலுக்கெல்லாம் வளர்ப்புத் தாயாய் இருக்கும் இப் பொருளை இன்பமும் துணையும் இசைவிக்கும் நல்ல பொருளென்று நீ எந்த முறையாகக் கூறுகின்றாய்.

குணம் - பண்பு. சத்துரு - மாற்றான். மாதா - அன்னை. ஏழை - அறியாமை. உ

உடற்பயனை ஒழிக்கும் பொருள் உயர்பொருளாகா

நோக்கிருந்தும் அந்தகராக் காதிருந்துஞ்
செவிடரா நோயில் லாத
வாக்கிருந்து மூகையரா மதியிருந்தும்
இல்லாரா வளருங் கைகால்
போக்கிருந்தும் முடவரா வுயிரிருந்தும்
இல்லாத பூட்சி யாரா
ஆக்குமிந்தத் தனமதனை யாக்கமென
நினைத்தனைநீ யகக்கு ரங்கே.

நெஞ்சமாகிய வஞ்சகக் குரங்கே! நீ கண்ணிருந்தும் குருடராய்க். காதிருந்தும் செவிடராய்க், குற்றமற்ற வாயிருந்தும் ஊமையராய், அறிவிருந்தும் மூடராய், நீண்ட கைகால்களிருந்

தும் மூடவராய், உயிரிருந்தும் அஃதில்லாத வெற்றுடலினராய்ப் பயனிழக்கச் செய்யும் தீப்பொருளை வளரும் செல்வமாம் வாழ்வென நினைத்தனை.

நோக்கு - கண். அந்தகர் - குருடர். மூகை - ஊமை. பூட்சி - உடல். அகம் - மனம்; செருக்கு; நெஞ்சம். ரு

செல்வர்பால் கூற்றுவன் சேர்வது இன்றோ?

நிறைசெல்வ முடையாரை நோய்துன்ப
மணுகாவோ நினைத்த தெல்லாங்
குறையின்றிப் பெறுவரோ புவிக்கரசு
செலுத்துவரோ குறித்த வாயுள்
பிறையென்ன வளருமோ இயமன்வர
வஞ்சுவனோ பேரின் பத்துக்கு
உறையுளோ அவர்கிரக மிவையெலா
மனமேநீ யுன்னு வாயே.

நெஞ்சே! நிறைந்த செல்வமுடையாரைப் பசிநோய் உடல் நோய் துன்பம் முதலியன அணுகாவோ? நினைத்ததெல்லாம் குறைவில்லாமல் பெறுவாரோ? உலகுக்கு மன்னராய் ஆள்வரோ? வரையறுக்கப்பட்ட அகவை பிறைபோன்று வளர்ச்சியுறுமோ? இவரிடம் கூற்றுவன் வர நடுங்குவனோ? இவர் தங்குமிடம் அழியா இன்பத்துக்கு உறையுளோ? இவையனைத்தையும் கருதிப் பார்ப்பாயாக.

ஆயுள் - அகவை. இயமன் - கூற்றுவன். உன்னு-கருது. சு

களவுங் கூத்தும்போல் அழியும் வாழ்வு

கனவதனிற் கண்டபொருள் சேலவுக்கா
மோகுனிக்குங் கங்குற் கூத்தில்
இனரமைச்ச ரெனவேடம் புனைந்தவர்தம்
மாணையெங்கு மேகு மோவிண்
கனமின்போ லொழியுமந்தப் புவிவாழ்வு
நிலையென்னக் கருதிக் கோடி*
நினைவுற்று யுடல்வீழி னென்செய்வா
யறிவில்லா நெஞ்சக் கல்லே.

* ஒருபொழுதும். திருக்குறள், ௩௩௭.

அறிவில்லாத கல்லைப்போன்ற வலிய நெஞ்சே! கனவில் கண்ட பொருள் கைச்செலவுக்கு ஆகுமோ? முறையுணர்த்த ஆடும் இராக்கூத்தாகிய நாடகத்தில் வேந்தர் அமைச்சர் எனக் கோலம்பூண்டவருடைய அரசவாணை எல்லாவிடங்களிலும் நடக்குமோ? வானத்து மழையின்கண் காணப்படும் மின்னலைப்போல் தோன்றி மறையும் உலக வாழ்வை நிலையென்று கருதி அளவில்லாத தீய எண்ணங்களை நினைக்கின்றாய். உடல் மாண்டு விழுந்தால் என்ன செய்வாய்?

குனித்தல் - ஆடல். இனர் - வேந்தர். கனம் - மழை. புவி - உலகம். ரு

வெள்ளி, பொன், பொருளெலாம் வெறுமண் குவியலே

பஞ்சபூ தங்களைவிண் டாரகையைத்
தண்மதியைப் பானுத் தன்னைக்
கொஞ்சமும்நம் பொருளெனவுன் னுமல்வெள்ளி
பொன்னெனுமட் குப்பை தன்னைத்
தஞ்சமாம் பொருள்களென நினைத்ததன்மே
லாசையுற்றுத் தயங்கு கின்றாய்
நெஞ்சமே யுனைப்போலு மறிவினர்
தேடினுமிந் நிலத்தி லுண்டோ.

மனமே! ஐம்பூதங்களை, விண்மீன்களை, திங்களை, ஞாயிற்றைச் சிறிதேனும் நம்முடைய பொருள்கள் எனக் கருதாமல், வெள்ளி, பொன் என வழங்குகின்ற மண் குவியலை நம்மைக் காக்கும் பொருள்கள் என எண்ணி அவற்றின்மேல் அவாக் கொண்டு வாடுகின்றாய். உன்னைப்போலும் அறிவில் குறைந்தார் இவ்வுலகெலாம் ஆராயினும் உண்டாகார்.

தாரகை - விண்மீன். தயக்கம் - வாட்டம். சு

எல்லா மக்களும் சுற்றம் இவ்வுலகம் வீடே

பூதலநம் மில்லம்வான் மேற்பந்தர்
சசிகதிர்மீன் போற்றீ பங்கள்
சீதநீர்க் கடம்விருட்சா திகணம்பூம்
பொழிலுலகின் செல்வ மெல்லாம்

வீதமா நமதுமக்கள் யாவருநஞ்
சுற்றமேன வியந்துன் ருமைற்
பேதஞ்செய் துழல்கின்ருய் நெஞ்சமே
யுனைப்போலும் பித்த ருண்டோ.

மனமே! உலகம் நம்முடைய பொதுவீடு. விசும்பு அவ்வீட்டின் மேலுள்ள பந்தல். திங்கள் ஞாயிறு விண்மீன் அழகிய விளக்குகள். குளிர்ந்த நீர்க்குடம் பல்வகை மரங்கள். அழகிய சோலை உலகத்தின் இனிய செல்வங்கள். இவை யாவும் நமக்குரிய பங்காகும். மக்கள் எல்லாரும் உறவுமுறையாவர். இவ்வகையாகப் பெருமகிழ்வோடு நினையாமல், வேற்றுமைகாட்டி வருந்துகின்ருய். உன்னைப்போல் அறிவு திரிந்தார்—கிறுக்கர்—எவரும் இலர்.

சசி - திங்கள். பொன் - அழகு. கடம் - குடம். பொழில் - சோலை. வீதம் - பங்கு. பேதம் - வேற்றுமை. எ

செல்வம் ஐம்பூதம் ஆண்டான் திருத்தந்தை

பூதமதி ஞென்றுநமைத் தாங்குமன்னை
யொன்றுநாம் புசிக்கு முண்டி
மாதரையி லொன்றுரிய சமையலாளொன்று
நம்மெய் வளச்சாந் தாற்றி
பேதமின்றி மற்ருென்று நாமூரும்
வாகனமாம் பின்னு மாதி
நாதனே தந்தையெனிற் செல்வமிது
போலுமுண்டோ நவிலாய் நெஞ்சே.

மனமே! ஐம்பெரும் பூதங்களுள் நிலம் நம்மைத் தாங்கும் தாய். நீர் நாம் உண்ணும் உணவு முதல். தீ நமக்கு உணவினைச் சமைக்கும் சமையலாள். காற்று நம் உடம்பில் மெல்லிய காற்றுப் படும்படி வீசும் விசிறி. வானம் நாம் போக்குவரவு செய்ய இடந்தரும் ஊர்தி. மேலும் ஆதிபகவனுகிய முழுமுதலே தந்தை. அதனுல், இவைபோலும் செல்வம் வேறுண்டோ சொல்வாயாக.

சாந்தாற்றி - விசிறி. அ

ஊண் உடைமேல் உள்ளபொருள் ஒல்லாச் சுமை மயக்கே

மண்டுபெருந் தனமிருந்துங் கண்டுமகி
ழுவதல்லான் மயல்போன் முற்றும்
உண்டுவிட வொண்ணுமோ நினைவிற்கும்
பஞ்சமோ உலகந் தன்னிற்
கண்டபொரு ளத்தனையு மெமதுசெல்வர்
அப்பொருளைக் காத்தெ மக்குத்
தொண்டுசெய்வோ ரெனவுன்னி மகிழ்வுற்றால்
தலைபோமோ சொல்லாய் நெஞ்சே.

உள்ளமே! அளவிடப்படாத செல்வமிருந்தும், அதனைக் கண்டு மகிழ்ந்து மயக்கங்கொள்வர் மக்கள். அம் மயக்கம்போல் முற்றும் உண்ணுதற்கு முடியுமோ? கருதுவதற்கும் தடையும் முட்டுப்பாடும் உளவோ? உலகத்தில் காணப்படும் பொருள் முழுவதும் நம்முடையதே. செல்வர்கள் அப்பொருளைக் காத்து நாம் வேண்டும்போது நமக்குத் தந்து பணிசெய்யும் தொண்டர்கள். இப்படி நினைத்து நாம் உவகை கொண்டால், நம்முடைய தலை போய்விடுமோ? சொல்வாயாக.

தனம் - செல்வம். மயல் - ஆசையாலமிழ்தல். ௬

நம்மைவிட் டகல்பொருளை நல்லார்க்குக் கொடுத்தல் நலம்

எத்தனைபேர் கையின்முன்ன மிப்பொருடா
னிருந்ததவ ரெல்லாந் தத்தம்
அத்தமென நம்பினா ரவர்களைவிட்
டகன்றுன்கை யமர்ந்த தின்னுஞ்
சத்தமின்றி யுனைமோசஞ் செய்தனந்தம்
பேர்கரத்திற் சாருஞ் சொன்னேன்
சித்தமே யதுசெல்லு முன்னீசற்
பாத்திரத்திற் செலவி டாயே.

நெஞ்சமே! இப்பொருள் இதன்முன் எத்தனைபேர் கையில் இருந்தது. அவரவரும் இதனைத் தத்தம் பொருளென்றே நம்பியிருந்தனர். அவர்களை விட்டகன்று உன் கையில் வந்திருக்

கிறது. இஃது ஓசையின்றி உன் நம்பகத்தைக் கெடுத்து, பலர் கையில் சார்ந்துவிடும். நான் கூறுவதை நம்பு. இப்பொருள் உன்னை விட்டகலுமுன் நீ நல்லவர்க்குக் கொடுக்கும் நற்செயலைச் செய்வாயாக.

*அமர்தல்-போக்கிடமின்றி யிருத்தல். சத்தம்-ஓசை. மோசம்-நம்பிக்கைக் கேடு. அனந்தம்பேர் - பலபேர். சித்தம் - மனத்தின் எண்ணும் நிலை. சற்பாத்திரம் - நற்பண்புடைமை.* க0

**செல்வமெனப் பெயரிடலால் சிலர் வறுமைப் பேர்பெற்றார்**

கதிரவனு லொளியுறும்பல் வகைக்கல்லை
மணியென்றுங் காமர் மண்ணை
நிதிவெள்ளி யுலோகமென்றும் பெயரிட்டும்
விலையிட்டும் நிகழும் மண்ணுல்
சதியான காசுபண மெனச்செய்துந்
தரையின்மிடி தனைய மைத்தோர்
மதியிலா நரரன்றிக் கடவுளோ
சொல்லுவாய் மருள்சேர் நெஞ்சே.

மயக்கங்கொள்ளும் நெஞ்சே! ஞாயிற்றின் ஒளியினுல் விளக்கமுறும் கற்களை ஒளிக்கற்களென்றும், அழகிய மினுக்கமுள்ள மண்ணைச் செம்பொன் வெண்பொன் என்று பெயரும் மதிப்பும் அமைத்துப் பின் அழிவுறும் காசு பணமெனச் செய்தும், இவையில்லாதார் வறியரென்றும் ஆக்கியவர் அறிவிலா மக்களே ஆவர். கடவுளோ சொல்லுவாயாக.

*கதிரவன் - ஞாயிறு. மணி - ஒளிக்கல் (இரத்தினம்). உலோகம் - பொன்முதல். சதி - அழிவு. மிடி - வறுமை. மருள் - மயக்கம்.* கக

**தேவைக்குமேல் செல்வமெலாம் சேர்ப்ப தெதன்பொருட்டு**

தரையெலா நமதேனினு மிருப்பிடமோர்
முழமேநற் றுனி யங்கள்
வரையென்னக் குவிந்துகிடந் தாலுமுண்ப
தரைநாழி வளர வாவால்

திரைகட லெலாம்பருக உன்னுநா
யெனநமக்குத் தேவை யில்லாக்
கரையினிதி காணிதானி யங்கள்நீ
வேட்டதேன்ன கருத்தே சொல்லாய்.

*நெஞ்சே! உலக முழுவதும் நமது என்றாலும் நாமிருப்பது ஒருமுழ இடமே. கூலங்கள் மலைபோல் குவிந்து கிடந்தாலும் நாம் உண்பது சிறுபடிக்கு அரைப்படி யுணவே. பேராசையால் கடல்நீர் முழுவதும் குடிக்க நினைக்கும் நாய்போன்று, அளவில்லாத பொருள் நிலம் கூலம் முதலியவற்றைத் தேவையில்லாமல் நீ விரும்பியது எதன்பொருட்டு?*

*தரை-உலகம். கரையில் நிதி-அளவில்லாத பொருள். காணி-நிலம். தானியம்-கூலம். கருத்து-நெஞ்சு.* கஉ

மிகுபொருள் படைத்தோர்க்குத் துன்பம் மிகுமே

பொலமிகவுள் ளார்க்குணவின் சுவையின்று
பசியின்று புசிக்கு மன்னம்
அலமாய றுதோயாக் கவலைபிணி
பிடகர்பலர் அருகில் வேண்டும்
பலருடலைத் தாங்கினுமோ சுமக்கரிதூர்ப்
பகைபயமிப் பையு ளேல்லாம்
இலருறுக ணாளரேனிற் செல்வரேவர்
மிடியரேவ ரியம்பாய் நெஞ்சே.

*மனமே! பொன் மிகப் படைத்தவர்க்கு உணவின் சுவை தோன்றாது. பசியிராது. உண்ட உணவும் செரிக்காமல் துன்பம் தரும். எப்பொழுதும் நீங்காக் கவலையும் நோயும் அடைவர். அதனால் மருத்துவர் பலர் கிட்டவே இருத்தல்வேண்டும். அவர்கள் உடலைப் பலர் தாங்கினாலும் எழுந்து நடக்க முடியாது. ஊரார் பகையுண்டாம். அச்சம் மிகுதியாகும். இவ்வகைத் துன்பமெல்லாம் வறியோர்க்கு இல்லை. ஆதலால் இன்புறும் செல்வர் யார்? துன்புறும் வறியர் யார்? சொல்லுவாயாக.*

*பொலம்-பொன். அன்னம்-சோறு. அலம்-துன்பம். அறல்-செரித்தல். கவலை-மனக்கலக்கம். பிடகர்-மருத்துவர். பயம்-அச்சம். உறுகணாளர்-வறியர். மிடியர்-வறியர். இயம்பு-சொல்லு.*

கந

## வேறு

பெற்றவை கொண்டு மனநிறைதல் பேரின்பம்

**பறவையும் விலங்கும் தீனி பசித்தபின் தேடு நாளைக்
குறையெனுங் கவலை யில்லை உணவின்றி யிறந்த தில்லை
வறியரேம் மிற்பல் லோரிவ் வையகத் துளர்தே வீந்த
சிறிதுமே பெரிதேன் றெண்ணிச் சிந்தையே மகிழ்ந்து கொள்ளே.**

உள்ளமே! புள்ளும் மாவும் துவாப் பசித்தபின் இரை தேடும். நாளைக்கு வேண்டுமே என்ற கவலையில்லை. தீனி இன்றி அவையும் மாண்டுபோகவில்லை. இவ்வுலகத்துள் எம்மைக்காட்டிலும் ஏழைகள் பலரிருக்கின்றனர். (ஆதலால்) தெய்வ அருளால் கிடைத்த சிறு பொருளைப் பெரிதென்று மனநிறைந்து உவகையுறுவாயாக.

பறவை-புள். விலங்கு-மா. தீனி-இரை. தே-தெய்வம். கசு

---

## அதி. சo—யாக்கை நிலையாமை

பொழுதுநாள் ஆண்டெனப் போகும் வாழ்நாள்

நெருநலோ வகன்றதின்று விடிந்துபக
    லாயிற்று நிமிடந் தன்னில்
அருணனே யத்தமிப்ப னிசிவரும்பின்
    போமறுநா ளாமிவ் வண்ணம்
ஒருநாளாப் பலநாளாத் திங்களா
    வாண்டுகளா வுருவு கொண்டிங்கு
அருநாளா மாயுளுள் கழிவதனை*
    யுணராயோ அவல நெஞ்சே.

துன்புறும் மனமே! நேற்றைப்பொழுது கழிந்தது. இன்று புலர்ந்து பகலாயிற்று. நொடிப்பொழுதில் ஞாயிறு மறையும். இரவு தோன்றும். பின் அவ்விரவும் மறையும். இரண்டாம் நாள் ஆகும். இப்படிப் பல நாட்கள் செல்ல மாதங்களும் ஆண்டுகளும் ஆக உருவுகொண்டு நம் வாழ்நாள் கழிவதனை உணர்வாயாக.

நெருநல் - நேற்று. நிமிடம் - நொடிப்பொழுது; நொடி. அருணன் - ஞாயிறு. அத்தமிப்பன் - மறைவன். திங்கள்-மாதம். ஆயுள் நாள் - வாழ்நாள். அவலம் - துன்பம். க

---

* நாளென. திருக்குறள், ௩௩௪.

மறைந்த கூற்றை மனங்கொண்டு வாழ்க

வையாற்செய் புணைநம்பி யனலாழி
கடக்கவுன்னும் மதியி லார்போல்
பொய்யாற்செய் மெய்நம்பி யேதேதோ
நினைவிற்றாய் புரைசேர் நெஞ்சே
பையவோர் புட்பிடிக்கக் ககனமிசை
வட்டமிடும் பருந்து போல
ஐயோகூற் றுனைப்பிடிக்க அற்றம்பார்த்
தோளித்துநின்ற தறிகி லாயோ.

குற்றமுள்ள மனமே! வைக்கோலால் செய்த தெப்பத்தை நம்பி தீயாலாகிய கடலைத் தாண்டிக் கரை சேரக் கருதும் அறிவிலாரைப்போல் நிலையில் பொருள்களால் செய்த உடம்பை நிலையுடையதென நம்பி என்னென்னவோ எண்ணுகின்றாய். பருந்து ஒரு பறவையைப் பிடிப்பதற்காக வானத்தில் மெதுவாகப் பறப்பதுபோல், ஐயோ! நமன் உன்னைப் பிடிக்க நேரம் பார்த்து மறைந்து நிற்கின்றான். நீ இதை அறிந்திலையே.

வை - வைக்கோல். புணை - தெப்பம் அனலாழி-தீக்கடல். பொய் - நிலையாதது. மெய் - நிலைப்பது. புரை-குற்றம். பைய-மெதுவாக. புள் - பறவை. ககனம்-வானம். கூற்றுவன்-நமன். அற்றம் - நேரம். உ

மலமிகும் உடலை மதிப்பது மயக்கே

தினமும்விரே சனங்கொளினு மோயாமன்
மலமாரி திரளாப் பெய்யுங்
கனம்போலுந் தேகமிதைப் பிரித்துநோக்
கிடின்மலநீர் கசியுஞ் செந்நீர்
இனமாலை தோலேன்பு தசைநரம்பு
குடரன்றி யினிவே றுண்டோ
மனமேநீ யிதையுமோரு பொருளேன்ன
வுன்னவென்ன மருளுற் றாயே.

நெஞ்சே! நாள்தோறும் மலங்கழிகைக்கு மருந்து உண்டாலும் விடாமல் மலம் மிகுதியாகப் பெய்யும். பொன்போலப்

பொலியும் இவ் வுடம்பைப் பாகுபடுத்தி ஆராய்ந்தால், மலம், கசியும் சிறுநீர், குருதி, தோல், எலும்பு, சதை, நரம்பு, குடல் அல்லாமல் வேறு என்ன இருக்கின்றது. நீ இதை மதிக்கத்தகுந்த ஒரு பொருளாக நினைக்க எதும் மயக்கம் கொண்டாயோ?

தினமும் - நாள்தோறும். விரேசனம்-மலங்கழிக்கு மருந்து. கனம் - பொன். தேகம் - உடம்பு. மருள் - மயக்கம். ௩

உயிர்நீங்கின் மக்களுடல் ஒன்றுக்கும் பயனுகா

மாடாடு விலங்கிறப்பிற் றசைமயிர்தோல்
கோம்புதவும் மட்க லந்தான்
ஓடாக வுடையினுென்றுக் குதவும்வீழ்
மரங்கல்லு முபயோ கந்தான்
வீடான திடியின்மேற் போருளுதவுங்
காடழியின் விறகா மாயக்
கூடாகுந் தேகமிது வீழினெதற்
குதவும்நீ கூறுய் நெஞ்சே.

மாடு ஆடு முதலிய விலங்கினங்கள் இறந்தால் தசையும் மயிரும் தோலும் கொம்பும் மக்களுக்குப் பயன்படும். மண் எனம் உடைந்தால் ஓடாகப் பிறிதொன்றுக்குப் பயன்பெறும். கீழே விழுந்த மரம் கல் முதலியவும் பயனுகும். வீடு இடிந்தாலும் மேலே உள்ளது பலவகையாகப் பயன்பெறும். காடு அழிந்தால் விறகாகும். நிலையிலா இம் மாய உடல் உயிர் நீங்கியபின் எதற்குப் பயனுகும் நீ சொல்லுவாயாக. ௪

மரஞ்செடிக்குச் சொல்காலம் மக்களுடற் கின்ருும்

காடுசேர் மரஞ்செடிபார்த் தித்தனைநாள்
நிற்குமெனக் கணிக்க லாஞ்சீர்
நாடுநீர்த் தடநோக்கி யித்தனைநாட்
புனலென்ன நவில லாமோர்
வீடுதா னித்தனைநா ணிற்குமென
விளம்பலா மெய்யென் னும்போய்க்
கூடுதா னித்தனைநாள் நிற்குமெனப்
புவியிலெவர் கூறற் பாலார்.

காட்டிலுள்ள மரம் செடிகளை ஆராய்ந்து அவை இத்தனை நாளைக்கு நிற்கும் என்று அளவிடலாம். சிறந்த நீர்நிலைகளை இவ்வளவு காலத்துக்குப் பாயும் நீர் கொள்ளும் எனக் கூறலாம். வீடு இவ்வளவு காலம் நிலைக்குமெனக் கூறலாம். மெய்யென்று பெயர் பெற்ற பொய்யுடலை உலகத்தில் இவ்வளவு காலம் நிலைத்திருக்கு மென்று சொல்லவல்லவர் யார்? (ஒருவருமிலர்.)

கணித்தல் - அளவிட்டுக் கூறல். புனல் - நீர். ௯

நம்முயிர் கொள்ளக்காலம் நாடிடான் நமனே

நெல்லறுக்க வோர்கால மலர்கொய்ய
வோர்காலம் நெடிய பாரக்
கல்லறுக்க வோர்கால மரமறுக்க
வோர்காலக் கணித முண்டு
வல்லரக்க னனையநம னினைத்தபோ
தெல்லாநம் வாழ்நா ளென்னும்
புல்லறுக்க வருவனெனில் நெஞ்சமே
மற்றினியாம் புகல்வ தென்னே.

மனமே! உலகில் நெல் அறுப்பதற்கும், பூப்பறித்தற்கும், கல் வெட்டுதற்கும், மரம் ஈர்வதற்கும் ஒவ்வோர் காலக் கணக்குண்டு. மிகக் கொடியரை யொத்த கூற்றுவன் நம்முடைய அகவை என்னும் புல்லை அறுக்க அவன் நினைத்தபொழுதெல்லாம் வருவான். அதனால், நாம் நம்முடைய அகவையின் நிலைமையைச் சொல்லுவதற்கு என்ன இருக்கின்றது?

கணிதம் - கணக்கு. நமன் - கூற்றுவன். வாழ்நாள் - அகவை. (ஆயுள்.) புகல்வது - சொல்வது. ௰

யாக்கை இறப்பதற்கு எல்லை யில்லை

முற்றியபின் கனியுதிரும் பழுப்புற்றுத்
தழையுதிரும் முழுது மேநெய்
வற்றியபின் விளக்கவியு மென்னவோர்
திடமுண்டு மக்கள் காயம்
பற்றியவக் கருப்பத்தோ பிறக்கும்போ
தோபாலப் பருவத் தோமூப்
புற்றபின்போ வீழ்வதென நிலையின்றே
லிதன்பெருமை யுரைப்ப தென்னே.

(நெஞ்சே!) பழம் முதிர்ந்த பின்பே விழும். இலை முற்றிப் பழுத்த பிறகே உதிரும். எண்ணெய் முழுவதும் எரிந்த பின்னரே விளக்கு அணையும். இவ்வாறு கூற ஓர் உறுதி உண்டு. மக்கள் உடம்பு தோன்றிய கருவிலோ, பிறக்கும்பொழுதோ, கட்டிளமைப் பருவத்தோ, முதிர்ந்த பின்னரோ இறக்கும் என உறுதியில்லை. ஆதலின், இவ்வுடலின் பெருமையை என் சொல்வது?

தழை - இலை. திடம்-உறுதி. காயம்-உடம்பு. வீழ்வது - இறப்பது. எ

*இறப்பகற்ற அறியார்செய் வியப்பால் என்பயன்*

புகைவண்டி யூர்ந்துலகை நொடிக்குள்ளே
சுற்றுவோம் புகைக்கூண் டேறிக்
ககனமிசைப் பறவையெனப் பறப்போமோர்
புகைக்கலத்தாற் கடல்க டப்போம்
வகையாய்மின் னஞ்சலினு லெத்திசையுள்
ளாரோடும் வார்த்தை சோல்வோம்
மிகையான புதுமைசெய்வோம் மரணமதை
விலக்கறியோம் வியப்பீ தன்றே.

(மனமே!) புகைவண்டியில் ஏறி இமை மூடித்திறக்கும் காலத்தினுள் பரந்த பெரிய உலகைச் சுற்றி வருவோம். புகைக் கூண்டில் ஏறிப் பறவையைப்போல் வானத்தில் பறப்போம். புகைக் கப்பலால் பெருங் கடலையுங் கடப்போம். வகை வகையாகிய மின் அஞ்சலினுல் பத்துப் புலத்துள்ளாரோடும் பேசுவோம். மேலும், அளவில்லாத வியத்தகு செயல்களைச் செய்வோம். ஆனுல், உடலுக்கு வரும் சாவை நீக்கமட்டும் அறியோம். இஃது ஒரு மருட்சியல்லவா?

நொடி - கண்ணிமைப்பொழுது. ககனம் - வானம். மின்னஞ்சல் - தந்தி. திசை - புலம். வியப்பு - மருட்சி; ஆச்சரியம். அ

*ஆக்கை மாளுநாட் கடையாள மறியோம்*

அண்டாண்டங் களின்றூர நிலையளவு
கூறுவோ மருக்கன் திங்கட்கு
உண்டாகுங் கிராணமதை முன்சோலுவோங்
கடிகாரத் துதவி கோண்டு

தண்டாத காலமதை யளவிடுவோம்
இன்னுமிகு சமர்த்துஞ் செய்வோம்
கொண்டாடுந் தேகமிது வீழ்காலம்
அறிவதற்கோர் குறிப்பின் றம்மா.

*பல்வேறு உலக உருண்டைகளின் தொலைவு, நிலை, சுற்றளவு முதலிய பிறவும் வகைப்படுத்துச் சொல்லுவோம். ஞாயிறு திங்கட்கு உண்டாகும் நிலை நிழலாம் கிரகணத்தை முன் ஆய்ந்து உரைப்போம். நாழிகைவட்டிலைக்கொண்டு காலக் கணக்கை வரையறுத்துக் கூறுவோம். மேலும் பல வியத்தகு செயல்களும் செய்வோம். விரும்பிப் பேணும் இவ்வுடம்பு எப்பொழுது மாளும் என்பதை உணர்வதற்கோர் அடையாளமுமின்று.*

*அண்டம்-உலக உருண்டை. அருக்கன்-ஞாயிறு. கிராணம்-கிரகணம் பற்றுதல். கடிகாரம் - நாழிகை வட்டில். சமர்த்து-திறமை. தேகம் - உடம்பு. வீழ்காலம் - மாளும் பொழுது. குறிப்பு - அடையாளம்.* க

**உலகியற் பொருளெலாம் கூற்றுவன் உறுப்பகை**

மண்டலத்தா ருயிர்வாங்க நமன்கொண்ட
வாயுதத்தின் வகுப்பை நோக்கில்
கொண்டலிடி மின்னீர்கா லனன்மரங்கல்
மண்ணோய்மீன் கொடிய புட்கள்
உண்டிவிலங் கின்பதுன்பம் பகையச்ச
மூர்வனபே யுலகி லின்னுங்
கண்டதெல்லா மவன்கையா யுதமென்னிற்
றப்பும்வகை காணே நெஞ்சே.

*நெஞ்சே! உலகிலுள்ளார் உயிரை எடுத்துக்கொண்டு செல்லக், கூற்றுவன் கையாளும் கருவிகள் பலவாம். அவை மழை, இடி, மின்னல், வெள்ளம், நீர்நிலை, காற்று, தீ, மரம், மலை, மண், நோய், மீன், கொடும் பறவை, உணவு, விலங்கு, இன்பம், துன்பம், பகை, நடுக்கம், ஊர்ந்துசெல்லு முயிரினங்கள், பேய் முதலிய உலகத்திற் காணும் பொருள் முற்றும். ஆயின், நாம் தப்பும் வகை எப்படி?*

*நமன் - கூற்றுவன். கொண்டல் - மழை. கால் - காற்று. அனல் - தீ. கல் - மலை. புள் - பறவை.* உ0

*இறப்போர்க் கண்டும் மெய் எண்ணும் நெஞ்சே*

விரியாழி நுண்மணலைத் தாரகையை
யெண்ணிடினும் வீந்தோர் தம்மைச்
சரியாவெண் ணிடத்தகுமோ* இன்னமுநங்
கண்முன்னஞ் சாவோர் தம்மைத்
தெரியாது போல்தினமும் வீண்காலங்
கழிக்கின்றாய் திடமா யென்று
மரியாமை யுற்றனையோ அறியாமை
பெற்றனையோ வழுத்தாய் நெஞ்சே.

*மனமே! கடற்கரையில் காணும் நுண்ணிய மணலையும் விண்மீனையும் கண்ணுற்கண்டு அளவிட்டாலும், இறந்தோர்களைச் செவ்வையாக எண்ணிக் கணக்கிட முடியுமோ? மேலும் நம் நேரிலே வன்மையுடனிருந்தார் மாண்டொழிவதைப் பார்த்தும் தெரியாததுபோல் நாளும் வீண்காலம் போக்குகின்றாய். எந்நாளும் உறுதியுடன் மாளாதிருக்கும் நிலை பெற்றனையோ? அல்லது ஆராய்ச்சி யறிவு அற்றனையோ? கூறுவாயாக.*

*விழி - கண். ஆழி - கடல். வீதல் - சாதல். வீண் - பயனின்மை. திடம் - உறுதி. மரியாமை - சாவாமை. வழுத்தல்- கூறுதல்.* கக

*நீளச் சுமக்குமுடல் நீர்க்குமிழிபோற் கெடும்*

அனமிகிலோ வாயுகுறை யிற்சூடுண்
ணுவிடிலின் ஆவி நீங்குங்
கனமான வெய்யின்மழை பனியுதவா
தவையின்றேற் கணநில் லாது
தினமுமா யிரங்கண்ட மிமைப்போதா
கிலுமதன்மேற் சிந்தை யின்றேற்
புனன்மொக்கு ளெனவழியு நெஞ்சமே
நாஞ்சுமக்கும் பூட்சி தானே.

*மனமே! சோறு கூடினால் காற்று நோய் உண்டாம். குறைந்தால் சூடு. உண்ணவிட்டால் இனிய உயிர் அகலும். மிகுதியான*

---

* *துறந்தார். திருக்குறள் உஉ.*

வெயில் மழை பனி உதவா. அவை இல்லாவிட்டால் நொடிப் பொழுதும் உடல் நிலைக்காது. நாள்தொறும் அளவிடப்படாத இக்கட்டு. கண்ணிமைப் பொழுதேனும் உடல்மேல் நினைப்பின் றேல் நீர்க்குமிழிபோல் கெடும். இத்தகைய உடம்பையே நாம் சுமந்து திரிகின்றோம்.

அனம் - சோறு. வாயு - காற்று. ஆவி - உயிர். கணம்-நொடி. கண்டம் - ஆபத்து; இக்கட்டு. பூட்சி - உடல். கஉ

உறுதியற்ற வாழ்நாட்கு உள்ளமே செய்வதென் ?

பொன்றுநா ளின்னதென நிலையுண்டே
லாழிசூழ் புவியோ ராயுள்
ஒன்றிரண்டு நாளேனினும் போதுநூ
றுண்டென்றோர் உரையுண் டேனும்
இன்றேஇக் கணமோபின் னுறுங்கணமோ
மாலையோ இரவோ சாவது
என்றேவென் றேருறுதி யில்லாத
ஆயுளிதற் கென்செய் வோமே.

(மனமே!) இறக்குமநாள் இன்னநாள் என்று ஓர் உறுதி யிருக்குமானால் கடல் சூழ்ந்த உலகினர்க்கு அகவை ஒன்றிரண்டு நாளாக இருப்பினும் அமையும். அகவை நூறுண்டு உண்டு என்று ஓர் உறுதியற்ற சொல் உண்டு; என்றாலும், இன்றோ, இப் பொழுதோ, பிற்பொழுதோ, மாலையோ, இரவோ சாதல் என் றோர் திடனில்லை. இத்தகைய அகவையை உடைய நாம் செய்யக்கடவது யாது?

பொன்று நாள் - சாவும்நாள். ஆயுள் - அகவை. கங

ஆடு மாடு நெல்லால் ஆமுடற்கு அப்பெயர்

தோல்லுலகிற் புல்லிலையுண் ணுடமேத
லுயிர்களைநற் சுரபிப் பாலை
நெல்லுடன்பல் தானியத்தைக் காய்கனியைக்
கிழங்கிலையை நிதமு முண்டு
மல்லுறவே வளருமிந்தக் காயத்தை
மரமென்றும் மாடா டென்றும்
புல்லென்றும் நெல்லென்றுஞ் செடியென்றுங்
கொடியென்றும் புகல லாமே.

(மனமே!) பழைமையான இவ்வுலகில் புல் இலை தழை முதலியவற்றை யுண்டு வாழும் ஆடு மாடு முதலிய தாழ்வான உயிர்களைக் கொன்று அதன் உடம்பையும், தூய ஆன்பாலையும், நெல்முதலாகச சொல்லப்படும் பல்வேறு கூல நல்லுணவையும், காய் கனி கிழங்கு கீரை முதலிய சிறந்த உணவையும் நாளும் உண்டு செழிப்புற வளரும் மக்களுடம்பை, மரம் ஆடு மாடு புல் நெல் செடி கொடி என்று சொல்லலாமன்றோ?

தொல் - பழைய. சுரபி - பசு; ஆன். தானியம் - கூலம். மல்லல் - செழிப்பு. புகலல் - சொல்லல். கச

உணவின் வழியே உருக்கொண்ட துடம்பு

ஆதியிற்புல் லிலைகனிகாய்த் தானியமாய்
மீன்பறவை ஆடு மாடாய்
மேதினியி லிருந்துதாய் தந்தையுடற்
சேர்ந்தொருநாள் வெளியே வந்தங்கு
ஓதியபண் டங்கள்தின்று பெருத்திறந்து
பலசெந்துக் குணவாய்ப் பஞ்ச
பூதியமாய் நாசமாய்ப் போம்நெஞ்சே
நாஞ்சுமக்கும் பூட்சி தானே.

உள்ளமே! நாம் தந்தை உண்ணும் உணவின் வழிக் கலந்து தாய் கருவிற் சென்று புகுந்து வெளி வருகின்றோம். அதனால், புல் இலை கனி காய் கூலம் மீன் பறவை ஆடு மாடு முதலியவை யாய் முதற்கண் இருந்தோம். பின் பண்டங்கள் தின்று பெருத் தோம். முடிவில் இறந்தோம். பல சிற்றுயிர்க்கு உணவானோம். எஞ்சியவை ஐம்பூதங்களுடன் கலந்து அழிந்தன. இத்தகைய அழிவுபாட்டு உடம்பையே நாம் சுமக்கின்றோம்.

செந்து - சிற்றுயிர். பஞ்சபூதியம்-நிலம் நீர் நெருப்பு காற்று விசும்பு ஆகிய ஐம்பூதங்களால் ஆக்கப்பட்டது. நாசம் - அழிவு. பூட்சி - உடல். கரு

உடல் பிணமாயின் நெருங்கார் ஒருவரும்

எமதெனுமெய் பிறக்குமுன்னெங் கிருந்ததின்னஞ்
சிலகாலத் தெங்கே செல்லும்
அமருயிர்நீங் கியபின்னோர் கணமுமனை
சேயரிதன் அருகே நில்லார்

தமர்சவமென் றெடுத்தெறிவார் பறவைவிலங்
கினங்கூடித் தத்திக் கோத்தி
அமர்செய்து புசிக்குமப்போ தென்னேன்று
கேட்பவரார் அறிவில் நெஞ்சே.

வேண்டுவன அறியா நெஞ்சே! எமது என்று செருக்குடன் உரைக்கும் இவ்வுடல் இதற்குமுன் எங்கே இருந்தது? இன்னும் சின்னாளில் எங்கே செல்லும்? இதனகத்துத் தங்கியிருக்கும் உயிர் அகன்றபின் மனைவியும் மக்களும் ஒரு நொடிப்பொழுதும் இதனருகே நில்லார். நம்மைச் சார்ந்தோர் பிணம் என்று சொல்லிப் புறங்காட்டில் எடுத்தெறிவார். காக்கை கழுகு நாய் நரி முதலிய இனங்கள்கூடி உடல்மேல் ஏறிக் குத்திக் கிழித்துச் சண்டையிட்டுத் தின்னும். அப்பொழுது அவற்றைத் தடுத்து ஏன் என்று விலக்குவார் யாருமிலர்.

அமரும் - தங்கியிருக்கும். கணம் - நொடி. சேயர் - மக்கள். தத்தி - ஏறி. அமர் - சண்டை. கசு

---

## அ௯. சுக—துன்பம்

கொடுந்துயர்க் கஞ்சல்மீன் குளிர்க்கஞ் சுதலர்ம்

பாரில் யார்க்கும் பழங்கண் சகசமாம்*
வீரி யங்கெட வெந்துயர்க் கஞ்சுதல்
போரி னேர்ந்தவன் பொன்றலுக் கஞ்சலும்
நீரின் மீன்குளிர்க் கஞ்சலும் நேருமே.

உலகில் எவருக்கும் துன்பமுண்டாதல் இயல்பு. ஆதலின் ஆண்மை அழியக் கொடுந்துன்பத்துக்கு அஞ்சுதல் சண்டைக்குச் சென்றவன் மாள அஞ்சுவதும், நீரில் வாழவேண்டிய மீன்கள் குளிருக்கு அஞ்சுவதும் போலும்.

பழங்கண் - துன்பம். சகசம் - இயல்பு. வீரியம் - ஆண்மை. பொன்றல் - மாளுதல். நேரும் - போலும். க

* இலக்க. திருக்குறள், கூஉஎ.

இறக்கும் வரை உள்ள துன்பம் எண்ணி மகவு அழும்

பிறந்த சேயுட னேயழும் பீழைதான்
சிறந்த மாநிலஞ் சேர்ந்துபின் ஞருயிர்
இறந்து போமள வுந்துய ரேன்பதை
அறிந்து நீர்விட் டனுங்கலை யோக்குமே.

தாய் வயிற்றினின்று தோன்றியவுடனே பிள்ளை வீறிட்டு அழும் துன்பம், உயிர் உயர்ந்த பெரிய உலகில் சேர்ந்ததுமுதல் இறந்து போம் அளவும் இடையறாத துன்பமென்பதை அறிந்து, கண்ணீர்விட்டு வருந்துவது போலும்.

சேய் - பிள்ளை. பீழை - துன்பம். அனுங்கல் - துன்பம். உ

## வேறு

நிலைத்த இன்பம் நீளுலகில் இன்று

கோடிபோன் னுடையவ ரேனினுங் கோமுடி
சூடிய வேந்தரே யெனினுந் துன்போடுங்
கூடிய வாழ்க்கைய ரன்றிக் கூறுங்கால்
நீடிய சுகமுளோர் நிலத்தி னில்லையே.

அளவில்லாத செல்வத்தை உடையவரானாலும், மணிமுடி சூடி மன்னர் மன்னராய்த் திகழ்ந்தவரானாலும் துன்புடன்கூடிய வாழ்க்கையராவர். ஆய்ந்து சொல்லுமிடத்து நிலைத்த இன்பமுள்ளவர் நிலவுலகத்தில் ஒருவரும் இலர்.

கோடி - அளவில்லாமையைக் குறிப்பது. கோமுடி-மன்னர் மன்னன் சூடும் மணிமுடி. நீடிய - நிலைத்த. சுகம் - இன்பம். நிலம் - உலகம். ௩

பொருளிழப்பால் கீழோர் பொருது பொன்றுவர்

பாக்கிய நிலையெனும் பதக ரோர்துயர்
தாக்கிடிற் பொருதுயிர் தன்னைப் போக்குவர்
ஆக்கிய வாக்கமு மஞரு மோன்றேன
நோக்கிய சீலரை நோயென் செய்யுமே.

செல்வம் நிலைத்து நிற்கும் என்னும் அறிவில்லாத கீழோர் பொருட் கேட்டால் ஒரு துன்பம் தம்மை வருத்தின், அத்துன்

பம் பொறுக்காது மாண்டொழிவர். தேடிய பொருளும் கூடிய துன்பமும் வினைப்பயன் ஆதலின், இரண்டையும் ஒப்பு நோக்கும் சான்றவரைத் துன்பம் என்ன செய்யும்? (ஒன்றும் செய்யா தென்பது கருத்து.)

பதகர் - கீழோர். தாக்கிடின்-வருத்தினால். அனர்-துன்பம். சீலர் - சான்றவர். நோய் - துன்பம். ச

## வேறு

இன்பமும் துன்பமும் ஏற்பர் இயைந்தே

ஒளியி னோடிரு ணிழலோடு வெயில்பொழி யுதகத்
துளியி னோடுமின் னசனிமா மலையையுஞ் சுழற்றும்
வளியி னோடிளந் தென்றலும் வருதல்போன் மாக்கள்
களியி னோடருந் துயரமுங் கொள்ளுவர் கலந்தே.

மக்கள் வெளிச்சத்துடன் இருளும், நிழலுடன் வெயிலும், மழையுடன் மின்னலும் இடியும், பெரிய மலையும் பெயர்ந்து கற் போல் சுற்றச் செய்யும் சூறைக்காற்றுடன் வாடிய உயிரையும் தளிர்க்கச் செய்யும் மெல்லிய தென்றல்காற்றும் மாறிமாறி வரு தல்போல, இன்பத்துடன் துன்பும் கலந்து வருவதை இயல் பென எண்ணி ஏற்றுக்கொள்வர்.

உதகம் - நீர். அசனி-இடி. வளி-காற்று. மாக்கள் - மக்கள். களி - இன்பம். ரு

அழுது வருந்தினரே அடைவர் பேரின்பம்

உழுது புண்செயப் புன்செயும் நன்செயா முயர்பொன்
முழுதுந் தீயினிற் சுடச்சுட வொளிருமால்* மொழியும்
பழுதின் மாமணி தேய்பட வொளிமிகும் படர்கொண்டு
அழுது நொந்தவர்க் கன்றிமற் றவர்க்கற மரிதே.

உழுது புண்படுத்துவதுபோல் மண்ணைக்கிளறப் புன்செயும் நன்செய்யாம். உயர்ந்த தங்கத்தைத் தீயினில் புடம் வைத்துச் சுடச்சுட ஒளிவிட்டு மாற்றுயரும். புகழ்ந்து சொல்லப்படும் குற்ற மற்ற பெரிய ஒளிக்கல் சாணையிற்பட்டுத் தேய்வுற விளக்கம் மிகும். இவைபோல் துன்பங்கொண்டு கண்ணீர் வார்ந்து வருந்தியவர்களுக்கு அல்லாமல் மற்றவர்கட்கு நிலைத்த இன்பத் திற்கேதுவாகிய நன்மையை மேற்கொள்வது முடியாது.

* சுடச்சுடரும். திருக்குறள். உகஎ.

புன்செய்-வானம் பார்த்த விளைநிலம். படர்-துன்பம். அறம்-நன்மை. அரிது - முடியாது. சு

உழைப்பூணுறக்கம் கூடக் குறைய நோயுறும்

ஓங்கு காமத்தால் சோம்பினுல் உணவினுல் ஊங்கு
தூங்க லால்துயில் இன்மையால் சினத்தினுல் துவக்கு
தாங்கொ ணுத்தொழில் செயன்முத லேதுவால் சடநோய்
ஆங்கு றுஞ்சடம் செய்தவன் கைப்பிழை யன்ருல்.

மிக்க இணைவிழைச்சால், மடியினுல், அளவுக்கு மிஞ்சிய உணவினுல், பெருந்துயிலால், உறக்கம் இல்லாமையால், சினத்தினுல், உடல் தாங்கமுடியாத அளவு உழைத்தல் முதலிய காரணங்களால் உடலுக்கு நோய் வரும். இவையன்றிப் படைத்த கடவுளின் செய்கைத் தாழ்வினுல் அன்று.

காமம் - இணைவிழைச்சு. ஊங்கு-மிகுதி. துவக்கு - தோல். சடம் - உடல். செய்தவன் - படைத்த கடவுள். எ

உலக அழிவும் உய்வுக்கே வருமால்

பலருய் வான்சிலர்ப் படுத்திடும் பதியெனப் பரன்பார்ச்
சலனம் தீவரை யிடிபெருங் கான்முதல் தாபம்
கல்வு றச்செயுங் காரணம் யாதெனிற் கணக்கில்
உலக கோடிசம் பந்தத்தா லெனவுண ருளமே.

நெஞ்சே! ஆளும் மன்னன் நாளும் பலர் துன்பமின்றி இன்புடன் வாழ, இடையூறுகவுள்ள சிலரைக் கொல்லுவதுபோல், ஆண்டவன் பலகோடி உலகத் தொடர்பால் நிலநடுக்கம் எரிமலை பேரிடி சூறைக்காற்று முதலிய உலகழியும் துன்பத்தையும் உண்டாக்குவான்; இதனை அறிவாயாக.

படுத்திடும் - கொல்லும். சலனம் - நடுக்கம். கால் - காற்று. தாபம் - துன்பம். சம்பந்தம் - தொடர்பு. அ

பத்தரை ஆளவே பரன் துன் பருள்வன்

பத்த ரன்பினைச் சோதனை பண்ணவும் பார்மேல்
வைத்த வாஞ்சையை மாற்றவும் பேரின்ப வாழ்விற்
சித்த மெய்தவும் அன்னரைத் துயர்செயுந் தெய்வம்
அத்தன் சேயரை யடித்தறி வுறுத்தல்போ லம்மா.

பெற்ருேர் பிள்ளைகளை ஒறுத்து அறிவுறுத்தல்போல் கடவுளும் மெய்யடியார்களுக்குத் துன்பத்தை யருளுதல், அவர்கள் தன்பாற் கொண்டுள்ள பற்றை உலகுக்கு உணர்த்தவும், மண்மேல் வைத்த அவாவினை அறுக்கவும், பேரின்பப் பெருவாழ்வில் உள்ளம் உறையவும் என்க.

பத்தர்-பேரன்பர்; மெய்யடியார். சோதனை-ஆய்வு. வாஞ்சை-அவா. துயர் - இடையருத் துன்பம். அத்தன் - தந்தை. கூ

வழியாம் உலகுறு மின்பத் துன்பம் மனங்கொளார்

அயலா ரோண்பதிக் கேகுவார் வழித்துயர்க் கஞ்சார்
வயவை தன்னிற்காண் பொருளையும் வாஞ்சியார் வசுதை
உயர்பெ ருங்கதிக் கேகுமா றென்னலால் உலகின்
துயரை யின்பினை மதித்திடார் துகளறு நீரார்.

வேருேர் சிறந்த திருநகருக்கு வழிச்செல்வோர் வழியில் ஏற்படும் துன்பங்களுக்கு நடுங்கார். வழியிற் காணும் வியத்தகு பொருள்களையும் விழையார் (கருதிய நகருக்கே கடிது நடந்து செல்வர்). அதுபோன்று இவ்வுலகை 'வானோர்க்குயர்ந்த உலகம் புகு'வதற்கு வழியென்று கூறுதலால் உலகில் நேரும் துன்பையும் இன்பையும் குற்றமற்ற நற்றவமுடையோர் பொருளாக வெண்ணுர். (மலர்மிசை ஏகினன் மாண்அடி சேர்ந்து மன்னி வாழ்வர்.)

வயவை - வழி. வாஞ்சியார் - விரும்பார். வசுதை-உலகம். துகள் - குற்றம். க0

தந்தவன் கொண்டானென்று தாளிணை தொழுவர் நல்லோர்

மனைவி சேய்தமர் தம்முன மாளினு மகியிற்
புனையுஞ் சீரெலாம் ஒழியினுந் துன்பமேன் புகினும்
அனைய சீரெலா மளித்தவன் கோண்டன னென்ன
வினைய மோடினி யவனடி பரசுவர் மேலோர்.

அன்புறு மனைவியும் இன்புறு மக்களும் தமக்குமுன் இறப்பினும், உலகிற் சிறப்புற அழகுசெய்த செல்வ முதலியன நீங்கினும், வறுமையால் துன்புற்று வாடி எலும்பு சிந்தினும், அவையெலாம் அருளுடன் அளித்த முழுமுதல் கொண்டனன் என்று பணிவுடன் எண்ணி நன்னெறிச் செல்லும் நல்லோர், அவன் திருவடியை அன்புடன் தொழுவர்.

மகி - உலகம். உகினும் - சிந்தினும். வினயம் - பணிவு. பரசுவர் - தொழுவர். கக

ஓட்டைக் குடநீர்போல் உடலுயிர் உறல் வியப்பு

பஃறு ளைக்கடம் பாணியைத் தாங்குவ தரிதே
எஃகு பஃறுளைச் சடத்துயி ரிருக்கையு மியைசீர்
அஃகிப் பல்பட ரணுகுறு மையுமதி சயமாம்
இஃது ணர்துயர்க் கிடைந்துறு வாரிறும் பூதே.

பல துளைகளையுடைய குடமானது தண்ணீரை ஒழுக விடாது தன்னகத்து வைத்துக்கொண்டிருப்பதே அருமையாகும். அதுபோல் நுண்ணிய பல ஓட்டைகளையுடைய உடம்பகத்தும் உயிர் தங்கியிருப்பதும், நெருங்கிப் பலவகைத் துன்பங்கள் சேராதிருப்பதும் வியத்தற்கு உரியன. இதைச் சிறிதுங் கருதாது துன்பத்திற்கு மனந்தளர்ந்து வருந்துவார் செய்கை வியப்புத் தருவதேயாம்.

பஃறுளை - பல துளை. பாணி-தண்ணீர். எஃகு - நுண்மை. சடம்-அறிவில்லது; உடல். படர்-துன்பம். இறும்பூது - வியப்பு; ஆச்சரியம். கஉ

## வேறு

வேண்டுவார்க்கு வேண்டுவ தருள்வோன் மெய்ப்பொருள்

நில்லாத செல்வம் அறவோர் வெறுக்கும்
நிலையாலும் வான்கதி யையவ்
வல்லார் விரும்பும் வகையாலும் அற்ப
மகிவாழ்வு அவர்க்கி றைதரான்
வில்லாரு முத்தி விழையா தவர்க்கு
விழலன்ன வாழ்வை யருள்வான்
ஒல்லார் விரும்பு பொருள்தந்து வெல்லும்
ஒருநீதி வேந்தன் அனையான்.

இரக்கமும் ஈகையும் முறைமையும் அமைந்த சான்றவர் செல்வத்தின் நிலையாமை கண்டு அதனை வெறுத்தலும், நிலைத்த வானோர்க்குயர்ந்த மேனிலையை - கடவுளடியை - விரும்புதலும் செய்வதால், ஆண்டவன் புற்பனிபோல் அழியும் உலகியற் சிறு வாழ்வை அவர்க்கு அருளான். அழியா ஒளிமிக்க வீடுபேற்றை விரும்பாதவர்க்குப் பயன் இல்லாத அவர் விரும்பிய உலக வாழ்வை அருளுகின்றான். இது, வேந்தர் பொருள் அவாக் கொண்ட பகைமன்னர்க்கு அவர் விரும்பியவாறு பொருள் கொடுத்து அப்பகைமையை வெல்லும் முறைமையாம்.

அற்பம் - சிறிது. மகி - உலகம். விழல் - பயனில்லாதது. ஒல்லார் - பகைவர். நீதி - முறைமை. அனையான்-ஒத்தான். ௧௩.

துன்பிடைத் தூய்மை சுடர்விடும் பொன்போல்

அறமென் பதற்கும் அறிவுக்கும் மூலம்
அனராகும் உலகின் பமே
மறமென் பதற்கும் மடமைக்கும் வித்து
மகவிச்சை யாறேழுகல் கண்டு
இறையும் தகப்பன் முனியாமை சீற்ற
ஏற்றத்தின் சீர்மை எனல்போல்
உறுபுன்க ணின்றி ஒருவன் சுகங்கள்
உறலீசன் முனிவா குமால்.

துன்பமே நன்மை செய்தற்கும் அறிவு வளர்தற்கும் காரணமாகும். உலக இன்பமே பாவம் செய்தற்கும் அறியாமை மூடற்கும் காரணமாகும். பிள்ளை தன் மனம்போல் நடக்கக் கண்டும், பெற்றவன் சிறிதும் சினம் கொள்ளாதிருப்பின், அதுவே மிக்க சினத்தின் அடையாளமாம். அதுபோல் ஒருவன் உலகத்தில் துன்பின்றி இன்பங்கள் அடைந்தால் அதுவே ஆண்டவன் முதிர்ந்த சினத்தின் அடையாளமாகும்.

மூலம்-காரணம். அனர் - துன்பம். மறம் - பாவம். வித்து - காரணம். முனிவு - முதிர்சினம். புன்கண் - துன்பம். ௧௪

---

## அதி. ௪௨—அறஞ்செயல்

சாங்காலத் தறம் செய்தல் யார்க்குமே சாலாது

பசிமிகுந்த பின்நெல்லை விதைப்பதுபோல்
வீட்டில்தீ பற்றிக் கொண்டு
நசியும்போ ததையவிக்க வாறுவெட்டல்
போலும்போர் நடக்குங் காலை
விசிகநூல் கற்கமுயல் வதுபோலுங்
கபமிஞ்சி விக்கிச் சிக்கி
இசிவுகொண்டு சாங்காலத் தெப்படிநீ
யறம்புரிவா யிதயப் பேயே.

நெஞ்சே! இறுதிக்காலத்துக் கோழை மிகுதிப்பட்டு, தொண்டை அடைத்துக் கை கால் இழுத்து அறிவிழந்து அல்லல் படுவாய். அப்பொழுது எப்படிச் செயற்பாலதாம் அறத்தினைச் செய்வாய். அப்பொழுது செய்யலாமென்று கருதுவது, ஒருவன் பசி மிகுந்தபின் உண்ண நெல் விதைப்பதும், வீடு தீப்பற்றிக் கொண்டு அழியும்போது தீயை அணைக்க யாறு வெட்டுவதும், போர் நடக்கும்போது படைநூல் கற்பதும்போன்று முடியாத தாகும்.

நசிதல் - அழிதல். விசிகநூல் - படைநூல். கபம் - கோழை. இதயம் - நெஞ்சம். க

*முற்பழக்கம் இன்றேல் முடியாது எதுவும்*

எத்தொழிலு முற்பழக்க மின்றியெய்தா
தறமென்னு மிணையோன் றில்லா
அத்தொழின்முற் பழக்கமின்றிச் சாங்காலத்
தமையுமோ வருமன் றற்கு
வத்திரம்வேண் டிற்பருத்தி விதைத்துமுன்ன
நெய்யாமன் மணஞ்செய் காலத்து
ஒத்ததுகில் வேண்டுமென எத்தனைபேர்
முயன்றாலும் உறுமோ நெஞ்சே.

மனமே! எந்தச் செயலும் முதலில் பழகிக் கைவராமல் செய்யமுடியாது. தனக்குப் பிறிதொன்றும் ஒப்பிலாத நல்வினை யாகிய கடமை பழக்கமின்றிச் சாங்காலத்து எப்படி அமையும். மணத்திற்கு வேண்டிய கூறையாகிய ஆடையினை முன்னமே பருத்தி விதைத்துப் பஞ்செடுத்து நூலாக்கிப் பாவோட்டி நெய்து அமைத்துக்கொள்ளல்வேண்டும். அப்படிச் செய்யாமல் மணத்தின்போது பருத்தி விதைத்து ஆடையாக்கவேண்டிப் பலர் முயன்றாலும் முடியுமா? முடியாதன்றே!

இணை - ஒப்பு. மன்றல் - மணம். வத்திரம் - ஆடை. உ

*படித்துப் பழகியபின் கைக்கொளல் எளிதாம்*

சிற்பநூ லிலக்கணநூல் வைத்தியநூல்
மரக்கலநூல் செருநூ லின்னம்
பற்பலநூ லுணர்வதினும் புண்ணியநூ
லரிதாமோ பகரந் நூல்கள்

கற்பதன்முன் னரிதேனினும் பின்னெளிதா
மதுபோனற் கரும மென்னும்
அற்புதநூல் முயலுவோர்க் கெளிதாகு
மதையடைவா யறிவி னெஞ்சே

கல்தச்சுநூல் இலக்கணநூல் மருத்துவநூல் நாவாய்நூல் போர்நூல் முதலிய பலவகை நூல்களை யுணர்வதினும் புண்ணிய நூல் உணர்வது வருத்தமாகாது. சொன்னநூல்கள் படிப்பதன் முன் வருத்தமாக இருந்தாலும் படித்தபின் எளிதாவதுபோன்று சிறந்த புண்ணியநூலும் முயன்று கற்று நடப்பார்க்கு வருத்த மில்லாததாகும். நெஞ்சமே! புண்ணியநூலைக் கைக்கொள் வாயாக.

சிற்பம் - கல்தச்சு. வைத்தியம் - மருத்துவம். மரக்கலம் - தோணி; கப்பல்; நாவாய். ௩

நாள் செல வென்பது நம்முயிர்ச் செலவே

தினங்கள்செலச் செலவேதோ பெற்றதுபோன்
மகிழுநெஞ்சே தினங்க ளோடுங்
கனங்கொளுமுன் னுயுள்நாள் கழிவதுண
ராயுயிர்தீர் காயஞ் சேரும்
வனங்கடுகி வாவென்ன விளித்துன்பால்
தினநெருங்கும் வன்மை யுன்னி
முனங்கொளறி யாமையைநீ யினங்கொள்ளா
தறஞ்செய்ய முயலு வாயே.

நாட்கள் கழியக் கழிய ஏதோ புதிது பெற்றதுபோல் உள மூவக்கும் மனமே! நாள்கள் செல்வதுடன் அரிய நின் வாழ் நாளும் சென்றுகொண்டிருப்பதை உணராதிருக்கின்றாய். உயிர் நீங்கிய உடம்பினைச் சுடப்படுங் காடு, உன்னை நாள்தோறும் நெருங்கி விரைந்து வா என்று அழைக்கின்றது. அதை நினைந்து இதுவரையுங் கொண்டுள்ள அறியாமையை இன்னமுங் கொள் ளாது விரைந்து புண்ணியஞ் செய்ய முற்படுவாயாக.

தினங்கள் - நாள்கள். கனம் - அருமை. ஆயுள் - வாழ்நாள். காயம் - உடம்பு. வனம்-சுடுகாடு. கடுகி - விரைந்து. விளித்து- அழைத்து. முயலுவாய்- முற்படுவாய். ௪

எல்லையறியா வாழ்நாளதனால் இயற்றுக விரைந்தறம்

இன்றருணோ தயங்கண்டோ முயர்ககன
முகட்டின்மிசை யிந்தப் பானு
சென்றடைய நாங்காண்ப தையமதைக்
காண்கினுமேற் றிசையி ருக்கும்
குன்றடையு மளவுநா முயிர்வாழ்வ
தரிதன்முன் குறுகுங் கூற்றம்
என்றச்சத் துடன்மனமே மறவாம
லறவழியி னேகு வாயே.

நெஞ்சே! இன்று ஞாயிற்றின் தோற்றங் கண்டோம். காலை கழிந்து கதிரவன் உச்சிக்கு வருவதை நாம் காண்பது உறுதியில்லை. உச்சிப்பொழுது கண்டாலும், அவன் சென்றடையும் மாலைப்பொழுதைக் காண்பதும் உறுதியில்லை. மாலைப்பொழுதைக் கண்டாலும் அவன் குன்றடையும் அந்திலை காணல் முடியாது. அதற்குள்ளே கூற்றுவனும் நெருங்குவான். ஆதலால், மிக்க அச்சத்துடன் மறவாமல் புண்ணிய வழியிலே நடப்பாயாக.

அருணோதயம் - செங்கதிர்த் தோற்றம். ககனம் - வானம். முகடு - உச்சி. பானு - சூரியன். அறவழி - புண்ணியவழி. ஏகுதல் - நடத்தல். ௫

இறைதினைப் போடறம் இயற்றுதற்கு வருத்தமென்

சிற்றுதர போசனைக்கா மலையேறிக்
கடல்கடந்து தேய மெல்லாஞ்
சுற்றியனு தினமலைவாய் நித்தியபே
ரின்பசுகந் தோய வேண்டிச்
சற்றுமுடல் வருந்தலின்றி யலைதலின்றி
யோரிடத்தே தங்கி மூளும்
பற்றினையே துறந்துசும்மா இருந்தறஞ்செய்
வதிலென்ன பார நெஞ்சே.

மனமே! அழிந்துபோம் சிறிய சாண்வயிற்றைப் பேணுவதற்காக மலை கடந்தும் கடல் கடந்தும் நாடு பல சுற்றியும் நாளும் வருந்தித் திரிவாய். என்றும் அழியாத கடவுளின்பத்தைக் கைக்கொள்ளுவதற்காக உடல் ஓடியாடி எய்தும் வருத்தம்

ஒரு சிறிதுமின்றி ஓரிடத்தே ஒருமனப்பட்டு மேலும் பெருகும் பற்றினை விட்டுக் கடவுள் நினைவன்றி மற்றொன்றும் எண்ணாது புண்ணியம் செய்து வாளா இருப்பதற்கு உண்டாம் வருத்தம் யாது?

உதரம் - வயிறு. போசனை - பேணுதல். நித்தியம்-என்றும். மூளும் - பெருகும். அறம் - புண்ணியம். சு

தோற்றத்தே தீமையைத் தொலைத்தல் செம்மை

கலமுறுஞ் சிறுநீரை விரைவினிறை
யாவிடினக் கலந்தான் மிக்க
சலமூறி யழுந்துமது போற்பவத்தை
விரைவுற்றுத் தள்ளி டாமல்
நிலமீதில் யாம்வாளா இருப்போமேற்
பாவங்கள் நிறைந்து மோக்க
நலநீங்கி நரகமெனும் பேராழி
யிடைவீழ்ந்து நலிவோம் நெஞ்சே.

ஆழ்கடலிற் செல்லும் கப்பலில் சிறிதுநீர் அடி இடைவெளி வழி ஊறும். ஆயின், அதனை அப்பொழுதே இறைத்துக்கொட்ட வேண்டும். இல்லாவிட்டால் தண்ணீர் மிகுதியாகப் பெருகி அக் கப்பல் அமிழ்ந்துவிடும். அதுபோல், மனமே! நம்மிடத்து ஏற் படும் தீவினைகளை உடனுக்குடன் மிகு விரைவில் அகற்றிவிடா திருப்போமானால், அவை பெருகி வீடுபேற்றில் செல்லவொட் டாது விலக்கி இருளுலகில் கொண்டுபோய்த் தள்ளும். அப் பொழுது மிக்க துன்பம் அடைவோம்.

கலம் - கப்பல். பவம் - பாவம்; தீமை. மோக்கம்-வீடுபேறு. நரகம் - இருளுலகம். நலிவு - துன்பம். ஊறும் - கசியும். எ

உடனொழிக்காவிடிற் பாவம் ஒழியாது

பெருவெள்ளஞ் சேர்ந்தபின்ன ரதைத்திருப்ப
வொண்ணுமோ பெருத்து நீண்ட
தருவின்கோ ணலைநிமிர்க்கத் தகுமோபா
வங்களைநீ தள்ளி மேலாங்
கருமமதின் முயலென்றாற் பின்னையா
கட்டுமென்றாய் கசடு விஞ்சி
ஒருமலைபோ லானபின்னெவ் வாறதைநீ
சாம்பருவத் தொழிப்பாய் நெஞ்சே.

மனமே! வெள்ளம் பெருகிவிட்டால் வேண்டியபடி கால் வாய்களில் திருப்ப முடியாது. மூங்கில் முதலிய பெரிய மரங் களை முதிர்ந்தபின் வளைக்க முடியாது. அவைபோலப் பாவத் தைத் தொடக்கத்தே நீக்கிப் புண்ணியத்தை விடாது செய்க. அல்லையாயின் சாங்காலத்து எப்படி நல்வினை செய்தல் கூடும்? தீமையை ஒழித்தல் முடியும்?

தரு - மரம். கசடு - தீமை. விஞ்சி - பெருகி. அ

தீநினைப்பால் தீநோக்கால் பெரும்பாவம் சேரும்

ஏதிலார் பொருளைக்கி யிச்சையுறல்
கவர்ந்ததோப்பா மெழின்மின் னாரைக்
காதலாய் நோக்குதலே கலந்ததோப்பாம்
பிறர்கேட்டைக் கருத லன்னார்
வேதையுறக் கொன்றதோப்பா மிவ்வாறோர்
பயனின்றி மேவும் பாவம்
ஆதலினம் பொறிவழியே மனஞ்செலா
தடக்குவா ரறிவு ளோரே.

பிறர் பொருளைக் கண்டு ஆசைப்படுதல், அப் பொருளைக் கொள்ளையிட்டதோடு ஒக்கும். வளரும் அழகுமிக்க மின்போலும் இடையினையுடைய அயல்பெண்களைத் தீய கருத்துடன் பார்த் தல், அம் மாதரைச் சேர்ந்தது ஒக்கும். பிறர் கெடவேண்டு மென்று எண்ணுதல், அவர்களை மிகத் துன்புறுத்திக் கொன் றதை ஒக்கும். இவ்வகையாக எண்ணத்தாலும் பார்த்தலாலும் பயனடையாமலே வந்து பொருந்தும் பாவம் பலவாம். ஆதலின், அறிவுடையோர் தம் மனத்தைப் பொறி வழிச் செல்லவொட்டாது தடுத்துத் தம் வழிச்செலுத்தி அடக்குவர்.

இச்சை-ஆசை. கவர்தல்-கொள்ளையிடல். வேதை-துன்பம்.

உயிர்க்கறஞ் செய்யாமல் உடலோம்பல் வீணாம்

பரியூர்வோன் தனைமறந்து பரிக்குபசா
ரங்கள்மிகப் பண்ணல் போலும்
பெரியகட வுளைப்பணியா தாலயத்தை
யலங்கரிக்கும் பித்தர் போலும்

அரியபொருள் வெளியிட்டுச் செப்பினைக்காத்
திடல்போலு மான்மா வுக்கே
உரியவறம் புரியாமல் உடலினைநீ
யோம்புகின்ற யுள்ளப் பேயே.

*நெஞ்சமே! குதிரை ஏறி வருபவனைப் பணியாது குதிரைக்கு மிகப் பணிதலும், முழுமுதற் கடவுளை வழிபட்டுச் சிறப்புச் செய்யாது திருக்கோவிலை அணி செய்யும் பித்தர் செயலும், சிமிழினுள் இருந்த அருமணியை வெளியே தள்ளிவிட்டு வெறுஞ் சிமிழைக் காக்கும் காவலும் எப்படிப் பயன் இல்லாது வீணாகுமோ, அப்படியே நீயும் சிறந்த வுயிரை உணர்வு ஒழுக்கம் அறங்களாற் பேணாது உடலை ஊண் உடை அணி பூச்சு முதலியவற்றால் பேணுவதும் வீணாகும்.*

*பரி - குதிரை. உபசாரம் - பணிவிடை. செப்பு - சிமிழ். ஓம்புதல் - பேணுதல்.* க0

இறந்தவர்க்காய் யாரும் இறந்திடல் செய்யார்

ஓருயிரீ ருடலென்ன நட்டமைந்தர்
மாதர்நம துயிர்நீங் கிற்றம்
ஆருயிரைத் துறப்பரோ அழுவதுந்தம்
முணவுவைக்க அமைந்த பாண்டம்
பேருலகி லுடைந்ததேன அழுவதன்றி
நமக்கிரங்கும் பேரிங் குண்டோ
சாருமிவர் நேயமதாற் பவஞ்செய்து
வீடிழத்தல் தகுமோ நெஞ்சே.

மனமே! ஓர் உயிர்க்கு ஈர் உடல்போன்று வேற்றுமையின்றிக் காதல்கொண்டு ஒழுகிய பிள்ளைகளும் மனைவியும் நம் உயிர் நீங்கினால், அவர்களுடைய அரிய ஆவியை விட்டுவிடுவாரோ? விடார். நம் பிரிவுக்காக அழுவதும், தங்களுக்கு வேண்டிய உணவின் கொள்கலமாகிய பொருள் உலகில் உடைந்துவிட்டதே என்னும் வருத்தத்தாலேயாம். அவ்வாறல்லாமல், நமக்காக வருந்துபவர் ஒருவரும் இலர். இப்படிப்பட்டவர்கள் சார்பில் வரும் அன்பினால் அவர்களைப் பேணற்பொருட்டுப் பாவஞ் செய்து கடவுளின்பத்தை இழத்தல் பொருந்துமா? பொருந்தாது.

நேயம் - அன்பு. பவம் - பாவம். வீடு - கடவுளின்பம். கக

ஆண்டவன் அன்போ டுயிர்காத்தல் பேரறம்

முந்தைஇறைக் கன்புபின்பு தன்னுயிர்போல்
மன்னுயிரை முறையி னோம்பல்
இந்தஇரு விதிகளினுள் வேதமெலா
மடங்குமனம் இன்ப மேவ
வந்தஇக பரமளிக்கும் அறமொன்றே
அருந்திருவாம் அதன்முன் ஆயின்
சிந்தனைசிந் தனையுறச்செய் புவித்திருஎட்
டிடைவரைந்த திருவோப் பாமால்.

முழுமுதற் கடவுளுக்கு அன்பும், தன் உயிர்போல் நிலை பெற்ற எல்லா உயிர்களையும் ஊண் உடை உணர்வு உறையுள் உறை முதலியவற்றால் பேணுதலும் ஆகிய இரண்டறங்களும் முறையே வீட்டின்பமும் உலக இன்பமும் தருவன. இவ்வறத் தின்கண்ணே மறைகளெலாம் அடங்கும். இஃதொன்றே அழி யாப் பெருஞ்செல்வ வாழ்வாம். இதற்குமுன் அழியும் தன்மை வாய்ந்த உலகியற் செல்வத்தைப்பற்றி ஆராயின் அஃது ஏட்டில் எழுதிய செல்வம்போல் பயனின்றாம். உலகச் செல்வம் உள்ளத் தில் கவலை தரும்.

உறை - மருந்து. சிந்தனை - உள்ளம். சிந்தனை - கவலை. ௧௨

வேறு

நஞ்சனைய பாவம் நவின்றியற்றல் வருத்தம்

உளதிலை யென்ன வுரைப்பதே வருத்த
முண்மை கூறிட லெளிதாகுங்
களவுகட் காமங் கொலைசெயல் வருத்தங்
காவலன் தண்டமூர்ப் பகையாம்
உளமதை வருத்தும் இகபரங் கெடுக்கும்
உண்மையா விவையெலாம் உன்னில்
களநிகர் பாவஞ் செய்தலே கட்டங்
கருதறஞ் செயலெளி தன்றே.

உண்மையை மறைத்து இல்லை என்று பொய் சொல்லுவதே வருத்தம். உண்மை சொல்லுதல் எளிது. களவு, கள், காமம்,

கொலை முதலிய பாவம் செய்தலே வருத்தம். செய்த அப் பாவத்துக்கு வேந்தர் ஒறுத்தலும் உண்டு. ஊரவரும் பகையாவர். உள்ளத்தையும் வருத்தும். இம்மை மறுமை இன்பங்களையுங் கெடுக்கும். இவை எலாம் உறுதியாக நிகழ்வனவே ஆராயின் நஞ்சை ஒத்த பாவஞ் செய்தலே வருத்தம். அமிழ்தை ஒத்த சிறந்த புண்ணியஞ் செய்தல் மிகவும் எளிது.

காவலன் - வேந்தன். தண்டம் - ஒறுப்பு. களம் - நஞ்சு. கங

அறமுடை யாரை அனைவரும் புகழ்வர்

ஒருவனைப் புதிதாக் காணினு மவனோ
டுறவுசெய் யினும்பணி கோளினும்
பெருமையோன் தீய னெனவறி யாமுன்
பேசிடார் தீயனேற் பெயர்வார்
தருமநற் குணத்தைத் தீயரும் புகழ்வார்
சழக்கினைச் சழக்கரு மிகழ்வார்
இருமைதீ ரறத்தின் பெருமையும் மறத்தின்
இழிவுமீ துன்னுவாய் மனனே.

நெஞ்சே! ஒருவனைப் புதிதாகக் கண்டாலும், அல்லது அவனுடன் நட்புச்செய்தாலும், அவனை வேலைக்கு வைத்துக்கொண்டாலும் அவன் நிலையை அறிவதற்குமுன் அவனை நல்லவன் கெட்டவன் என்று யாரும் சொல்லார். கெட்டவனானால், அவனை விட்டு நீங்குவர். கடமை வழுவா நற்பண்பைக் கெட்டவரும் புகழ்வர். குற்றத்தைக் குற்றமுடைய தீயவரும் பழித்து மொழிவர். இவைபோல் குற்றம் நீங்கிய நன்மையின் மேன்மையும் பாவத்தின் கீழ்மையும் உரைக்கப்படும். நினைப்பாயாக.

பணி - வேலை. பெயர்வார் - நீங்குவார். சழக்கு - குற்றம். சழக்கர் - தீயவர். இருமை - குற்றம். கச

பாவத்தால் நரகுறல் பகரொணாத் துன்பே

பலர்கழல் வருட மாதர்க ளாடிப்
பாடவோர் பகலெலா மனிச்ச
மலரணை கிடத்தல் வருத்தமா மன்றோ
வார்த்தவெங் நீர்பொரு வுடலம்

அலகறு கால நரகவெங் தழலாழ்ந்
தயர்வுற வொண்ணுமோ அவியாப்
புலவையே விளைக்கும் பவத்தைவே ரறுத்துப்
புண்ணியம் புரிந்திடாய் மனனே.

நெஞ்சே! மெல்லிய மாதர்கள் பலர் அடி தடவவும், ஆடிப் பாடவும், பகற்பொழுதெல்லாம் அனிச்சப்பூ விரித்த படுக்கையில் கிடக்கவும் வருந்தும் இவ் உடலம், வெந்நீர் ஊற்றினும் பெருந்துன்பமாம். அது அளவிலாத காலம் பாவத்துக்கீடாகக் கொடிய இருளுலகில் கிடந்து தளர்வது பொருந்துமா? நீங்கா இருளுலகையே தரும் பாவத்தை விலக்கிப் பேரின்பம் தரும் அறத்தையே விரும்பி 'ஒல்லும்வகை ஓவாதே' 'செல்லும் வாயெல்லாம் செய்க.'

கழல் - அடி. அலகறு - அளவில்லாத. நரகு - இருளுலகு. அயர்வு - தளர்வு. கரு

## வேறு

### துன்புக் கஞ்சில் துணையறம் கிட்டா

சூற்றுயர்க் கஞ்சு வாட்குச் சுதரிலைப் பயனொன் றில்லைக்
காற்றினுக் கஞ்சா நின்ற கலத்தினுக் கவிழ்தங் கைப்பென்று
ஏற்றிட வஞ்சி னாரோக் கியமிலை யின்னற் கஞ்சிற்
சாற்றரு மறமு மில்லைத் தனிப்பர கதியு மின்றே.

கருக்கொண்டு எய்தும் துன்பத்திற்கு அஞ்சுபவட்கு மக்கட் பேறு இல்லை. காற்றுக்கு அஞ்சும் கப்பலால் பயன் ஒன்றுமில்லை. கசப்பான மருந்துண்ண அஞ்சுவார்க்கு உடல் நலம் இல்லை. முயற்சித் துன்பத்திற்கு அஞ்சுவாருக்கு, சொல்லுதற்கரிய பெரு நன்மையும் கடவுளின்பமும் இல்லை.

சூல்-கரு. சுதர் மக்கள். கலம்-கப்பல். அவிழ்தம்-மருந்து. பரகதி - கடவுளின்பம். கசு

### நயந்தறஞ் செய்யார் நாய்த்தொழில் செய்வார்

இந்துமீன் பருதி பக்கி யினவிலங் குகள்ம ரங்கள்
ஐந்துபூ தங்க ளேனை யாவுமோ வாதெஞ் ஞான்றுந்
தந்தொழில் செய்து வாழுந் தனியறம் புரித லென்னும்
நந்தொழில் புரிகி லேம்யாம் நாய்த்தொழி லுடைய நெஞ்சே.

மனமே! திங்கள், விண்மீன், ஞாயிறு, பறவைக்கூட்டம், விலங்குக்கூட்டம், மரங்கள், ஐம்பெரும்பூதங்கள் எல்லாம் எப்பொழுதும் இடைவிடாது தத்தமக்குரிய தொழிலைச் செய்து வருகின்றன. அதுபோல், நாமும் நம் தொழிலாகிய ஒப்பிலா நன்மையை விழைவுடன் செய்கின்றோமில்லை. உண்டு உடுத்து உடனுறைந்து உறங்கிக் கழியும் சீழான நாய்த் தொழிலையே நம் தாய்த்தொழிலாகச் செய்து வருகின்றோம்.

இந்து - திங்கள். மீன் - விண்மீன்; நட்சத்திரம். பருதி - ஞாயிறு. பக்கி - பறவை. ௧௭

### அறமே நல்லோர்க்கு அழியா வாழ்வு

இன்னமு தத்தின் முன்வே
றினிமையும் உளதோ பானு
முன்னமோர் சுடரு முண்டோ
மோக்கத்திற் சுகம்வே றுண்டோ
துன்னற மேநல் லோர்க்குத்
துகளறு செல்வ மாகும்
அன்னதை யன்றி வேறோர்
ஆக்கமும் வேண்டுங் கொல்லோ.

இன்சுவைத்தாகிய வெண்ணெய்போன்ற அமிழ்தத்தின் முன் வேறு இனிமையுள்ள பொருள் எவையுமுளவோ? ஞாயிற்றின் முன் அதனின் மிக்க ஒளியுமுண்டோ? கடவுளின்பத்தினும் மிக்க இன்பமும் உண்டோ? இவைபோன்ற கல்வி கேள்வி அறிவு ஒழுக்கம் வாய்ந்த நல்லோர்க்குக் கடமையாம் நன்மையே குற்றமற்ற வாழ்வாகும். இந் நன்மையைவிடப் பெருவாழ்வு வேறும் உண்டோ?

பானு - ஞாயிறு. சுடர் - ஒளி. மோக்கம் - கடவுளின்பம். அறம் - நன்மை துகள் - குற்றம். ஆக்கம் - வாழ்வு. ௧௮

### அறஞ்செய்வார்க்கே ஆண்டவன் இன்புண்டு

மன்னுள னேலுண் டாணை
மகிழவுஞ் சிறையு முண்டாம்
முன்னுதே வுளனேற் பாவம்
புண்ணியம் மோக்கம் அள்ளல்

என்னும்யா வையுமுண் டோப்பில்
 ஏணுளான் கோபந் தாங்கி
மன்னுவோர் யாவர் நெஞ்சே
 மறமொழித் தறஞ்செய் வாயே.

மனமே! உலகினை நலமுறக் காக்கும் வேந்தன் ஒருவன் உளன் ஆனால், அவன் ஆணையாகிய மக்கள் ஒழுகலாற்றின் வழி நடப்போர்க்கு இன்பந்தரும் மகிழ்ச்சிமிக்க மாளிகை உண்டாம். அவ்வொழுகலாற்றை மீறித் தீயவழி நடப்பவர்களுக்குத் துன்பந் தரும் வேலை நிறைந்த காவல்கூடம் உண்டு. அதுபோல், கருதப்படுகின்ற தெய்வம் உளது என்றால் தீமை நன்மை அவற்றின் பயன் நுகரும் துன்புலகு இன்புலகு என்று சொல்லப்படும் எல்லாம் உண்டாம். எல்லா வலிமையுமுடைய கடவுளின் சினத்துக்குரிய பாவத்தைச் செய்து அவன் சினத்தைப் பொறுத்து வாழ்வார் யார்? ஆயின், பாவத்தை யொழித்துப் புண்ணியஞ் செய்து வாழ்வாயாக.

மன் - வேந்தன். ஆணை - சட்டம். மகிழகம் - மாளிகை. சிறை - வளமனை; காவற்கூடம். முன்னுதல் - கருதுதல். தேவு - தெய்வம். மோக்கம் - இன்பவுலகு. அள்ளல் - துன்புலகு. ஏண் - வலிமை. கோபம் - சினம். மன்னுவோர் - வாழ்வோர். மறம் - பாவம். கசு

### எல்லா வாழ்வும் இயைப்ப தறமே

அணியிலார்க் கணியாம் வாய்ந்த
 அழகிலார்க் கழகாம் நீண்ட
பிணியினார்க் கெக்க ளிப்பாம்
 பேறிலார்க் கன்ன தாமுள்
துணிவிலார்க் குணர்வெல் லாமாம்
 துப்பிலார்க் கோப்பில் துப்பாம்
தணிவில்பாக் கியங்க ளெல்லாம்
 தருமமல் லதுவே றுண்டோ.

'அறம்' பூணும் நகை இல்லாதவர்களுக்கு; நகையாகும். அதனால் பெறும் செயற்கை அழகும் இயற்கை அழகும் இல்லாதவர்கட்கு அழகாகும். நெடுநாள் நீங்கா நோயினர்க்கு அந்நோய் நீக்கி மிக்க மகிழ்ச்சியாகும். வேண்டும் பாக்கியமாகிய

செல்வமில்லாதவர்க்குச் செல்வமாம். உள்ளத்து அறிவுரம் இல்லாதவர்க்கு உணர்வெல்லாமாம். துணையில்லார்க்குத் தக்க துணையாம். அழிவில்லாத கடவுளின்பப் பேறுமாம். ஆயின், அறத்தினும் சிறந்தது வேறுண்டோ?

எக்களிப்பு - மிகுமகிழ்ச்சி. பேறு - செல்வம். துணிவு - உரம். ஒப்பில்துப்பு - தக்க துணை. துப்பு - துணை. தணிவில் - அழிவில்லாத. பாக்கியம் - கடவுளின்பம். தருமம் - அறம். உ0

எல்லாரும் வணங்கும் ஏற்றம் அறம் தரும்

நாம்பணி வோர்க ளெல்லாம்
நமைத்தொழச் செய்யும் தேவர்
ஆம்பணி நல்கும் விண்ணும்
அகிலமும் வணங்கச் செய்யும்
சாம்பணி யில்லா ஈசன்
தாளிணை மருவச் செய்யும்
தேம்பணி தரும மல்லால்
செல்வம்வே றுளதோ நெஞ்சே.

மனமே! இனிய எழிலமைந்த அறமே, நாம் முன்பு தாழ்ந்து வணங்கியவர்களைக் கொண்டு நம்மை வணங்கச் செய்யும். நம்மைத் தெய்வநிலை எய்தச் செய்யும். விண்ணும் மண்ணும் பிறவற்றிலும் உள்ளார் எல்லாரும் நம்மை வணங்குவர். இறப்புப் பிறப்புத்தொழில் என்றும் இல்லாத முழுமுதலின் திருவடியைப் பொருந்தி இன்புறச் செய்யும். இவ்வறத்தினில் பெரிய வாழ்வு வேறுண்டோ? இல்லை.

பணிவோர் - வணங்கப்படுவோர். தொழல் - வணங்கல். சாம்பணி - இறக்குந்தொழில். தேம்பணி-இனிய எழில். தருமம்-அறம். உக

கடல்நீர் வற்றினும் கடவுள் நிலை அழியாது

சூழ்பல உகங்கட் கோவ்வோர்
துளிதுளி யாக்க ழிந்தீங்கு
ஆழ்கடல் முழுதும் வற்றி
அழியினும் பழியி னார்வீழ்

பாழ் நரகினுக்கீ றில்லைப்
பரகதி நிலையும் அற்றால்
தாழ்நர கறவீ டெய்தத்
தருமத்தைத் துணைக்கோள் நெஞ்சே.

மனமே! சக்கரம்போல் சுற்றிவரும் பல ஊழிகட்கு ஒவ்வொரு திவலையாகக் குறைந்து கடல்நீர் முற்றும் வற்றி அழிந்தாலும், பாவம் செய்து பழி எய்தும் கொடியோர் வீழ்ந்து சொல்லொணாத் துன்பம் எய்தும் குற்றம் நிறைந்த துன்ப உலகம் அழிவதில்லை. அதுபோலவே, புண்ணியம் செய்து புகழெய்தும் நல்லோர் சென்று இன்பெய்தும் சிவநிலையும் அழிவதில்லை. இழிந்த இருள்நிலை நீங்கச் சிறந்த சிவநிலை எய்த விழுமிய அறத்தொண்டினைக் கைக்கொள்வாயாக.

சூழ் - சுற்று. உகம் - ஊழி; உலக முடிவு. துளி - திவலை. பாழ் - குற்றம். ஈறு - அழிவு. பரகதி - சிவநிலை. தாழ்-இழிவு. உஉ

அறவழியிற் செல்வார் விரும்பார் அழிபொருள்

தாகமே உடையார் வேலைச்
சலமருந் தினும்போன் மீது
மோகமே யுடையார் மண்கல்
முதல்கரங் கோளினும் தேவ
போகமே புரிந்து இல்லாமை
பூண்டபுண் ணியர்வா னத்தூர்
மேகமார் மின்னின் நில்லா
விருத்திமேல் அருத்தி கோள்ளார்.

நீர் வேட்கை யுள்ளவர் எதுவும் பருகாத உப்புமிகுந்த கடல் நீரைக் குடித்தாலும், பொன்னின்மேல் மிகுந்த மயக்கங் கொண்டவர்கள் மண்ணையும் கல்லையும் பிறவற்றையும் கைக்கொண்டாலும், கடவுளின்பமே விழைந்து நல்லற வழியில் நடப்பவர் வறுமையுற்றாலும் விண்ணிடைச் செல்லும் மேகத்தில் தோன்றும் மின்னலை ஒத்த நிலையில்லாத செல்வத்தினிடத்துச் சிறிதும் பற்றுக் கொள்ளார்.

தாகம் - வேட்கை. வேலை - கடல். மோகம் - மயக்கம். கரம் - கை. போகம் - இன்பம். விருத்தி - செல்வம். அருத்தி - பற்று. உங

பிறவாப் பெருஞ்சாவால் பெரும்பொருள் உருத்தோன்றும்

அறப்பெருங் கடலன் ஞன்தன்
அடிமலர் காணு வண்ணம்
மறைப்பதெய் உடற்ப டாமாம்
மரணத்தால் அதனைப் பாரில்
துறப்பவர்க் குடனே அத்தன்
சொரூபமே தோன்ற லாலிங்கு
இறப்பது பிறப்பி னுந்தான்
இனிதற வர்க்கு மாதோ.

அறவாழி அந்தணனாகிய முழுமுதல்வனின் திருவடித் தாமரையைக் காணமுடியாதபடி மறைப்பது நம்முடைய இளைத்துப் போம் இயல்புவாய்ந்த திரைபோன்ற இவ்வுடல். இனிப் பிறந்திறவாப் பெருஞ்சாவால் அவ்வுடலை உலகத்தில் விடுபவர்க்கு, விட்ட அப்பொழுதே தந்தையே அனைய கடவுள் தன் திருஉரு விளக்காட்டி யருள்வன். அவ்வுருத் தோற்றம் கிடைப்பதால் அறவோர்க்கு இவ்வுலகில் பிறப்பதினும் இறப்பதே மிகவும் இனிமை யுடைத்து.

எய்த்தல் - இளைத்தல். படாம் - திரை. மாமரணம் - பிறவாப் பெருஞ் சாவு. உசு

வேறு

தக்கோன் அடக்கம் சால்பற மாகும்

விறலிகற் பதுவே கற்பு கூனுடல்
விருத்தை கற்பரி தன்று கலையெலாம்
அறவு ணர்ந்ததக் கோர்நொறி லேநொறில்
அஞ்ஞை கொண்ட அடக்கம் கதழ்வன்று
திறலி ஞர்பொறை யேபொறை யற்பமுந்
திறமி லார்தம் பொறுமை தலையன்று
மறலு ளார்கொடை யேகொடை சீரெலாம்
வாய்த்த செல்வர் கொடைபெரி தன்றரோ.

கட்டிளமை வாய்ந்த பதினாறுண்டுப் பருவப்பெண் கற்பு நிறை தவிராது 'ஒருவனைப்பற்றி ஓரகத்திருத்'தலே சிறந்த

கற்பாம். உடற் கூனும் அழகின்மையும் முதுமையும் வாய்ந்தவள் காக்கும் கற்பு அத்துணைச் சிறந்ததன்று. மெய்ந்நூற்கல்வி முற்றவுணர்ந்த பெரியோர் புலனடக்கமே உண்மை அடக்கமாகும். அறிவிலான் அடக்கம் பெருமை தருவதாகாது. 'எல்லாம் ஒறுக்கும் மதுகை உரனுடையாளன், பொறுக்கும் பொறையே பொறை'யாம். சிறிதும் வலிமையில்லாத கோழையின் பொறுமை உயர்ந்ததன்று. வறுமையுள்ளவர் கொடுக்கும் கொடையே அன்பு அருள் வளர்க்கும் இன்பக்கொடையாம். இடம் பொருள் ஏவல் முதலியசிறப்பு வாய்ந்த செல்வர் கொடை பெரிதாகாது.

விறலி-பதினாறுண்டுப்பெண். விருத்தை-முதியவள். நொறில்-அடக்கம். அஞ்ஞை-அறிவிலான். கதழ்வு - பெருமை. அற்பம் - சிறிது. திறம் - வலிமை. மறல் - வறுமை. உ௫

---

## அதி. ௬௩—கணிகையரியல்பு

பொருளற்ற விடத்துப் பொய்ப்போக்குரைப்பர் பொதுமாதர்

பூவையிவட் களித்தநிதி கணக்கிலையோர்
கடன்காரன் புலிபோல் நம்மைச்
சாவடிக்கே யிழுக்கமயி லேயிடர்தீ
ரென்றிவள்தன் தாளில் வீழ்ந்தேம்
பூவில்வைத்த நிதியையோர் கிழப்பூதங்
காத்தினிய பூபா உன்னைச்
சீவபலி யிடினீவே னென்றதென்று
ளேன்செய்வாள் தெரிவை தானே.

குயிலனைய இப்பொதுமகளுக்கு வாரிவாரி இறைத்த பொருளுக்கு அளவில்லை. கடன்காரன் ஒருவன் புலிபோல் வந்து நம்மை நடுநிலை மன்றத்துக்கு இழுத்துத் துன்புறுத்துகின்றான். அப்பொழுது யான் 'மயிலே, இக்கடனைக் கொடுத்து இக்கட்டைத் தீர்ப்பாயாக' என்று அவள் காலில் விழுந்தேன். அவள் மிகவும் பரிவுள்ளாள்போல் நிலத்தில் புதைத்துவைத்த பெரும் பொருளைத் (தாய்க் கிழவியாகிய) ஒரு கிழப்பூதம் காத்துக் கொண்டிருக்கிறது. அஃது, 'இனிமை வாய்ந்த மன்னனே! உன்னை உயிர்ப்பலி ஊட்டினால் தருவேன்' என்று கூறுகின்றதென்றாள்.

பூவை - குயில். சாவடி - மன்றம். பூபா - மன்னா. ௧

**உடன்சாவேன் என்றவள் உடைகோவணம் வேண்டல்**

நேரிழைநம் முடனிறப்ப னெனமுன்ன
 முரைசெய்தாள் நிருபன் நம்மை
ஈரவெனக் கொலைக்களத்திற் கிழுக்கவடி
 பற்றிப்பின் னிரங்கி வந்த
காரிகையை நோக்கினோம் மிஞ்சியவோர்
 கோவணத்தைக் கருதி வந்தேன்
ஒருயிர்நம் மிருவர்க்கும் நீர்வீயின்
 நானிறந்த தொக்கு மென்றாள்.

சிறந்த அணிகலன் அணிந்துள்ள பொதுமகள் முன் எல்லாம் நாம் இறப்பின் தானும் உடன் இறந்துவிடுவேன் என்று உறுதியாகக் கூறிவந்தாள். மன்னன் தண்டனையால் நம் உயிர்போக நேர்ந்தது. கொலைஞர் இழுத்துச் செல்கின்றனர். அவளும் மிக்க உருக்கத்துடன் நம் அடியைப்பற்றிப் பின் வந்தாள். அவளை நாம் பார்த்தேம். அவள் நம்மிடம் எஞ்சியிருக்கிற ஒரு கோவணத்தைப் பெறும்பொருட்டு வருவதாகக் கூறினாள். மேலும், நம் இருவருக்கும் உயிர் ஒன்றே; நீர் இறப்பின் நான் இறந்ததாகும் என்றாள்.

காரிகை - அழகிய பெண். ஒக்கும் - ஆகும். உ

பொட்டணிந் துணர்த்தினள் போற்றுமெய் அறிவு

மனைதாலி முதல்வேசைக் கீந்துவே
 றொன்றுமின்றி மயங்கும் வேளை
புனையவோ ரணியிலா திருந்தஇல்லாள்
 கழுத்தினிலோர் பொட்டைக் கண்டு
மனமகிழ்வுற் றேதென்றேன் பரத்தையர்போ
 லெனக்குமருள் வாய்க்க வேண்டி
இனமாப்பொட் டணிந்துகொண்டு தாசியா
 யினனென்ன வியம்பி னளே.

மனைவியின் தாலிமுதல் எல்லா அணிகலன்களும் பொதுமகளுக்கு ஈந்துவிட்டேன். இனிக் கொடுப்பதற்கு ஏதும் இல்லையே என்று கலங்கினேன். அப்பொழுது மனைவியின் கழுத்

தில் பொன்னாலாய பொட்டொன்று கண்டேன். மகிழ்ந்தேன்; ஏதென்றேன். அவள் 'பொதுமகளுக்குக் கிடைத்ததுபோல், உமதருள் எனக்கும் கிடைக்கவேண்டும்; அதன்பொருட்டுப் பொட்டணிந்து பொதுமகள் ஆனேன்,' என்றாள்.

மனை - மனைவி. தாலி - மங்கலநாண். ௧

பொதுமகளுக்கு ஆண்பஞ்சம் புகல்வது வீணே

ஆவியனை யானையோர் பொழுதுபிரிந்
தவளில்ல மணுதுங் காலை
மேவுபாங் கியைக்கண்டாண் துணையின்றி
வருந்தினளோ மின்னு ளென்றேன்
நாவிதனுக் குண்டோகாண் மயிர்ப்பஞ்ச
மலப்பஞ்சம் நாய்க்கு முண்டோ
தேவிதனக் குண்டோஆண் பஞ்சமென்றாள்
அதன்பொருளைத் தெரிகி லேனே.

உயிர் ஒத்த பொதுமகளை ஒருபொழுது பிரிந்து அவள் வீடு சென்றேன். தோழியைக் கண்டேன். 'உன் தலைவி, ஆண் துணை (யான்) யில்லாமல் வருந்தினளோ?' என்றேன். அவள் 'மயிர்வினைஞனுக்கு மயிர்ப்பஞ்சமும், நாய்க்கு மலப்பஞ்சமும் உண்டோ? அதுபோல் என் தலைவிக்கு ஆண்பஞ்சமும் உண்டோ?' என்றாள். அதன் உள்ளுறைப் பொருள் ஒன்றும் விளங்கவில்லை.

பஞ்சம் - பொருள் கிடையாமை. ௨

பொருளிழந்து மூதேவியைப் பொருந்தவரும் வெறுப்பு

செவ்வையுறு பொருள்கவர்ந்த பின்னரெனைக்
கைவிட்ட தேனை நோக்கிக்
கொவ்வைவாய் மயிலேயிச் சினமேதென்
றேன்வனசக் கோயின் மேவும்
அவ்வையைமுன் சேர்ந்தபிழை பொறுத்தவளை
யென்னகத்துக் கழைத்தேன் அன்னாள்
தவ்வையையு மருவினீர் இனிப்போறே
னென்றாடிச் சலங்கொண் டாளே.

நலம் தரும் பொருளெலாம் பொதுமகள் பறித்துக்கொண்டு என்னைக் கைவிட்டாள். பின், அவளை நோக்கித், 'தேனே! கொவ்வைப்பழம்போன்ற சிவந்த வாயும் மயில்போன்ற சாயலும் உடையாய்! ஏன் என்மேல் அளவிலாச் சினம்,' என்றேன். அவள் 'நீர் முன் செந்தாமரையிலிருக்கும் தாயனைய திருமகளைக் கூடி வாழ்ந்தீர். அப் பிழையையும் பொறுத்து உம்முடன் அவளையும் என் அகத்துக்கு அழைத்துக்கொண்டேன். இப்பொழுது அவளுக்கு மூத்த தேவியையும் பொருந்தினீர். இனிப் பொறுக்க முடியாது,' என்று பிணங்கிச் சீறினாள்.

வனசம் - தாமரை. அவ்வை-தாயனைய திருமகள். தவ்வை - மூதேவி. சலம் - சீற்றம். ரு

பொதுமகட்குப் பொன்னீயில் போடுவாள் வாய்மண்

உண்ணும லிரவலர்க்கும் ஈயாமற்
பூமிதனி லொளித்த பொன்னைக்
கண்ணுனள் தனக்கீய வேண்டியதைத்
தோண்டுகின்ற காலந் தன்னின்
மண்ணுண ளேனைநோக்கி யெனக்கீந்த
பொருளையினி வாங்கா நின்ற
பெண்ணுண ளேனயுன்வாய் கோட்டுவளென்
றேநகைத்துப் பேசி னளே.

சிறக்க உண்ணுமலும், பிறருக்கு ஈந்து வாழ்வின் ஊதியத்தைப் பெறுமலும் மண்ணில் பொருளைப் புதைத்து வைத்துள்ளேன். அப் பொருளைக் கண்ணே ஆகிய பொதுமகளுக்குக் கொடுக்கவேண்டி மண்ணைத் தோண்டினேன். அப்பொழுது நிலமகள், "நீ, எனக்குத் தந்த பொருளை எடுத்துப் பொது மகளுக்குக் கொடுக்கப் போகின்ருய். வாங்குகின்ற அவள், உன் வாயில் என்ன (மண்ணை)ப் போடுவாள்," என்று கூறி நகைத்தாள். சு

ஈயாதானை ஏசியடித்து உதைத்துமிழ்வள் பொதுமகள்

முனங்காலை வருடுமவள் கரங்கோல்போல்
முதுகின்மேன் மோதப் பூமேல்
அனங்கான மயிலென்ன நடஞ்செய்த
கழனம்மே லாடித் தாக்கத்

தினங்கான ரசமுதவு வாயேசி உமிழ
விந்தச் செய்கை கண்டும்
இனங்காத லாயவளில் ஏகுதியோ
நிற்றியோ இயம்பாய் நெஞ்சே.

மனமே! நிறையப் பொருள் கொடுத்து வந்த முன் நாட்களில் நம் காலை மெத்தெனப் பிடித்து இன்புறுத்து மவள், வறுமையுற்ற இந்நாளில் அவள் கையே முருட்டுக்கோல்போல் நம் முதுகில் அடித்தது. நிலத்தின்மேல் அன்னம்போலவும் நடந்து ஆடியுள்ள அவள் கால்கள் நம் மேல் ஆடித் துன்புறுத்தின. நாள்தோறும் இசையமுதூட்டும் அவள் வாய் திட்டியும் எச்சில் கொட்டியும் இழிவு செய்தது. இவைகளைக் கண்டும் இன்னமும் பேரன்பு கொண்டு அவள் வீட்டிற்குச் செல்லப்போகிறாயா? அல்லது போகாமல் நிற்கப்போகிறாயா? கூறுவாயாக.

வருடுதல் - தடவுதல்; பிடித்தல். அனம் - அன்னம். கழல் - கால். தாக்கல் - துன்புறுத்தல். கானம் - இசை. ரசம் - சுவை. இயம்பல் - சொல்லல். எ

ஆடவரை ஆண்கோலம் என்றறைவள் கிழவி

ஆவலா லவகாலத் தவளில்நான்
புகச்சிலபே ரங்கி ருந்து
மேவியோ டினர்சினமுற் றிவராரேன்
றேன்மாமி விரைவாய் வந்து
பூவையிவள் நின்பிரிவாற் றுதழப்பாங்
கியர்குனைப்போற் புருட வேடந்
தாவறவே தரித்தவட்குக் காட்டினன்வே
றன்றென்று சாதித் தாளே.

மிகுந்த வேட்கையுடன் காலங் கடந்து அவளுடைய வீட்டுக்குச் சென்றேன். சென்றதும் அங்கிருந்து சிலபேர் ஓடினர். சினங்கொண்டு இவர் யாரென்றேன். உடன் தாய்க்கிழவியாகிய மாமி வந்தாள். 'உன்னுடைய பிரிவுத்துன்பம் பொறுக்காது என் மகள் அழுதாள்; அவள் அழுகையை நீக்கத் தோழியர்க்கு உன்னைப் போல் ஆண்கோலம் பொருத்தமுற அமைத்துக் காட்டினேன். வேறொன்று மின்று,' என உறுதியாகச் சொன்னாள்.

ஆவல் - வேட்கை. அவகாலம் - எதிர்பாராத வேளை. பாங்கியர் - தோழியர். புருடவேடம் - ஆண்கோலம். தாவற - குற்ற

மற; பொருத்தமுற. தரித்தல் - அமைத்தல். சாதித்தாள் - உறுதியாகச் சொன்னாள். அ

செல்வப் பொருளீந்தார்க்குச் சேர்ப்பள் பல அல்லல்

பொருளொன்று நாந்தந்த திவட்கதற்கில்
லாமைபிணி பொய்பு ரட்டு
மருளொன்றுங் கட்காமங் கொலைகளவு
சூதுவசை மரணத் தோடும்
இருளொன்று நரகமின்னு மிவள்பானுங்
கொண்டதற்கோ ரிலக்க முண்டோ
தெருளொன்றும் பாரினம்போற் சமர்த்தாக்கொண்
டெவர்வணிகஞ் செய்ய வல்லார்.

(மனமே!) பொதுமகளுக்கு நாம் கொடுத்தது அழியும் செல்வப் பொருள் ஒன்றே. அவ்வொன்றினைப் பெற்று நமக்கு அவள் தந்த அழியாப்பொருள்களுக்கு அளவேயில்லை. அவை: வறுமை, நோய், பொய், வஞ்சனை, மயக்கந்தரும் கள், நீங்காப் பெண் ஆசை, கொலை, களவு, கவறாடல், பழி, இழிவான சாவு, கழியாத் துன்ப அளறு என்க. இவ் வகையாகத் தெளிந்த இவ் வுலகில் நம்மைம்போல் ஒன்றுக்குப் பன்னிரண்டாக வணிகஞ் செய்யும் திறமையர் யாவருளர்.

இல்லாமை - வறுமை. பிணி - நோய். புரட்டு - வஞ்சனை. மருள் - மயக்கம். நரகம் - அளறு. சமர்த்தர் - திறவோர். ௬

கணவன் நிறைகெடின் மனைவியும் கற்பழிவள்

இரதியனை யார்பாற்போய் நாம்வருமுன்
னெங்குச்சென்று யெனவில் லானைப்
பொருதிவின விடவிரதி புருடனனை
யார்பாற்போய்ப் புணர்ந்தே னென்றாள்
விரதமுள்ளா யெங்கிதைநீ கற்றதென்றேம்
உம்மிடத்தும் விருப்பா யும்மைச்
சுரதஞ்செய் பவரிடத்துங் கற்றதென்றாள்
வேறினிநாஞ் சொல்வ தென்னே.

(மனமே!) காமன் மனைவியை ஒத்த பொதுமகளிர்பால் நாம் போய் இன்புற்று வருமுன் நம் மனைவி வெளியில் எங்கோ சென்று விட்டாள். வந்ததும், அவளைச் சார்ந்து நீ எங்குச் சென்றாய் என்று வினவினேன். அவள், 'காமனையொத்த ஆடவரைக் கலந்தின்புறச் சென்றேன்' என்றாள். 'கற்பினின்றும் வழுவாத பெருநோன்புடையவளே! இவ்வாறு கற்புக் கெடும் தீயொழுக்கம் புரிய யாரிடம் கற்றது,' என்றேன். அவள், 'உம்மிடத்தும் உம்மை விருப்பமுடன் இனிமை செய்யும் பொது மகளிரிடத்தும் கற்றது,' என்றாள். இனி நாம் சொல்வதற்கு என்ன இருக்கின்றது? (நம் தீயொழுக்கமே அவளைத் தீய ஒழுக்கத்தில் செல்லச் செய்தது.)

இரதி - காமன் மனைவி. சுரதம் - இனிமை. கO

பொதுமகட் சேர்வோர் பொல்லா விலங்கொப்பர்

சுவையுணவு தானிருக்க மலந்தேடி
யோடுகின்ற சுணங்கன் போலும்
குவையதனிற் கிடந்துறுநல் இடநீங்கித்
திரிகின்ற கோகு போலும்
நவைதீர் தண் நதித்தூநீர் அருந்தாதங்
கணநீரை நாடல் போலுஞ்
சிவையனைய காந்தையரை வெறுத்தசடர்
வேசையரைச் சேர்வார் மாதோ.

தெய்வத் திருவருள் நங்கையை ஒத்த கற்புறு மனைவியரை வெறுத்து ஒதுக்கிப் பொதுமகளிரைச் சேரும் கீழோர்- இனிமையுள்ள உணவுகளிருப்பவும், அவற்றை அகற்றி மலத்தை விரும்பி ஓடுகின்ற நாயையும், நல்ல இடத்தை விட்டுக் குப்பைமேட்டில் கிடப்பதற்குத் திரிகின்ற கழுதையையும், மாசில்லாத தூய யாற்றுநீர் பருகாது சாக்கடைக் கழிவுநீரைக் குடிக்க ஓடும் தாழ்ந்தோரையும் ஒப்பர்.

சுணங்கன் - நாய். குவை - குப்பை. கோகு - கழுதை. அங்கணம் - சாக்கடை. சிவை - அருள்மங்கை. அசடர் - கீழோர். கக

கள்ளுநன் களவேடாவிடில் கயிறுகொண்டு தூக்கிடுக

கோடுமுடல் மாமியெனை மதுவுடன்பு
லால்திருடிக் கொணர்தி யென்றாள்
பாடுபெறும் பார்ப்பானு னென்றேன்மற்
றவையுண்ணப் பவம்போ மென்றாள்

நாடும்வசை யுயிருய்யே னென்றேனீ
மாய்ந்திடின்முன் ஞன்கோ டுத்த
ஓடுமேற்ற மருகர்க்காம் நான்றுகோள்நீ
யெனக்கயிற்றேன் றுதவி ளுளே.

கூனல் வாய்ந்த தாய்க்கிழவியாம் மாமி என்னைக் கள்ளும் ஊனும் களவுசெய்துகொண்டு வரும்படி கட்டளையிட்டாள். 'நான் சிறப்பு மிக்க பார்ப்பானன்றோ?' எனக் கூறினேன். கள்ளும் ஊனும் உண்டால் உன்னுடைய பாவம் எல்லாம் அகலும்,' என்றாள். 'ஐயோ! நாடு பழியுரைக்கும்; யானும் உயிருடன் வாழ முடியாது,' என்று கூறினேன். 'நீ மாண்டுவிட்டால் உன் கையில் நான் தந்த பிச்சை ஓடு இனியுள்ள மருகர்களுக்கு ஆகும். நீ தூக்கிட்டுக்கொண்டு இறந்துவிடு,' என்று கயிறொன்று தந்துதவினாள்.

கோடு - கூனல். பாடு - சிறப்பு. வசை - பழி. நான்று கொளல் - தூக்கிட்டுக் கொளல். ௧௨

பசிமண் ஓடு பற்றலால் முத்தேவர் பரங்காளும்

பசையறவெம் மாவியன்னாள் கைப்பொருளே
லாம்பறிக்கப் பசியால் நான்கு
திசைமுகமு நோக்கலாற் றிசைமுகனு
னோம்வாயிற் றீயாள் இட்ட
வசையான மண்ணுண்டு மாயனு
னோங்கையின் வாங்கு மோட்டால்
இசைமேவு மீசனு னேம்புவியில்
நமையொப்பார் எவர்தாம் அம்மா.

எம் உயிரையொத்த பொதுமகள் எம்முடைய கைப்பொருள் எல்லாங் கவர்ந்து யாம் வெறுமையானபின் பசியால் நாற்புலமும் நோக்கலானேம்; அதனால் நான்முகனானேம். அக் கொடியாள் வைது திட்டி வாயில் மண்ணை யள்ளியிட்டாள். அதனால் மண் உண்ட மாயவனானேம். அவள் தரும் ஓட்டைக் கையில் வாங்கியதால் புகழ் மிக்க முதல்வனும் ஆண்டவனானேம். ஆதலால், மூத்தேவராகிய நம்மை ஒப்பவர் இவ்வுலகில் யாவருளர்?

பசையற - பொருள் நீங்க; வறுமையுற. ஈசன் - முதல்வன்; ஆண்டான். புவி - உலகம்.

௧௩

பொதுமக ளிடஞ்செயல் பொன்றுவித்தால் புகழ்வம்

விடமுண்டான் கூற்றுதைத்தான் அலகைவென்றான்
புரமெரித்தான் விடையோ னென்னக்
கடலுலகிற் சைவரவன் புகழ்விரிப்பார்
கணிகையர்கட் கடுவை யுண்டு
குடமுலையாங் கூற்றுதைத்துத் தாய்க்கிழவி
யெனும்பேயைக் கொன்றன் றூர்வாழ்
இடமென்னும் புரமெரித்தா னெனில்யாமும்
அவன்புகழை யியம்பு வோமே.

*செந்நெறியாளர்கள் தங்கள் முழுமுதல்வராம் ஆனேறு ஊரும் அம்மையப்பரை, 'நஞ்சுண்டார்; காலனைக் காலாலுதைத்தார்; பேயை வென்றார்; திரிபுரமெரித்தார்' எனக் கடல் சூழுலகில் அவருடைய மெய்ப்புகழை எடுத்துரைப்பர். நாமும் அவரைப் புகழவேண்டுமானால், அவர் பொதுமகளிருடைய கண்ணாகிய நஞ்சையுண்டு, கொங்கைக் கூற்றை யுதைத்து, தாய்க்கிழவியாகிய பேயைக் கொன்று, அவர்கள் இருக்கும் இடமாகிய புரத்தை யெரித்து உலகுக்கு இன்பத்தை அருளவேண்டும்; அப்பொழுது நாமும் புகழ்வோம்.*

*விடம் - நஞ்சு. அலகை - பேய். புரம் - முப்புரம். விடை - ஆனேறு. சைவர் - செந்நெறியாளர்; சிவனடியார்.* **௧௪**

என்றும் பொதுமகள்வீட் டிருப்பர் பலர்மறைவாய்

கொடியாளன் பற்றபின்னர் பலர்நம்பால்
வந்துன்னைக் கூடிக் கொண்டே
மிடியென்றும் வாழ்கவென்று ரேனென்றே
முயிர்க்கினியாள் வீட்டில் நீவந்
தடிவைத்த போதெல்லாங் கூடையுறி
பரண்கட்டி லடிய டுக்கு
நெடியசிறை யிருந்தோமச் சிறையையுன்றன்
வறுமைவந்து நீக்கிற் றென்றார்.

*கொடியாளாகிய பொதுமகள் நம்மிடம் அன்பற்றபின், நாம் வீடு அடங்கினம். அப்பொழுது பலர் நம்மிடம் வந்து "உன்னை*

இப்பொழுது கூடிக்கொண்டிருக்கும் வறுமை என்றும் நீங்காது உன்னுடனேயே வாழட்டும்,'' என்றனர். யான் "என்" என்று வினவினேன். (அதற்கு அவர்கள்) "நீ, உயிர்க்கினியாளாகிய பொதுமகள் வீட்டில் அடிவைத்தபோதெல்லாம் நாங்கள் உனக்கு அஞ்சி, பூனை எலி நாய்போல், கூடை, உறி, பரண்மேல், கட்டிற்கீழ், அடுக்குப்பானை மறைவு முதலிய இடங்களில் நெடுஞ் சிறை யிருந்தோம். உன்னுடைய வறுமை வந்து அந்நடுக்கத்தை யும் சிறையையும் நீக்கிற்று,'' என்றனர்.

மிடி - வறுமை. கஙி

மாண்டார் காலில் புரிகட்டி இழுக்க வுரைப்பள்

தெரிவையின்நட் பறிவான்மாண் டெனக்கிடந்தேம்
மாமிவந்த சிலரை நோக்கி
உரியபா டையிலிவனை யெடுமென்றாள்
வீண்சலவே னுலைந்தோன் காலிற்
புரிவீக்கி யிழுமென்றன் னம்பணித்தா
ளதுசெய்யப் புகுந்தோர் தம்மைத்
தெரியாமல் உயிர் தப்பி யோடிவந்தோ
மங்குறிலெஞ் சீவன் போமே.

பொதுமகளின் நட்பை அறியும்பொருட்டு இறந்துபோன வன்போல் கிடந்தேம். தாய்க்கிழவியாகிய மாமி வந்து, சிலரைப் பார்த்து 'இறந்தார்க்குரிய பாடையினில் இவனை இடுங்கள்,' என்றனள். அன்னம்போன்ற பொதுமகள், 'அழிந்தவன் காலில் வைக்கோல் புரியைக் கட்டி இழுங்கள்,' என்றனள். அவ்வாறு செய்யப்புகுந்தோரை மறைத்து உயிர்தப்பி ஓடி வந்தேம். அங்கே இருந்திருப்பின் எம்முயிர் போய்விடும்.

தெரிவை - பெண். உலைந்தோன் - அழிந்தோன் கரு

பொதுமகள் புகழ்வது பொன்பெறற் பொருட்டே

சாமியுனைப் பிரியேனென் றுரைத்துப்பின்
னகன்றமின்னாள் தன்னை நோக்கித்
தோமிலா நின்மாற்றந் திறம்பியதே
தென்றேனீ தோகுப்பாற் றந்த

சாமியைநீங் கேனென்றேன் உனைச்சொன்ன
　　தன்றுநீ சாமி யானற்
பூமியிலுன் மாற்றென்ன எடையென்ன
　　விலையென்ன புகல்வா யென்றாள்.

(பொதுமகள்) "சாமி! உன்னைப் பிரியேன்," என்றாள். பிறகு பிரிந்து நீங்கினாள். அவளைப் பார்த்து, "மின் போன்றவளே! நீ சொல்லிய குற்றமற்ற சொல்லைக் கடந்தது ஏன்?" என்றேன். அவள், "நீ தொகை தொகையாகத் தந்த சாமியை அல்லவா? யான் நீங்கேன், என்று கூறினேன்," என்றாள். "யான் சாமி (பொன்) என்பது உன்னையன்று. நீ, சாமி—பொன்—ஆனால், உலகில் உன்னுடைய மாற்று எவ்வளவு? எடை எவ்வளவு? விலை எவ்வளவு கூறுக," என்றாள்.

சாமி - பொன். தோமிலா-குற்றமில்லாத. திறம்பல்-மீறல்; கடத்தல். கஎ

அழுக்கே உருவாம் பொதுமகளை அடைவார் யாரே

ஒருவனுண்ட கலத்துண்ண வொருவனுடை
　　யினையுடுக்க வொருவன் றூங்கும்
திருவமளி துயிலமனம் பொருந்தாது
　　பலரேச்சஞ் சேர்ப டிக்கம்
பொருவுவே சியர்வாயெச் சிலையுண்ணப்
　　பலபேரைப் புணர்ந்த சுத்தம்
உருவுகொண்ட தனையவர்தோள் சேரவே
　　யெவர்க்குமன மொன்றுங் கொல்லோ.

உலகில் ஒருவன் உண்ட இலை கலம் முதலியவற்றில் எவரும் உண்ணார்; உடுத்த உடையை எவரும் உடார்; உறங்கும் படுக்கையில் எவரும் உறங்கார். பொதுமகள்வாய் பலர் எச்சில் துப்பும் படிக்கம் போன்றது. அவர் வாயெச்சிலை உண்ணவும், வரையறையில்லாமல் எல்லாரையும் கூடி வாலாமை—அழுக்கே—உருவாய்த் திரிந்த அவர்கள் தோளைச் சேரவும் யாருக்குத்தான் மனம் பொருந்தும்?

அமளி - படுக்கை. துயிலல் - உறங்கல். படிக்கம் - எச்சில் துப்பும் ஏனம். அசுத்தம் - வாலாமை; அழுக்கு. கஅ

எல்லாம் பறித்துப் பிச்சை எடுக்கவைப்பாள் பொதுமகள்

பொருளின்சே டத்தையிவட் களித்தோம்வாய்ச்
சேடமெனும் பொருள ளித்தாள்
தருமமெனத் தனமளித்தோ மெமக்கிவளுந்
தருமமெனத் தனம ளித்தாள்
அருமையாம் பலியளித்தோ மிவளெமக்குப்
பலியளித்தாள் ஆழி சூழ்ந்த
இருநிலத்தி னீதன்றி யின்னுமிவ
ளென்செய்வா ளெமக்குத் தானே.

மிக்க பொருள் முழுவதும் பொதுமகளுக்கு அளித்தோம். அவளும் அருட்கொடை என்று சொல்லத் தகுந்த வாய்எச்சிற் பொருளை எமக்கு நல்கினாள். கற்பகமரமும் அரசும் போன்று பொன்மணி முதலியவற்றை அவள் நினைத்தவாறெல்லாம் கொடுத்தோம். அவளும் அறக்கடவுள் தரும் புண்ணியப் பயனெனக் கொங்கைப் பொன் அளித்தாள். சிறப்புமிக்க பூ நீர் பால் பழம் முதலியவற்றால் வழிபாடு செய்வதாகிய பலி கொடுத்தோம். அவளும் திருவோடும் அதன்கண் இடும் பிச்சைச் சோறும் நல்கினாள். கடல் சூழ் உலகில், நாம் செய்வதற்கெல்லாம் சிறந்த ஈடு செய்தனள். இவையன்றி வேறென் செய்வாள்?

சேடம் - உயர்வு. சேடம் - மிச்சம்; எச்சில். பலி - பூசை. பலி - பிச்சை. கசு

கொலைபுலையின் மிக்ககுற்றம் புரிபவள் பொதுமகள்

கொலைஞர்தமைக் கொலை செய்து கள்வரைவெஞ்
சிறையிலிட்டுக் குற்றம் செய்யும்
புலைஞரைத்தண் டித்தடக்கு நம்மிங்கி
லீசுமன்னர் புருட ராவிக்கு
உலைவைக்குந் தன்மையளாய்ப் பாதகமே
லாந்திரண்டோ ருருவாய் வந்த
விலைமாதைக் கொல்லாம லுலகமிசை
யாதுசெய விடுத்தா ரம்மா.

நம்மை ஆளும் ஆங்கிலேயமன்னர் எல்லாத் துன்பமும் ஒருங்கு தரவல்ல பெரும்பாவமாம் கொலை செய்வோரைத் தூக்

இட்டுக் கொன்றும், பிறன் வேண்டும் கைப்பொருளைக் களவு செய்யும் உழையாக் கோழையரைக் கடுங்காவலில் வைத்தொறுத்தும், கள்ளுண்டல், சூதாடல் முதலிய இழிசெயல் செய்வோரை வெறுங் காவற் சிறையிட்டுத் தண்டித்தும் முறை செய்வர். இவர்கள் ஆடவர் உயிருக்குப் பெருங்கேடு சூழும் இயல்பும், பெரும்பாவமே பெருத்து ஓர் உருவெடுத்த வடிவும் கொண்ட விலைமகளாம் பொதுமகளைத் தூக்கிட்டுக் கொன்றுவிடாமல், ஐயோ யாது செய விடுத்தார்?

புலைஞர் - இழிந்தோர்; கயவர். உலைவைத்தல்-பெருங்கேடு சூழ்தல். உ0

பூங்கணைக் கஞ்சாள் பொன்கணைக் கஞ்சுவள்

பணயமே திரணமன்பு பெரிதென்ற
பாவைபொருள் பறித்த பின்னர்
அணையேனென் றுளனங்க னுனக்கிலையோ
வென்றேமவ் வறிவி லான்பூங்
கணைகளையே விடுத்தானு னஞ்சுவனோ
காணமெனுங் கதிரங் கொண்டேன்
இணைமுலைமேற் றெறித்திடின்வெல் வானென்றாள்
இவள்மனம்வல் லிரும்போ அம்மா.

செல்வமிக்க காலத்தில் பொதுமகள் 'பொருள் ஒரு துரும்பு; உங்கள் அன்பே பெரிது' என்று கூறி, நம் பொருளெல்லாம் பறித்தாள். பின்பு, பொருளில்லாக் காலத்துக், 'இட்டவும் வாரேன்; எட்டியும் பாரேன்,' என்றாள். உனக்குக் காமன் இல்லையோ என்று வினவினேன். அவள் 'அறியாமை மிக்க கருவேள் பூங்கணைகளை என்மேல் விடுத்தான். அவற்றிற்கு யான் அஞ்சேன். பொருள் என்று சொல்லப்படும் பண அம்புகொண்டு என் மார்பின்மேல் வீசினால், வெல்வான்,' என்றாள். இவளுடைய உள்ளம் வலிமை மிக்க இரும்போ?

பணயம் - பொதுமகளுக்குக் கொடுக்கப்படும் பொருள். திரணம் - துரும்பு. அனங்கன் - காமன். காணம் - பொருள்; பணம். கதிரம் - அம்பு. உக

பொல்லாங் குருவே பொதுமகள் உருவம்

வடிவுமிகு கொழுநர்தமை வேசியர்வவ்
விடவருந்தும் வாட்கண் நல்லீர்
கடினமனங் கணக்கிலா ஆடவர்சம்
போகமுயிர் கவர்தல் வஞ்சங்

குடிகெடுக்குந் தொழிலுங்கட் கில்லையென
வெறுத்தனரக் குணங்க ளெல்லாம்
படியிலுமக் கமையுமேற் கணவர்திரு
வருளுமக்கும் பலிக்கு மன்றே.

அழகு மிக்க கணவர் நம்மை வெறுத்துப் பொதுமகளை விரும்பி அவளுக்கே அடிமையாகிவிட்டனரே என்று வருந்தும் ஒளிமிக்க கண்ணையுடைய மாதரே! உங்கட்கும் அப் பொதுமகள் பாலுள்ள வன்கண்மையும், அளவிலாத ஆடவர்இணக்கமும், உயிர் கொல்லுதலும், ஏமாற்றுதலும், குடும்பத்தைக் கெடுக்குங் கொடுந் தொழிலும் அமையுமானல் கணவர் திருவருள் உங்களுக்குக் கைகூடும். (பொதுமக்கள்பால் உண்டாம் தீக்குணங்கள் இவை எனக் குறித்தபடி. குலமகட்கு வேண்டுமெண்பதன்று.)

சம்போகம் - இணக்கம். படியில் - உலகில். பலிக்கும்-கை கூடும். உஉ

விற்றதை மீட்டும் விலைமாதர் விற்பர்

பகருவங்கம் பலசரக்குத் தரகுசேல
வாள்கள்முதற் பணங்கூட் டின்றி
யகனிதம்பச் சரக்கொன்றைப் பலருக்குந்
தினந்தினம்விற் றரும்பொன் வாங்கிப்
புகலுமிந்தச் சரக்குங்கை நீங்காது
வணிகஞ்செய் பொதுமின் னார்போல்
சகமதனிற் பேரறிவி னேடுவா
ணிபஞ்செய்யும் சமர்த்த ருண்டோ.

வணிகத்துக்கு வேண்டுவ கப்பல், பொருள்கள், பல்பண்டம், தரகாள், கைமுதல், பங்காளர் முதலிய பலவாம். விலைமகளிர் செய்யும் உடல் வாணிகத்துக்கு வேண்டுவது உடல் ஒன்றேயாம். வணிகர்கள் விற்ற சரக்கை வாங்குவார்க்கே உரித்தாக்கி விடுவர். பொதுமகளோ விற்ற உடலையும் தமக்கே உரித்தாக்கித் தம் பாலே வைத்துக் கொள்வர். ஆயின், பொதுமகள்போல் திறம் பெற வணிகஞ் செய்யும் தன்மையர் எவருளர்?

வங்கம் - கப்பல். உ௩

இருமனத்தால் பிணமாதல் இயையும் பொதுமகட்கே

கலவிசெய்த மாதென்னை விலைகேட்டா
ளுடனுனக்கக் கலந்து காம
நலமுண்ட வுனக்குவிலை யேதென்றேன்
சவமனைய நான்சு கிக்க
இலையென்றாள் போய்யென்றேன் வள்ளுவர்கூ
றியகுறளா மினிய நூலில்
விலைமாதைச் சேர்தல்பிணந் தழுவியதை
யொக்குமென்றார் வீணே வென்றாள்.

என்னுடன் இன்புற்ற பொதுமகள் அவ் இன்ப விலையாம் பொருள் ஈக என்றாள். யான், 'நீயும் என்னுடன் இன்புற வில்லையோ?' என்றேன். 'இல்லை' யென்றாள். ஏன் என்றேன். 'யான் பிணமாம் நிலையொத்து மனம் பொருந்தாதிருந்தேன். அதனால் எனக்கு இன்பமில்லை. இவ்வுண்மை, திருவள்ளுவ நாயனார் "பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையி, லேதில் பிணந்தழீஇ யற்று" என்றருளிய தமிழ்மறையா லுணர்ந்து கொள்க,' என்றனள்.

காம நலம் - இன்பம். உ௲

தந்தையைக் கொல்லவும் பொதுமகள் சாற்றுவள்

தையலில்லம் புகும்போதென் சுதன்குரலைக்
கேட்டோதுங்கித் தாழ்வா ரத்திற்
பையவொன்றிச் செவிகொடுத்தேன் பாலனைப்பார்த்
தக்கோதை பணமீ யென்றாள்
ஐயனிறந் திடிலெல்லா முனதென்று
னவன்தூங்கும் சமையம் பார்த்தோர்
கையமெடுத் தவன்றலைமேற் போடுவாய்
போடுமுன்நான் தழுவே னென்றாள்.

பொதுமகள் வீட்டிற்குள் நுழையும்போது என் மகன் குரலைக் கேட்டேன். சற்று ஒதுங்கித் தாழ்வாரத்தில் நின்று ஒற்றுக் கேட்டேன். அப்போது பொதுமகள் என் மகனைப் பார்த்துப் பணம் கொடு என்றாள். அவன், 'என் தந்தை இறந்துவிட்டால்

எல்லாப் பொருளும் உன்னுடையதுதான்,' என்றான். அவள், 'உன் தந்தை தூங்கும்போது அவன் தலையில் பெருங்கல்லைப் போட்டுக் கொன்றுவிடு; அதற்கு முன் உன்னை நான் சேரேன்,' என்றாள்.

சுதன் - மகன். குரல் - பேச்சொலி. சையம் - கல். உரு

பலர்க்கிணங்கும் பொதுமகள் பார்க்கிலினத் தலைமணியே

ஒருமாது தன்றுணைவன் சீடனைமற்
றொருமாதவ் வும்பர் கோனை
ஒருமாது சோதரரை வரைச்சேர்ந்து
கன்னியரேன் றுயர்பேர் கொண்டார்
அருமையா வெமைச்சேயர் சோதரர்சீ
டரையிம்பர்க் கரசைச் சேரும்
பொருண்மாதக் கன்னியர்க் கெலாஞ்சிரோ
மணியென்னப் புகல லாமே.

முன்னாளில் தாரை என்பவள் வியாழன் மனைவி. அவள் வியாழனின் மாணாக்கனான திங்களைக் களவிற் கூடிப் புதனைப் பெற்றாள். கவுதமர் மனைவி அகலிகை வானவர்கோனைக் கூடினள். பாஞ்சாலன் மகளாகிய துரோபதை, பாண்டுவின் மக்களான தருமன் முதலிய உடன்பிறந்தார் ஐவரையும் கூடினள். இவர்கள் மூவரும் கற்புடைய கன்னியரெனப் புகழப்படுகின்றனர். இவ் விலைமாதோ நம்மை, நம் மக்களை, நம் உடன்பிறந்தாரை, நம் மாணாக்கர்களை, உலகாள் வேந்தரை ஓவாது கூடினள். ஆயின் இவள் அம் மூவர்க்கும் தலைமணி போன்றவளாவள்.

துணைவன்-கணவன். சீடன்-மாணாக்கன். சோதரர் - உடன் பிறந்தார்.

உசா

பொதுமகட்குக் கடவுள் பொன்னவனே யாவன்

விதிமுதன்மூ வரிலெவரும் கடவுளெனச்
சிற்றிடையை வினவப் பூவாழ்
எதிரில்தம னியனென்று ளரன்கோயிற்
றுசியுனக் கியல்போ வென்றேன்

நிதியுடன்மைந் தரைப்படைத்தன் னூரதையென்
காலில்வைத்து நிதமும் வீழ
மதிபடைத்துத் தமனியப்பேர் தான்படைத்த
விதிக்கிணையார் மகிப வென்றாள்.

"நுண்ணிடையாய்! படைப்போன் காப்போன் துடைப்போன் ஆகிய அயன் அரி அரன் என்னும் மூவருள் நீ வழிபடுங் கடவுள் யாவர்?" என்றேன். "செந்தாமரையில் வீற்றிருக்கும் ஒப்பில்லாத படைப்போனாகிய பொன்னன்," என்றாள். "நீ அரன் கோவில் திருத்தொண்டு செய்யும் பணிப்பெண் ஆயிற்றே! நீ சொல்லுவது பொருந்துமோ?" என்றேன். "செல்வத்துடன் மக்களைப் படைத்து, அம் மைந்தர் நாளும் அச் செல்வத்தை என் காலில் வைத்து வீழ்ந்து வணங்கும்படியான அறிவினையும் அவர்களுக்குப் படைத்துப் பொன் எனும் பேர் தனக்குப் படைத்துக்கொண்ட படைப்போனுக்கு இணையாக யாவரைச் சொல்லலாம் தலைவ," என்றாள்.

விதி - படைப்போன். பூ - செந்தாமரை. எதிரில் - ஒப்பில்லாத. தமனியன் - பொன்னோன். தாசி - கோயிற் பணிப்பெண். தமனியம் - பொன். மகிப - தலைவ. உஎ

பொதுமகள் புணர்வு பொன்னால் ஆகும்

அந்தமுளா ளுரிமையா வத்தமுளார்
வாலியா வவன்பின் றேன்றி
வந்தவனா னுயினேன் மூவரிலோ
ரரியரியின் மகனை யன்னாள்
பந்தமுறச் செய்தனனம் மிருவரையார்
சேர்த்துவைப்பார் பாவா யென்றேன்
ஐந்துலோ கங்களுளோ ரரிநமையோ
ரரிசேர்க்கும் அறிநீ என்றாள்.

அழகுள்ளவள் (சுக்கிரீவன்) மனைவியாகவும், பொருள் உள்ளவர்கள் அவளை மனைவியாகக் கைப்பற்றும் வாலியாகவும், யான் மனைவி வேண்டும் சுக்கிரீவனாகவும உள்ளேன். முக்கடவுளருள் ஒருவனாகிய திருமால் சுக்கிரீவனை அவன் மனைவியுடன் சேர்த்து வைத்தான். நம்மிருவரையும் இணைக்கி வைப்பவர் யாவர்? பாவையே! சொல் என்றேன். சுரங்கத்தெடுக்கும்

ஐவகை முதற் பொருள்களுள் ஒன்ருகிய பொன் நம் இருவரை யும் ஒரு அமளியில் சேர்த்து வைக்கும் நீ அறி என்ருள்.

அந்தம்-அழகு. உரிமை - மனைவி. அத்தம் - பொன். அரி- திருமால். அரியின் மகன் - சுக்கிரீவன். பந்தம் - இணைப்பு. அரி - பொன். அரி - கட்டில்; அமளி. உ௮

அத்தை சொக்குத்தூள் அடிக்குப் பொன் தூளாம்

இனியாளை நோக்கியத்தை சக்கிரிக்குச்
சோக்குத்தூ ளிடுவா யென்ற
தொனிகேட்டுச் சினந்துநான் குயவனோ
வெனைமயக்கத் தூளோ வென்றேன்
தனியரசாஞ் சக்கிரிநீ யாகையினின்
னடிமலர்தோய் தான மெல்லாம்
நனியேசோக் கெனுங்கனகப் பொடியிறையேன்
றேன்முனிதல் நன்றோ வென்ருள்.

உயிரினும் இனியாளாகிய பொதுமகளைப் பார்த்துத் தாய்க் கிழவியாம் அத்தை, 'அறிவிலாக் குயவனை ஒத்த செல்வனுக்கு நம்பால் பிணிக்கும் மயக்கத்தூள் இடுக,' என்ருள். அக்குர லொலி கேட்டு யான் சினங்கொண்டு, 'நான் குயவனோ? என்னை மயக்க மருந்துப் பொடியோ?' என்று கூறினேன். அவள், 'உலகைத் தனியரசாளும் ஆணைச் சக்கரத்தையுடைய வேந்தர் நீராகையால், உம்முடைய அடிமலர் படும் இடங்களெல்லாம் மிகுதியும் பொன் தூள் பரப்புக என்று கூறினேன். இதற்கு நீர் சீற்றம் கொள்ளுதல் நன்றோ,' என்ருள்.

சக்கிரி - மண் அறுக்கும் சக்கரத்தைக் கருவியாகக்கொண் டுள்ள குயவன். சொக்குத் தூள் - மயக்கப் பொடி. சக்கிரி - ஆணைச்சக்கரத்தைச் செலுத்தும் ஒப்பில்லாத மன்னர் மன்னனும் வேந்தன். சொக்கு - பொன். முனிவு - சினம்; சீற்றம். உ௯

இருதிங்களில் மகப்பெறுதல் இயற்றிய தவப்பயன்

எனையன்றி மற்றோரைச் சேர்ந்தறியே
னென்றகன்னி யிருதிங் கட்குள்
தனையனீன் ருள்புதுமை என்னேன்றேன்
நினையும்மை தழுவி யிச்சேய்

சினையாயேன் மதியிலிறந் தேனிகத்தும்
உனைப்புணரச் செய்த நோன்பான்
முனையல்கு மிருமாத நிறைந்துடனிம்
மகவீன்றேன் முதல்வ என்றாள்.

*என்னையன்றி வேறொருவரையும் சேர்ந்தறியேனென்ற கன்னிப் பொதுமகள் இரண்டு திங்களுக்குள் ஆண் மகவு பெற்றாள். 'இவ்வாறு இரண்டு திங்களுக்குள் பிள்ளை பெறுதல் புதுமையிலும் புதுமை. இதன் காரணம் என்ன?' என்றேன். 'முற்பிறப்பில் உம்மைத் தழுவி இச்சேயைக் கருவுற்று எட்டு மாதத்தில் இறந்தேன். இறக்கும்போது உம்மையே மறுபிறப்பிலும் இந்தக் கருவுற்ற நிலையோடு கூடவேண்டுமென்று கடுந்தவம் புரிந்தேன். அத் தவப்பயனால் முன்னைக் குறைவுற்ற இரண்டு திங்களும் நிறைவுற்றதும் மகப்பெற்றேன் தலைவ,' என்றாள்.*

*தனையன் - மகன். புதுமை - வியப்பு. சேய் - பிள்ளை. மதி - மாதம். உம்மை - முற்பிறப்பு.* ௯0

*தாய்க்கிழவிப் பேய்தடுத்தாள் தன் மகளும் ஆங்கிலளே*

சிலர்மயில்வீ டுற்றனரேன் றறிந்துண்மை
யறியவங்குச் செல்லுங் காலை
புலனிழந்து நூறாண்டுங் கடந்தகூ
னுடன்மாமி பூபா மாரன்
மலர்வாளி விடுத்தனன்சே ரேனையென்ன
நெருங்கிவழி மறித்தா ளப்பேய்
கலவிதனக் கஞ்சிமீண் டோடினே
னவள்சுதையைக் கண்டி லேனே.

*சிலர் மயில்போலும் சாயலையுடைய பொதுமகள் வீட்டுக்குச் சென்றனரென்று கேள்விப்பட்டு, உண்மை யறிய அங்கு விரைந்து சென்றேன். பொறிபுலன் நன்றாய்த் தொழிற்பட முடியாது ஆற்றலற்று ஆண்டு நூறுங் கடந்து உடல் கூனி 'தாழாத் தளராத் தலைநடுங்காத் தண்டூன்றி' நடந்துவரும் தாய்க்கிழவியாகிய மாமி என்னை வழிமறித்து, 'அரசே! என்மேல் காமன் பூங்கணை பொழிந்தனன். நீர் என்னைச் சேர்தல்வேண்டும்,' என்றாள். அப்பேயுடன் கூட அஞ்சி மீண்டு ஓடினேன். வீட்டில் அவள் மகளைக் கண்டிலேன்.*

*கலவி - கூட்டம். சுதை - மகள்.* ௯௧

### பொருளீவோர் ஈயார்மேல் கீழ்ச்சாதி பொதுமகட்கு

கைத்தனநா மிழந்தபின்கூன் முடவரந்
தகர்நோயர் கடைக்கு லத்தர்
நித்தமரு விடவுள்ள முவந்தமின்னை
நோக்கியிது நெறியோ வென்றேம்
அத்தமதிற் குருடனஞ் சாதியிழி
வுளதோவஃ தளிப்போர் மேலோர்
இத்தரையி லெனக்கீயார் கீழ்க்குலத்தர்
சாதியிவை யிரண்டேன் றுளே.

*கைப்பொருள் முற்றும் அற்றபின், பொதுமகளாம் மின் போலும் தையலை நோக்கிப், 'பெண்ணே! கூனர் முடவர் குருடர் நோயர் இழிகுலத்தோர் முதலியவர்களை நாளும் உள்ளம் உவந்து கூடுதல் முறையோ,' என்றேன்? 'அவர் பொருளில் குருடு உறுப்புக்குறை இனத் தாழ்வு முதலிய குற்றம் உளதோ? இல்லையன்றே. அப்பொருள் அளிப்பார் யாராயினும் அவர் மேலோரே. இவ்வுலகில் எனக்குப் பொருள் ஈயார் கீழோரே யாவர். இவ்விரண்டே இனம்,' என்றுள்.*

*கைத்தனம் - கைப்பொருள். அந்தகர் - குருடர். இனம் - சாதி.*

௩௨

### அளவிலா நோயை அளிப்பள் பொதுமகள்

கனைகடல் மணலை யெணினும்வே சியர்சே
ராடவர்க்கோர் கணித முண்டோ
அனையநீ ரளவிடினு மவருட்கோள்
சுக்கிலத்துக் கத்துண் டோவவ்
வினையவர்மெய் யுரோமத்தை யெண்ணினுநோய்த்
திரளெண்ணவி தான முண்டோ
யினையவரைச் சேர்தல்பெருந் தீயினிடை
மூழ்குதலை யேய்க்கு மாதோ.

*கடற்கரையின் நுண்ணிய மணலை எண்ணினும் பொதுமகளிரால் சேரப்படும் ஆடவரை எண்ணல் முடியாது. அவர் உடல் மேல் காணும் மயிரை அளவிட்டாலும் அவரால் தம்மைச் சேர்ந்த*

ஆடவர்க்குக் கைம்மாருகக் கொடுக்கப்படும் தீராநோயை அள விட முடியாது. அறியாமையால் பொதுமகளிரைச் சேர்தல் பெருந்தீயில் விழுவதையே ஒக்கும்.

கனைகடல் - ஒலிக்கும் கடல். ௩௩

தாள்வெட்டல் பயனின்று தலைவெட்டென்பாள் பொதுமகள்

விலைமகட்கென் றயலகத்திற் கன்னமிட்டுத்
துளைவழியுள் விட்ட தாளைக்
கொலைவாளாற் றறித்தனர்கூ கூவென்றேன்
வேசையென்பாற் குறுகி யுக்கக்
கலைசோதித் தொன்றுமிலாச் சினத்தாலவ்
வகத்தாரைக் கதறிக் கள்வன்
தலைதுமியுந் தாள்துமித்தென் பலனென்ருள்
வெருவியுடல் சாணு னேனே.

பொதுமகட்குப் பொருள் கொடுக்கவேண்டுமென்று அயல் வீட்டில் நுழைவழி செய்து காலை உள்ளே விட்டேன். அகத் தவர் வாளால் காலை வெட்டினர். கூகூவென்று கூவினேன். பொதுமகள் என்னிடம் வந்து இடுப்பைத் தடவி மடியில் ஏதும் இருக்கின்றதா என்று பார்த்தாள். ஒன்றும் இல்லாமை கண்டு கடுஞ்சினம் கொண்டு, 'கள்வன்' என்று கதறி வீட்டாரை விளித்துக், கள்வன் தலையை வெட்டாது தாளை வெட்டியதால் பயன் என்னென்ருள்? யான் அஞ்சிச் சாண் உடல் ஆயினேன்.

விலைமகள் - பொதுமகள். அயலகம் - அடுத்த வீடு. கன்னம்- களவு செய்வதற்காகச் சுவரில் துளையிடுந்துளை. தாள் - கால். உக்கம் - இடுப்பு. துமித்தல் - வெட்டல். வெருவி - அஞ்சி. ௩௪

உமிழ்ந்து திட்டி உதைத்தகற்றுவள் பொதுமகள்

திருவேலாங் கொள்ளைகொண்டா டனைநோக்கிச்
செவ்வதரத் தேனீ யென்றேன்
பெருவாயெச் சிலையுமிழ்ந்தாள் பேசென்றேன்
கொடுஞ்சொற்கள் பேச லுற்ருள்
மருவென்றே னுதைக்குபுகை யாலிடித்துக்
கடித்தினிய மதன நூலாம்
இருபாத தாடனமா லிங்கனமேல்
லிதழ்சுவைத்த லென்று ளம்மா.

செல்வ முழுவதும் கொள்ளை கொண்ட பொதுமகளைப் பார்த்துச், 'செம்மைநிறம் பொருந்திய உதட்டமிழ்தம் தருவாயாக' என்றேன். அவள் தன் பெருவாய் எச்சிலை உமிழ்ந்தாள். 'சிறிது உரையாடுக' என்றேன். திட்டிப் பழித்தாள். 'ஒருகால் தழுவுக' என்றேன். காலால் உதைத்துக் கையாலடித்துப் பல்லாற் கடித்துப் பருவரல் செய்தாள்.

திரு-செல்வம். தேன்-அமிழ்து. உதைக்குபு-உதைத்து. ௩௫

பொதுமகட்குக் குலதெய்வம் பொன்னளிப் போரே

தரணியின்மிக் கெழின்மாதை யுனதுகுல
தெய்வமெது சாற்று யென்றேன்
இரணியனென் றெய்வமென்றாள் விட்டுணுவோர்
நரசிம்ம மெனவே வந்தான்
முரணுறவோண் ணுதேன்றே னிரணியா
சுரனன்று முராரி மெய்மேற்
கிரணவுடை யேனைப்புனைந்த விரணியனென்
றெய்வமென்றாள் கிளியன் னாளே.

உலகில் மிக்க அழகு வாய்ந்த கிளிபோன்ற பொதுமகளைப் பார்த்து, 'உன் குலதெய்வம் எது? சொல்' என்றேன். 'இரணியன் என் தெய்வம்' என்றாள். 'இரணியனை அடக்கத் திருமால் ஆளரியாக வந்தான். அதனால், உன் தெய்வம் வலியுடையதாகா,' தென்றேன். அவள், 'யான் கூறியது இரணிய அசுரன் அன்று. திருமால் மேனியின்கண் காணப்படும் ஒளிமிக்க பொன் ஆடையை ஒத்த பொன்னணி என்மேற் புனைந்த பொன்னுடையானே என் தெய்வம் என்றாள்.

தரணி - உலகம். இரணியன் - ஓர் அசுரன். முராரி - திருமால். இரணியன் - பொன்னுடையோன். ௩௬

பொதுமகட்காகக் களவுசெய்யப் போயினவே இருகையும்

பொய்யேந்து மனவேசைக் காத்திருடிக்
கையிரண்டும் போக்கிக் கொண்டே
மையேந்து விழிமனையாட் கிடையேந்துந்
துகிலின்றி மானந் தன்னைக்

கையேந்து மிரக்கவோ கையிலா
ளானுளேக் கையை யேந்திச்
செய்யேந்து முலகத்திற் பலியேந்தி
யுண்ணுவமியாஞ் செப்பாய் நெஞ்சே.

*உள்ளமே! பொய்யே சுமந்த மனமுடைய பொதுமகட்குப் பொருள்வேண்டிக் களவு செய்தோம். அதனால் இருகையும் போக்கப் பெற்றேம் மைதீட்டப்பட்ட கண்ணையுடைய மனைவி இடையிற் கட்ட உடையின்றித் தன் கையால் மானம் மறைத்து அகமொடுங்கி அல்லற்படுகின்றாள். அவள் பொருட்டு வயல்சூழ் உலகில் ஆடையிரக்கவும், இருவர் பொருட்டும் சோறு இரக்கவும் நமக்கோ கையில்லை. என் செய்வோம். சொல்வாயாக.*

*துகில் - ஆடை. பலி - பிச்சை.* ௩௭

*வேடிக்கைக் குரல்விலங்காய் மெய்ப்பண்பாய் மாறினரே*

சேயிழையின் சேடியர்முன் னெமக்கிதஞ்செய்
வான்புலிவெஞ் சினமா கோகு
நாயோரி கரடியெனக் கத்திமகிழ்
விப்பர்கள்நா நலிந்த பின்னத்
தீயவிலங் கினச்செய்கை நங்கண்ணே
செயத்தொடுத்தார் திருவை யொப்பா
ளாயமிரு கங்கட்கோ ரரசாகு
ளவட்கிரைநா மாயி னேமே.

*மனமே! அழகிய அணியணிந்த பொதுமகளின் தோழியர் நாம் செல்வமுள்ளவராயிருந்த காலத்து நம்மை மகிழ்செய்வித்தற் பொருட்டுப், புலி, குதிரை, கழுதை, நாய், நரி, கரடி முதலிய விலங்குகள் போன்று ஒலி செய்வர் அவர்களே செல்வம் நீங்கி வறுமையுற்ற இக்காலத்து உண்மையாக அவ்விலங்குகளாக மாறித் தீய செயல்கள் பலவும் நம்மாட்டுச் செய்யலானார். அவள் தலைவியும் விலங்கரசாம் அரியாகி நம்மைத் தன் இரையாக்கினள்.*

*சேடியர் - தோழியர். மா - குதிரை. கோகு - கழுதை. ஓரி- நரி. விலங்கரசு - அரி; சிம்மம். இரை - விலங்குணவு.* ௩௮

*கன்னத்தில் கண்டவுரு நின்உருவே கள்வனன்று*

வண்ணமல ரமளியின்மே லிருக்கையிலோர்
பரபுருடன் வரவு நோக்கிப்
பண்ணமரு மொழிமின்னாள் விளையாடல்
போற்றன்கைப் பதுமத் தாலென்
கண்ணதனை மூடிவிட்டே னெனநகைத்தாள்
வேற்றாளார் கள்ளீ யென்றேன்
கண்ணாடிபோற் றிகழுமென்றன் கபோலமதி
லுன்னுருவைக் கண்டா யென்றாள்.

*நிறமும் மணமும் அழகும் நிரம்பிய பூப்பரப்பிய கட்டிலின் மேல் இருவரும் ஒன்றாய் இருந்தோம். அப்பொழுது அயலான் ஒருவன் வரக்கண்டதும், அப்பொதுமகள்—பண்ணமைந்த இனிய சொல்லையுடையாள் விளையாட்டுப்போல் என் கண்ணை அவள் தாமரைபோன்ற கையினால் பொத்தித் தான் என் கண்ணை மூடிவிட்டதாகச் சொல்லி நகைசெய்தாள். யான் சினங்கொண்டு 'கள்ளீ! வந்த வேற்றாள் யார்?' என வினவினேன். அவள் நாணமும் துன்பமும் கொண்டவள்போல் நடித்துக் கண்ணாடிபோல் விளங்கும் தன்னுடைய கன்னத்தில் என்னுடைய உருவம்தோன்றிற்று என்றும், அதனை யான் கண்டேன் என்றும் கூறி மயக்கினாள்.*

*வண்ணம் - நிறம். அமளி - கட்டில். பரபுருடன் - அயலான். பதுமம் - தாமரை. கபோலம் - கன்னம்.* ௩௯

*கரவில்வந்தான் தனைக்கொன்றேன் கண்டேன் என்மகன் என்றே*

இரவினிலென் னுடன்துயின்ற கோதையடிக்
கடிவெளியே யேகி மீண்டாள்
கரவறிவான் பின்றொடர்ந்தேன் கொல்லையிலே
காளையொடுங் கலந்து நின்றாள்
அரவமெனச் சீறியவ்வாள் மேல்வீழ்ந்து
தாக்கவுயி ரற்று வீழ்ந்த
உருவையுற்றுப் பார்க்கவென்ற னொருசேயென்
றறிந்துநெஞ்ச முருகி னேனே.

இரவு என்னுடன் உறங்கிய பொதுமகள் அடுத்து அடுத்து வெளியிற் போய்த் திரும்பினாள். அவ்வாறு அவள் சென்று மீளும் மறைவை அறிவதற்காகப் பின் தொடர்ந்தேன். தோட்டத்தில் ஒரு கட்டிளைஞனுடன் கலந்து மகிழ்ந்திருந்தனள். இதைக் கண்டதும் யான் பாம்பெனச் சீறி அந்த ஆள்மேல் வீழ்ந்து சண்டையிட்டேன். சண்டையில் அந்த ஆள் மாண்டு விழுந்தான். உற்றுப் பார்த்தேன். மாண்டவன் என்னுடைய ஒரே மகன் என்று கண்டேன். மிகவும் மனம் வருந்தினேன்.

கரவு - மறைவு. காளை - இளைஞன்; வாலிபன். தாக்கல் - சண்டையிடல். சேய் - மகன். ௬0

---

# அதி. ௬௬—விலங்கினத்துக் கிடர் செய்யாமை

உயிரும் உணர்வும் உள்ளமும் விலங்கிற்கும் உண்டு

விலங்கினங் கட்கு வாக்கும்
    வினையுணர் ஞானத் தோடு
நலங்களு மிலையேன் றலும்
    நரரைப்போற் சீவன் மேய்யைம்
புலன்களும் இன்ப துன்பப்
    புணர்ப்பறி நெஞ்சி னோடுந்
துலங்கிடும் விலங்கை வாட்டித்
    துயர்செய்வோர் நரகத் தாழ்வார்.

விலங்கு முதலிய சிற்றுயிர்கட்குத் தங் கருத்தை உணர்த்தும் மொழியும் நலம் பொலம் பகுத்துணரும் உணர்வும் ஏனை நன்மைகளும் மக்களைப்போல் இல்லை யென்றாலும், உயிரும் உடலும், மெய்வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐம்புலன்களும் இன்ப துன்பம் உணரும் உள்ளமும் விளக்கமுற அமைந்துள்ளன. அப்படிப்பட்ட விலங்கினங்களைத் துன்புறுத்தி வருத்துவோர் மீளா நரகத்து ஆழ்வர்.

வாக்கு - மொழி. நரர் - மக்கள். க

*வாய்பேசா விலங்கைக் கொல்வோன் வன்பேயாவன்*

மானிடர் துயரைச் சொல்வர்
மற்றுளோ ரதனைத் தீர்ப்பர்
ஆனவ ருறுநோய் நீக்க
வனந்தமாம் பரிகா ரங்கள்
மோனமா யிடுக்கண் டாங்கி
முறையிட வறியா தல்லல்
தானுறு விலங்கைக் கோல்வோன்
தருமனோ பேயோ வம்மா.

*மக்கள் தாங்கள் படும் துன்பத்தை வாய்விட்டுச் சொல்லுவர். அதனைக் கேட்ட பிறரும் நண்பரும் அதனைத் தீர்ப்பர். அதனைத் தீர்க்கும் வழிகளும் பல. வாய் பேசவறியாத விலங்கினங்கள் தங்கள் துன்பத்தைத் தாங்களே தாங்கி வருத்தமுறுகின்றன. அவற்றைக் கொல்வோன், நன்மை கைக்கொள்ளும் அறவோனே? தீமையே புரியும் பேயோ?*

*ஆனவர் - நண்பர். மோனம் - வாய் பேசாமை.* உ

*ஊன்உண் பழக்கத்தால் உண்பர் மக்களையும்*

கோடியவெவ் விலங்கை யெல்லாங்
கோறலே முறையென் றாலும்
அடிமைபோல் நரர்க்கு ழைத்தீண்
டயர்விலங் கினமா சில்லாக்
குடிஞையை யடித்து தைத்துக்
கோன்றுண் போர்சமயம் வாய்க்கில்
படியின்மக் களையு முண்பர்
பழக்கம்போல் தீய துண்டோ.

*உயிர்க்கொலை செய்யும் கொடு விலங்குகளைக் கொல்வதே முறை. ஆயின், அடிமைபோல் மக்களுக்கு உழைத்து இளைக்கும் ஆடு மாடு முதலிய விலங்கினங்களையும் பறவைகளையும் அடித்துக்கொன்று உண்போர், வாய்ப்புக் கிடைத்தால் உலகத்தில் மக்களையும் கொன்று உண்பர். பழக்கம்போல் கொடியது உண்டோ?*

*அயர்தல் - இளைத்தல். குடிஞை - பறவை.* ங

### விலங்கினை வாட்டுவோர் மக்களையும் வாட்டுவர்

ஊமரைப் பித்து ளாரை யுணர்வில்சே யரைமின் னாரைப்
பாமரர் தம்மை மிக்க பரிவோடுங் காத்தல் போல
நாமற விலங்கைக் காப்பர் நல்லவ ரதைவ ருத்துந்
தீமன முடையோர் துன்பஞ் செய்வர்மா னிடர்க்கு மம்மா.

ஊமைகளை, பித்துக் கொண்டோரை, அறிவு நிரம்பாத பிள்ளைகளை, மாதரை, அறிவிலாப் பெருமக்களை மிகுந்த இரக்கத்துடன் பாதுகாப்பதுபோல, நல்லவர், அச்சம் நீங்கும்படி விலங்கினங்களைக் காப்பர். அவ் விலங்கினங்களைத் துன்புறுத்தும் கொடுமனம் உடையோர், அப் பழக்கத்தால் மக்களுக்கும் துன்பஞ் செய்வர்.

நாம் - அச்சம். ௪

### புலாலுண்போர் தெய்வத் தண்டனை அடைவர்

காயிலை கிழங்கே தக்க
 கறியதா மதனை யுண்போர்
ஆயுள்நாள் வளரும் ஊழ்த்தல்
 அருந்துவோ ருயிர்கட் கெல்லாந்
தாயெனு மோருக ருத்தன்
 சாபத்தைப் பரிப்பா ரென்னிற்
பேயினுங் கொடிய வன்னார்
 பிழைக்குமா றெவன்கோ லம்மா.

மக்கள் உண்பதற்கு வாய்ப்புடைய காய், இலை, கிழங்கு, பருப்பு, கூலம், கறி, பழம் முதலிய மழையால் தரப்பெறும் தூய உணவே பொருந்தியதாகும். அவ்வுணவை உண்போர்க்கு வாழ்நாளும் வளரும். கொலையால் வரும் புலால் என்னும் இறைச்சியை உண்போர் எல்லா உயிர்கட்கும் தாயென்று பேசப்பெறும் ஒப்பிலா முழுமுதல்வனின் கடுந்தண்டனையை அடைவர். ஆயின், ஐயோ! பேயினும் கொடிய அவர்கள் எவ்வாறு உய்வர்?

ஊழ்த்தல் - இறைச்சி. சாபம் - கடுந்தண்டனை. பரிப்பர் - அடைவர். பிழைத்தல் - உய்தல். ௫

### இரக்கமிலாது விலங்குக்கு இடர்விளைப்போன் நெஞ்சம் இரும்பு கல்

பற்றிநோய் செயப்பின் பற்றும் பதகரை வெரீஇவி லங்கு
சுற்றியே யோடுங் கத்தும் துன்புறும் வயிற்றைக் காலால்
எற்றிவீழ்ந் தெழும யங்கும் என்செயும் இவ்வி லங்கை
முற்றிய சினத்திற் பற்று மூர்க்கர்நெஞ் சிரும்போ கல்லோ.

*விலங்கினங்களைப் பிடித்துத் துன்புறுத்தத் தொடரும் அறிவிலாக் கொடியோரைக் கண்டு அவை நடுநடுங்கி ஓடும்; கதறும்; பொறுக்க முடியாத துன்பத்தை அடையும். வயிற்றில் காலால் அடித்துக் கீழ்விழும்; எழுந்து கலங்கும்; இவையன்றி வேறு என்னசெய்யும்? இத்தகைய விலங்கைச் சிறிதும் இரக்கமில்லாது முதிர்ந்த சினக் கொடுமையால் பற்றும் கொடியோர் நெஞ்சம் இரும்போ? கல்லோ?*

*பதகர் - அறிவிலார். மூர்க்கர் - கொடியோர்.* ௬

### ஊனுண்போர் நமைப்புலி உண்ண ஒப்புவரோ

எமக்குண விலங்கைப் புள்ளை
யிறைசெய்தா னெனக்கோன் றட்டுச்
சுமக்கரி தாக வுண்டு
பாழ்ங்குழி தூர்க்கா நின்றீர்
தமக்குண நும்மை யீசன்
சமைத்தனன் எனப்புல் சீயம்
அமர்க்கரி யாதி யும்மை
அடித்துணின் என்செய் வீரால்.

*எங்கட்கு உணவாக உண்ண விலங்கினங்களையும், பறவைகளையும் ஆண்டவன் படைத்தான் என்று பொருந்தாவுரை புகன்று, கொன்று சமைத்து வயிறு சுமக்க முடியாதபடி விலாப் புடைக்க உண்டு பாழான வயிற்றைத் தூர்க்கின்றவர்களே! தங்கட்கு உணவாக உண்ணும்படி உங்களைப் படைத்தான் பரமன் என்று புலி சிங்கம் காட்டுப்பன்றி முதலிய கொடு விலங்குகள் கூடி உங்களைக் கொன்று உண்ணுமானால் என்ன செய்வீர்கள்?*

*புல் - புலி. சீயம் - சிம்மம். அரி - காட்டுப்பன்றி.* எ

# அதி. சுரு—பன்னெறி

## தன்னைத்தானறிதல்

*பகைவன் சொல்லால் திருந்தும் பண்பு*

தன்னைத் தன்குணத் தன்மையைத் தேரவே
உன்னு கின்றவ னேங்கிய நட்பினோர்
நன்ன யச்சொல்நம் பாமல்நள் ளார்தினம்
பன்னு மாற்றங்கள் நம்பிற் பயனரோ.

*ஒருவன் தன்னுடைய மெய்யான நிலையையும் பண்பையும் ஆய்ந்துணர நினைத்தால், அவன் நண்பர் சொல்வதை நம்பாமல் பகைவர் சொல்லுவதை நம்புதல் வேண்டும். அப்பொழுதுதான் பயனடையலாம்.*

*குணம் - பண்பு. உன்னல் - நினைத்தல். நள்ளார் - பகைவர்.* க

## பெரியோரடக்கம்

*என்றும் பெரியோர் பணிந்தே சிறப்பர்*

தேமலி சுவைக்கனி பலசெ றிந்துயர்
காமரம் வளைதல்போற் கலையு ணர்ந்திடும்
தூமன மாட்சியோர் தொழுவர் யாரையும்
பாமர ரேவரையும் பணிந்தி டார்களே.

*தேன் நிறைந்த சுவைமிக்க பலவாய் அடர்ந்து அமைந்துள்ள சோலைமரங்கள் தாமாகவே வளையும் தன்மைபோல் எல்லாக் கலையும் கற்றுணர்ந்த நல்மனச் சான்றோர் யாவரையும் தொழுவர். அறிவில்லாத் தாழ்நிலையுடையோர் எவரையும் பணியார்.*

*செறிந்து - அடர்ந்து. கா - சோலை. தூ - நன்மை. பாமரர் - அறிவிலார்.* உ

## இதுவுமது

*ஒளிமணி கடலின் ஆழத் துறையும்*

குலமணி வெளியு றுதாழ்
   குரவையூ டொளித் திருக்குஞ்
சலமிசை யெவருங் காணச்
   சஞ்சரித் திடுந்து ரும்பு

கலமென மானம் பூண்ட
கலைவலோ ரடங்கி நிற்பர்
புலனில்சீத் தையர் தமைத்தாம்
புகழ்ந்தெங்குந் திரிவர் மாதோ.

முத்து பவழம் முதலிய உயர்ந்த மணிகள் கடலின்கண் ஆழத்தில் மறைந்திருக்கும். கடல்நீரின் மேல்மட்டத்தில் எல்லாருங் காணும்படி சிறுதுரும்பு அங்கும் இங்கும் அலையும். அவை போன்று, தன்மதிப்பே அணியெனக் கொண்ட கற்றறிவல்ல பெரியோர் அடங்கிநிற்பர். அறிவில்லாத கீழோர் தம்மைத் தாமே புகழ்ந்து எல்லா இடங்களிலும் மிக்க செருக்குடன் அலைவர்.

குலமணி - உயர்ந்த மணி. குரவை - கடல். சஞ்சரித்தல் - அலைதல். கலம் - அணி. மானம் - தன்மதிப்பு. சீத்தையர் - கீழோர். ௩

பேணுதல்

செலவிலா வரவாம் சிறப்புறப் பேணல்

எதிர்சென்று முகமன் கூறி யிருக்கையு நல்கி யுண்டே
அதிசய மெனவி னாவி யன்போடு முகம லர்ந்து
துதிபுரிந் துபச ரிக்குந் தொழிலினாற் செலவொன் றில்லை
யதிர்கட லுலகு ளோர்தம் அன்பெலாம் வரவா மாதோ.

ஒருவரைக் கண்டதும் இருக்கை எழுந்து, எதிர்சென்று நன்குக வரவேற்று, புகழ்மொழிந்து, இருககை மணை, தவிசுமுதலியன நல்கி, புதுமைநலம் முதலிய வினவி, அகத்தன்பும் முகமலர்ச்சியும், பொருந்த வாழ்த்திப் பேணும் பெருஞ் செயலால் ஒரு காசும் செலவாவதில்லை. அதன்மேலும், ஒலிக்கின்ற கடலாற் சூழப்பட்ட உலகில் வாழ்வோர் அன்பு முழுவதும் நிலைத்த வரவாகும்.

முகமன் - புகழ். அதிசயம் - புதுமை. துதி-வாழ்த்து. ச

நம்பி மோசம் போகாமை

கரவுரை கைக்கொள்ளல் கண்மூடிச் சுவர்ஏறல்

அத்திரு மூலகிற் சில்லோ
ரகத்தொன்றும் வாக்கி லொன்றும்
வைத்திதஞ் சொலலா லியாவும்
வனச்செவி யேற்ப தன்றிச்

சத்திய மேனக்கோண் டேகல்
சக்கினை மூடி நீண்ட
பித்திகை யேறிச் செல்லும்
பேதைமை நிகர்க்கு மாதோ.

கடலால் சூழப்பட்ட உலகத்தில் சிலர் உள்ளொன்று வைத்துப் புறமொன்று இனிமையுற உரைப்பர். அவர்கள் உரைப்பனவற்றை அழகிய காதால் கேட்பதல்லாமல் மெய்யென்று கொள்ளுதல் கூடாது. அப்படிக் கொண்டால் கண்களை மூடி உயரமான சுவர் மேல் ஏறிச்செல்லும் அறிவிலான் ஆவன்.

அத்தி - கடல். வனம் - அழகு. சக்கு - கண். பித்திகை - சுவர். ௫

## பகைவர்க்குதவி செய்தல்

ஒட்டார்க்குச் செய்யுதவி வீடு ஒட்டற்காம் வித்து

நள்ளுநர் தமக்கு மென்றும்
நன்றெமக் கியற்று வோர்க்கும்
உள்ளுவந் தியற்று கின்ற
வுதவிதா னரிய தன்று
புள்ளுவ மிழைக்கா நின்ற
போருந்தலர்க் காற்று நன்றி
விள்ளும்வீட் டின்பந் தன்னை
விளைக்கின்ற வித்தாம் நெஞ்சே.

எந்நாளும் தம்மைவிட்டு அகலாதிருக்கும் உணர்ச்சி ஒத்த நண்பர்கட்கும், நமக்கு நன்றே புரிந்து வரும் ஊராண்மையுள்ள உயர்ந்தோர்க்கும் நாம் மனமகிழ்ந்து செய்யும் உதவி அருமையுடையதொன்றாகாது. நமக்கு வஞ்சனையால் கேடு செய்யும் பகைவர்க்கு நன்மை செய்தலே மேலானது. அதுவே பிறவித் துன்பத்தைப் போக்கி, வீட்டின்பமாகிய பேரின்பப் பெருவாழ்வைத் தரும் உறுதியான வித்தாகும்.

நள்ளுநர் - நண்பர். புள்ளுவம் - வஞ்சனை. விள்ளும் - நீக்கும். சு

## உலோபர் பொருள்

*இவறியான் செல்வத்தை எல்லாரும் தமதென்பர்*

தமதென உலோப ரீட்டுந்
  தனத்தினைக் கொடுங்கோல் மன்னர்
எமதென இருப்பர் கள்வர்
  எமதென்பர் கிளைஞ ரெல்லாம்
உமதெம தெனவா திப்பர்
  உலகென தென்னும் யாமும்
எமதென்போம் பாரந் தாங்கி
  நலிவதென் பிசின ரம்மா.

இவறன்மையுடையார் தேடித் தொகுத்து வைத்துள்ள பொருளினைக் கொடுங்கோல் மன்னர் தமது என்று இருப்பர். கள்வர் "ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்" என்பதனால் தமதென்பர். உறவின் முறையாரும் ஈட்டியவன் மாண்டொழிந்தால் உமக்கும் நமக்கும் பங்காகும் என்று தமதென்பர். உலகமும் தமது என்னும். யாமும் நமது என்போம்* இந்நிலையில் அவ் இவறி வீண் சுமையாகப் பொருளைச் சுமந்து துன்புறுவது எதன்பொருட்டு?

பிசினர் - இவறன்மையுடையார்; இவறி - உலோபர். எ

## கொடுஞ்சொற் கூறாமை

*நல்லோர் இன்சொல் மழைபோல் நவில்வர்*

உருமைமின் னினைத்தன் பாற்கொண்
  டுதகமன் னுயிர்க்கு நல்குங்
கருமுகி லெனக்கண் ணாலென்
  காணினுங் கேட்பி னுஞ்சூழ்
பருவர லேதி லார்க்குப்
  பயக்கும்வன் சொல்லை நீத்து
மருவிய நலங் கலந்த
  வசனமே பகர்வர் நல்லோர்.

---

* எனதென. நாலடியார் ௨௭௬.

கைம்மாறு வேண்டாக் கடப்பாடுள்ள கரிய பெரிய மழை உயிர்களுக்குத் தீங்கு பயப்பதாகிய இடியையும் மின்னலையும் தன்னகத்தே வைத்துக்கொண்டு, நன்மை பயப்பதாகிய தண்ணீரையே தருகின்றது. அதுபோன்று நல்லவர்களும் கண்டதும் கேட்டதும் அவ்வாறே கூறிவிடாது, பிறர்க்குத் துன்பந்தரும் வன்சொல் நீக்கி நன்மைதரும் இன்சொல்லையே சொல்லுவர்.

உரும் - இடி. மின் - மின்னல். உதகம் - தண்ணீர். பருவரல் - துன்பம். வசனம் - சொல் அ

## பொழுதறிந்து புகறல்

கொள்வன கொண்டு கூறுவர் பொழுதறிந்து

நதிமுதற் புகுவ தெல்லா
நன்ககட் டிடைய டக்கும்
அதிர்கட லெனவு மீயா
ரருத்தமஞ் சிகையே போலும்
வதிசெவி நுழைவ தெல்லா
மனத்தினு ளடக்கித் தக்க
ததியறிந் துரைப்ப தன்றிச்
சகலர்க்கு முரையார் மிக்கோர்.

கடல் யாறு முதலியவற்றின் வழியாக வரும் நீர்களை எல்லாம் தன் அகத்தே அடக்கிவைத்துக்கொள்ளுவது போலவும், ஈயாதவர்களுடைய பணப்பெட்டி போலவும் செவிவழியாக நுழைவதை மனத்தகத்து அடக்கி வைத்துத் தக்க நேரம் தெரிந்து பெரியோர் சொல்வது அல்லாமல் எக்காலத்தும் எவர்க்கும் வீணுக எடுத்துரைக்கமாட்டார்.

நதி - யாறு. அகடு - வயிறு; நடுஇடம். அருத்தம் - பணம். மஞ்சிகை - பெட்டி. வதி - வழி. ததி - தக்கநேரம். சகலர்க்கும் - எல்லார்க்கும். மிக்கோர் - பெரியோர். க

## அகநிறைவு

ஆண்டவன் அருளியது பெரிதென மகிழ்க

பறவையும் விலங்குந் தீனி
பசித்தபின் தேடும் நாளைக்
குறையெனுங் கவலை யில்லை
யுணவின்றி யிறந்த தில்லை

வழியவ ரெம்மிற் பல்லோ
ரிவ்வையகத் துளர்தே வீந்த
சிறிதுமே பெரிதேன் றெண்ணிச்
சிந்தையே மகிழ்ந்து கொள்ளே.

மனமே! உலகில் பறவையும் விலங்கும் பசிவந்த பின்னரே இரைதேடும். இரை எடுத்தபின் நாளை வேண்டுமென்ற நினைப்போ சேர்த்து வையாதது குறையென்னுங் கவலையோ கொள்வதில்லை. அவைகள் உணவில்லாமலும் இறந்ததில்லை. நம்மைவிட எளியவர் பலர் இருக்கின்றார்கள். கடவுள் நமக் கருளிய பொருள்கள் சிறிதே எனினும் அவற்றையே பெரிதாக எண்ணி மகிழ்ச்சியுறுவாயாக.

தேவு - கடவுள். கO

## வேதாந்தம்

கற்பனை பத்தும் கைக்கொள்வோர் கடவுளைச் சார்வர்

ஈசனையே துதித்தலவன் திருநாமத்
தோடுதிருநா ளினைக்கொண் டாடல்
நேசமா ரனைதந்தை வணங்கல்கொலை
செய்யாமை நிதங்கா மத்தை
நாசமாக் குதல்களவு பொய்நீக்கல்
பிறனில்மது நயந்தி டாமை
மாசறுமிவ் விதிபத்தும் வேதாந்த
மெனக்கடவுள் வகுத்திட் டானல்.

கடவுள் தன் திருவடியை அடையும் மெய் அன்பர்கள் இன்றி யமையாது கைக்கொண்டொழுகி உய்யவேண்டி அருளிய கட்டளைகள் பத்தென்ப. அவை: கடவுளை வணங்கல், அவன் திருப்பெயரையும் திருநாளையும் தனித்தனி கொண்டாடுதல், அன்புமிக்க தாய்தந்தையரை வணங்குதல், கொலைசெய்யாதிருத் தல், பரத்தைமை கொள்ளாதிருத்தல், களவு செய்யாதிருத்தல், பொய் சொல்லாதிருத்தல், பிறன்மனை விழையாதிருத்தல், கள் ளுண்ணாதிருத்தல் என்பன. இவற்றையே மறைமுடிவாகிய வேதாந்தம் என்பர்.

காமம் - பரத்தைமை; தப்புநடை. கக

## இதுவுமது

எல்லா நெறியினும் சிறந்தது இறைநினைவே

முன்னவன் போற்பத முன்ன முன்னலுந்
தன்னுயி ரெனப்பல உயிரைத் தாங்கலும்
பன்னெறி யாவினும் பளகி லாவரு
நன்னெறி யாமென நவிலும் வேதமே.

உலகுயிர்க்கு ஆதியாயுள்ள முழுமுதல் கடவுளின் பொன் போலும் திருவடிகளை நினைவு சொல் செயல் இவற்றைத்தொழில் படுத்தத் தொடங்குங்கால் முதற்கண் நினைத்துத் தொடங்குத லும், எழுவகைப் பகுப்பில் காணப்பெறும் எல்லாவுயிர்களையும் தன் உயிர்போல் பேணிக் காத்தலும், பலவாகச் சொல்லப் பெறும் ஒழுக்க நெறிகளுள் எவ்வகைக் குற்றமுமில்லாத நல் லொழுக்க வழியாம் என்று மறையே எடுத்து மொழியும்.

முன்னம் - முதற்கண். பளகு - குற்றம். நவிலும் - எடுத்து மொழியும். வேதம் - மறை. ௧௨

## வாழி

ஆதிநூ லென்றும் வாழ்க அநுதினம் தருமம் வாழ்க
வேதியர் நாளும் வாழ்க மெய்யடி யார்கள் வாழ்க
நீதிலாங் கிலேய மன்னர் செங்கோலெஞ் ஞான்றும் வாழ்க
நீதிநூல் படிப்போர் கேட்போர் நித்தமும் வாழ்க மாதோ.

'வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்' திருவுள்ளங் கொண்டு அறவோரின் உள்நின்றுணர்த்த அவர்கள் வெளிப்பட மொழிந்தருளிய முதல்நூல் எந்நாளும் வாழ்க. அந் நூலானும் உலகோர் அடிப்பட்டு ஒழுகிவரும் ஒழுக்கத்தானும் நின்று நிலவும் நல்லறம் நாளும் வாழ்க. அந்நூலையும் ஒழுக்கத்தையும் மேற் கொண்டு உணர்ந்தும் ஒழுகியும், உணர்த்தியும் ஒழுக்கியும் வரும் மறையவர் எந்நாளும் வாழ்க. உலகம் பசி பிணியற்று வசியும் வளனும் செறிந்து நலிவின்றி நாளும் நலமுறவாழ 'முறை செய்து காப்பாற்றும் மன்னவன்' நிறைவுடன் வாழ்க. பத்தர் இனத்துப் பித்தாய் ஒழுகும் மெய்யடியார்கள் வாழ்க. இந்நீதி நூலை முறையாக அன்புடன் நாளும் ஓதுவோர் கேட்போர் ஒழுகுவோர் எந்நாளும் வாழ்க. ௧௩

# இணைப்பு

## பின்கிடைத்த வேறு படிகளில் காணப்பெறும் பாடல்கள்

### பாயிரம்

*பாட்டறு நூறும் பகர்ந்தேன் எனக்கே*

தனக்குத்தா ஞெருவன் போதம்
சாற்றிடிற் குறைபி றர்க்கேன்
எனக்கவிர் நீதி நூறு
பத்துநான் கதிகா ரங்கள்
இனக்கவி யறுநூ றுய
இனையநூ லயலார்க் கன்றேன்
மனக்கியான் உணர்த்து கின்றேன்
மற்றெனை முனிவர் யாரே.

*ஒருவன் தானே திருந்தி நன்னெறிச் செல்லவேண்டும். அதன் பொருட்டுத் தனக்குத்தானே அறிவு கூறிக்கொள்கின்றான்; அதனால், பிறர்க்கு உண்டாகும் குறைவு ஒன்றுமின்று. அதுபோல், என் அகவிருள் அகன்று அறிவொளி விளங்குதற்குப் படலம் (அதிகாரம்) நாற்பத்துநான்கும், செய்யுள் அறுநூறும் சேர்ந்த இந் நீதிநூலைக் கூறினேன். அயலவர் பொருட்டு அன்று இந் நூல்; அதனால், என்னை முனிபவர் ஒருவரும் இலர்.*

*போதம் - அறிவு. அவிர் - விளக்கம்.* க

*இருள்வேட்டு வெண்மையை ஏசலென் பாற்சினம்*

மண்கவி மாந்தர் யாரு மறைவின்றி யுணரும் வண்ணம்
வெண்கவி புனைந்தே னென்னை வெகுளுத லிருளை வேட்டு
விண்கவி மதியைப் பாலை வெள்ளியை வெண்ப டாத்தைக்
கண்கவி வயிர முத்தைக் கவுரமென் றுடற்றல் போலும்.

*நிலவுலகத்துச் சூழ்ந்து வாழும் மக்கள் எல்லாரும் வெளிப்படையாக உணரும்படி இந் நீதிநூலை எளிய செய்யுட்களால் பாடினேன். அதனால், என்னை யாரும் வெகுளார். யாரவது*

வெகுள்வாராஞல், அதற்குக்காரணம் அவர்கள் அறமுறையை விரும்பாமையாகும். அது பெரும்பாலும் தீமைக்கே துணையாம். இருளை விரும்பி அதற்கு மாருகிய வெண்மையான வான்ஊர் திங்களை, இனிய ஆன்பாலை, ஒளிசேர் வெள்ளியை, தூய வெள்ளாடையை, கண்ணைப்பறிக்கும் வயிரத்தை, தண்ணென இருக்கும் முத்தை வெண்மையென்று வெறுத்துப் பழிப்பதுபோல் ஆகும்.

கவி - சூழ். மாந்தர் - மக்கள். வெண்கவி - வெள்ளைப்பாட்டு; எளிதில் விளங்கும் பாட்டு. படாம்-ஆடை. கவுரம்-வெண்மை. உ

மாசகற்றி மாண்புறுத்தல் மதியுடையார் மாண்பே

வழுவொழித் தாளன் மேலோர் வழக்கென லாலிந் நூலைத்
தழுவுமி னெவன் ஞேரைத் தாழ்ந்தி டன் மிகைகீ ழோரைத்
தொழுதிரப் பினுமா சொன்றே தூற்றுவ ரவரை வாளா
அழுதிரத் தலிற்பே றில்லை யாதலின் மௌன நன்ருல்.

'ஆன்றவிந்து அடங்கிய சான்ருேர்' பிறர்நூற் குற்றம் போக்கிப் பெருமைப்படுத்திக் கைக்கொள்வது இயல்பு. ஆதலால், அவர்களிடம் இந்நூலை ஆதரியுங்கள் என்று வேண்டிக் கொள்ளுதல் குற்றமாகும். குற்றமே தூற்றும் சிற்றினத்தாராகிய கீழோரிடம் தொழுதும் அழுதும் இரப்பதாற் பயன்ஒன்றும் இன்று. ஆதலின், அவரிடம் சிவனே என்று, இருப்பது சிறப்பு.

வழு - குற்றம். வழக்கு - இயல்பு. மிகை - குற்றம் மாசு-குற்றம். பேறு - பயன். மௌனம் - வாய் பேசாமை; சிவனே என்றிருத்தல். ங

நூற்பொருள் வைப்பால் விழுப்பொருள் நுகர்வர்

தான்கண்ட நிட்சே பத்தைத்
தமர்க்கெலாம் அறிவிப் பான்போல்
வான்கண்ட இங்கி லீயம்
மருவுபல் நூற்பூ மிக்குள்
யான்கண்ட நிட்சே பத்தை
யாவரும் தெரிவான் செய்தேன்
தேன்கண்ட இந்நூ லீட்டல்
செய்குவார் உய்கு வாரே.

புதையலைக் கண்டவன் தன்னைச்சார்ந்தார்க்கு எல்லாம் அறிவிப்பன். அதுபோல், யான் உலகில் செந்தமிழ்ச் செழுநூல் பலவற்றினும், ஆங்கில நூலினும் கண்ட உண்மைப் புதையலை எல்லாரும் உணரும்படி எளிதாகச் செய்தேன். அத்தகைய இனிய இந்நூலைக் கற்று ஒழுகுபவர் நன்னெறிச்சென்று இன்புற்று ஈடேறுவர்.

இங்கிலீயம் - ஆங்கிலநூல். நிட்சேபம் - புதையல். தேன்- இனிமை. ஈட்டல் - கற்றல். உய்குவார் - ஈடேறுவர். ௬௭

---

## அதி. க—தெய்வமுண்டெனல்

### கற்றூர் உற்றுரை கைக்கொளல் கடமை

நீள்வியன் உலக மெங்கும் நிகழ்வன பலவும் பாரார்
கேள்வியின் அறிவார் கற்ற கேள்வியுங் கேளவி யன்றே
ஆள்வினை யுடையா னுண்டேன் றருமதம் யாவும் கூறும்
கோள்வினை கோளு றரைக் கோள்வினை கோளு றுங்காண்.

பரந்த உலகம் எங்கும் நிகழும் செய்திகளை நேரிற் காணாதவரும் செய்தித்தாள் வழியாகக் கற்றுணர்ந்து நம்புகின்றனர். நூல் வழியாகக் கற்கும் கல்வியும் ஒருவகைக் கேள்வியேயாகும். உலகு உயிர் அனைத்தையும் அருளுடன் ஆளும் ஆண்டவனாகிய உடையான் ஒருவன் உண்டென்று எல்லா நெறியினரும் நூல் வாயிலாக நுவல்கின்றனர். அவ்வாய்மைக் கொள்கையை ஏற்றுக் கொள்ளாதவர் தீமைக்கு அஞ்சார். ஏற்றுக்கொள்ளாமையே தீமையாகும். ஆதலின், அவர்களைத் துன்பங்கள் பொருந்தி மீளா.

வியன் உலகம் - பரந்த உலகம். கேள்வி - கல்வி. கோள் வினை-கைக்கொள்ளும் உறுதி. கோளுறார் - ஏற்றுக்கொள்ளார். கோள்வினை - துன்பங்கள். கோளுறும் - துன்புறுத்தும். க

### கடவுளில் லென்போர் இல்லா ராகியே கழிவர்

இவரிய தருவைக் கைவிட் டிகழ்ந்துகீழ் வீழ்வார் போலும்
இவவுறத் தந்தாய் வந்தி யேன்பவர் போலும் பைங்கூழ்
அவனியை நீத்தல் போலும் அகிலமாள் கோவைத் தேவைத்
தவநிதி யினையின் றேன்போர் தாமுமே யிலரா வாரே.

கால்மிதியும் கைப்பிடியுமாகப் பெருமரத்தின் "நுனிக் கொம்பர் ஏறினவன்" அம்மரத்தினை இகழின் கீழே வீழ்ந்து மாளுவன். அதுபோலவும் தன்னைப்பெற்ற தாய் மகப்பேறற்ற மலடி எனச் சிறிதும் உட்கும் நாணும் இன்றி உரைப்பார் போலவும், தன் வளமுறு வாழ்வுக்கு நிலைக்களமான நிலத்தை நீங்கும் நெற்பயிர் போலவும், முறையே தாழ்வெய்தல், மெய்மறுத்தல், பயனிழத்தல் ஆகிய பரிவு எய்தி வருந்துவர்; யாவரென்றால், அனைத்துலகும் உடலும் உண்பொருளும் படைத்தருளிக் காக்கும் முழுமுதற் பெரும்பொருளை இல்லையென்று நல்லார்முன் நாணுதுரைக்கும் நயமிலிகள். அம்மட்டோ! "செய்ந்நன்றி கோறலாம்" தீமையால் அவரும் இலராவர்.

இவர்தல் - ஏறுதல். தரு - மரம். வந்தி - மலடி பைங்கூழ் - நெற்பயிர். தவநிதி - கடவுள். உ

---

## அதி. உ—தெய்வத்தன்மையும் வாழ்த்தும்

### கண்முதல் உறுப்பெலாம் தந்தவன் கடவுள்

அண்டபே ரண்ட மெல்லா மளந்தறி விழியுங் கந்தங்
கொண்டறி மூக்கு மோசை கொழுஞ்சுவை பரிச மெல்லாங்
கண்டறி செவிநா மெய்யுங் கழறுமைம் புலன்கட் கேன்ற
பண்டமென் பனவ னைத்தும் பண்ணியோன் திண்ணி யோனே.

முட்டை வடிவாகத்தோன்றும் அளவில்லாத அண்டங்களின் இயல்பனைத்தும் கருவிகொண்டு அளவிட்டறியும் ஆற்றல்வாய்ந்த கண்ணும், மறைப்பினும் உள்ளவாறு பொருட்டன்மையை மணத்தின் வழி உணரும் மூக்கும், ஓசை யுணரும் செவியும், சுவை யுணரும் நாக்கும், ஊறு உணரும் மெய்யும் என்று சொல்லப் படுகின்ற ஐம்புலன் நுகர்ச்சிக்கு வேண்டும் பொருள்களனைத்தும் படைத்தருளின பழம்பொருள் தானே விளங்கும் அறிவாற்றல் அன்பின் திண்மையுடையது.

ஊறு - தொட்டாலுணர்வது; பரிசம். கழறும் - சொல்லுகின்ற.
க

### உலகுடல் உறுப்புழைப்பு உதவினோன் கடவுள்

மன்னுயிர்க் கிசைந்த பூத வகைகளு மவைக் கிசைந்த
கொன்னுட லுமவ் வங்கங் குனிந்திட நிமிரச் செல்லத்
துன்னுபு தங்க வோடத் தொழில்பல இயற்றத் தக்க
தென்னுறுப் புகளுஞ் செய்தோன் தேவனே யாவ னேயோ.

அழிவில்லாத உயிர்கள் அருள்பெற்றுய்ந்து வாழ்தற் பொருட்டுப் பொருத்தமான ஐம்பூதமும், அவற்றின் தொடர்பான வலிவுள்ள உடலும், குனியவும் நிமிரவும், செல்லவும் தங்கவும், ஓடவும் உழைக்கவும், வாய்ப்பான அழகிய உறுப்புகளும் படைத்தருளினவன் எல்லா வாற்றலும் இயல்பாகவே வாய்ந்த இறைவனே ஆவன்.

மன் - நிலைபேறு; அழிவின்மை. பூதம் - பருப்பொருள். ஐம்பூதம் - நிலம், நீர், நெருப்பு, காற்று, விசும்பு என்பன. தென் - அழகு. உ

என்றும் புதிதாய் உலகியற்றினோன் கடவுள்

என்றுமே பழமை யெய்தா திலகுல கமும்யா வுள்ளும்
துன்றிய தழலும் யாங்கண் தோண்டினு மூறு நீரும்
ஒன்றினை யசைக்கின் மேவு முலவையுங் குலவி யெங்கும்
நின்றவந் தரமுந் தந்த நிராமயற் கேவன்கைம் மாறே.

பலகாலங்கள் செல்லினும் பழமை எய்தாமல் புதுமையாகவே விளங்கும் உலகமும், எல்லாப்பொருள்களுள்ளும செறிந்திருக்கும் தீயும், தோண்டிய இடங்களில் வற்றாது ஊறும் நீரும், ஒரு பொருளை அசைத்த காலத்து வெளிப்படுங்காற்றும், இவற்றுக்கெல்லாம் இடங்கொடுத்துக்கொண்டிருக்கும் வானமும் அருளால் அளித்துக் காக்கும் மலமகன்ற முழுமுதற்குச் செய்யும் கைம்மாறு என்னவுள்ளது? அன்பால் அகங்குழைந்து அவனடி வாழ்த்தி இடையறாது நினைந்து அருள்வழியில் நிற்றலே உள்ளதென்பது குறிப்பு.

இலகல் - விளங்கல். துன்றிய - செறிந்த; உள்ளடங்கிய. உலவை - காற்று. அந்தரம் - வானம். நிராமயன் - மனமில்லாதவன். கைம்மாறு - ஈடு. ௩

உயிர்கனி காய்காலம் உதவினோன் கடவுள்

வேறுவே றுன சீவ விகற்பமு நிறம்பல் வாய்ந்து
நாறுபூ இலைகா யார்ந்த நளிர்தரு வினமுங் குன்றும்
ஊறுநீர்த் தொகையுஞ் சீவ ருய்ந்திடக் கார்முன் னாக
மாறுகா லப்ப குப்பும் வகுப்பவன் சகப்பி ரானல்.

பல்வேறுவகையான அளவிலா உயிர்க்கிழவாராகிய ஆன்மாக்களும், அவை உய்ய பல நிறம் வாய்ந்த மணமுள்ள பூ இலை காய் கனி உதவும் நெருங்கிய பல பயன்மரங்களும், வானளாவிய வுள

மிக்க மலைகளும், நீர்நிலைகளும், கார்கால முதலாக மாறி மாறி வரும் அறுவகைப் பருவங்களும், அமைத்து அருளினவன் உலக முதல்வன்.

சீவவிகற்பம்-உயிர்வகை. தரு-பயன்மரம். அறுவகைப்பருவம் - கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பன. இவற்றுக்குரிய மாதங்கள் முறையே ஆவணி முதலாக இவ்விரண்டாகும். சகம்-உலகம். பிரான்-முதல்வன். ச

ஒன்பான் துளையுடலில் உயிர் நிறுத்தோன் கடவுள்

காற்றினைப் பலது வாரக் கடத்தினு ளடைத்தல் போல
ஏற்றிடு நவது வாரம் எண்ணிலா மயிர்த்து வாரம்
தோற்றிய சடக்க டத்துள் துன்னுயிர்க் காற்ற டைத்து
நாற்றிசை மிசைப்பல் லாண்டு நடத்துவோன் திடத்தி னனே.

பல துளையுள்ள குடத்தினுள் காற்றினையடைத்துத் தங்க வைப்பதுபோன்ற, ஒன்பது பெருந்துளையும் அளவில்லாத மயிர்த் துளையும் பொருந்திய அறிவில் உடலகத்துச் சார்ந்ததன் தன்மையாகக் கலந்திருக்கும் இயல்புவாய்ந்த உயிர்க்காற்றை யடைத்துப் பல்லாண்டுகளாக நாற்புலத்தும் நலம்பெற நடத்திவைத்தருள்வோன் முழுவலி படைத்த முதல்வனுவன்

பலதுவாரம்-பல துளை. கடம்-குடம். சடம்-அறிவில்லது. நாற்றிசை - நாற்புலம்; கிழக்கு மேற்கு வடக்கு தெற்கு. ரு

என்பு இறைச்சி குருதியுடல் இயற்றினேன் கடவுள்

கோன்புலாற் சுவரை நீராங்
குருதிதோய்த் தெழீஇச் சுவேத
என்பெனுங் கழிப ரப்பி
யிரச்சமா நரம்பால் வீக்கி
ஒன்பது வாயில் விட்டிங்
குரியெனுங் கூரை வேய்ந்து
மன்பெற வீடோன் றன்மா
மன்பெற விசைத்தான் மன்னே.

முழுமுதல்தலைவன் வலிமைமிக்க இறைச்சியென்னும் மண்ணைக் குருதியாகிய நீரால் குழைத்து எழுப்பி வெண்மையான எலும்பென்னும் கழிகளைப் பரப்பி நரம்பாகிய கயிற்றால் கட்டி

ஒன்பது வாயில்கள் அமைத்துத் தோலாகிய கூரைவேய்ந்து ஆவிக்குப் பெருமை எய்தும்படி யாக்கை ஒன்று அமைத்தருளினன்.

கொன் - வலிமை குருதி - இரத்தம். எழீஇ - எழுப்பி. ஒன்பது வாயில் - கண்ணிரண்டு, காதிரண்டு, மூக்கிரண்டு, வாய் ஒன்று, எருவாய் ஒன்று, கருவாய் ஒன்று. உரி-தோல். சு

கருவின்றி உலகாக்கிக் காப்போன் கடவுள்

மணலொன்றன் மலைசெய் வோனை
நோக்கிடின் மாவி யப்பாம்
அணுவொன்று மில்லா தண்ட
மனைத்துஞ்செய் திருந்தே கங்கள்
துணையில்சுக் கிலவி ரத்தச்
சிறுதுளி யான மைத்துப்
புணர்சிறு வித்தாற் பார
மரமெலாம் புரிந்தோன் தேவே.

மணலைக்கொண்டு மலையொன்று ஒருவன் உண்டாக்குவானு யின் பெரு வியப்புக்கொள்வோம். அணுவாம் பருப்பொருள் ஏதுமிலாது அளவிலாத உலகங்களையும், ஒப்பில்லாத வெண்ணீர் செந்நீரால் ஆகும் எறும்பு முதல் யானை ஈறுகிய பல்வேறு உடம்புகளையும், நுண்ணிய விதையால் பெரிய ஆலமரம் போன்ற பல மரங்களையும் திருவுள்ளத்தால் படைத்தருளிய செம்பொருள் முழுமுதல் தெய்வமாகும்.

வியப்பு-மருட்சி; அதிசயம். துணையில் - ஒப்பில்லாத. எ

ஞாயிற்றை நடுநிலையில் நாட்டினோன் கடவுள்

பகல்புவி யினும்பல் கோடி பங்குமிக் கதுவாம் பூமிக்கு
இகலணித் தாயின் யாவும் எரிந்துபோஞ் சேணு யிற்பார்
தகவொளி பெறுதேன் றன்னித் தக்ககண் ணிறுவிச் சுற்றும்
நிகழ்புவ னங்கள் காந்தி யுறச்செய்தோ னிகரி லானல்.

ஞாயிறு உலகத்தைவிடப் பலகோடி மடங்கு பெரியது; அஃது, உலகத்துக்கு நெருங்கியிருக்குமாயின் உலகம் எரிந்து பாழாய்ப்போகும். தொலைவிலிருப்பின் அதன் ஒளியும் சூடும் பெறாது உலகம் நிலைபேறின்றிக் கெடும். இவற்றைத் திருவுள்

ளங்கொண்டு பொருத்தமான இடத்து அஞ்ஞாயிற்றை அமைத்து எல்லா வுலகமும் ஒளியும் சூடும் எய்தி அளியொடும் வாழ அருளினவன் ஒப்பில்லா முழுமுதல்வனாவன்.

பகல் - ஞாயிறு. அணித்து - நெருக்கம். சேண் - தொலைவு. பார் - உலகம். உன்னி - திருவுள்ளங்கொண்டு. நிகரிலான் - ஒப்பில்லான். அ

திங்களைத் திகழ்வுறச் செய்தோன் கடவுள்

மதிபுவி யெனவோர் கோள வடிவமா மஃது காந்தி
கதிரிடம் பெறுமச் சோமன் புவியைச்சுற் றுங்கா லென்றூழ்க்கு
எதிருறு தொளித்த லாலே யிருளுறு மீண்டுஞ் சோதி
பதிவுறு மினைய திங்கள் பண்ணினோன் விண்ணின் கோனே.

திங்களாகிய அம்புலி உலகம்போன்ற ஓர் உண்டை வடிவமான பொருள். அது, ஞாயிற்றினிடம் ஒளிபெற்று நமக்கு நிலவொளி தருகின்றது. அஃது உலகத்தைச் சுற்றிவருகின்றது. அப்படி வரும்பொழுது ஞாயிற்றின் நேர்வராமல் மறையும் காலமே உவா நாளாகும். நேர்படும்பொழுது மீண்டும் ஒளி பெறும். இத்தகைய திங்களைப் படைத்தருளினோன் விண்ணவர்க்கும் மண்ணவர்க்கும் விழுமிய தலைவனாவன்.

மதி - திங்கள். புவி - உலகம். கோளம் - உண்டை. காந்தி - ஒளி. என்றூழ் - ஞாயிறு. உவா - அமாவாசை. கூ

உலகுருண்டு சுற்றக் காலம் உறுவித்தோன் கடவுள்

பாரிரு புறத்துஞ் சோதி படவப் பார்தினம் புரண்டு
சூரியற் கெதிராய்ப் பின்னும் சுழன்றுவிண் சென்றே ராண்டிற்
பேரிர வியையே சுற்றக் காலமே தங்க ளாமிச்
சாரியல் பார்செய் தோன்தாள் தலையுறார் நிலையு றாரே.

உலகத்தின் மேலும் கீழுமாகிய இரண்டு பக்கத்தும் ஞாயிற்றின் ஒளி படும்படி அவ்வுலகம் நாள்தோறும் உருண்டு ஞாயிற்றின்முன் வருகின்றது. மேலும், அஞ்ஞாயிற்றைச் சுற்றிக்கொண்டும் வருகின்றது. அங்ஙனஞ் சுற்ற ஓர் யாண்டாகும். இதனால் நாளும் திங்களும் பருவமும் யாண்டும் வரையறுத்து வழங்கிவருகின்றோம். இவ்வாறு அருளிச்செய்த கடவுளின் திருவடிகளைத் தலையிற் கொள்ளாதார், பேரா இயற்கைப் பேரின்பப் பெருவாழ்வெய்திப் பிறவா நிலையுறார். ௧0

பார் - உலகம். சோதி - ஒளி. தினம் - நாள். புரண்டு - உருண்டு. சுழன்று - சுற்றி. தாள் - திருவடி. தலையுறல் - இரண்டறக் கலத்தல். கo

வளப்பமொடு மென்மை வன்மை நிலம் வகுத்தோன் கடவுள்

தருவின்வேர் பயிர்வேருட்சென் றுலாவமென் மையதாய்த் தங்கும்
இருமலை சீவ ரில்லம் யாவுமுள் ளழுந்தா வண்ணம்
ஒருவில்வன் மையதா யெண்ணி லாண்டோழியினும்வளப்ப
மருவுபு பலன ளிக்கும் வையமை யன்செய் தாளுல்.

நிலம், பெருமரங்கள் சிறிய செடி கொடிகள் முதலியவற்றின் வேர்கள் தன்னகத்து எளிதாகப் புகுந்து நிலைத்து நிற்கும்படி மென்மையாகவும், வானளாவிய பெரிய மலைகளும், பல்வேறு உயிரினங்களும், வீடுகளும் தன் மேற்புறத்து உள் அமிழ்ந்து விடாது நிலைத்திருக்கத்தக்க வன்மையாகவும், அளவில் காலமாயினும் மேலும் மேலும் விளைபயன் தரக்கூடியதாகவும், இருக்கின்றது. அத்தகைய வாய்ப்புடன் அந் நிலத்தைப் படைத்தவன் தனக்குவமையில்லாத் தலைவன் ஆவன்.

தரு - மரம். மென்மை - இளக்கம். இரு - பெரிய. எண்ணில் - அளவில்லாத. கக

கரைதாங்க லின்றிமழை கடல்தந்தோன் கடவுள்

நீரினைக் கலங்க ளின்றி நிறுத்தல்போ னீர்தி ரண்ட
காரினைக் கீழ்வி ழாது ககனத்தி னிறுவி நொய்ய
மாரியே பெய்யச் செய்து மறித்திடு கரையொன் றின்றி
வாரியை நிறுத்து மின்ப வாரியைச் சாராய் நெஞ்சே.

தண்ணீரை ஏனம் ஏதும் இன்றி வெறுவெளியில் நிறுத்துவதுபோல் நீர் நிறைந்த மேகத்தை ஒருமிக்கக் கீழ் விழாதபடி வானத்தின்கண் நிறுத்திச் சிறு சிறு துளியாகப் பெய்யச் செய்வதும், ஆழ நீளம் அகலம் அளவிடப்படாத கடலைக் கரையின்றி எல்லை கடவாது நிற்கச் செய்வதும் ஆகிய பேராற்றல்வாய்ந்த பெரும்பொருள் பேரின்பக் கடலாகிய ஆண்டவனே. மனமே! அவ் ஆண்டவனைச் 'சார்தரும் நோய் சாரா' திருத்தற்பொருட்டு அன்புடன் மறவா நினைவுடன் உறவாய்ச் சார்வாயாக.

கலம் - ஏனம்; பாத்திரம். திரண்ட - நிறைந்த. ககனம் - வானம். நொய்ய - சிறிய. மாரி - மழை. வாரி - கடல். கஉ

உயிர்வாழ் காற்றிங் குதவினோன் கடவுள்

மாதலஞ் சுழல லாலும் மாமதி சுழல லாலும்
ஆதவன் கிரணத் தாலும் அந்தர மசைவுற் றுகும்
ஊதலஃ தின்றேற் சீவ ருய்ந்திடார் பெருங்கால் மாக
மீதமர் விடத்தை நீக்கும் வியந்திக்கால் தந்தோன் யாரே.

பெரிய நிலவுருண்டை இடைவிடாது சுற்றுவதாலும், அழகிய திங்களும் அப்படியே சுற்றுவதாலும், ஞாயிற்றின் கதிர்களாலும் பெரிய அசைவு உண்டாகின்றது. அவ்வசைவினால் காற்றுண்டாகின்றது. அக் காற்று இல்வழி ஓர் அறிவு முதல் ஆறறிவு ஈறாகச் சொல்லப்படும் எல்லா உயிரினங்களும் வாழ்தல் முடியாது. விசும்பில் நிறைந்துள்ள வாலாமையாகிய நஞ்சினைப் போக்குவதும் அக்காற்றேயாம். உயிர்கள் வாழும்படி அப்பெருங் காற்றினை எல்லாரும் வியப்புறத் தந்தருளினோன் முழுமுதல்வனுவன்.

மாதலம்-பெரு நிலம். சுழலல் - சுற்றல். ஆதவன் - ஞாயிறு; கதிரவன். ஊதல் - காற்று. சீவர் - உயிர்கள். மாகம்-விசும்பு. கால் - காற்று. ௧௩

இடிமின்னல் நஞ்சகற்றி மழையீந்தோன் கடவுள்

அகலிடத் திருந்து பன்னீ ராவியைப் பானு கையாற்
ககனமீ தீர்க்கக் காராங் கடினத்தால் இடியாம் பல்கார்
இகலோடு பொருதமின்னும் இடித்தல்வான் விடம கற்றும்
சகலமு முய்யப் பெய்யுஞ் சலதர மீந்தோன் யாரே.

விரிந்த இடத்திலுள்ள நீர்நிலைகள் பலவற்றினின்று நீராவியை ஞாயிற்றின் கதிர்க் கையால் வானத்தில் இழுத்தவுடன் மழையாம். அது செறியச் செறிய ஒன்றோடொன்று மோதலால் இடியு மின்னலும் உண்டாகின்றன. இடியினால் வானத்திலுள்ள நச்சுக் காற்றுக்கள் அகலும். எல்லாவுயிர்களும் வாழும்படி மழை பெய்ய அருளுவோன் யாவன்? அவனே முழுமுதற் கடவுள்.

பானு-ஞாயிறு. விடம்-நஞ்சு. சலதரம்-முகில்; மழை. ௧௪

தீயும் காற்றும் சீர்பெற அமைத்தோன் தேவன்

வாயுவல் விசையோ டெய்தின் மகியினோ டுயிர்கள் யாவும்
வீயுமென் றக்கால் மெல்ல வீசச்செய் துலகெங் குஞ்சார்

தேயுமே லெழுந்து நிற்கிற் சேகமுய்யா தேனவத் தீயை
வேயும்பல் பொருட்குள் வைத்து வேட்டவாறளிப்போன்யாரோ.

*காற்று கடுமையாக வீசினால் உலகத்தோடு உயிர்கள் எல்லாம் அழிவுபாடு எய்துமென்று அக் காற்றை மெல்லென வீசச் செய்தும், தீ மேலோங்கி நிற்குமானாலும் உலகம் அழிந்துபடும்; அங்ஙனம் தீ மேலோங்கவொட்டாது எல்லாப் பொருள்களிலும் அடங்கி நிற்குமாறுசெய்து வேண்டும்போது வெளிப்படத் தந்தும் உதவுகின்றவன் யாவன்? அவனே கடவுளாவன்.*

*வாயு - காற்று. வல்விசை - கடுமை. தேயு - தீ. செகம் - உலகம். வேட்டவாறு - வேண்டிய அளவு. அளிப்போன் - உதவுவோன்.* கரு

மனத்துக்கு வரம்பில்வலி வகுத்தோன் கடவுள்

ககனமண் சராச ரங்கள் கலைகளுன் னுள்ள டக்கிப்
பகரொரு நொடிக்கு ளண்டப் பரப்பெலா முலாவித் துன்பஞ்
சுகமற மறமோர்ந் தாவி தூங்கினுந் தூங்கா தோங்கி
அகலுறு மூன்னைச் செய்தோ னவன்கோன்மற் றெவன்
கோனெஞ்சே.

*மனமே! விண்ணும், மண்ணும், இயங்குதிணை நிலைத்திணைப் பொருள்களும், எல்லையில்லாத கலைகளும் உன்னகத்தடங்க நொடியளவுக்குள் பலகோடி அண்டங்களைச் சுற்றித் துன்பம், இன்பம், புண்ணியம், பாவம் இவற்றை ஆய்ந்து, உயிர் உறங்கினும் நீ உறங்காது எல்லா இடங்களையும் கடந்து வரும் ஆற்றலை உனக்குத் தந்தவன் யாவன்? அவனே கடவுள்.*

*சரம் - இயங்குதிணைப்பொருள். அசரம் - நிலைத்திணைப் பொருள். அறம் - புண்ணியம். மறம் - பாவம். அகலுறல் - கடத்தல்.* கசு

மயிர்தோல் வலுவாய் வகுத்தோன் கடவுள்

அறிவிலா விலங்கு போர்வை
யகஞ்செய வறியா தென்னச்
சேறிமயிர் பெருந்தோல் செய்து
சீதவுட் டணநோய் தீர்த்தான்

மறிகவ சங்க ளில்லம்
　　வனைந்திட வறிந்த மாக்கள்
பொறியுடல் களைமென் றேலாற்
　　போர்த்தினேன் சீர்த்தி யோனே.

பகுத்தறிவுப் பண்பாம் கருத்தில்லாத விலங்கு முதலிய சிற்றுயிர்கள் குளிர் தாங்கும் போர்வையும், பற்றி வாழும் குடிசையும் அமைத்துக்கொள்ளும் ஆற்றலற்றவை. ஆகவே அவற்றிற்கு மயிர் அடர்ந்த தோல் போர்வை அமைத்துத் தட்ப வெப்பநோய் நீங்கி வாழத் துணைபுரிந்தனன். ஆறறிவு வாய்ந்த மக்கட்கு வேண்டுங் காலத்துப் போர்வை போர்த்து மாட மாளிகை யமைத்து மனைவி மக்கள் விருந்து சுற்றமுடன் வாழ்வதற்கேற்ற உடலுறுப்பு உணர்வுகளை உதவினன். அத்தகையோனே சிறந்த கடவுளாவன்.

சீதம் - தட்பம். உட்டணம் - வெப்பம். கவசம் - போர்வை இல்லம் - வீடு. சீர்த்தி - சிறப்பு.
கஎ

உறுப்பினில் படைவலி உறுத்தினோன் கடவுள்

ஆயுதஞ் செய வறிந்த நரர்மெய்யி லாயு தங்கள்
தோய்தரச் செய்யா னன்ன தொழிலிலா விலங்கின் பல்லிற்
சாய்தரு முகிரின் மூக்கிற் றலையினிற் காலில் வாலில்
எய்தரு படைக்க லங்க ளியற்றினோன் வயத்தி னோனே.

தொழிற் கருவியும் படைக் கருவியும் தோமின்றிச் செய அறிந்த மக்கட்கு அவர்தம் உடம்பில் அரிமா போன்ற விலங்கினங்களுக்கு அமைத்தது போன்று கூரிய நகம், பல், கொம்பு, முதலிய எதும் அமைத்திலன். அச் சிற்றுயிர்களுக்குப் பல்லில், வளைவான நகங்களில், கூரிய மூக்கில், தலையில், கால்களில், வாலில் பொருத்தமான படைக் கலங்களை அமைத்தருளினன். அவனே தன்வயம் வாய்ந்த கடவுளாவன்.

ஆயுதம்-படைக்கலம். சாய்தரும்-வளையும். உகிர்-நகம்.
கஅ

சிற்றுயிர்க்கும் செய்தொழில் சேர்த்தோன் கடவுள்

உயிருயத் தகுமு பாய மொருவரை யொருவர் பார்த்துப்
பயிலுவோ மியற்கை யாப்புள் பலவிலங் குரிய வூண்கண்டு

அயிலல்வா ழுறையுள்செய்தல் அணைந்தினம்பல்கல் மற்றைச்
செயிரறு தொழில்க ளெல்லாஞ் செயப்படிப் பித்தோன் யாரே.

உயிருய்வதற்குத் தக்க வழிகளை நாம் ஒருவரை யொருவர் பார்த்துங் கேட்டும் பழகி வருகின்றோம். ஆனால், பறவை விலங்கு முதலிய சிற்றுயிர்கள் இரைதேடி விழுங்கலும், கூடு முதலிய இருக்கை யமைத்தலும், ஆண், பெண் இணைந்து மருவி இனம் பல்கச் செய்தலும் பிறவும் தாமாகவே செய்துகொள்ளும்படி ஆற்றல் அமைத்தவன் யாவன்? அவனே முழுமுதற் கடவுள்.

உய்ய-பிழைக்க. உபாயம்-வழி. பயிலுவோம்-பழகுவோம். அயிலல்-விழுங்கல். உறையுள்-இருக்கை. இனம்-கூட்டம். கக

எட்டா வெளியாய் இன்பமாய் இலங்குவோன் கடவுள்

முத்தர்பே ரின்ப வாழ்வை
மொழிமனக் ககோச ரத்தைப்
பத்தர் பாக்கியத்தைப் பாவப்
பகையினைத் தகையின் வைப்பை
வித்தக வொளியை யின்ப
விளைவினை யருட்பௌ வத்தை
உத்தம குணாக ரத்தை
யுளங்கொளார் வளங்கொ ளாரால்.

அவாவறுத்த முனிவர்களுக்கு அழியாப் பேரின்ப வாழ்வு கடவுள். மனங் கழிய நின்ற மறைபொருள் கடவுள். பேரன்பின ராகிய பத்தர்களின் பெரும்பேறு கடவுள். மீளா நிரயத்துக்கும் அதன் வழி வாளாப்பிறப்புக்கும் ஆளாக்கும் பாவப் பகைவன் கடவுள். அளவிலா அழகின் நிலையம் கடவுள். செயற்கரும் செயல் செய்யும் சீரியோர் உள்ஒளி கடவுள். தெவிட்டா இன்பச் செல்வன் கடவுள். பேரருட் பெருங்கடல் கடவுள். எல்லாச் சிறந்த பண்பு களின் உறைவிடம் கடவுள். இத்தகைய நன்மை வாய்ந்த கடவுளை நாளும் உளங்கொண்டு வழுத்தாதார் சிறப்பும் செல்வமுமாகிய வளம்பெற்று வாழார்.

முத்தர் - முனிவர். அகோசரம் - எட்டாதது. பாக்கியம் - பெரும்பேறு. தகை - அழகு. வித்தகம் - அருஞ்செயல். பௌவம் - கடல். குணாகரம் - பண்பின் உறைவிடம். உ0

**அகலா அறுகுணம் அமைந்தோன் கடவுள்**

தனவயத் தாதன் மூலந்
தானின்மை சடல மின்மை
இனநல மெல்லாங் கோட
லெங்கணும் நிறைந்தி ருத்தல்
வனமுறு பொருள்யா விற்கும்
வாய்ந்தகா ரணனே யாதல்
எனவறு குணத்தோ னெங்கும்
இயலருள் மணத்தோ னெஞ்சே.

*மனமே! "வினையின் நீங்கி விளங்கிய" அறிவினால் தன்வயமுடையவனுவன்; தானே எல்லாவற்றிற்கும் காரணனன்றித் தனக்கோர் காரணனை இல்லாதவன்; தோற்றக்கேடு இல்லாத அருளே திருவுருவாய் ஆண்டாண்டு அடியவர்கட்கு வேண்டுவன அருளலால் மாயாவுருவினை எயாமாண்பினன்; அனைத்து நலமும் தினைத்துணையுங் குன்றாது அமையப்பெற்றவன்; எள்ளில் எண்ணெய்போல் எங்கும் பரம்பியுள்ளவன்; அழகுள்ள பொருள்கள் யாவற்றிற்கும் அவ்வழகிற்குக் காரணமானவன் என்னும் வியத்தகு பண்புகள் ஆறும் உடையவன். எங்கும் எல்லாவற்றையும் இயக்கும் திருவருளை மணந்த வரையா வாழ்வருள்வள்ளல்.*

*தனவயம் - பிறர்க்கடிமையின்றித் தானே முதன்மையாயிருத்தல். மூலம் - காரணம். சடலம் - உடல்; திருவுரு. வனம்- அழகு.*

உகூ

**பெண்ணும் பொன்னும்போற் கடவுளைப் பேணாதது என்னே?**

மாதரை விழைந்தோ னென்றும்
மாதரை நினைப்பன் பொன்மீ
தாதர முளோனப் பொன்னை
யனுதின மோர்வன் ஈசன்
பாதமீ தன்பு ளேமேற்
பகலிரா வினுமோ வாது
நாதனை யுன்னேங் கொன்னே
நாள்கழித் திடலேன் னெஞ்சே.

*மனமே! கற்புநிறை பெண்ணை விரும்புவோன் கனவிலும் நனவிலும் அப்பெண்ணையே விரும்புவன். மின்னும் விளக்கமிக்க பொன்னை விரும்புவோன் நாடொறும் அப்பொன்னையே விரும்பி எண்ணுவன். அவைபோல், ஆண்டவன் திருவடியில் உண்மையான அன்புள்ளோமானல், எல்லையும் எல்லியும் வீணுகப் பயனின் முயற்சியி லீடுபட்டு நாட்போக்குதல் எதன் பொருட்டு?*

*மாதர் - அழகிய பெண்கள். விழைவு - விருப்பம். ஆதரம் - விருப்பம். அனுதினம் - நாடொறும். பகல் - எல்லை. இரவு - எல்லி.* உஉ

துன்பந் தருதல் தூய்மைக் கென்ப

நலன்கள்யா வுறினுந் தந்த
நாதனைத் துதிமோ நோய்நாங்
கலங்கவே யுறினுந் தந்தை
காதலர்ச் சினவல் போற்பிற்
பலன்கணும் பெறவத் துன்பம்
பணித்தன னிறையென் றுன்னி
விலங்கிடா தவன்றாள் நெஞ்சே
விரைவில்நீ பரவி யுய்யே.

*மனமே! பல்வேறு வகையான இன்ப நலங்களை எய்தும் பொழுதெல்லாம் அவற்றைத் தந்தருளிய முழுமுதல்வனை வழுத்துதல்வேண்டும். தவமிருந்து பெற்றுவளர்க்கும் தாய் தந்தையர் தம் சேய் நலத்தின் பொருட்டு அவர்களைச் சினந்து கொள்வர். அதுபோல், நாம் நற்பயன்பெற்று உய்தற்பொருட்டு இடையிடையே துன்பங்களை வினைக்கீடாக இறைவன் ஈந்தருள்வன். அத்துன்புக்கு வருந்தி ஆண்டவனை மறந்திடாது அவன் திருவடியை விரைந்து வழுத்தி வாழ்வாயாக.*

*துதி - வழுத்து. நோய் - துன்பம். விலங்கிடாது-மறவாது. பரவி - வழுத்தி. உய் - வாழு.* உங

உடம்பகப் பொறியை உய்ப்போன் கடவுள்

நாமறி யாது யிர்ப்பு கணந்தோறு நடக்க மெய்யுள்
தோமறு மியந்தி ரங்கள் தொழில்பல வியற்ற வுண்ணுஞ்
சேமவூண் சீர ணித்துத் தேகமெங் கணுமு லாவக்
காமரா ருயிரைக் காக்குங் கடவுள்பால் நடவாய் நெஞ்சே.

மனமே! நாமுணராமலே நம் உயிர்ப்பு இமைப்பொழுதும் ஓவாது நடந்துகொண்டிருக்கவும், உடலகத்துள்ள குற்றமற்ற பொறிகள் தத்தம் தொழில்களைச் செய்யவும், உண்ணும் உணவு நன்ருய்ச் செரித்துக் குருதியாக மாறி உடம்பு எங்கணும் உலவிச் செழுமையுறவும் தந்தருளி நம்மைக் காக்கும் கடவுளை உள்ளத் துற எண்ணி வழிபடுவாயாக.

இயந்திரம் - பொறி. சீரணித்தல் - செரித்தல். உச

ஈந்தானை மறந்து பொருள் எண்ணல் இழிவாம்

தனந்தந்தான் றனையி கழ்ந்து
தனத்தினைத் தொழல்போ லீசன்
அனந்தந்தான் வாழ்வு தந்தா
ஞவியு முடலுந் தந்தான்
இனந்தந்தான் இன்பந் தந்தான்
யாவுந்தந் தானை நீங்கி
மனந்தந்த பொருள வாவு
மூடருன் சீடர் நெஞ்சே.

மனமே! இம்மை மறுமை வாழ்வுகட்குரிய பொருளை ஈந்த வள்ளலைப் பொருட்படுத்தாது அப்பொருளைப் போற்றிப் புகழ்வது எவ்வளவு அறிவில் செயலோ அதற்குமேம்பட்டதாகும், சோறும், வாழ்வும், உயிர்ப்பும், உடலும், உறவும், உள்நிகழும் இன்பும் முதலியதும் தந்தருளிய ஆண்டவனைப் புகழாது அப் பொருள்களைப் புகழ்ந்து, இடைவிடாது அவற்றினையே நினைவு கூர்ந்து வேட்கையுறல். அத்தகைய அறிவிலிகள் உன்னுடைய மாணவராவர்.

தனம் - பொருள். அனம் - சோறு. ஆவி - உயிர்ப்பு. உரு

கருவி யின்றியே கடவுள் காண்பன்

கண்ணிணை செவிக ளீந்தோன்
காணுன்கொல் கேளான் கொன்னெஞ்
செண்ணிய வீந்தோ னந்தீ
தெண்ணுன்கொல் செங்கோ லோச்சுந்
திண்ணியன் றண்டி யான்கொல்
தீதிலான் தீதைச் சீருது

அண்ணிடு வான்கோ னெஞ்சே
யவனடி வழிப டாயே.

மனமே! இரண்டு கண்களையும் இரண்டு காதுகளையும் தந்த கடவுள் அவையின்றியே தான் காணவும் கேட்கவும் வல்லன். அளவிலாத எண்ணங்களை அடக்கிவைத்து வேண்டும் போது வேண்டுவ வெளிப்படுத்தும் ஆற்றல் வாய்ந்த நெஞ்சை யருளிய கடவுள் நாம் எண்ணும் தீய எண்ணங்களைத் தம் திருவுள்ளத்து அவ்வவ்பொழுதே காணவும் வல்லன். செங்கோல் மன்னன் குற்றம் புரிந்தவர்களை ஒறுத்தடக்காது ஒழியான். ஒழுக்கங் குன்று விழுப்பஞ்சேர் சான்றோர் தீயோரைக் கண்டால் கடிந்தகலாது நெருங்கி உறவுகொள்ளார். அதுபோல், நன்மைக்கு இன்பமும் தீமைக்குத் துன்பமும் தந்தருள்பவன் கடவுள். ஆயின், அவனை வல்விரைந்து தொழுவாயாக.

சீறுன் - சினவான். அண்ணிடுவான்-நெருங்குவான். உசு

அன்பொன்றே நாடி ஆண்டானைத் தொழு

தடியடிக் கஞ்சி யீவோன்
றருமனோ கற்பைக் காந்தன்
கோடியனென் றஞ்சிக் காப்பாள்
சதிகோலோ வீசன் மாட்டுப்
படிறறு மன்பே யன்பாம்
பயத்தினு னயத்த வாவான்
முடிவிலான் பாற்கோள் பத்தி
முத்தியி லுய்த்தி டாதால்.

'கொடிறுடைக்கும் கூன்கையர்தம்' தடியடி பொறுக்காது அஞ்சி அவலமுடன் ஈவோன் அறவோன் ஆகான். கணவன் கொலை முதலிய கொடுமை செய்வனே என்று அஞ்சித் தன் கற்பைக் காத்துக்கொள்பவள் கற்புடைய மனைவி ஆகாள். இவை போல், ஆண்டவனிடத்தும் பொய் கலவாமல் வைக்கும் அன்பே சிறந்த அன்பாகும். அவ்வாறில்லாமல் அச்சத்தால், நயத்தால் ஒன்றை ஆசைப்படுவதால் என்றும் ஒருபடித்தாயுள்ள இறைவனிடத்து வைக்கும் அன்பு இறவாப் பேரின்பத்துச் செலுத்தாது.

தடி - கம்பு. தருமன் - அறவோன். காந்தன் - கணவன். சதி - மனைவி. அவா - ஆசை முடிவிலான் - என்றும் ஒருபடித்தாயுள்ளவன். உஎ

### எல்லாப் பொழுதினும் இறைவனை எண்ணுக

உண்ணும்வே லையினு மல்லி
　　னுறங்கும்வே லையினும் வேலை
பண்ணும்வே லையினுந் துன்பம்
　　படரும்வே லையினு மின்ப
நண்ணும்வே லையினும் பாரில்
　　நடக்கும்வே லையினு மொன்றைக்
கண்ணும்வே லையினுந் தேவைக்
　　கண்ணும்வே லையைச்செய் நெஞ்சே.

*மனமே! உண்ணுங்காலத்தும், இரவு உறங்குங்காலத்தும், உழைக்குங்காலத்தும், துன்பப்படும் பொழுதும், இன்பம் துய்க்குங் காலத்தும், நிலத்தே நடக்கும்பொழுதும், ஒன்றனைக் கருத்தூன்றி நினைக்கும்போதும் ஆண்டவனை மறவாது அன்புடன் நினைப்பாயாக.*

*வேலை - பொழுது. பண்ணல் - செய்தல். படரல் - உண்டாதல். பார் - நிலம். கண்ணல் - கருதல். தேவு - ஆண்டவன்.*

### எல்லாம் அறியும் இயல்பினன் கடவுள்

தினையினும் புகுந்து நிற்குந்
　　தெய்வநா யகன்றான் யாவர்
நினைவையு மறிவான் யாங்க
　　ணிகழ்வது மறிவான் செய்யும்
வினையையு மறிவான் பேசும்
　　விதங்களு மறிவா னன்பார்
அனையனை யனைய லாதோ
　　ரணுவுமே யசையுங் கோல்லோ.

*மிகச் சிறிய பொருளினும் அகம்புறம் விரவி நிற்கும் யாவர்க்கும் மேலாம் முழுமுதல் தெய்வத் தலைவன், எல்லார் நினைவையும் இம்மியும் பிசகாது அறிவன். எவ்விடத்து என்ன நிகழினும் அறிவன். யார் வெளிப்பட்டும் மறைந்தும் என்ன செய்யினும் அறிவன். மறைவாக என்ன பேசினும் அறிவன். அன்பு நிறைந்த தாயையொத்த தண்ணளி வாய்ந்த கடவுளை அல்லாது*

ஓர் அணுவும் அசையாது என்று உறுதியாக வுணர்ந்து அவனைத் தொழுதல்வேண்டும்.

அனையனையன் - தாயை ஒத்த கடவுள். உ௯

சிற்றுயிரும் ஓம்பலிறை சிறந்த திருத்தொண்டு

தன்பணி செயற்கு வாய்ந்த மக்கள்தம் பணியி யற்ற
மின்பணி சுடர்கள் பூத விரிவெலாம் விமல னீந்தான்
நன்பணி யவைக ளூரும் நம்பணி யாற்று மையன்
நன்பணி யியற்று கில்லேம் நன்பணி யனைய நெஞ்சே.

மனமே! தன் திருத்தொண்டாகிய சிற்றுயிர் முதல் மக்கள் ஈறாகவுள்ள எல்லா உயிர்களையும் எல்லா வகையாலும் இடையறாது பேணுதற்கு வாய்ப்புள்ள மக்கட் பிறப்பினை நல்கினன். அம்மக்கட்கு வேண்டும் துணைபுரிய விளக்கமிக்க ஞாயிறு திங்கள் முதலிய கோள்களும், ஐம்பெரும் பூதங்களும் அமைத்தருளினவன் அழுக்ககன்ற கடவுள். அவன் திருப்பணியைச் செய்யாத நாம் நஞ்சுடைய நல்ல பாம்பை ஒப்போம்.

பணி - தொண்டு. பணி - பாம்பு ௩0

ஆண்டவன் வேண்டும் அறம்புரிந்து வாழ்க

நரனருள் புரிந்தோ ரன்னோன் மனோரத நாடிச் செல்வர்
பரனருள் பெறவ வன்சொன் மறைவழி பற்றி யன்னோன்
றிரமுறப் பகைக்கும் பாவச் சிக்கறுத் தவன்வி ரும்பும்
தரமறு தருமந் தன்னைச் சார்ந்திடர் தீர்ந்துய் நெஞ்சே.

மனமே! மக்கள் செல்வம் கல்வி முதன்மை (அதிகாரம்) முதலியவற்றால் சிறந்திருப்போரை அடைந்து அவரருளைப்பெற விரும்புவோர் அவர்தம் குறிப்பறிந்து ஏவல் செய்து வாழ்வர். அதுபோல், முழுமுதற் செம்பொருளின் திருவருளைப் பெற விரும்புவோர் அவர் அடியார் வாயிலாக அருளிய உலகியல் ஒழுக்க நூலாகிய மறையினைக் கைக்கொண்டு அறம் பல புரிந்து நல்வழியில் ஒழுகவேண்டும். அவர் மிகுதியும் வெறுக்கும் ஐம்பெருந் தீமையைக் கனவிலும் நண்ணவொட்டாது, நினைத்தல், கேட்டல் சொல்லல், காண்டல், கலத்தல் முதலியவற்றில் நல்லனவே பயின்று விலக்குதல் வேண்டும். ஒப்பில்லாத செப்பரும் சிறந்த புண்ணியங்களை இடையறாது செய்து பிறவிப் பெருங்கடல் நீந்திப் பேரின்பப் பெருவாழ்வு எய்திப் 'பேரா இயற்கைத்'தாய் வாழ்வாயாக.

நரன் - மக்கள். மனோரதம் - குறிப்பு; விருப்பம். மறை - ஒழுக்க நூல் (திருக்குறள்). திரம் - மிகுதி. சிக்கு - பிணக்கு. தரமறு - ஒப்பில்லாத. ௩௧

சிற்றுயிர்க் கன்பிலார் செம்பொருட்கும் அன்பிலார்

கண்டமன் னுயிரைப் பேணுன்
காணேணுப் பரன்யா னேசங்
கொண்டன னெனல்போய் யாஞ்செங்
கோல்வழி நிலார்கோன் சேயர்க்
கண்டலர்க் கோனுக் கன்ப
ராவரோ நற்கு ணங்கள்
விண்டவர் பிறர்க்கன் பில்லார்
விமலர்க்கு மன்பி லாரால்

மன்னவனின் மக்களுக்கு வேண்டும் நலம்புரிந்து உதவாது, அம்மன்னவனுக்கு வேண்டுவ புரிவாரை மன்னவன் அன்புடன் விரும்புவனோ? விரும்பான். அதுபோல், அனைத்துயிர்க்கும் அம்மையாய் அப்பனுய்த் திகழும் ஆண்டவனும் காணப்படும் ஓரறிவுமுதல் ஆறு அறிவு ஈருகவுள்ள எல்லா வுயிர்கட்கும் முக்காலத்தும் மூவிடத்தும் முப்பொறியானும் செய்யத்தகுவனவற்றைக் காதலொடும் ஓவாது செய்யாமல் காணுத தன்னைமட்டும் இடையிடையே வணங்குவதுபோல் நடிக்கும் நற்குணமில்லாத வாய்மையில் புல்லரை ஒருநாளும் விரும்பான். அனைத்துயிர்க்கும் அன்பிலான் ஆண்டவனுக்கும் அன்பிலான் என்பது மறுக்கப்படாத மெய்ம்மையாம்.

சேயர் - மக்கள். அண்டலர் - நெருங்காதவர்; பகைவர். விண்டவர் - விட்டவர். ௩௨

பகரொணு இன்பவளம் பத்தர்க்கு அருள்வன்

நலமிலா நரர்க்குத் தேவன் நல்கிய சராச ரங்கள்
பலவள முளவே லன்னுன் பத்தர்கள் பெறும்பே ரின்பத்
தலவள மெற்றே பாவச் சலதியுண் மூழ்கு வோர்சார்
புலவினே யெத்தன் மைத்தோ புந்தியே சிந்தி நீயே.

மனமே! நன்மை ஒருசிறிதுமில்லாத மக்கட்கு நன்மையே பிழம்பாய்த் திகழும் ஆண்டவன், இவ்வுலகத்தில் சிறப்பனவும்

நடப்பனவும் ஆகிய பல்வேறு உயிர்த்துணைகளையும், உலகியற் பல வளங்களையும் ஆக்கியருளினன். எல்லா நலமும் ஒருருவாய்த் திகழ்ந்து ஆண்டவன் திருவடிப்பற்றே உயிராய்க்கொண்டு வாழும் அடியவர்கட்கு அவனருளும் "செருக்கறுப்பான் எய்தும் வானோர்க்கு உயர்ந்த வுலகமாகிய" பேரின்பப் பெருவீடாம் புக்கில் எத்துணை வள நிறைந்ததென்று எவராலும் வரையறுத்துச் சொல்லமுடியாது. கருதவும் கரையவும் முடியாத பெருந் தீமைகளைச் செய்வோர் சென்று புகுந்து துன்புறும் இருளுலகாகிய நிரயமும் எத்துணைக் கொடியதோ? ஓர்ந்து உய்யுநெறி கடைப்பிடிப்பாயாக.

நரர் - மக்கள். தேவன் - ஆண்டவன். சரம் - நடப்பன. அசரம்-நிற்பன. தலம் - உலகம் சலதி - கடல். சிந்தி - ஓர். புத்தி - மனம். புக்கில் - பேரின்ப வீடு. எற்று - எத்தன்மைத்து. ௩௩

நல்லாரை நீக்கின் நண்ணும் பழியே

ஆலயந் தன்பால் வாழு மரசோரீஇ யவற்கோன் னுரைச்
சாலவே யேற்றல் போலத் தனக்குனைப் பீட மாச்செய்
மூலகா ரணனை நீத்திங் ககங்கார முதற்பா வங்கள்
ஏலநீ யுன்கண் ஏற்றாய் இதயமே சிதைவை நீயே.

மனமே! சிறந்த இருக்கையாகிய திருக்கோவில், தன்னிடம் வாழும் முதல்வனாகிய வேந்தை நீக்கி அவற்குப் பகைவராகிய தீயோர்களைச் சேர்த்துத் துன்புற்றுக் கெட்டொழியும். அது போல், நீயும் எவற்றுக்கும் காரணமாய் என்றுமுள்ள இறவாப் பிறவா இறைவனை நீக்கி, செருக்கு சினம் சிறுமை முதலிய தீமைகளைச் சேர்த்துக்கொண்டிருக்கிறாய். விரைவில் கெட்டொழிந்து துன்புறுவாய். ஏன்? உன்னைத் தனக்கிருப்பிடமாகவே ஆண்டவன் அமைத்தனன்.

ஆலயம் - திருக்கோவில். ஒரீஇ - நீக்கி. ஒன்னார் - பகைவர். பீடம் - இருக்கை. நீத்து - விலக்கி. சிதைவை - கெடுவை. ௩௪

வளர்த்தோர்க்குதவும் மாமரம்போல் வகுத்தானை வணங்கு

விருகமுந் தனைவ ளர்த்தோர் வியப்புற வேலை செய்யுந்
தருவோடு பயிர்வைத் தோர்க்குத் தனிப்பய னல்கு நம்மை
யொருபொரு ளெனச்சி ருட்டித் துலகமு மற்ற யாவுந்
தருமொரு முதலைப் போற்றத் தன்மையோர் புன்மை யோரே.

நாற்கால் விலங்கும் தன்னை வளர்த்தோர்கள் மருளும்படி பலவகை வேலைகளை மனங்கூடி மகிழ்வொடும் செய்யும். மரம் செடி கொடிகளாகிய நிலைத்திணைப் பயிர்களும் பாடுபட்டுவைத்து வளர்த்தோர்க்குத் தளிர், இலை, அரும்பு, பூ, பிஞ்சு, வடு, காய், பழம், கனி முதலிய சிறந்த பயன்களைத் தரும். ஆண்டவன் மக்களாகிய நம்மை ஒரு பொருளாகத் திருவுளங்கொண்டு உடம்பொடு பொருத்திப் படைத்து உலகமும் உண்பொருளும் பிறவும் தந்தருளினன். அப்படிப்பட்ட முழுமுதலை அன்பால் நினைந்து ஆர்வத்தால் வழுத்திக் காதலாற் கைகூப்பித் தொழுதலாகிய போற்றுதலைச் செய்யார் மிகவும் கடையவராவர்.

விருகம் - மிருகம்; விலங்கு. வியப்பு - மருள்; அதிசயம். சிருட்டி - படைப்பு. புன்மையோர் - கடையர். ருரு

## கடவுளை எய்தார் கடவார் பிறப்பு

கரும்புணக் கூலி கேட்குங்
கருமம்போல் வறுமை யாளர்க்கு
அரும்பொரு ளினைத்துன் புற்றோர்க்
கானந்த சாகரத்தை
வரும்பிணிக் கோரும ருந்தை
மனத்தின்க ணொளிர்தீ பத்தை
விரும்புவோர் மனோக ரத்தை
மேவுறார் கோவு றாரே.

கரும்பு தின்பதற்குக் கூலிகேட்கும் உண்மையுணராதாரைப் போன்று, மிடிபட்டவர்க்கு வேண்டும் மிகுபொருளாயிருப்பவன் கடவுள். நீங்காத் துன்புற்றோர்க்கு ஒங்கும் இன்பக்கடல் கடவுள். வினைப்பயனாலும் வேண்டாச் செயலாலும் வரும் நோய்க்குத் தக்க மருந்து கடவுள். தூய்மையும் வாய்மையும் அன்பும் தொடர் நினைப்பும் உள்ள நல்லோர் தூமனத்தின்கண் நின்றொளிரும் நந்தா விளக்கு கடவுள். திண்ணியராய் எண்ணுவார் எண்ணத்தை ஈடேறச் செய்யும் எழில் கடவுள். இத்தகைய கடவுளின் இணையடியின்பத்தினைப் பொருந்தாதவர் "பிறவிப் பெருங்கடல் நீந்தி" இறைவன் பேரின்ப வீட்டை எய்தார்.

கருமம் - செய்கை. ஆனந்தம் - இன்பம். சாகரம் - கடல். கோ - வீடு.

ருசு

பரமனை வணங்குநாள் பயனுடைத் திருநாள்

எவ்வரு ருறினு ஞாங்க
　　ரிறையுள னென்னத் தேறின்
அவ்வஞர் வருத்துங் கோல்லோ
　　வையனை யுன்னிப் போற்றிச்
செவ்வழி நிற்கு நாளே
　　சீவனுய் கின்ற நாளாம்
ஒவ்வரு மிறைவற் போற்ரு
　　தொழியும்வாழ் நாள்பாழ் நாளே.

எவ்வகைத்துன்பம் நேர்ந்தாலும், நேர்ந்த அவ்விடத்தே நம்மைக் கைவிடாது காத்தருளக் கடவுள் காத்திருக்கின்ருன் என்னும் உண்மையைத் தெளிந்தால், அப்பொழுதே அத்துன்பம் நம்மை வருத்தாது அகலும். கடவுளை அகங்குழைந்துருகி அன்பால் நினைந்து பரவுதல் செய்யும் நாளே நாம் உய்யும் நாளாகும். "தனக்குவமை இல்லாதான் தாள் வணங்காதவர்" வாழ்நாள் பாழ்நாளாகும்.

அஞர் - துன்பம். ஞாங்கர் - இடம். தேறின்-தெளிந்தால். ஐயன் - கடவுள். உன்னி - நினைத்து. போற்றி - பரவி. சீவன் - உயிர். பாழ்நாள் - பயனின்றிக் கழியும் வீழ்நாள். ௩எ

அடியவரை இகழ்தல் ஆண்டானை இகழ்தலே

தெய்வநாத் திகமத் தெய்வம்
　　யாவினுஞ் சிறந்த தென்ன
உய்வகை பத்தி செய்யா
　　தொழிதல்நல் லொழுக்க மின்மை
பொய்வளர் தெய்வம் போற்றல்
　　புனிதரைத் தளியை எள்ளல்
மெய்வளர் வேத நிந்தை
　　விமலது டணங்க ளாமால்.

கடவுளில்லையென்னும் பாழ்ங்கொள்கை, உலகுடல் உயிரினும் சிறந்து நிலவும் கடவுளைக் காதல்கொண்டு கைதொழுது பத்திசெய்து வாழ்வதே உய்யும் வகை எனக் கொள்ளாதிருத்தல்,

நல்லொழுக்கமில்லாதிருத்தல், இறந்துபட்ட ஆவிகளாகிய சிறு தெய்வத்தை வழிபடுதல், பிறர்க்கென வாழும் பெற்றிவாய்ந்த தூயோரைப், பெம்மான் வீற்றிருந்தருளும் திருக்கோவிலை இகழ்தல், மறைநூலை முறையுற உணராமலே குறைகூறுதல் முதலியவை தெய்வ இகழ்ச்சியாகும்.

நாத்திகம் - மெய்ப்பொருள் இல்லெனும் பாழ்ங்கோள். பொய் வளர் தெய்வம் - சிறுதெய்வம். புனிதர் - தூயோர்; மெய்யடியார். தளி - திருக்கோவில். எள்ளல் - இகழ்வல். வேதம் - மறை. நிந்தை - இகழ்வு. விமலன் - அழுக்கற்றவன்; கடவுள். தூடணம் - இகழ்வு. ௬அ

எல்லாமாம் இறைவனை இடைவிடாது ஏத்து

குருவிறை சீட ஞநங் கோனவன் குடிநா மன்ஞன்
ஒருபிதா நாஞ்சே யாண்டா னுவன்வழித் தோண்ட ஞமவ்
வுருவிலா னுடையா ஞமே யுடைமையன் னவனே தாதா
மருவிர வலஞ மேன்ன மதிமதி மதியில் நெஞ்சே.

அறிவிலா மனமே! எல்லாம் வல்ல இறைவன் உறுதிமொழி மொழிந்து உய்விக்கும் நல்லாசானவன். நாம் வழிப்பட்டொழுகும் மாணக்கர். ஆண்டவன் செங்கோலும் வெண்குடையும் ஒண்கழலும் வெள்வாளும் வாய்ந்த வேந்தன். அவன்பால் அன்பகலாக் குடிகள் நாம். எவ்வுயிர்க்கும் செவ்விய தந்தை அவன். நாம் அவனின் காதலஞ் செல்வப்பிள்ளைகள். அவன் ஆண்டான். நாம் அடிப்பணி புரியும் தொண்டர். பிழம்பு இல் பிழம்பு இல்உள் பிழம்பாகிய உருவம் அருவம் அருவுருவம் என்னும் மூன்றுங்கடந்த முழுமுதலுடையான் அவன். நாம் அவனுடைமையாகிய அடிமை. "வேண்டத் தக்கதறிந்து வேண்ட முழுதும் தந்து" காக்கும் வள்ளல் அவன். நாம் அவனால் வலியத் தந்தருளப்படும் பொருள்களைப் பெற்று வாழும் இரவலர். இவ்வுண்மையைக் கருதுவாயாக.

உருவிலான் - தோன்றி மறையும் மாயாவுருவிலாதவன். உடைமை - உயிரில் பொருள் ஆண்டவனின் உடைமை; உயிருள் பொருள் ஆண்டவனின் அடிமை. உறுதிமொழி-உபதேசம். ௬௯

ஆண்டான் அடிபோற்ற ஆகும் பெருமகிழ்வு

கற்பினர் கணவர் தம்மைக்
காண்டோறுங் களித்தல் போலும்
பொற்புறு சிறுர்தாய் கையிற்
பொருந்துபு மகிழல் போலும்

அற்புத வுவகை யோடும்
அடிகளை யடிகள் போற்ருது
உற்பவ வுவர்ப்போ டேத்து
முள்ளத்தார் கள்ளத் தாரே.

"சொற்காத்துச் சோர்விலாக்" கற்பினள் தன் கணவனைக் காண்டொறும் பெருமகிழ்வு கொள்வள். சிறுமகார் தவமிருந்து ஈன்றெடுத்துப் போற்றும் தாய் திருக்கையைச் சாருந்தோறும் இன்புறுவர். இவைகளைப் போன்று எல்லாமாம் அடிகளாகிய கடவுளின் திருவடிகளைப் போற்றி நல்லோர் இன்புறுவர். அவ்வாறு செய்யாது "பொக்கமிக்கவராய்" வெறுக்கத்தக்க தீய செயல்களைப்புரியும் பாவிகள் வெறுப்புள்ளத்தராய் வழிபடுவார். அவர் படிறு நிறைந்த கள்ளத்தராவர்.

பொருந்துபு - சாருந்தோறும். உவர்ப்பு - வெறுப்பு. ௪0

தாயினும் பிழைபொறுத்துத் தாங்குவோன் கடவுள்

புகர்சில வியற்றிற் ருயும்
பொறுப்பள்கொல் மனத்தால் வாக்கால்
இகழுறு செயலா ஞெஞ்சேய்
ஏதமெண் ணிலவேன் ருலுஞ்
சகமிசைத் தண்டி யாது
சாந்தனை யும்பொ றுத்துச்
சுகமெலா மீயுந் தேவைத்
துதித்துன்பாற் பதித்துய் நெஞ்சே.

மனமே! குற்றம் செய்யும் பிள்ளைகளை நற்றவத்தாயும் பொறுத்தல் செய்யாள். நாம் நினைப்பால், சொல்லால், செயலால் பொறுக்கலாற்ருத எல்லாராலும் எள்ளற்பாட்டுக்குரிய அளவிலாக் கொடுஞ்செயல்களை ஓவாது செய்யினும் ஆண்டவன் அவைகளை மனம் பொறுத்து மண்மேல் சிறிதும் தண்டியாது அமளவும் சாந்துணையும் நலமெலாம் அருள்செய்கின்ருன். அத்தகைய ஆண்டவனை மறவாமனத்தால் விடாது தொழுது உள்ளத்து வைப்பாயாக. அதுவே "வீழ்நாள் படாஅமை நன்ருற்றும்" விழுமிய வழியாகும். அவ்வழியே வீடெய்தி உய்யும் நிலைக்குத் துணையாகும்.

புகர் - குற்றம். ஏதம் - கொடுமை. சகம் - நிலம்; மண். சுகம் - நலம். ௬௪

## வேறு

### அடியிணை பிடித்தென்றும் அகலாமை அன்பு

உற்றசஞ் சீவினியை யுண்ணு தொழியுமதி
யற்றவர்போன் மாதாவாய் அப்பனு யாருயிராய்ச்
சுற்றமாய் வாழ்வாய்த் துணையாய்நம் பாலுறையும்
கொற்றவனைப் போற்றிக் குறையிரந்து பல்வரமும்
உற்றநல் காயாயின் விடேனென்று முறைகால் பூண்டேவ்
வற்றமுமேத் தோமினிவே ருருதவி சோன்மனமே.

நெஞ்சே! கையிற்கிடைத்த உயிருய்யச் செய்யும் மருந்தாம் அமிழ்தத்தை உண்ணுது விட்டொழியும் அறிவில்லாதவர்போல், அம்மையாய் அப்பனுய் உடங்கியைந்துணர்த்தும் ஆருயிராய், "அருப்பரு ஆக்கம் பலவும்தரும் விருப்பருச் சுற்றமாய்" குறைவிலா நிறைவாம் வாழ்வாய், என்றும் நீங்கா இன்துணையாய், நம்மைவிட்டு நீங்காது நம்மோடே யுறையும் வெற்றிப்பெரும் பொருளை, அன்புடன் தொழுது மன்றுடிக்கேட்டுப் பலவரங்களையும் தந்தருளவேண்டுக. தாராதொழியின் உன் திருவடிப்பிடியை விட்டகலேனென்று முறைமுறையாக அவன் திருவடியைப் பற்றிக்கொள்வாயாக. இவை முறையாகவும், நேரும்பொழுதெல்லாம் அவன் திருவடியைத் தொழாதிருந்தால் நமக்கு வேறு உதவி எவ்வாறு யாரால் கிடைக்கும்? கூறுவாயாக.

சஞ்சீவினி - உயிர்மருந்து. கொற்றவன் - வெற்றியுள்ளவன். குறையிரந்து - மன்றுடிக்கேட்டு. ௬௫

### ஆண்டான் அடிநினைத்து ஆடாய் நீ பாடாய்

வீடாத முத்தொழிலோன் விண்ணவர்கோன் மண்ணவர்கோன்
கோடாத செங்கோலான் குற்றமில்லா னித்தமுனை
வீடாகக் கொண்டுறையு மேன்மையுற்ரு யிவ்வருளை
நாடா யளிநீடாம் நாத்தழும்பப் போற்றிநிதம்
பாடா யுருகாய் பரவசமிக் கூர்ந்துநனி
யாடாய்கொண் டாடாய்வே ருருதவி சோன்மனமே.

நெஞ்சமே! என்றும் விட்டு நீங்காப் பருமை முத்தொழி லாகிய ஆக்கல், அளித்தல் அழித்தல்களைச் செய்வோனும், வினைப் பயனாகிய நுகர்வொன்றேயுடைய விண்ணவர்க்கும், வினையும் வினைப்பயனும் செய்தும் நுகர்ந்தும் வரும் மண்ணவர்க்கும் உள் நின்று உய்க்கும் தலைவனும், முறைமை தவறா நடுநிலைச் செங் கோல் வேந்தனும், இயல்பாகவே கட்டில்லாதவனும் ஆகிய முழு முதல்வன் நாளும் எல்லா இருக்கையினும் உன்னையே சிறந்த இருக்கையாகக் கொண்டருளும் தகுதியடைந்தாய். அத்தகைய திருவருளை நாடாமலும், அவன்பாற் காதல் கொள்ளாமலும், அவன் புகழை நாத்தழும்பேற எத்தாமலும், எத்திப் பாடாம லும், அனல்கண்ட மெழுகென அகம் உருகாமலும், அவன் வயப்பட்டுத் தன்னை இழவாமலும், ஆடாமலும், அவனருளைக் கொண்டாடாமலும் இருக்கின்றாய். அவனை யொழித்து உனக் குற்ற துணை வேறுண்டோ சொல்.

வீடாத - நீங்காத. முத்தொழில் - ஆக்கல், அளித்தல், அழித்தல். நித்தம் - நாளும். பரவசம் - தன்னிழப்பு. சரு

"பொருள்சேர் புகழ்" புகன்று போற்றுதல் கடனே

சிந்தா குலந்தீர்க்குஞ் செல்வமே நல்வளமே
நந்தா வறவிளக்கே நாயகமே தாயகமே
யேந்தாயே கண்ணே யினியவுயி ரேநலங்கள்
தந்தாளுங் கற்பகமே தற்பரமே யற்புதமே
கந்தா மணியே கதிர்நிலையே ஆரமுதே
அந்தாயே யென்றேத்தா யாருதவி சொன்மனமே.

நெஞ்சமே! ஆண்டவன் திருவடியிணையை உள்ளக்கவலையை ஒழித்தருளும் ஒண்பொருளே என்றும், அழிவில் செழுமையே என்றும், கெடாத நன்மை நடுவிளக்கே என்றும், முதல்வனே என்றும், பொன்றுப் புகலிடமே என்றும், எந்தையே! எம்மிரு கண்ணே! இன்னுயிரே! நாளும் வேண்டும் நலங்கள் தந்தாளும் நந்தாக் கற்பகமே! என்றும் தானே தனிமுதலாம் பெரும் பொருளே! என்றும், "வியத்தொறும் வியத்தொறும் வியப் பிறந்து" விளங்கும் விழுப்பொருளேயென்றும், அனைத்துயிர்க் கும் பற்றுக்கோடாம் அருமணியே என்றும், 'வானோர்க்குயர்ந்த' மேனிலையேயென்றும், உண்ணத்தெவிட்டாப் பண்ணமுதே என்றும், 'தாயினும் சாலப் பரி'வுடைய அழகார் தாயே என்றும் அகங்குழைந்து அன்புருகி இன்புற்று மெய்பொடிப்ப நாக்குழறப்

'பூக்கையாலட்டிப்' போற்றுவாயாக. அவனையன்றி உனக்குற்ற துணை யாருண்டு சொல்லு.

சிந்தாகுலம் - உள்ளக்கவலை. வளம் - செழுமை. நந்தா - கெடாத. அறம் - நன்மை. நாயகம் - முதன்மை. தாயகம் - புகலிடம். கற்பகம் - கற்பித்துத் தரும் திருவருள். தற்பரம் - முழுமுதல்வன். கந்து - பற்றுக்கோடு. ௨௪

## வேறு

### பெரியானைச் சிறியானைப் பிரியானைப் பேசு

அடர்ந்தமண லெனக்கணக்கி லண்டபகி ரண்டமேலாங்
கடந்துநின்ற பெரியானைக் கடுகினுழை சிறியானைத்
தொடர்ந்தவன்பர்க் குரியானைத் துகளுடையோர்க் கரியானைப்
படர்ந்தவருள் பிரியானைப் பழிச்சாயோ நாவே
பரமசுகோ தயநிலையைப் பழிச்சாயோ நாவே.

திணிந்த மணலினும் பலவாய் எண்ணிலடங்காப் பல்வேறு அண்டங்களை யெல்லாம் ஊடுருவி அப்பால் சென்று என்றும் பொன்றாது நின்றருளும் பெரும் பொருளாம் பெரியானை, கடுகினுள் நுழையும் நுண்பொருளாம் சிறியானை, பற்றற்றுப் பற்றப்படும் பொருளாம் தன்(கடவுள்)பால் விட்டுநீங்காத பேரன்பர்க்கு உரியானை, மனமாசகலா வன்கணாளர்க்குக் கருதவும், காணவும், மருவவும் பொருந்தாதவனை, அருளம்மையை என்றும் பிரியாத் தெருள் அப்பனை நன்றாவே நவின்று வழுத்துவாயாக. வேறெங்கும் கிட்டா வீறுடை அழிவில் பேரின்ப ஊற்று நிலையத்தை வழுத்துவாயாக.

துகள் - மனமாசு. பரமசுகோதயம் - அழிவில் பேரின்ப ஊற்று. பழிச்சு - வழுத்து. ௨௫

### தொண்டர்க்கு எல்லாமாம் துணைவனைத் தொழு

தொண்டரெனும் பயிர்தழையச் சொரிமுகிலை யவரிதய
முண்டகங்க ணெகிழ்த்தொளியை மும்மலம்வே ரறவீசும்
சண்டவளி யினைப்பாவத் தழலவிக்குந் தண்புனலைக்
கண்டவர்தஞ் சுகநிலையைக் கருதாயோ மனமே
காணரிய பரஞ்சுடரைக் கருதாயோ மனமே.

நடமாடுங் கோயிலாம் நல்லுயிர்க்கும், படமாடும் கோயிலாம் திருக்கோவிற்கும் நாற்பெருந் தொண்டினை நாளும் இயன்றவாறு இயற்றும் தொண்டரெனும் எழிற்பயிர் செழிக்கப் பொழியும் செழுமழையை, தொண்டர் திருவுள்ளமாகிய தாமரையை மலரச் செய்யும் அறிவொளியை, மும்மலமாகிய 'ஒன்றாய் முளைத் தெழுந்து எத்தனையோ கவடு'விட்ட பெருமரத்தை வேரற வீழ்த்தும் சூறைக் காற்றை, பாவப் பெருநெருப்பினைப் பட்டொழிய அணைக்கும் அருள் நீரை, "ஓர்த்துள்ளம் உள்ள துணர்ந்த" உரவோராம் மெய்யடியார்க்குப் பொய்யாப்பேரின்பை நெஞ்சமே வஞ்சமின்றிக் கருதுவாயாக. அவன் 'அருட்கண்ணே கண்ணாக'வன்றி வேறொரு வழியானும் காண்டற்கரிய உள்ளொளி பெருக்கும் உலப்பிலாப் பேரொளியை உன்னுவாயாக.

முகில் - மழை. இதயம் - நெஞ்சம்; திருவுள்ளம். முண்டகம் - தாமரை. சண்டவளி - சூறைக்காற்று. சுகநிலை - பேரின்ப நிலை. பரஞ்சுடர் - பேரொளி. ௬௬

## வேறு

அறிவாற்றல் அன்பாம் ஆண்டவனைத் தொழு

**ஒன்றாகி மூன்றாகி யுயிர்த்துணையா யொப்பிலதாய்**
**நன்றாகி நின்றதனி நாயகனைத் துதிமனமே**
**நாயகனைத் துதிபுரியி னன்மையுறுந் தின்மையறுந்**
**தீயகம்போ மெய்துறுங்காண் தேவர்பெறும் பேறே.**

நெஞ்சமே! ஒப்பில்லாமுழுமுதலென ஒன்றாய், தானேவிளங்கும் அறிவு, ஆற்றல், அன்பென மூன்றாய், விளக்க விளங்கும் அம் மூன்றும் உடைய உயிர்களுக்கு அவற்றை விளக்கும் உயிர்த் துணையாய், உடனாய் நின்றருளும் சிறந்த காதலம் தலைவனைப் போற்றுவாயாக. அத்தலைவனைப் போற்றின் என்றும் மாறா இன்பமாம் நன்மை வந்தெய்தும். அதற்கு இடையூறாகிய தீமை அற்றொழியும். நிரயத்துன்பம் அகலும். வீட்டின்பம் பெருகும். அவ்வின்பமே தெய்வத்தன்மை எய்தினார் பெறும் பேறாகும்.

தனிநாயகன் - சிறந்த காதலம் தலைவன். தீயகம் - நிரயம்; நரகம். ௬௭

சீலத்தார் சிவனடியைச் சென்றுசேர்ந் தின்புறுவர்

**தீயர்தமைச் சுடுந்தழலைச் சீலர்தமக் கொருநிழலை**
**ஆயரிய பரம்பொருளை யாவலினேத் தாய்மனமே**

**ஆவலினீ யேத்துவையே லல்லற் கரையேறி**
**மேவரும்பே ரானந்த வெள்ளமதிற் றேய்வாயே.**

நீத்தார் நிகழ்த்தும் அறநூல்வழி யொழுகாத அன்பில் கொடியரை 'என்பிலதனை வெயில் காயுமாறு' சுடும் அறக்கடவுளை நூல்வழி யொழுகும் மாலகன்ற சீலர்க்கு ஆல்போல் இன்பருளும் அருள்நிழலை, ஆராய்தற்கரிய 'மாற்ற மனங்கழிய நின்ற மறையோ'னாகிய பெரும்பொருளை நீங்காக் காதலுடன் நெஞ்சே ஏத்துவாயாக. அங்ஙனம் ஏத்தினால் பிறவிப் பெருங்கடலாகிய பெருந்துன்பக் கரையேறி, அன்பரல்லாருக்குப் பொருந்துதற்கரிய பெரும் பேரின்பமாகிய **"பேரா ஒழியாப் பிரிவில்லா, மறவா நினையா அளவிலா மாளா இன்ப மாகடலுள்"** மூழ்கி என்றும் இன்புற்றிருப்பாய்.

தழல் - தீ. சீலர் - நல்லொழுக்கமுடைய சான்றோர். ஆயரிய - ஆராய்தற்கரிய. ஆவல் - நீங்காக் காதல். அல்லல் - பிறவித்துன்பம். மேவரும் - பொருந்துதற்கரிய. பேரானந்தம் - பேரின்பம். வெள்ளம் - கடல். சஅ

## வேறு

மேலோனை நூலோனைத் தொழுதலே விழுப்பயன்

**ஐம்புலனுந் தானா யவைநுகரு மின்பமுமாய்**
**வெம்புலநோய் மாமருந்தா மேலோனை நூலோனை**
**நம்புமவர்க் கடைக்கலத்தை நாடீர் நமரங்காள்.**

உயிர்த்தொடர்பாம் ஆண்டவனின் அடிமையாய், மக்களாய், ஆருயிர்த் தோழராய், அகம்நிறை காதலஞ் செவ்வியராய் வாழும் நம்மவர்களே! ஒன்றாய் நிற்குந் தன்மையில் ஐம்புலனும் தானாய் வேறாய் நிற்கும் தன்மையில் அப்புலன்கள் "கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறிந்து" நுகரும் இன்பமாய், அவ்வின்ப இடையீடு ஏற்படின், அவற்றை நீக்கி இன்புறுத்தும் அருள் மருந்தாய் விளங்கும் முழுமுதலை, மறைந்த குறைவிலா நிறைவை, நம்புவார்க்கு அடைக்கலமாஞ் செம்பொருளை நாடுவீர்களாக.

ஐம்புலம் - மெய், வாய், கண், மூக்கு, செவி. நுகரும் - அழுந்தி அறியும்; அனுபவிக்கும். நமரங்காள் - நம்மவர்களே! சகூ

# அதி. ச—குடிகளியல்பு

### இறைப்பணத்தால் குடிகளே இன்பம் எய்துவர்

வேருறுநீர் மரமெங்கும் விரவுமுத ரங்கோள்சுவை
யாருணவு தேகமெலா மண்ணுறுங்கோன் கோள்ளுமிறை
பாருயிர்க் கெலாம்பின்பு பயன்படலாற் றகும்பருவத்து
ஏருறவே தக்கவிறை யினிதீவர் குடிகளரோ.

*பெருமரத்தின் தூரில் விடுநீர், வேரின்வழி மரமெங்கணும் விரவி அம்மரத்தைச் செழிக்கச் செய்யும். வாய் வழியாக வயிற்றினுட் செல்லும் சுவை நிறைந்த உணவு, குருதியாக மாறி உடம்பெங்கணும் சென்று, அவ்வுடம்பினை அழகுற வளர்க்கும். அவைபோல் வேந்தன் பெறும் வரிப்பொருளால் குடிமக்களுக்கு வேண்டும் நீர்நிலை, வழிநடை, ஊர்தி, அஞ்சல், கல்வி, மருந்து, ஒழுக்கம், கடவுள் நினைவு, அச்சமின்மை, அன்பின்ப வாழ்க்கை, காவல் முதலிய பலவகைத் துறைகள் வழியாகப் பயனீந்து இம்மையே நன்மைதரும் எல்லா இன்பமும் எய்துவிக்கும். அதனால் முறை தவிரா இறைப்பொருளை ஒருங்கு சேர்ந்து உவந்து ஈவர்.*

*மண்ணுறும்-அழகு செய்யும். இறை-வரிப்பொருள்.* க

### உயிராம் வேந்தை உள்ளன்புடன் காப்பர்

தருவினொடு கிளைகளுஞ்சார் வல்லியுஞ்சாய்ந் தழிதலெனப்
பெருமகனே ரிடரெய்திற் பிழைக்கும்வகை பிறர்க்குண்டோ
மருவலரான் மற்றேன்றுன் மகிபனயர் வெய்தாமல்
ஒருமையொடு மன்னனை யுயர்குடிக ளோம்புவரால்.

*பழுதுபட்டுப் பெருமரம் சாயநேரின் அம்மரத்தின் கிளைகளும் அம்மரத்தினைச் சார்ந்த கொடிகளும் கூடச்சாய்ந்து அழியும். அதுபோல், மலர்தலை யுலகுக்கு உயிரென விளங்குவ நெல்லும் நீருமாகும். அவ்விரண்டும் வேந்தன் காவல் இல்லையாயின் விளைக்கவோ, வீட்டில் கொண்டுவந்து தொகுக்கவோ, தொகுத்தவற்றை ஆக்கவோ, ஆக்கியவற்றை அமைதியாக இருந்து மக்கள் ஒக்கல் விருந்து முதலானவருடன் தக்கவாறுண்ணவோ, உழைக்கவோ, உலாவவோ, உறங்கவோ, அறம்பல புரிந்து வாழவோ எத்திறத்தார்க்கும் முடியா. ஆயின், வேந்தனே மாந்தர்க்கு வாய்மை உயிராவன். அவன் எவ்வகை இடையூறுமின்றிச்*

செவ்விதின் செங்கோலோச்சுதல் வேண்டும். இடருறவானால் குடிகளுக்கு வாழும் வகை இல்லை. அதனால், பகைவரால் பிற வாற்றால் வேந்தன் துன்புறாமல் ஆர்வமும் அன்பும் அறிவாற்ற லும் முன்பும் வாய்ந்த நற்குடிகள் ஒருங்கு சேர்ந்து அவனைக் கண்ணிமையிற் காப்பர்.

தரு - மரம். வல்லி - கொடி. பெருமகன் - வேந்தன். இடர்-துன்பம். மருவலர் - பகைவர். மகிபன் - வேந்தன். உ

### மன்னன் செயலை மதித்தே நடப்பர்

அல்லாரு மழையெவர்க்கு மமுதெனினுங் காலமுணர்ந்
தெல்லாரு நலம்பெறச்செய் திடுங்கொல்லோ வொருநிருபன்
பல்லாரு மகிழ்வுறவே பண்ணலசாத் தியமெனலால்
நல்லாரன் னேன்செயலை நயமெனக்கொண் டொழுகுவரால்.

கருமைநிறம் பொருந்திய மேகம் அனைத்துயிர்க்கும் அமிழ்தமாகும். எனினும், அதனிடத்துக் 'கெடுப்பதும் எடுப் பது' மாகிய இருசெயல்கள் காணப்படுகின்றன. அம்மட்டோ, வேண்டும் காலம் அறிந்து பெய்யாது. அதனால், எல்லாருக்கும் அவரவர் விரும்பியவாறு நலம்செய்ய இயலாது. அதுபோல், வேந்தனும், மாந்தரெல்லார்க்கும் ஒருசேர விரும்பியவாறு நலம் செய்ய முடியாதவனாகின்றான். ஆயினும், நல்லோர் அவன் செயலை முறைமை வாய்ந்த இறைமை எனவே போற்றி நடப்பர்.

அல் - கருமை. அமுது - சாவா மருந்து. நிருபன்-வேந்தன். பண்ணல் - செய்தல். அசாத்தியம்-முடியாதது. நயம்-முறைமை. ஒழுகுதல் - நடத்தல். ௩

# அதி. ௫—ஞானாசிரியன் தன்மை

மேலோர் நடப்பதே ஏனோர்க்கும் விதியாம்

மகவின் கரம்பற்றி முன்னா ணடந்து
வளமேவு நடைகாட்டி மகிழன்னை போலுந்
தகமுன்பு தாமாடி நடனம் பயிற்றுந்
தகையோர்கள் போலுஞ் சகத்தோர் செவிக்கட்
புகவேநல் வழியோது புரையற்ற புனிதர்
பொறைசீல மன்பீகை புகழ்வாய்மை விரதம்
பகர்கின்ற சுகுணங்கள் யாவிற்கு மவரோர்
பதியாகி விதியாகி மதியோது வாரால்.

*பிள்ளையை நடைபயிற்றுந் தாய், அப்பிள்ளையின் கையைப் பிடித்து நடக்கச்செய்து தானும் உடன்நடந்து மகிழ்வள். கூத்துப் பயிற்றும் கூத்தர், ஆடுவாரை ஆடச்செய்து தாமும் உடன் ஆடிக்காட்டுவர். அவைபோல், மெய்யுணர்வு கைவரப்பெற்ற குற்றமில் மேலோர், பேரன்புவாய்ந்த மாணவராம் அடியவர் குழாங்களுக்குச் செவியறிவுறூஉவாம் (உபதேசம்) உறுதிமொழி மொழிந்து, தாம் பொறை, சீலம், அன்பு, ஈகை, வாய்மை, நோன்பு முதலிய நற்பண்புகள் யாவற்றுக்கும் ஓர் 'உறைவிட'மாய் அவற்றிற்கு அன்னார் நடைமுறையே மாறா ஊழாய் அறிவு கொளுத்துவர்.*

*மகவு - பிள்ளை. கரம்-கை. புரையற்ற - குற்றமற்ற. புனிதர்- மேலோர். பதி - உறைவிடம். விதி - ஊழ். மதி - அறிவு.* ௧

எல்லார்க்கும் இனியராய் இயல்பவர் மேலோர்

அயலார் மதத்தைக் குணத்தைப் பழிக்கா
ரறமீது மறமீ தெனச்சொல்வர் பொதுவாச்
சுயவூதி யந்தன்னை நட்டத்தை மதியார்
சூழ்ந்தோர்க ளீடேற மாறென்று முயல்வார்
இயல்செல்வர் மிடியாளர் நல்லார்க ளல்லாரென்
பேதமோ ராரியா வர்க்கு மினியார்
பயனென்று விழைவோரை மறைதன்னி லேலார்
பழியற்ற மொழிபெற்ற வழியுற்ற மேலோர்.

செந்நெறியொழுகும் செல்வர், தங்கள் கொள்கையல்லாத பிற கொள்கையாளர் சமயக் கருத்துக்களை ஒருசிறிதும் "நன்றல வாயினும் நான் மாறு உரைக்கிலேன்" என்பதற்கிணங்கப் பழியார். பொதுவாக நன்னெறி யொழுகி இன்பெய்தும் புண்ணியம் ஈது, புன்னெறிச்சென்று துன்பெய்தும் பாவம் ஈது என உளங்கொள விளம்புவர். தமக்கு வரும் ஆக்க அழிவுகளாகிய ஊதிய இழப்புகளை எண்ணார். தம்மைச் சார்ந்தவர்கள் செல்வமும் சிறப்பும் எய்தி ஈடேறவே எண்ணி என்றும் உலையா முயற்சி தலையாகக்கொள்வர். செல்வர், வறியர், நல்லார், பொல்லார் முதலிய எவ்வகை வேறுபாடும் கனவினும் கருதார். இறைவன்போன்று யாவர்க்கும் இனிய இயல்பினராவர். சிற்றூதியமேனும் விழைபவர் நற்றிறம் படரும் நல்லோர் ஆகார் என்று, அவரைத் தம் சுற்றமாகக் கொள்ளார். இவர்களே குற்றமற்ற நன்மொழிசேர் செந்நெறியினராவர்.

சுயவூதியம் - தம் வருவாய். உ

---

## அதி. கூ—பொய்க்குருவின் தன்மை

இழிகுரவர் எந்நாளும் இயல்நெறி ஒழுகார்

ஒளியை வாற்புறம் போக்கியோர் செவ்வுரு
நளியி ருட்டி னகருதல் போற்கற்ற
தெளிவெ லாமொரு பாங்க ரெறீஇச்செல்வர்
இளிகோள் தீநெறி யினக் குரவரே.

செவ்வட்டை என்னும் சிற்றுயிர் எல்லாரும் எஞ்ஞான்றும் எவ்விடத்தும் இயல்பாகவே விரும்பும் இன்ப ஏதுவாம் ஒளியை வாற்புறமாகிய பின்புறம் தள்ளி எவரும் வெறுக்கும் துன்ப ஏதுவாம் நிறைஇருளை விரும்பி முன் ஊர்ந்து செல்லும். அதுபோல், கற்ற நூற்பொருளின் தெளிவாம் நன்மைகளையெல்லாம் ஒருபுறம் புறக்கணித்து ஒதுக்கிவிட்டு மனம் போனபடி இழிந்த தீநெறியிலே செல்வர்; பிறப்பற முயலாப் பேதையிற் பேதையாம் குருமார்.

செவ்வுரு - செவ்வட்டை. நளியிருள் - நிறைந்த இருள். நகருதல் - ஊர்தல். எறீஇ - எறிந்து; ஒதுக்கி. இளி - இழிந்த. குரவர் - குருமார். க

ஓதியவழி நில்லார் ஊதியம் எய்தார்

உணர்ந்துந் தாம்பிறர்க் கோதியு நல்வழி
தணர்ந்து ளோர்சுடர் தாங்கித்தன் மேலிருள்
புணர்ந்த தம்பங்கொல் புத்தகந் தாங்கிய
கோணர்ந்த சட்டங்கொல் பால்கொள்க லங்கொலோ.

நன்னெறி யொழுகாது தீநெறியொழுகும் இழிந்த குரவர்கள், நூல்வழியாக நன்மைகளை யுணர்ந்தும், அவற்றைப் பிறர்க்கு எடுத்துரைத்தும் தாம் அவ்வழி யொழுகாது விலகி நடப்பர். அவர், தம் தலைமேல் விளக்கொளியைத் தாங்கி யாவர்க்கும் இருளையகற்றிப் பொருளை விளக்கும் விளக்குத்தூண், தன்மாட்டு இருளையே வைத்துக்கொண்டிருக்கிறது. அது போலவும், புத்தகத்தைச் சுமந்துகொண்டுவரும் கவளிகையாகிய புத்தகப் பலகை, அப்புத்தகத்தின் உள்ளுறையை ஒருசிறிதும் உணராமலிருக்கிறது. அதுபோலவும், பால் வைத்திருக்கும் நன்கலம், அப் பாற்சுவையை யுணராது. அதுபோலவும் பயனில் பதடியராவர்.

தணர்ந்து - தணந்து, நீங்கி; விலகி. தம்பம் - தூண். சட்டம் - பலகை. உ

---

## அதி. எ—தாய்தந்தையரை வணங்கல்

ஈன்றோர் கடுஞ்சொல் ஏற்றலே கடனும்

தளர்வுறு மூப்பா லீன்றோர்
சாற்றும்வன் மொழிபொ றாது
கிளர்வுறு சினமீக் கொள்ளும்
பாவிகே ளவருன் றாலுன்
இளமையி லுறுந்துன் பங்கட்
கிடைந்துசற் றனையோம் பாரேல்
வளருவாய் கொன்னீ யின்னே
வாழ்வைகொல் முனிவை கொல்லோ.

உடலும், உளமும், உணர்வும் தளர்வுற்று மூப்பெய்திய இரு முதுகுரவராம் தாய் தந்தையர் பசி, நோய், குற்றங்காண்டல் முதலியவற்றால் பொறுமை இழந்து, கடுஞ்சொல் சொல்வர்.

அச்சொற் பொருது மக்கள் மனக்கிளர்ச்சியை அவிக்கும் சினங்கொள்ளுதல் கூடாது. கொள்வாரேல் பெரும் பாவிய ராவர். அப் பாவிகள் ஒன்று உணரவேண்டும். பெற்றோர்கள் பிள்ளைகளை வளர்க்குங்கால் அப் பிள்ளைகளின் இளமைப் பருவத்தில் தாங்கள் எய்தும் சொல்லொணு அல்லலுக்கஞ்சிப் பேணுது விட்டுவிடுவராயின், பிள்ளைகள் கட்டிளமைப்பருவம் எய்துமா? மணம் பூண்டு வாழுமா? இப்பொழுது செய்யும் தகாத முனிவினைத்தான் செய்யுமா? ஓர்ந்து பார்ப்பார்களாக.

தளர்தல் - சோர்வடைதல். மூப்பு - முதுமை. ஈன்றோர் - தாய்தந்தையர். வன்மொழி - கடுஞ்சொல். இடைந்து-வருந்தி. முனிவு - சினம். ௯

## வேறு

ஈன்றார் உடன்பிறந்தார் இவர்ப்பேணல் எழிலாம்

உரியவர்யா வரினுமனை தந்தையுற
வேமுன்ன முவர்தாம் நம்மிற்
பெரியவராய் நம்பயனேன் றேகருதும்
பெற்றியினுற் பெட்பி னன்னர்
பிரியம்வெறுப் பினையுணர்ந்தவ் வாருழுகி
யவரோடும் பிறந்த மைந்தர்
அரிவையரவ் வனைதந்தை யனையரேன
நினைத்தோம்ப லழகாம் நெஞ்சே.

மனமே! நமக்கு மும்மைக்கு முரியார் எல்லாரினும் அன்னையும் அத்தனுமே முதன்மையராவர். அவரே எல்லா வகையானும் நமக்குப் பெரியவராவர். அவர் நம்முடைய நன்மையொன்றே கருதும் நல்லுளத்தன்மையர். அத்தன்மையினுல் அவர் தம் விருப்பை வெறுப்பைக் குறிப்பாலுணர்ந்து அவர் விருப்பின்படி யொழுகல் வேண்டும். அவருடன் பிறந்த ஆண் பெண் இருபாலாரையும் அவரெனவே கொண்டு பேணல் வேண்டும். அன்பு செய்து அவர்கள் மகிழுமாறு அடங்கி யொழுகல் வேண்டும்; அதுவே "என்னோற்றான் கொல் என்னும் சொல்"லை யுண்டாக்கும் நன்மக்கட்குரிய தக்க எழிலாகும்.

உரிமை - நன்மைநாடும் வேட்கை. பிரியம் - விருப்பம். மைந்தர் - ஆடவர்; ஆண். அரிவையர் - மகளிர்; பெண். ௨

## அதி. அ—மக்களை வளர்த்தலும் படிப்பித்தலும்

ஈன்ற மகவோம்பார்க் கிருதிணையும் இன்றாம்

படுதொழில் விலங்குந்தன் பறழ்வ ளர்ந்துடல்
நெடுமையாங் காறுநன் கொம்பி நிற்குமால்
தொடுமுயர் திணைமரீஇச் சுதர்க ணன்பிலாக்
கொடுமையோர்க் கொருதிணை கூற வின்றரோ.

*கொடுந்தொழில் செய்யும் அரிமா முதலிய விலங்குகளும் தங் குட்டிகள் வளர்ந்து தம்மைத்தாமே காப்பாற்றிக்கொள்ளும் நிலைமை வரும்வரையில் அவற்றைப் பேணுகின்றன. ஆறறிவாகிய கொள்ளுவன தள்ளுவனவாம் வழியறியும் கருத்துடைய உயர் திணை மக்களாய்ப் பிறந்தும் தாம் பெற்ற பிள்ளைகளிடத்து அன்பின்றிக் கொடுமை செய்வரேல், அவர் உயர்திணை அஃறிணை இரண்டுமிலராய்க் காணப்படுவர். அவர் இல்திணையராம் ஒழுக்கமற்றவராவர்.*

*படுதொழில் - கொடுஞ்செயல். சுதர்கள் - மக்கள். ஓம்பல் - பேணல். திணை - ஒழுக்கம்.* க

திருந்தா மக்களைத் தெய்வமும் ஒறுக்கும்

முறையில்சே யரைத்தன்ன முனிய வஞ்சுவீர்
கறைமிகு மவரைப்பார் காக்கும் வேந்தனும்
இறைவனுந் தண்டனை யியற்றுவா ரினித்
தரையிலெவ் வாறதைச் சகித்துய் வீர்களே.

*நன்னெறி யொழுகாது புன்னெறி யொழுகும் நலமில்லாத தீயமக்களைச் சிறிது சினந்து நல்வழிப் படுத்த அஞ்சும் பெற்றோர்களே! கழுவப்படாக் குற்றம் கெழுமிய மக்களை உலகங் காக்கும் வேந்தனும் அண்டமுங்காக்கும் ஆண்டானும் முறை முறையாய்த் தண்டிப்பர். அத்தண்டனைகளைத் தடுக்க உங்களால் முடியாது. அந்தோ! அவற்றைக் கண்டும் கேட்டும் எவ்வாறு பொறுத்து வாழ்வீர்கள்.*

*முறை - ஒழுங்கு. சேய் - மக்கள். முனிய - சினக்க. கறை- கழுவமுடியாக் குற்றம். வேந்தன் - மன்னன். இறைவன் - ஆண்டவன். சகித்தல் - பொறுத்தல். தன்னம் - சிறுமை; சிறிது.* உ

தொழுதுணர்த்தி மக்களைத் தொழுதுழைக்கச் செய்க

முத்தொழிற் பரற்றொழு முறையு மன்னவன்
கைத்தொழிற் பொருளிலக் கணமுந் தத்தமக்
கெத்தொழி லெவ்வொழுக் கியைந்த வாகுமோ
வத்தொழில் வண்மையு மறைக பாலர்க்கே.

இறைவனைத் தொழுது இன்பமுறும் மக்கட் பெற்ற சான்றோர்களே! உங்கள் மக்கட்குப் படைத்தல், காத்தல், துடைத்தல் ஆகிய முத்தொழில்களைச் செய்வித்தருளும் முழுமுதல்வனை நாற்பொருளும் நன்கினிது கைகூட முறையே காலை நண்பகல் மாலை நள்ளிரவு என்னும் நான்கு வேளைகளிலும் தவிராது கண்ணல் வாழ்த்தல், கைகூப்பல் என்னும் தொழுகையினைச் செய்யுமாறு தொழுது காட்டிக் கற்பிப்பீர்களாக. ஆண்டவன் ஆக்காது ஆக்கியருளிய உலகியற் பொருள்களின் தன்மைகளை உள்ளவாறு எடுத்து விளக்குவீர்களாக. அதன்வழி ஆண்டவன் அருள்திறம் அம்மக்கள் உள்ளத்தில் அழுத்தமாய்ப்பதியும். அம் மக்களுடைய முற்பிறப்பின் பழக்க வலியால் வளர்ந்து விளங்கும் இயற்கை அறிவுக்கியைந்தவாறு தொழில்களையும் நடைமுறைகளையும் மேற்கொள்ளுமாறும் அத்தொழில்களின் வளங்களையும் அறிவித்து முயற்சியில் முற்படுத்துவீர்களாக.

முத்தொழில்-படைத்தல், காத்தல், துடைத்தல். பரன். கடவுள். தொழுகை - வணக்கம்; பூசை. இலக்கணம் - தன்மை- வண்மை - வளப்பம். அறைக - சொல்லுக. ௩

வேறு

கல்லாதார் செய்குற்றம் ஈன்றாரைக் கட்டுறுத்தும்

பச்சைமண் கொடுநி னைத்த படிபல கலஞ்செய் வார்போல்
விச்சையு மறமு மூப்பு மேவுமுன் தம்ம கார்க்குப்
பிச்சைகொண் டேனும் ஓதல் பெற்றவர் கடனு மன்றேல்
இச்சைசேர் பழிபா வங்க ளீன்றவர்க் கெய்து மாலோ.

மாந்தர் விரும்பியவாறு பல்வேறு மட்கலங்களைச் செய்யும் வேட்கோவாகிய குயவன் பச்சை மண்ணைக் கொண்டுவந்தே கலங்களைச் செய்வான். அதுபோல், பிள்ளைகளைப் பெற்று வளர்க்கும் தாய்தந்தையர், அப்பிள்ளைகளின் இளமைக்காலத்தே அவர்களை நற்கல்வியும் நல்லொழுக்கமும் பொருந்திய நயனுடை

யாளராகச் செய்யவேண்டும். ஒரோவழிப் பொருள் முடையால் நடைபெற முடியாவிட்டால் பெருந்தகையார்பால் பிச்சை எடுத்தேனும் கல்வி பயிற்றுதல் வேண்டும். அங்ஙனம் செய்யாதொழிவரேல் அப்பிள்ளைகள் செய்யும் பெருந் தீமைகளால் நேரும் பழி பாவங்கள் பெற்றோர்களையே சாரும்.

விச்சை - கல்வி. அறம் - நல்லொழுக்கம். ஈன்றவர் - தாய் தந்தையர். எய்தும் - சாரும். ௯

---

## அதி. ௬—மாதரைப் படிப்பித்தல்

### அறிவாற்றல் பெருமைகளால் ஆண்பெண் ஒப்பே

நூலெலா மைந்தரே நுவன்ற தாலவர்
வேலெனும் விழியர்க்கோர் விகற்பங் கூறுவர்
பாலெனும் வேற்றுமை யன்றிப் பங்கமேன்
மாலெனு மைந்தர்க்கு மடந்தை யர்க்குமே.

பிற்காலத்து நூல்கள் பெரும்பாலும் ஆடவர்களாலேயே ஆக்கப்பெற்று அறிவுறுத்தப்பெற்று வந்தன. அதனால் கால வேறுபாட்டால் மாறுபாடுறுக் கூறிய வேல்போலும் கண்ணையுடைய பெண்பாலர்க்குச் சிறிது குறைவும் கூறுவாராயினர். ஆண்பால் பெண்பால் என்ற பால் வேறுபாடே யல்லாமல் அறிவு ஆண்மை பெருமை முதலிய ஆற்றல்களில் எவ்வகை வேறுபாடும் இல்லை. ஆதலின், அவர்களுக்கும் கல்வியை ஆண்களுக்கொப்பவே கற்பித்தல் வேண்டும்.

மைந்தர் - ஆண்கள். நுவலுதல் - சொல்லுதல். விகற்பம்- வேறுபாடு; குறைவு. பங்கம் - குற்றம். மடந்தை - பெண். பால் - ஆண்பால், பெண்பால் க

### மங்கையர்க்கு நன்குணர்த்தல் ஈன்றோர் மாண்பு

தீதறத் தன்மையுந் தெய்வ நேயமும்
ஓதரி தானவில் லறவொ ழுக்கமும்
காதலர் வளர்த்தலுங் காந்தர்ப் பேணலும்
மாதருக் குணர்த்தலீன் றோர்க்கு மாண்பரோ.

பிறப்பு முதலாகிய தீமை எல்லாம் அகன்று சிறப்பு முதலாகிய செல்வமெல்லாம் பெற்று வாழும்படி நல்லொழுக்கமும்,

கடவுளன்பும், சொல்லுதற்கரிய இல்லறமாண்பும், பிள்ளைகளை வளர்த்தலும் கணவனைப் பேணுதலும் ஆகிய உய்யுமுறைமைகளைப் பெண்மக்கட்குக் கல்விவழியாகக் கட்டுரைத்தல் வேண்டுவது தாய்தந்தையர் தனிக்கடமையாம். அதுவே அவர்கட்கு நன்மையுமாகும்.

தீதற - தீமையகல. நேயம் - அன்பு. ஓதரிய - சொல்லிமுடியாத. காதலர் - பிள்ளைகள். காந்தன் - கணவன். மாதர்-பெண்கள். ஈன்றோர் - தாய்தந்தையர். மாண்பு - நன்மை. உ

வேறு

பெண்பாலார் கல்வியெலாம் ஆண்பாற்குப் பெரும்பொருளாம்.

வாணியுமை கமலையேளவை முதலியவர்
 மாதரன்றே மைந்தர் நாவைக்
காணிகொள்வா டனைப்போன்ற மடந்தையர்நாச்
 சேராளோ கதிரோ னில்பார்
சேணிகருங் கல்வியிலா மாதரகம்
 படித்துணரத் தீட்டப் பாடப்
பூணிழையா ரறிகுவரேல் நிதியமது
 போலுமுண்டோ புருடர்க் கம்மா.

அறிவும் ஆற்றலும் ஆக்கமும் ஆகிய செல்வநலன்களை முறையே அருளும் கலைமகள், மலைமகள், அலைமகள் ஆகிய தெய்வங்கள் பெண்பாலாகும். இம்மூன்றும் ஒருங்கு ஓர் உருவெடுத்தாற்போன்று கண்காண் தெய்வமாய்த்திகழ்ந்து எல்லார்க்கும் எல்லா நிலையிலும் ஏற்புடைய அறநூல்கள் பலவருளி நெடுநாள் வாழ்ந்து தமிழோம்பிய தமிழ்த்தாய் ஔவையார் பெண்பாலராவர். ஆகவே, பெண்பாலார்க்கே கல்வி முதலுரிமை. ஆண்பாலார் நாவிலுறைந்து நன்மொழி பயில நயந்தருளும் கலைமகளாகிய நாமகள் தன் இனமாகிய பெண்பாலாரைச் சாராளென்று எண்ணுதல் பேதைமையன்றோ? படிப்பில்லாத பெண்கள் ஞாயிறில்லாத மண்ணும் விண்ணும்போல் மனமழுங்கி மதியின்மையான் மாண்பிலாராவர். அழகிய இழையணிந்த பெண்பாலார் உளங்கிளர்ந்து படித்துணரவும் எழுதவும் பாடவும் அறிவாராஞல் அதைவிடச் சிறந்த செல்வம் ஆண்பாலார்க்கு வேறு என்னிருக்கின்றது? (ஒன்றுமில்லையென்பது கருத்து.)

வாணி - கலைமகள்; நாமகள். உமை - மலைமகள். கமலை - அலைமகள்; திருமகள். மாதர் - பெண்பாலார். காணி - உறைவிடம். மடந்தையர் - பெண்பாலார். கதிரோன் - ஞாயிறு. பார் - மண். சேண் - விண். நிகரும் - ஒக்கும். தீட்ட - எழுத. நிதியம் - செல்வம். புருடர் - ஆண்பாலார். ௩

---

## அதி. ௪0—உடன்பிறந்தாரியல்பு

முன்பின் பிறந்தார் தந்தைதாய் மக்களாமுன்.

முன்னவன் சிறுபிதா முன்னை யன்னையாம்
பின்னவ னேயனும் பின்னை புத்திரி
பன்னருஞ் சோதரர் பன்னி மார்களீங்
குன்னருஞ் சோதரம் போலு முள்ளமே.

மனமே! நம் முன்பிறந்தோனாகிய தமையன் சிறிய தந்தையாவன். தமக்கை சிறிய தாயாவள். பின்பிறந்தோனாகிய தம்பி மகனாவன். தங்கை மகளாவள். சொல்லுதற்கரிய உடன்பிறந்தாரின் மனைவிமார் உடன்பிறந்தாரே யொக்கும். இங்ஙனம் கொண்டு ஒழுகுவதே வீடும் நாடும் மேன்மையுற்று விளங்கி நலம் பல பயக்கும் நன்னெறியாகும்.

முன்னவன் - தமையன். பிதா - தந்தை. பின்னவன் - தம்பி. நேயன் - காதலன்; மகன். பின்னை - தங்கை. புத்திரி - மகள். பன்னல் - சொல்லுதல். சோதரர் - உடன்பிறந்தார். பன்னிமார் - மனைவிமார். க

### வேறு

கிளை இலைபோல் உடன்பிறந்தார் செழுமுதல் பண்பே

கோம்பருள் ளுலர்ந்திடக் கூடவாடு மிலைகளும்
பம்பியக்கோம் போங்கிடப் பன்னமுஞ் செழிக்குமால்
தம்பியண்ண னென்னவே சார்ந்துளோர்த மின்பமும்
வெம்புதுன்பு மொன்றென மேவிவாழ்தன் மேன்மையால்.

மரக்கிளை ஈரம் புலர்ந்து உள் உணங்க அதன்மேலுள்ள இலை முதலியவும் வாடும். அது செழித்திருக்க அவைகளும் செழித்

திருக்கும். அதுபோல் தம்பி, அண்ணன் என்னும் இருவரும் ஒருவரையொருவர் சார்ந்து ஒற்றுமையாய் இன்ப துன்பங்களை ஒக்க அடைந்து பொருந்தி வாழ்தல் மிகவும் மேன்மையாகும்.

கொம்பு - மரக்கிளை. உலர்தல் - உணங்கல். பம்பல்-வாடல். பன்னம் - இலை. வெம்பு - வருந்து. மேவி - பொருந்தி. உ

உடைமையிற்பங் கில்பிறப்பை ஓம்பல்பிறப் பாண்கடனே

உடன்பிறந்த சோதரிக் கோத்தபாக மிலைபிறப்
பிடந்துறந்து நாளையோ ரேழையிற் கிழத்தியாய்த்
தொடர்ந்துசெல்வ ளாதலாற் றொடர்புறுஞ் சகோதரர்
அடர்ந்தவன்போ டவளைநன் காதரிக்க வேண்டுமால்.

உழுவலன்புசேர் உடன்பிறந்தாளைத் தம்பினும் சிறப்பாக அன்புடன் பேணிவரவேண்டும். ஏனென்றால்? முறையற்ற இந்தச் சட்டப்படி அவளுக்குத் தந்தை உடைமையில் ஆண்பாலாரைப்போல் பங்குகிடையாது. பெண்பாலார்க்குப் பங்கில்லையென்னும் பிழைவழக் கிருப்பதால் அவள் ஓர் ஏழையை மணந்து, தந்தைவீடகன்று எளியவாழ்க்கை நடத்த நேரினும் நேரும். ஆகவே, அவளை எந்நாளும் உடன்பிறந்தாராகிய ஆடவர் செறிந்த அன்புடன் பாதுகாத்து வருதல் அறமுறையாகும்.

பாகம் - பங்கு. இல் - வீடு. கிழத்தி - மனைவி. அடர்ந்த - செறிந்த. ஆதரித்தல் - பாதுகாத்தல். ௩

எல்லார்க்கும் அன்புசெய ஈந்தான் இவ்வுடல்

நாடுவேறு குலமோடு நலமும்வேறு ளாரையும்
நீடுநாரோ டோம்புதல் நீதியென்னி னொருவயிற்று
ஊடுபோந்த சோதர ரோத்துவாழ்கி லாரேனின்*
வீடுமூடும் வாய்நலம் வீடுங்கேடுங் கூடுமே.

நாடு பிறப்பு நடை யுடை பழக்கவழக்கம் முதலிய நலமெலாம் வேறுபட்ட மக்களும் ஒருவரோடொருவர் உடன்பிறப்புப்போல் ஒற்றுமையுற்று ஒருவருக்கொருவர் வேண்டுவவுதவி வாழ்வதே உயர்ந்த மக்கட்பிறப்பின் சிறந்த தன்மையும் முறைமையுமாகும். அப்படியிருக்கவும், ஒரு தாய்வயிற்றுப்

* பகச்சொல்லிக். திருக்குறள், ௧௮௭.

பிறந்த உடன்பிறப்பாளர்கள் ஒற்றுமையுடையராய் வாழ்கிலா ரென்றால் அந்தோ! என்சொல்வது? அப்படி வாழாவிட்டால் அவர்களுக்குப் பேரின்பப் பெருவீடும் அடைபடும். வாய்ந்த குடும்பநலம் நாட்டுநலம் எல்லாம் பயனின்றி அழியும். சொல் லொணுப் பெருங்கேடுகளும் பொருந்தும். ஆகவே, மிகுதியும் முயன்று அன்புடன் ஒற்றுமையாக வாழ்வதே ஏற்புடைத்தாகும்.

குலம் - பிறப்பு. நீடு - அழியாத. நார் - அன்பு. நீதி - முறைமை. வீடு-பேரின்பப்பெருவீடு. வீடும் - அழியும். கூடும் - பொருந்தும். ச

### தந்தைதாயின் உடன்பிறப்புச் சார்மக்கள் பேணலறம்

தந்தையோடு தாயோடு தாம்பிறந்த சோதரர்
மைந்தரானுந் தந்தைகொண் மறுமனை வயிற்றிடை
வந்தபேர்க ளாயினு மற்றுளோர்க ளாயினு
முந்துகாத லோடுநட் புவந்துவாழ்தல் நன்றரோ.

தந்தையின் கூடப்பிறந்தவர்கள், தாயுடன் பிறந்தவர்கள், அவர்தம் பிள்ளைகள், தந்தை மறுமணம் புரிந்துகொண்ட மாற்றாந்தாயின் பிள்ளைகள், ஏனையோர் யாவராயினும் எல்லா ருடனும் ஒரு தாய் வயிற்றுப் பிறந்தார்போல் பேரன்புகொண்டு நண்பும் மகிழ்வும் நீங்காது ஒற்றுமையுடன் வாழ்வதே நன்மை யாகும்.

மைந்தர் - மக்கள். மறுமனை - பின்மணந்த மனைவி, மாற்றாந் தாய். காதல்-பேரன்பு. உவப்பு-மகிழ்வு. நன்று - நன்மை. ரு

### தெய்வநிலை அண்டங்கள் தெரிக்கும் கல்லில்

சிறுவரைப் போதோர் கல்லைச் சேணிடை நிறுவு வோனை
அறுகுண னென்போம் பார்மே லன்னதன் கீழேப் பாலும்
துறுவிய அண்ட கோளத் தொகைகளெண் ணிறந்த வானின்
நிறுவுவோன் தன்னை யின்னே நெஞ்சமே யுன்று தென்னே.

மனமே! நம்மில் ஒருவன் ஒரு கல்லை மண்ணினின்று விண்ணிலெறிகின்றான். அக்கல் மண்ணின் இழுப்பாற்றலால் உடன் நிலத்தே வந்து விழுகின்றது. எறிந்தவன் மந்திரவலி யால், அக்கல்லைச் சிறுபொழுது நடுவே நிற்கச்செய்யின் அவனை, வியத்தகு செயல் செய்த தெய்வ ஆற்றல் படைத்த விழுமியோ

னுகக் கூறுவோம். அவ்வாறிருக்க, நிலத்துக்கு மேலும் கீழும் மற்றப் பக்கங்களிலும் அளவிலாத அண்டகோளங்களைப் படைத்து ஒன்றோடொன்று மோதாமலும் கீழ் வீழாமலும் நிற்பித்துக் காத்தருளும் முதல்வன் குறைவிலா நிறைவாம் அறு குணக் கடவுளாவன். அத்தகைய செம்பொருளை மறவாவுளத் தோடு இடைவிடாது நினையாமலிருப்பது என்கருதி?

சிறுவரை - சிறுபொழுது. சேண் - தொலைவு. அறுகுணம்- அன்பு, அருள், அறிவு, ஆற்றல், ஆக்கம், ஆண்மை என்னும் ஆறு பண்புகள். துறுவிய - வெளிப்பட்டுத் தோன்றுகின்ற. நிறுவு வோன் - நிற்கச்செய்வோன். உன்னுதல் - நினைத்தல். ௬

நீதிநூல் முற்றிற்று.

---






# பாட்டு முதற்குறிப்பு அகரவரிசை


| | பக்கம் |
|---|---|
| அகந்தனை யுடையவ | கO |
| அகலிடத் திருந்து | உஎச |
| அகவிரு ளகல | ஙச |
| அங்கதமே பொரு | கூஎ |
| அசையும் வளிபுவி | கஙஎ |
| அடர்ந்த மணலெனக் | உகூஉ |
| அணியிலார்க் கணி | உஉரு |
| அண்டபே ரண்ட | உசுஅ |
| அண்டாண்டங் | உOங |
| அண்ணல்தன் தமரை | கூரு |
| அத்தன்தாய் முன்னோர் | கஎ |
| அத்திசூ ழுலகிற் | கருO, உருஅ |
| அத்திரங்கள் செய் | கசஎ |
| அந்தநாள் நடந் | சுஅ |
| அந்தமுளா ளுரிமையா | உசரு |
| அமலனே எவர்க்குங் | கூக |
| அயலார்செய் குற்றங்கள் | கOO |
| அயலார் மதத்தைக் | உகூஎ |
| அயலா ரொண்பதிக் | உகஉ. |
| அயற்பொருள் விறங் | சசு |
| அரக்கும் அரக்கு | ககச |
| அரிமுழை நுழைதல் | கOச |
| அரிய குணஞ்சேர் | கஉஎ |
| அரிவையர் நேசமும் | ருக |
| அருந்தவே சூழும் | கஅக |
| அலருற ஈயெறும் | ககஉ |
| அல்லாரு மழையெவர் | உகூசு |
| அல்லினிற் களவுசெய் | ககஅ |
| அறநெறி யலாத | கூரு |
| அறப்பெருங் கட | உஉஅ |
| அறமு ளார்க | கசரு |
| அறமென்பதற்கும் | உகச |
| அறிவிலா ரரச | உரு |
| அறிவிலா விலங்கு | உஎரு |
| அனமிகிலோ | உOரு |
| அனமலார்க் | கஅக |
| அனுபவ மொன்றே | கஙஉ |
| அனைதந்தை இல்லத் | சுக |
| அன்பருண்ணில் என்பசி | எO |
| அன்னிய ரெம்மியை | அO |
| ஆசையால் வாங்கிடு | கககூ |
| ஆட்சியா மூல | கஉரு |
| ஆணலன் பெண்ணு | ககூ |
| ஆண்டெ லாம்பிற | கசச |
| ஆதரை மிசைநர | ருச |
| ஆதிதேவன் | சO |
| ஆதினா லென்றும் | உசுங |
| ஆதினா லொன்றும் | கக |
| ஆதியிற்புல் | உOஎ |
| ஆதியீ றில்லான் | கஅ |
| ஆபுஞர் சிலவெங் | உங |
| ஆயுதஞ் செய | உஎசு |
| ஆலயந் தன்பால் | உஅரு |
| ஆவலா லவகாலத் | உஙங |
| ஆவியனை யாளை | உஙக |
| ஆவியின்றி | ருசு |
| இகத்தின் வாழ்வினில் | சO |
| இக்கினை நகுமொழி | ருஉ |
| இக்குவல யக்கணிழி | கசுச |
| இங்கிரு பொருள் | சுசு |
| இடையிற்கோ | கருங |
| இதமிலா வுலோபர் | ககூO |
| இதயந்தன் வேகத் | உO |
| இந்த வுடலுள | சுஎ |
| இந்துமீன் பருதி | உஉங |
| இயலொடு தமிழ் | கசஅ |
| இரதியனை யார்பாற் | உஙச |
| இரவலர் தம்மை | கஅங |
| இரவினில் என்னுடன் | உருஉ |
| இரவினும் மற்றோர் | உரு |

| | பக்கம் |
|---|---|
| இரிஞ ராலுறும் | ௭௫ |
| இருதுணைவர் | ௭௪ |
| இருநிதி பெற்ற | ௨௨ |
| இருவ ரிடத்தும் | ௧௨௧ |
| இவரிய தருவைக் | ௨௯௭ |
| இவற லேதந் | ௧௧௭ |
| இழுதை சொல்லி | ௯௭ |
| இனியாளை நோக்கி | ௨௪௬ |
| இன்றருணே | ௨௧௭ |
| இன்னமுதத்தின் | ௨௨௪ |
| இன்னலெமக் | ௧௬௨ |
| இன்னலே ஏதிலார்க் | ௧௨௫ |
| ஈகையில் லாதுபொன் | ௧௩௧ |
| ஈங்கெதிருதவி | ௪௪ |
| ஈசனையே துதித் | ௨௬௨ |
| ஈண்டிவண் வருவ | ௭௭ |
| ஈன்றவர் நம்மால் | ௪௩ |
| உடலுறுப் புகள்மேல் | ௮௯ |
| உடன்பிறந்த சோதரிக் | ௩0௬ |
| உடுக்கணம் யாவும் | ௧௯ |
| உணர்ந்துந் தாம்பிறர்க் | ௨௯௯ |
| உணர்வறுஞ் செல்வமும் | ௮௨ |
| உண்டவர் தமைக் | ௮௧ |
| உண்ணல் பூச் | ௬௪ |
| உண்ணுமை விரவலர்க் | ௨௩௨ |
| உண்ணும்வே லையினு | ௨௮௨ |
| உயிரினை வதைத்திடல் | ௧0௫ |
| உயிருயத் தகுமு | ௨௭௬ |
| உரவுநீர்க் கருங் | ௧௬௭ |
| உரனெடுமா மதுகை | ௭௨ |
| உரியவர்யா வரினுமனை | ௩00 |
| உருமினை யஞ்சி | ௧௪௨ |
| உருமையின் | ௧௬௬, ௨௬0 |
| உருவில்லு னியமா | ௨௧ |
| உவந்து தன்னுளத் | ௮௨ |
| உழுது புண்செயப் | ௨௧0 |
| உளதிலை யென்ன | ௨௨௧ |
| உள்ளவங் கணங் | ௧௨௪ |
| உறங்குவது | ௧௭0 |
| உறவினரெல் | ௯0 |
| உற்றசஞ் சீவினி | ௨௯0 |
| உனையொருவ | ௧௯0 |
| ஊட்டி நீர்கறி | ௧௮௫ |
| ஊமரைப் பித்து | ௨௫௫ |
| எதிர்சென்று | ௨௫௮ |
| எத்தனைபேர் | ௧௯௬ |
| எத்தொழிலு முற்பழக் | ௨௧௫ |
| எந்தவே ளையினும் | ௨௬ |
| எப்பிழைக்கா | ௧௫௯ |
| எப்புவி களும்பு | ௪௨ |
| எமக்குண விலங்கைப் | ௨௫௬ |
| எமதெனுமெய் | ௨0௭ |
| எம்மையுந் தெரி | ௧௩௮ |
| எய்யா வம்பே | ௧௩௬ |
| எல்லோருங் கொள | ௧௮௭ |
| எவ்வனு ருறினு | ௨௮௭ |
| எவ்வருணர் | ௧௮௬ |
| எழிலி லாளில் | ௭௫ |
| எழிலு ளேமெனச் | ௧௫0 |
| எறும்புதன் பிலத் | ௧௪௯ |
| எனதுன தெனவொரு | ௧௨0 |
| எனையன்றி மற்றோரைச் | ௨௪௬ |
| என்பொரு ளென் | ௧௯௧ |
| என்றுமெய் வருந்த | ௯0 |
| என்றுமே பழமை | ௨௬௯ |
| என்ன நீவருந் | ௧௪௬ |
| என்னுருவைப் படத் | ௭௨ |
| ஏதிலார் பொருணோக்கி | ௨௧௯ |
| ஏதேனும் பயன்வேண்டிப் | ௯௮ |
| ஏந்தலாந் தந்தை | ௬௩ |
| ஏலிராட் டினவு | ௮௮ |
| ஏவுங் கால்கண் | ௭௬ |
| ஏவல்செய் வோர்க்குக் | ௧௮௨ |
| ஐம்புலக் கதவடைத்து | ௩௫ |
| ஐம்புலனுந் தானே | ௨௯௪ |
| ஐயமெய் யம்ம | ௪௪ |
| ஐயன தருளான் | ௯௪ |
| ஒப்பருநற் குணத் | ௧௯௨ |
| ஒருதருமற் றொருரு | ௭௭ |
| ஒருத்தி பஞ்ச | ௪௫ |

| | பக்கம் |
|---|---|
| ஒருமாது தன்றுணைவன் | ௨௪௪ |
| ஒருமை யாய்த்தன் | ௪௧ |
| ஒருவரு மறிகிலா | ௭௯ |
| ஒருவனுண்ட கலத் | ௨௩௯ |
| ஒருவனைப் புதிதாக் | ௨௨௨ |
| ஒருவ னொருவன் | ௧௨௬ |
| ஒருவன்கா ணுவிடத்து | ௧௭௪ |
| ஒளிமுடி யொடும்பி | ௯0 |
| ஒளியினொடிரு | ௨௧0 |
| ஒளியை வாற்புறம் | ௨௯௮ |
| ஒற்றையொண் சுடரினை | ௫௫ |
| ஒன்றாகி மூன்றாகி | ௨௯௩ |
| ஓங்குகாமத்தால் | ௨௩௧ |
| ஓடி யெங்கு | ௧௮௯ |
| ஓதரு விசையொடு | ௧௧௫ |
| ஓயப் பாரில் | ௮௩ |
| ஓரிழை யறுத்திடல் | ௫௫ |
| ஓருயிரீ ருடலன்ன | ௨௨0 |
| ஓர்பிழை குருவே | ௮௪ |
| ஓவியர் நீள் | ௬௯ |
| ஓவி யாரும் | ௭௬ |
| ககனமண் சராச | ௨௭௪ |
| கஞ்சனத்தில் | ௧௨௯ |
| கடலனலுற்று எரிந்த | ௧௨௮ |
| கடவுளை வருந்திச் | ௪௨ |
| கட்புலன்றனை | ௧௫௧ |
| கண்சி வந்திட | ௧௩௮ |
| கண்டமன் னுயிரைப் | ௨௮௪ |
| கண்டெடுத்தவோர் | ௧0௨ |
| கண்ணிணை செவிக | ௨௮0 |
| கதிரவற் கொளியின் | ௧௭ |
| கதிரவ னனையதங் | ௬௫ |
| கதிரவனொ லொளி | ௧௯௭ |
| கதிரவன் கிரணக் | ௨௬ |
| கயலிற் பாய்சிரல் | ௧௬௮ |
| கயவரைச் சேர்ந் | ௧௫௮ |
| கரிநிற முறம் | ௧௫௬ |
| கரும்புணக் கூலி | ௨௮௬ |
| கருவினை யழிக்குதல் | ௧0௫ |
| கலமுறுஞ் சிறுநீரை | ௧௮ |
| கலவிசெய்த மாதென் | ௨௪௩ |
| கலைதேர் கழகமோ | ௧௮௭ |
| கலைபயிற் றுதுகா | ௪௭ |
| கலையு ணர்ந்தறி | ௫௩ |
| கல்வியே அறவழி | ௫0 |
| கவறினை யாடுவோன் | ௧௧௬ |
| களவு செய்குதன் | ௧0௨ |
| கற்பினர் கணவன் | ௨௮௮ |
| கனவதனிற் | ௧௯௩ |
| கனைகடல் மணலை | ௨௪௮ |
| கன்னம் வைத்தல் | ௧0௩ |
| காசதி கந்தனைக் | ௧௧௯ |
| காதிறை வனுக்குக் | ௨௯ |
| காடுசேர் மரஞ் | ௨0௧ |
| காமமே யின்பங் | ௧௯௧ |
| காயிலை கிழங்கே | ௨௫௫ |
| காரி டத்திரங் | ௧௮௯ |
| காவலன் பயத்தி | ௫0 |
| காற்றினைப் பலது | ௨௭0 |
| காற்றின் எதிரே | ௧௨௭ |
| கான லெனப்படு | ௩௪ |
| குடிகள் சீடர் | ௯௩ |
| குருவிறை சீட | ௨௮௮ |
| குலமணி வெளியு | ௧௭௯, ௨௫௭ |
| கேள்வரிலா விடத் | ௭௪ |
| கைத்தனநா யிழந்த | ௨௪௮ |
| கைத்திட்ட மருந்தி | ௩௬ |
| கைப்புரை யேற்றுப் | ௩0 |
| கொஞ்சமுஞ் சுவையிலை | ௧௧௨ |
| கொடியமன் னவர்க்குத் | ௩0 |
| கொடியவெவ் விலங்கை | ௨௫௪ |
| கொடியாளன் பற்ற | ௨௩௭ |
| கொம்பருள் ளுலர்ந் | ௩0௫ |
| கொலைஞருஞ் சோருங் | ௧௧௮ |
| கொலைஞர்தமைக் | ௨௪0 |
| கொலைபுரி வோரையுங் | ௧0௬ |
| கொழுநனறியில் | ௮௩ |
| கொழுநனு யினுமனையா | ௫௮ |
| கொளளுரு | ௧௭௧ |
| கொற்றவர் நரர்க் | ௮௯ |

| | பக்கம் |
|---|---|
| கொன்புலாற் சுவரை | ௨௭0 |
| கோட வாண்முகஞ் | ௧௩௯ |
| கோடிபொன் | ௨0௯ |
| கோடுமுடல் மாமி | ௨௩௫ |
| கோவரிய சீவன் | ௩௩ |
| கோவிலைப் பழிக்கி | ௧௩ |
| சடமதைக் கழுவ | ௧௭௬ |
| சத்திரஞ் சோலை | ௨௮ |
| சந்தநிறை | ௧௬௪ |
| சாங்காலையோர் | ௧௩௪ |
| சாடுவெங் கோடை | ௧௯0 |
| சாந்தமார் வழியர் | ௧௮௨ |
| சாமியுனைப் பிரியே | ௨௩௮ |
| சாம்பிணம் | ௧௨௪ |
| சித்தமு மவசமாஞ் | ௧௧0 |
| சிந்தா குலந்தீர்க் | ௨௯௧ |
| சிலதரு நரரே | ௮௮ |
| சிலர்மயில்வீ டுற்றன | ௨௪௭ |
| சிறுவரைப் போதோர் | ௩0௭ |
| சிறுவாய்க் கலத்துட் | ௩௭ |
| சிற்பநூ லிலக்கண | ௨௧௫ |
| சிற்றுதர போச | ௨௧௭ |
| சிற்றெறும் பாதி | ௧௩௫ |
| சினமு ளோன்மனே | ௧௩௯ |
| சின்னவோர் பொருள் | ௪௨ |
| சீயென இகழ்தரு | ௧௧௧ |
| சீவ அன்பு | ௧௮௬ |
| சீவனை வதைசெயல் | ௧0௮ |
| சுகமுறு வாழ்வில | ௪௭ |
| சுடரவன் விளங்கிற் | ௯௧ |
| சுணங்கனோர் | ௧௭௮ |
| சுதமுறு முகத்தொடு | ௧0௭ |
| சுவையுணவு தானி | ௨௩௫ |
| சுழல்சக டக்கால் | ௧௫௪ |
| சூழ்பல உகங்கட் | ௨௨௬ |
| சூற்றுயர்க் கஞ்சு | ௨௨௩ |
| செங்கல் வெண்கல் | ௧௫௩ |
| செல்லவோர் போக் | ௧௩௧ |
| செவ்வையுறு | ௨௩௧ |
| செழித்திடு நாளினிற் | ௧௫௫ |

| | பக்கம் |
|---|---|
| செழுமல ரிடைமது | ௧௫௬ |
| செழுமுளரி புனல்நீங்கில் | ௭௧ |
| சேயிழையின் சேடியர் | ௨௫௧ |
| சொன்னத் திருடன் | ௩௬ |
| ஞானசூரியனெனுங் | ௩௫ |
| ஞானமெய்ச் சுகம் | ௧௧0 |
| தகவுணும் | ௧௭௨ |
| தங்கரு மங்கள் | ௧௬௯ |
| தடியடிக் கஞ்சி | ௨௮௧ |
| தந்துணைவர் | ௬௨ |
| தந்தைதா யொருவர் | ௫௪ |
| தந்தைதாய் சோதரருற் | ௫௭ |
| தந்தைதாய் சோதரரை | ௫௯ |
| தந்தையோடு தாயொடு | ௩0௭ |
| தமதென உலோபர் | ௧௩௨, ௨௬0 |
| தரணியின்மிக் கெழின் | ௨௫0 |
| தரித்திரந் தரித் | ௧௫௪ |
| தருக்க நூலறி | ௧௪௭ |
| தருவினொடு கிளை | ௨௯௫ |
| தருவின்வேர் பயிர் | ௨௭௩ |
| தரையெலா நமதெனி | ௧௯௭ |
| தரையெலா முளன்று | ௧௯ |
| தரையெனு முடற் | ௩௨ |
| தலைகீழுறச் செய்யி | ௩௬ |
| தலைவன்றீ யவனே | ௯௪ |
| தவனுட்டி யிருவ | ௫௭ |
| தழையுஞ் செல்வத் | ௧௪0 |
| தளர்வுறு மூப்பா | ௨௯௯ |
| தள்ளரும் பெரும் | ௧0௪ |
| தற்புகழ்தல் புறங் | ௧0௧ |
| தற்புகழ் வோன்றனை | ௧௭௫ |
| தனக்குத்தா | ௨௬௫ |
| தனந்தந்தான் றனை | ௨௮0 |
| தனவயத்தாதன் | ௨௭௮ |
| தனையெனி னும்பிறர் | ௧0௯ |
| தன்பணி செயற்கு | ௨௮௩ |
| தன்புகழ் கருதி | ௨௭ |
| தன்றுதி பிறர்சொலத் | ௧௭௪ |
| தன்றுணை யிலானே | ௧௭௭ |
| தன்னைத்தன்குண | ௧௮0, ௨௫௭ |

| | பக்கம் |
|---|---|
| தன்னைப்போற் பிறரை | ௮௫ |
| தாகமே யுடையார் | ௨௨௭ |
| தாங்குபொருள் | ௬௧ |
| தாயறியாத | ௨௭ |
| தாரணியி லெவரே | ௧௪௩ |
| தாழ்ந்தவ ரெனச்செல் | ௯௨ |
| தானற்கனி சிந்தா | ௧௩௩ |
| தானினி தியற்று | ௨௮ |
| தான்கண்ட நிட் | ௨௬௬ |
| திருடன் பொருட்கா | ௩௮ |
| திருவனு யெனப்புகழ் | ௬௮ |
| திருவெலாங் கொள்ளை | ௨௪௯ |
| திருவென்ன வெனை | ௬௯ |
| திலக வாணுதல் | ௧௦௩ |
| தினங்கள் செலச் | ௨௧௬ |
| தினமும்விரே | ௨௦௦ |
| தினவினை செயவகல் | ௬௭ |
| தினையினும் புகுந்து | ௨௮௨ |
| தீட்டுவோன் இன்றி | ௧௫ |
| தீதறத் தன்மையுந் | ௩௦௩ |
| தீதுநன் றறிகிலாச் | ௪௭ |
| தீதொருவர் | ௧௬௧ |
| தீயராய் வறியராய்ச் | ௪௯ |
| தீயர்தமைச் சுடுந் | ௨௯௩ |
| தீயிடை மூழ்கினேன் | ௧௦௮ |
| துதிபெற ஆதர | ௧௭௫ |
| துய்க்கும் | ௧௮௮ |
| தெய்வநாத் திகமத் | ௨௮௭ |
| தெரிவையின்நட் | ௨௩௮ |
| தெருளுறு விலங்கி | ௧௪௧ |
| தெளிவுற நூல்பல | ௧௩௫ |
| தேமலி சுவைக் | ௧௬௫, ௨௫௭ |
| தேவனே யிலனேல் | ௧௮ |
| தையலில்லம் | ௨௪௩ |
| தொண்டரெனும் | ௨௯௨ |
| தொல்லுலகிற் புல்லி | ௨௦௬ |
| தோல்வாசம் | ௧௫௦ |
| தோழிகே ளெனக்கு | ௯௫ |
| தோன்றகலிடம் | ௨௨ |
| நட்டமேபிறர்க் | ௧௦௩ |

| | பக்கம் |
|---|---|
| நதிமுதல் புகுவ | ௧௬௬, ௨௬௧ |
| நதியினு முயர்பணை | ௩௨ |
| நம்மனை மைந்தர் | ௩௧ |
| நயமறங் கல்வி | ௮௭ |
| நரபதிநீ யானலு | ௭௦ |
| நரனருள் புரிந்தோ | ௨௮௩ |
| நரிநாய் பறவை | ௧௧௩ |
| நலத்தின்மிக் | ௧௨௪ |
| நலமிலா நரர்க்குத் | ௨௮௪ |
| நலன்கள்யா வுறினுந் | ௨௭௯ |
| நல்லவர்தீ | ௧௬௧ |
| நல்லறி வேயணி | ௫௩ |
| நள்ளிரவிற் றமயந்தி | ௭௦ |
| நள்ளுநர் தமக் | ௧௮௫, ௨௫௯ |
| நனிநிழல் புனல் | ௧௭௧ |
| நன்மைபுரி | ௧௬௪ |
| நாசமாங் காலமே | ௧௫௫ |
| நாடுவேறு குலமொடு | ௩௦௬ |
| நாட்டமின்றி | ௩௪ |
| நாதனில் லாத | ௧௬ |
| நாதனே யுயர்வாந் | ௮௭ |
| நாமறியா துயிர்ப்பு | ௨௭௯ |
| நாம்பணி வோர்க | ௨௨௬ |
| நாவியல் உணவில் | ௯௬ |
| நாவையே கடித்த | ௧௬௦ |
| நாளு நாங்கொ | ௧௪௦ |
| நிதிசெல வாய்க்கெடு | ௪௮ |
| நித்திய மனுபவி | ௧௩௦ |
| நிரந்தரம் பலநோ | ௧௦௪ |
| நிலையில்சிற் றின்பத்தி | ௮௧ |
| நில்லாத செல்வம் | ௨௧௩ |
| நிறைசெல்வமுடையாரை | ௧௯௩ |
| நிறைபு நீர்க்கசை | ௧௪௫ |
| நீதிநூன் மைந்தர்க்கு | ௫௨ |
| நீரினல் பயிர்வளம் | ௧௭௫ |
| நீரினைக் கலங்க | ௨௭௩ |
| நீள்வியன் உலக | ௨௬௭ |
| நூலெலா மைந்தரே | ௩௦௩ |
| நூனுழைந்த | ௧௮௮ |
| நெருநலோவகன்ற | ௧௧௯ |

| | பக்கம் |
|---|---|
| நெல்லறுக்க | ௨0௨ |
| நேரிழைநம் | ௨௩0 |
| நேயர் பற்சர் | ௧௨௩ |
| நோக்கதனிற் | ௧௫௧ |
| நோக்கிருந்தும் | ௧௯௨ |
| பகருவங்கம் | ௨௪௨ |
| பகல்புவி யினும்பல் | ௨௭௧ |
| பகவன தருளும் | ௧௭௯ |
| பசிமிகுந்த பின்னெல்லை | ௨௧௪ |
| பசியினா லெளியனோர் | ௧௨0 |
| பகையறவெம் | ௨௩௬ |
| பச்சைமண் கொடுசி | ௩0௨ |
| பஞ்சபூ தங்களை | ௧௯௪ |
| படியின்மன் னுயிர்க் | ௩௩ |
| படியின்மா னிடர் | ௧௬௭ |
| படுதொழில் விலங்குங் | ௩0௧ |
| பணயமே திரண | ௨௪௧ |
| பண்டோராண் | ௭௯ |
| பண்ணிய புவன | ௨0 |
| பதிமுத லதிகாரத் | ௯௨ |
| பத்த ரன்பினைச் | ௨௧௧ |
| பத்தினி சேயரும் | ௧0௮ |
| பந்த யந்தனைப் | ௧௧௭ |
| பயந்தவர் சோதரர் | ௫௫ |
| பயன்கொள்வோ | ௧௩ |
| பயிர்களை யெடுத் | ௪௮ |
| பயிரினை வேலிதான் | ௧௧௯ |
| பரவுசமு சாரமெ | ௬0 |
| பரிதியின் கிரணமங் | ௩௭ |
| பரியூர்வோன் | ௨௧௯ |
| பருத்திவிதைத் | ௧௪௮ |
| பலருய் வான்சிலர் | ௨௧௧ |
| பலர்கழல் வருட | ௨௨௨ |
| பவமற மாயினும் | ௧0௭ |
| பழிதீர் கலையாவும் | ௩௯ |
| பழியிலா ரொருவர்க்கு | ௯௯ |
| பறவையும் விலங் | ௧௯௯, ௨௬௧ |
| பற்றிநோய்செயப் | ௨௫௬ |
| பஃறு ளைக்கடம் | ௨௧௩ |
| பாக்கிய நிலையெனும் | ௨0௯ |

| | பக்கம் |
|---|---|
| பாரண மின்றிச் | ௧௭௧ |
| பாரிரு புறத்துஞ் | ௨௭௨ |
| பாரில் யார்க்கும் | ௨0௮ |
| பாரினிற் பிறந்த | ௧௫௮ |
| பாரினிற் பொய்த் | ௧00 |
| பாரெலாம் பகை | ௨௨ |
| பாரெல் லாமாள் | ௧௩௬ |
| பாலினைத் தேனையின் | ௧௧௧ |
| பாவச் சலதிக்குள் | ௩௯ |
| பானுவின் கதிரை | ௧௨ |
| பானுவெப் புடையவ | ௩௨ |
| பிழையிலான் | ௧௫௯ |
| பிறந்த சேயுட | ௨0௯ |
| பிறர்புகழினைக் | ௧௮௩ |
| புகர்சில வியற்றிற் | ௨௮௯ |
| புகைவண்டி | ௨0௩ |
| புட்களும் விலங்கு | ௧௭௩ |
| புயகமதைத் | ௧௬௮ |
| புவிநடை கடவுண் | ௪௮ |
| புறம்வ ருந்திடப் | ௧௮௯ |
| பூட்டுமரி கண்டம் | ௧௪௬ |
| பூணலங்கன் மார்பி | ௬௮ |
| பூதமதி னென்று | ௧௯௫ |
| பூதம்யா வுக்கும் | ௧௬ |
| பூதலகம் மில்லம் | ௧௯௪ |
| பூதநம் மில்லா | ௨௧ |
| பூவைவிட் களித்த | ௨௨௯ |
| பெண்மகள் கெடுவ | ௫0 |
| பெருவெம் பிணியாளன் | ௩௮ |
| பெருவெள்ளஞ் | ௨௧௮ |
| பெறலரு முயிர்தரும் | ௧0௬ |
| பெற்றதன் னாட்டை | ௧௪௧ |
| பெற்றவன் கைப் | ௧௨௧ |
| பேதைமதி யுற்றனை | ௭௨ |
| பைதலே யெய்த | ௧௪0 |
| பொங்கலை ஆழி | ௨௩ |
| பொய்யான நாடகத்திற் | ௫௯ |
| பொய்யேந்து மனவே | ௨௫0 |
| பொய்வா தியர்பாற் | ௧௨௨ |
| பொருந்துநற் கலை | ௫௧ |

